

# தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள்

முனைவர் மு. வளர்மதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள்

முனைவர் மு. வளர்மதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப்
பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tamil̲ mol̲ipeyarppu munnoṭikaḷ |
| Author | : | Dr. M. Valarmathy<br>Faculty of Overseas Tamil<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 662 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | vi+418 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 185/- (Rupees One hundred and eighty five only) |
| Printed by | : | United Bind Graphics<br>43/95, Millers Road, Kilpauk<br>Chennai - 600 010 |
| Subject | : | Biographical sketches of Tamil Translation Pioneers |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள் எனும் இந்த நூல் தமிழுக்குப் பணி செய்த பண்பாளர்கள் பலரை அவர்கள் செய்த பணிகளைச் சிறப்புற எடுத்துக்காட்டி அவர்களது பணிகளை நினைவு கூரத்தக்கவாறு அமைந்துள்ளது. இந்நிறுவன இணைப்பேராசிரியர் முனைவர் மு. வளர்மதி தமிழ் மொழிபெயர்ப்பாளர்கள் பலரோடு பல நிலைகளில் நேரில் அணுகிப் பல தகவல்களைப் பெற்ற நிலையில் இப்பணியைச்சிறப்புறச் செய்துள்ளார். நிறுவன வெளியீடான பாண்டியர் செப்பேடுகள் பத்து எனும் நூலில் காட்டப்பட்டுள்ள புகழ்பெற்ற சின்னமனூர்ச் செப்பேட்டில் காணலாகும் பாண்டியரது பல்வேறு பணிகளுள் மகாபாரதத்தைத் தமிழ்ப்படுத்தியது, மதுராபுரிச் சங்கம் வைத்தது குறித்த குறிப்புகளை எடுத்துக்காட்டியுள்ளார். வால்மீகியால் படைத்தளிக்கப்பட்ட இராமாயணம் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டமையை நினைவு கூர்கிறார்.

கி.பி. 15ஆம் நூற்றாண்டில் வில்லிபுத்தூர் ஆழ்வாரும், கி.பி. 18ஆம் நூற்றாண்டில் நல்லாப்பிள்ளையும் மகாபாரதத்தைத் தமிழில் தழுவி எழுதியுள்ளதை நம் கவனத்துக்குட்படுத்துகிறார். ஆங்கிலேயர் வருகையும் அதன்வழி ஏற்பட்ட மொழிபெயர்ப்புப் பணிகள், 20ஆம் நூற்றாண்டில் சேக்ஸ்பியர் நாடகங்கள் மொழிபெயர்ப்புப் பணிகள் மற்றும் கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, ஆர்.பி. குழந்தைசாமி ஆகியோர் கவிதை நூற்களை மொழிபெயர்த்தமை, உருஷ்யக் கவிதைகளை மொழிபெயர்த்த த. கோவேந்தன், தொ.மு.சி. ரகுநாதன், ஆகியோர் மற்றும் 'செர்மானிய இலக்கியத்தின் சிறப்புப் பகுதிகள்' எனும் தலைப்பில் கே. திரவியம், மா. சண்முக சுப்பிரமணியம், எம். அப்துல்வஹ்ஹாப், தெசிணி ஆகியோரது மொழிபெயர்ப்புப் பணிகள் எனப் பட்டியல் தருகிறார் நூலாசிரியர்.

தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட சேக்ஸ்பியர் நாடகநூல்கள் 40க்கும் மேற்பட்டவை என விபரங்கள் தருகிறார். ஆங்கில நாடகங்கள், நார்வே நாட்டு ஹென்றிக் இப்சென் நாடகங்கள், உருஷ்ய மொழிபெயர்ப்பு நாடகங்கள் (டால்ஸ்டாய்), பிரெஞ்சு மொழிபெயர்ப்பு நாடகங்கள் மற்றும் நாவல், சிறுகதை என மேலைநாட்டாரது படைப்புக்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட முறைமைகளை விளக்கிச் செல்கிறார்.

சார்லஸ் டிக்கன்ஸ் எழுதிய 'ஆலிவர் ட்விஸ்ட்' நாவல்தனைக் கி.மா. பக்தவத்சலன் (1956), கு. பரமசிவன் (1957), தே. வீரராகவன் (1959), வீரசிம்ஹன் (1960), பூவை அமுதன் (1981) போன்றோர் வெவ்வேறு காலங்களில் தமிழில் மொழிபெயர்த்துள்ள விவரங்களை நூலாசிரியர் தந்துள்ளார்.

இந்தியாவின் பிறமொழிகளிலிருந்து படைக்கப்பட்ட படைப்புக்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட விவரணங்கள் பலவற்றை நிரல்பட இந்நூலாசிரியர் விரிவுற ஓர் ஆய்வுரைபோலத் தன் முன்னுரையில் தந்துள்ளமை இந்நூலை வாசிக்கும் முன் உள்ள தெளிவான சிந்தனையைத் தந்துள்ளது.

பெ.நா. அப்புசாமி அவர்கள் சங்க இலக்கியத்தை மொழி பெயர்த்ததோடு அறிவியல் தமிழுக்கு அவரது மொழிபெயர்ப்புப்பணி எத்தகையது எனக் காட்டி அமைகிறது முதல் கட்டுரை (பக். 38).

வெ. சாமிநாத சர்மா 80 நூல்களை வழங்கிய பெருமைக்குரியவர். சாக்ரடீஸ், பிளேட்டோ, கார்ல் மார்க்ஸ், மாஜினி, ஸன்யாட்ஸென், ஹிட்லர், முசோலினி, அபிசீனிய சக்கரவர்த்தி, ரூஸ்ஸோ, வால்டேர், கமால் அத்தாதுர்க் ஆகியயோரைப் பற்றித் தமிழில் தமிழர் அறிய அரசியல் அறிவை ஊட்டத் துணை நின்றவர் குறித்து தெளிவுற எழுதப்பட்டுள்ளது.

க.ரா. ஜமதக்னி சமசுகிருத மொழியில் மகாகவி காளிதாஸ் எழுதியிருந்த படைப்புகள் பலவற்றை மொழிபெயர்த்தவர். சாகுந்தலம், இரகுவமிசம், குமாரசம்பவம், மேகசந்தேசம், இரத்தினாவளி, மாளவிக்காகினிமித்திரம், விக்கிரமோர்வசியம் ஆகிய காளிதாஸ் படைப்புகள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டன. சாகுந்தலம் நாடகம் மட்டும் சுந்தரராஜ சர்மா, இராமச்சந்திரன் வெங்கடாச்சாரியார், என். சாமிநாத சாஸ்திரி, எஸ். பவனாந்தம் பிள்ளை, பம்மல் சம்பந்த முதலியார், ஆர். ராகவய்யங்கார், அ.கு. ஆதித்தர், ஜே. சந்தானம் ஆகியோர் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர் (பக். 88) என தொடர்புடைய பல தகவல்களைத் திரட்டித் தந்து மீண்டும் க.ரா. ஜமதக்னியின் பங்கு குறித்து விளக்குகிறார். ஜமதக்னி செய்த மொழிபெயர்ப்புப் பணியைப் பிறர் எவர் மொழிபெயர்த்துள்ளனர் என்பதைக் கூறும் வகையில் இரகுவமிச காவியம் சிறுகளத்தூர் ராமஸ்வாமி சாஸ்திரி, யாழ்ப்பாண நல்லூர் பொன்னம்பல பிள்ளை, எம்.எஸ். நடேச சாஸ்திரி, டி.தி. தாதா சார்யார், வி.எஸ். வேங்கட ராகாவாச்சாரி, எஸ்.ஏ. ராமஸ்வாமி எனப் பல மொழிபெயர்ப்பாளர்களையும் விடுபடாது சொல்லி விளக்கும் முறைமை நூலாசிரியரின் நேர்மைத்திறனுக்கு உரியதாக அமைகிறது.

புதுமைப்பித்தன், கா. அப்பாத்துரை, த.நா.குமாரசுவாமி, அ.கி. ஜெயராமன், க.நா.சு. எனும் க.நா. சுப்ரமண்யன் ஆகியோரின் மொழிபெயர்ப்புப் பணிகளைக் குறித்து விளக்கமான ஆய்வுரைகளை வழங்கியுள்ளார். கா.ஸ்ரீ.ஸ்ரீ. மராட்டிய இலக்கியக் கர்த்தா காண்டேகர் அவர்களைத் தமிழுக்கு அறிமுகப்படுத்தியதால் அவரை தமிழகத்துக் காண்டேகர் எனக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். த.நா. சேனாபதி எனும்போது வங்க இலக்கியங்களைத் தமிழில் மொழிபெயர்த்தவர் என மொழிபெயர்ப்பாளர் ஒவ்வொருவருக்கும் உள்ள பணிவழியே கண்டுள்ள அடையாளங்களை நினைவுபடுத்தி நூலாசிரியர் அவர்வரை அறிமுகப்படுத்துவது சிறப்பாக அமைகிறது.

மாஜினி எனும் மொழிபெயர்ப்பாளரை நமக்குக் காட்ட வருபவர், அவர் சாமிநாதசர்மா, தமிழில் மொழிபெயர்த்த 'இத்தாலி வரலாறு' என்னும் நூலைப் படித்துவிட்டு விடுதலை உணர்வு கொண்ட மாஜினி எனும் இத்தாலி நாட்டுப் படைப்பாளனின் பெயரையே தன் புனை பெயராகக் கொண்டு இயங்கிய விளக்கத்துடன் நமக்கு அவரை இந் நூலாசிரியர் அடையாளப்படுத்துகிறார். ரா. வீழிநாதன், ரா. கிருஷ்ணையா, சரஸ்வதி ராம்நாத், மு.கு. ஜகந்நாத ராஜா, நா. தர்மராஜன் போன்ற சமகால மொழிபெயர்ப்பாளர்கள் குறித்தும் நூலாசிரியர் விடுபடாது தமிழ் மொழிபெயர்ப்பாளர்கள் குறித்த தகவல்களைத் திரட்டித் தந்திருப்பது மிகுந்த பாராட்டுக்குரிய பணியாக உள்ளது.

தமிழ் உலகு இந்த அரிய பெட்டகமான மொழிபெயர்ப்பு குறித்த தமிழ்ப் பெருமக்களை நினைவு கூர்தல் கடமைகளுள் ஒன்று என விளங்கும் இந்நூலை ஆதரிக்கும் என்பதில் ஐயமேதுமில்லை.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூலை மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இந்நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் கணிப்பொறியாளர் திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு. இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# பொருளடக்கம்

# முன்னுரை

ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழியில் மொழி பெயர்த்து வழங்குபவர் மொழிபெயர்ப்பாளர். இவர் படைப்பாளர் களுக்கும் வாசகர்களுக்குமிடையில் இணைப்புப் பாலமாக விளங்குபவர். படைப்பாளியைப் போலவே மொழிபெயர்ப்பாளரும் முக்கியத்துவம் வாய்ந்தவர். ஏனெனில் மொழிபெயர்ப்புப் பணியும் படைப்புச் செயல் போன்றதாகும். மொழிபெயர்ப்பு என்பது ஒரு புதிய படைப்பாகப் பெயர்ப்பு மொழியில் அமைகிறது. மொழிபெயர்ப்பாளர்கள் மூலம் ஒரு மொழியினரின் சிந்தனைகள் படைப்புகள் யாவும் நாடுகளின் எல்லைகளைக் கடந்து மற்றொரு மொழி பேசும் மனிதர்களிடையே அறிமுகமாகின்றன. கால எல்லைகளைக் கடந்தும் அறிமுகமாகின்றன.

தமிழில் மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபட்ட மொழி பெயர்ப்பாளர்களால் தமிழுக்கு ஏராளமான நூல்கள் கிடைத்தன. இன்றும் கிடைத்து வருகின்றன. தமிழ் இலக்கியப் போக்கிலும் அறிவுத் துறைகளிலும் சிந்தனைகளிலும் புதிய திருப்பங்களைப் பற்றி அறிந்துகொள்ளும் பொழுது மொழிபெயர்ப்பைப் பற்றிய கூடுதல் அறிவும் பெற ஒரு வாய்ப்பாக அமைகிறது.

தொன்றுதொட்டு மொழிபெயர்ப்பாளர்களால் படைப்பிலக்கியம் போலவே தமிழுக்கு வடமொழியிலிருந்து புகழ்பெற்ற நூல்கள் கிடைத்தன. வடமொழி இதிகாசங்களான மகாபாரதம், இராமாயணம் தமிழ் மன்னர்களாலும், மக்களாலும் போற்றப்பட்ட நிலையில் தமிழாக்கம் செய்யப்பட்டிருக்கின்றன.

> பூழியனெனப் பெயரெய்தியும் போர்க்குன் றாயிரம்வீசியும்
> பாழியம்பா யலினிதமர்ந்தும் பஞ்சவனெனும் பெயர்நிறீயும்
> வளமதுரை நகர்கண்டும் மற்றதற்கு மதில்வகுத்தும்
> உளமிக்க மதியதனா லொண்டமிழும் வடமொழியும்
> பழுதறத்தா னாராய்ந்து பண்டிதரில் மேந்தோன்றியும்
> மாரதர்மலை களத்தவியப் பாரதத்திற் பகடோட்டியும்
> விஜயனை வசு சாபம்நீக்கியும் வேந்தழியச் சுரம்போக்கியும்
> வசையில்மாக் கயல்புலிசிலை வடவரைநெற் றியில்வரைந்தும்
> தடம்பூதம் பணிகொண்டு தடாகங்கள் பலதிருத்தியும்

அடும்பசிநோய் நாடகற்றி அம்பொற்சித் ரமுயரியுந்
தலையாலங் கானத்திற் றன்னொக்கு மிருவேந்தரைக்
கொலைவாளிற் றலைதுமித்துக் குறைத்தலையின் கூத்தொழித்தும்
<u>மகாபாரதந் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்</u>
மகாராஜரும் சார்வபௌமரும் மகிமண்டலங் காத்திகந்தபின்*

- பாண்டியர் செப்பேடுகள் பத்து – சின்னமனூர் (பெரிய) சாசனம்)

சின்னமனூர் செப்பேடு அதற்கு முன்பு இருந்ததாகக் கருதப் பெறும் பாண்டியர்களின் சாதனைக்ளை இவ்வாறு பட்டியலிட்டுக் காட்டுகிறது.

இதன்மூலம் கடைச்சங்கக் காலத்தில் நடந்த தமிழ்ப் பணிகளும் அரசர்களின் பிற சாதனைகளும் தெரிய வருகின்றன.

---

*பூழியன் எனப் பெயர் எய்தியும், ஆயிரம் யானைகளைத் தானம் வழங்கியும், பாழி என்ற ஊரை வென்று அங்கே அரியணையில் சிலநாள் தங்கி யிருந்தும், பாண்டவர்க்குரிய பஞ்சவன் என்னும் பெயரைக் கொண்டும், வளப்பம் பொருந்திய மதுரை மாநகர் கண்டும், அந்நகரத்துக்கு மதில் எடுப்பித்தும், மிக்க மதியினால் ஒண்தமிழையும் வடமொழியையும் ஐயம் திரிபு அறக்கற்று, ஆராய்ச்சி செய்து, புலவரின் மேம்பட்டு நின்றும், பாரதப் போரில் யானையேறிச் செலுத்திப் பெரிய சேனாதிபதிகளை யுத்த களத்தில் இறக்கும்படி செய்தும் அஷ்டவசுக்களால் அர்ச்சுனனுக்கு நேர்ந்த சாபத்தைப் போக்கியும், பகையரசர்களைப் போரில் தோல்வியுறச் செய்து அவர்களைக் காட்டிற்கு ஓடத் துரத்தியும், சேர, சோழ, மன்னர்களை வென்று அவர் கொடிகளில் குறிக்கும் அடையாளங்களாகிய புலியையும் வில்லையும் அவைகளோடு தனது கொடியின் அடையாளமாகிய மீனையும் இமயமலைச் சிகரத்தில் இம்மூன்று அடையாளங்களைப் பொறித்தும், (தான் கற்ற ஒரு மந்திர வலியினால்) ஒரு பெரிய பூதத்தை வசியஞ் செய்து, அதனால் தடாகங்கள் பல அமைத்துத் தன்னாட்டில், கொடிய பசி நோய் நீங்கச் செய்தும், தலையாலங்கானம் என்னுமிடத்தல் தன்னோடு சமமான இருவேந்தரைப் போர்க்களத்தில் கொன்று தலை வெட்டப்பட்ட முண்டங்கள் போர்க்களத்தில் ஆடுவதாகிய கூத்தை ஒழித்தும், <u>பாரதத்தைத் தமிழ்ப்படுத்தியும், மதுரையில் தமிழ்ச் சங்கம் அமைத்தும்</u> ஆண்ட பேரரசர்களும், சார்வ பௌமரும் அரசாட்சி செய்து மறைந்த பின்னர்;*

(பாண்டியர் செப்பேடுகள் பத்து, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை –113, பதி. 1999, ப. 168)

> கடைச்சங்க காலத்துப் பாண்டியருள் மிகச் சிறந்தவனான தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனைச் சங்க இலக்கிய வாயிலாகக் காண்பது போல் செப்பேடுகள் வாயிலாகவும் காண்கிறோம். இவனது காலம் கி.பி. 2ஆம் நூற்றாண்டு என்பர். ஏறத் தாழக் கி.பி. 210ஆம் ஆண்டை ஒட்டி அமைந் திருந்ததாக ஆசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் கூறுவர்.[1]

பிறமொழி நூல்களைக் குறிப்பாக வடமொழி நூல்களைத் தமிழ்ப்படுத்துதல் என்ற நிலை கடைச்சங்க காலத்திலிருந்தே இருந்து வருவதற்கு இது முதன்மைச் சான்றாகத் திகழ்கிறது. மேலும் மகாபாரதம் முதலில் தமிழ்ப்படுத்திய நூலாக அமைவதைக் காணலாம்.

வடமொழியில் வால்மீகி படைத்த இராமாயணம் தமிழ் மரபுக்கேற்றவாறு தழுவலாகக் கம்பர் படைத்த பின்பு, அதற்கு முன்பும், பின்பும் வழக்கிலிருந்த இராமாயணங்கள் மக்களிடையே செல்வாக்குப் பெறவில்லை. தழுவி எழுதியவரின் பெயருடன் நூலின் பெயரும் இணைந்து கம்பராமாயணம் என வழங்கும் சிறப்பினைப் பெற்றது. 'தழுவல்' என்பதின் முன்னோடிகளில் குறிப்பிடத்தக்கவர் கம்பர்.

> தமிழ் மொழிபெயர்ப்பு வரலாற்றில் கம்பரின் பங்கும் குறிப்பிடத்தக்கதொன்றாகும். பல வட சொற்களை அவர் தொல்காப்பிய விதிமுறைக்கேற்ப (வடசொற் கிளவி, வட எழுத்து ஒரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே - 884) தமிழ்ப்படுத்தியும், மொழிபெயர்த்தும் வழிகாட்டியுள்ளார். இலக்குவன், வீடணன், இந்திரசித்து, தயரதன், ஆனி (ஹானி - துன்பம் - 6272) போல்வன முதல்நிலைக்குச் சான்று களாகும். கனகன் (இரணியன் - 6222), மானுட மடங்கல் (நரசிங்கம் - 6319), வேதத்து உச்சியின் மெய்ப்பொருட் பெயர் (நமோ நாராயணாய, 6208) உயிருக்கு நேயம் (ஜீவகாருண்யம், 6385), இசிகப்படை (இஷீகாஸ்திரம், 9064), அருளின் வேலை (கருணைக் கடல் 6415), வேள்வியின் பகைஞன் (6552), மாபெரும் பக்கன் (6554), மகரக் கண்ணன் (8408), நேமிப்புள் (சக்கரவாகம், 6384), குடப்பெருஞ் செவிக்குன்றம் (கும்பகர்ணன் - 9815), சூரியன் பகை (பானுகோபன், 6553), வச்சிரத்து எயிற்றவன் (வச்சிரநந்தன், 6098) என்பன மொழிபெயர்ப்புக்கு எடுத்துக்காட்டுகளாம்.[2]

---

1. பாண்டியர் செப்பேடுகள் பத்து, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113, பதி. 1999, ப. VI.
2. இருபதில் கம்பன், ச. சிவகாமி, மாதவி பதிப்பகம், ஆக. 2002, ப. 40.

கி.பி. 15ஆம் நூற்றாண்டில் வில்லிபுத்தூர் ஆழ்வாரும் கி.பி. 18ஆம் நூற்றாண்டில் நல்லாப் பிள்ளையும் மகாபாரதத்தைத் தமிழில் தழுவி எழுதிய தழுவல் பெயர்ப்பாளர்களாவர். இராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசப் பெயர்ப்புகளுக்கு அடுத்து, புராணங்களை மொழிபெயர்த்து அளிப்பதில் பலரும் முனைப்புக் காட்டினர். புராண மொழிபெயர்ப்புகள் 13ஆம் நூற்றாண்டு தொடங்கி 19ஆம் நூற்றாண்டு வரை பரவலாக இடம்பெற்றுள்ளன. 14ஆம் நூற்றாண்டில் கச்சியப்ப சிவாச்சாரியாரால் வடமொழியி லிருந்து தழுவல் பெயர்ப்பாய் வெளியிடப்பட்டது கந்தபுராணம். இதன் இரண்டாம் பகுதியாகிய உபதேசக் காண்டத்தை 15ஆம் நூற்றாண்டில் ஞானவரோதயர், கோனேரியப்பர் ஆகிய இருவரும் மொழிபெயர்த்துள்ளனர்.

> கி.பி.15ஆம் நூற்றாண்டில் சூதசங்கிதையைத் தத்துவராயர், பிரம கீதை என்ற பெயரில் மொழிபெயர்த்தார். அதே நூலினைக் கி.பி. 19ஆம் நூற்றாண்டில் மீனாட்சி சுந்தரம்பிள்ளை தமிழ்ப்படுத்தினார். கி.பி. 19ஆம் நூற்றாண்டில் வேதமலையப்பர், மச்ச புராணத்தையும் செவ்வை சூடுவார் பாகவதத்தையும் தழுவி எழுதியுள்ளார்.[3]

16ஆம் நூற்றாண்டில் வரகுணராம பாண்டியர் (குலசேகர பாண்டியர்) இலிங்கபுராணத்தையும், வாயுசங்கிதையையும் மொழி பெயர்த்துள்ளார். வரகுணராம பாண்டியரின் இளவலான வரதுங்கராமபாண்டியர் சிவபுண்ணியக் கதைகளைக் கூறும் பிரமோத்தர காண்டத்தை மொழிபெயர்த்தார். வரகுணராம பாண்டியரின் மற்றொரு இளவலான அதிவீரராம பாண்டியர் பாரதத்தில் கிளைக் கதையான நைடதத்தை மொழிபெயர்த்ததுடன், புராணங்களில் கூர்மபுராணம், கந்தபுராணத்தின ஒரு பகுதியான காசிக்காண்டம் ஆகியவற்றை மொழிபெயர்த்துள்ளார். 18ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கச்சியப்ப முனிவர் பார்க்கவ புராணத்தை விநாயக புராணமாக மொழிபெயர்த்துள்ளார்.

> எண்ணற்ற புராண மொழிபெயர்ப்புகளுள் துரைசாமி மூப்பனாரின் கருடபுராணம் (1883); ஈக்காடு ரத்தின வேலு முதலியாரின் ஸ்ரீசைவ புராணமென்னும் ஸ்ரீசிவ மஹாபுராணம் (1900); வி.ஆர். சுப்பரமணிய ஐயரின் திரிபுர ரகசியம் (1914); ஆலால சுந்தரம் பிள்ளையின் தேவி பாகவதம் (1908, 1915), துர்க்கா தாஸ் எஸ்.கே. ஸ்வாமியின் ஸ்ரீதேவி பாகவதம் (1967; 72, 75); பி. இராமாநுஜ நாவலரின் பத்மோத்புராணம்

3. தமிழ் மொழிபெயர்ப்பில் உலக இலக்கியம், ந. முருகேச பாண்டியன், தி பார்க்கர், சென்னை - 14, டிச. 2004, ப. 29.

*(1870); தி.ஈ. ஸ்ரீனிவாசராகவாச்சாரியின் விஷ்ணு புராணம், வேதாந்த ராமானுஜச்சாரியாரின் ஸ்ரீவிஷ்ணு புராணம் (1925); வேதமலையப்ப பிள்ளையின் மச்சபுராணம் (1900) ஆகியனவும் குறிப்பிடத்தக்கன.*

*நாராயணபட்டரின் ஸ்ரீநாராயணீயம், எச். பார்வதி (1974), சச்சிதானந்தம் (1962), பத்மநாபன் (1978) போன்றோராலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. எம்.எஸ். விஜயராகவனும், பி.ஆர். வேங்கட தீக்ஷிதரும் இணைந்து மற்றொரு மொழிபெயர்ப்புத் (1981) தந்துள்ளனர். பலரின் மொழிபெயர்ப்புகளைப் பெற்ற புராணமாக இது விளங்குகிறது.[4]*

புராண மொழிபெயர்ப்புகள் தழுவலாக - சுருக்கமாக எனப் பல்வேறு முறைகளில் வெளிவந்துள்ளன. இக்காலக்கட்டத்தில் 17ஆம் நூற்றாண்டில் சிவப்பிரகாசர் வழங்கிய பிரபுலிங்கலீலை எனும் தழுவல் நூல், 18ஆம் நூற்றாண்டில் சிவஞான முனிவர் வழங்கிய சித்தாந்தப்பிரகாசிகை, சுலோக பஞ்சகம், தர்க்க சங்கிரக அன்னப் பட்டீயம், சிவதத்துவ விவேகம் ஆகிய தமிழ் மொழிபெயர்ப்புகளும் வீரைநகர் ஆளவந்தார் வழங்கிய ஞானவாசிட்டம், ஆறுமுக அடிகள் வழங்கிய நிட்டானுபூதி மொழிபெயர்ப்பும் குறிப்பிடத்தக்கன.

## ஆங்கிலேயர் வருகையும் மொழிபெயர்ப்பும்

கி.பி. 15ஆம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்த ஆங்கிலேயர்கள், தொடக்கத்தில் வணிக நோக்குடன் வந்தாலும் நாளடைவில் கிறித்துவ சமயத்தைப் பரப்பிடவும், அரசு அதிகாரத்தைக் கைப் பற்றவும் இந்திய மொழிகளை அறிந்துகொள்ள வேண்டிய ஒரு கட்டாயச் சூழல் உருவாகியது. ஆகையால் ஆங்கிலேயர்கள் தங்கள் ஆட்சியை வலுப்படுத்திக்கொள்ள இந்திய மொழிகளும், ஆங்கிலமும் அறிந்த மொழிபெயர்ப்பாளர்கள் பலர் தேவைப்பட்டனர். கிழக்கிந்திய வணிகக் கம்பெனிக்கு இருமொழி வல்லுநர்களாக உதவியவர்கள் 'துவிபாஷி' எனும் பெயரால் குறிப்பிடப்பட்டனர். பின்னர் இந்த 'துவிபாஷி' எனப்பட்டோர் 'துபாஷி', 'துபாஷ்' எனவும் வழங்கப்பட்டனர். இவர்கள் ஆட்சியாளர்களுக்கும் பொது மக்களுக்குமிடையே ஒரு இணைப்புப் பாலமாக விளங்கினார்கள். இவர்கள் ஆங்கிலேயர்களுக்காக வட்டார வழக்குகளை மொழி பெயர்த்து விளக்கிவந்தனர். இச்சூழலில் மொழிபெயர்ப்புப் பணியைக் குறித்துப் புதிய போக்கில் கவனம் செலுத்தவேண்டிய சூழல் உருவாகியது. அக்காலத்தில் தமிழறிஞர்கள் பலர் சமசுகிருத மொழியிலிருந்து மிகுதியான நூல்களை மொழிபெயர்த்து வழங்கும்

---

4. மொழிபெயர்ப்புத் தமிழ், ச. சிவகாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், முப. 2004, ப. 62.

பணியில் ஈடுபட்டு வந்தனர். இவை கற்பனை நயம் கூடியதாக, சமயத் தத்துவ வகையைச் சார்ந்தனவாக உள்ளதைக் காணலாம். இந்தப் போக்கிலிருந்து மாறுபட்டு ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், உருசிய மொழி நூல்களையும், இந்திய மொழி நூல்களையும் மொழிபெயர்ப்பாளர்கள் மொழிபெயர்க்கத் தொடங்கினர்.

> தமிழ்மொழியில் முதல் அச்சுப்புத்தகம் கி.பி.1577இல் அச்சிடப்பட்டது. கிறிஸ்தவ வேதோபதேசம் (Flas sanctorum) என்னும் பெயருள்ள அப்புத்தகம் வைப்புக் கோட்டை என்னும் ஊரில் அச்சடிக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. அச்சு வடிவிலான் முதல் தமிழ் நூலின் தலைப்பானது, அது மொழிபெயர்ப்பு நூல் என்ற கருத்தினைத் தருகின்றது. கி.பி. 1774இல் விவிலிய நூலானது தமிழ்மொழியில் ஜே.பி. பாப்ரிஷியஸால் மொழிபெயர்க்கப்பட்டு வெளியானது. இதே காலக் கட்டத்தில் பெஸ்கி, கால்டுவெல், எல்லீஸ், ஜியூ. போப் போன்ற தமிழும் ஆங்கிலமும் அறிந்த ஐரோப்பிய அறிஞர்கள், கிறிஸ்துவ சமய இலக்கியங்களைத் தமிழில் அறிமுகப்படுத்துவதில் ஈடுபட்டிருந்தனர். தமிழ்மொழியில் சிறப்புப் பெற்றிருந்த சிற்றிலக்கிய வகைகளில் ஈடுபட்டுச் செய்யுள்கள் இயற்றினார். எனினும் பெரிய அளவில் தமிழில் நேரடி மொழி பெயர்ப்பு முயற்சியில் ஈடுபடவில்லை. தமிழும் ஆங்கிலமும் கற்ற தமிழர்களும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரை இலக்கிய மொழி பெயர்ப்பில் ஆர்வமுடன் செயல்படவில்லை.[5]

ஆனால் ஆங்கில ஆட்சியாளர்கள் தம் அலுவலர்களுக்குத் தமிழ் மொழியினைக் கற்பிப்பதற்காகக் கி.பி. 1850ஆம் ஆண்டு தோற்று விக்கப்பட்ட 'சென்னைப் பாடப் புத்தகச் சங்கம்' மூலம் மொழிபெயர்த்து நூல்களை வெளியிடுவதிலும் ஈடுபாடு காட்டத் தொடங்கியது. ஆகையால் தமிழ் மொழிபெயர்ப்பு நூல் வெளியீட்டில் முதன் முதலாக ஈடுபட்ட நிறுவனம் என்ற சிறப்பினைச் சென்னைப் பாடப்புத்தகச் சங்கம் பெற்றது.

ஆங்கிலத்திலிருந்து தமிழில் சிறந்த இலக்கியங்களை மொழிபெயர்த்து வழங்குவதற்கு ஒரு களத்தை உருவாக்கியது சென்னைப் பாடப்புத்தகச் சங்கம்.

> இந்தச் சங்கம் அளித்த பரிசு காரணமாகப் பல வசன நூல்கள் வெளிவந்தன. இராபின்சன் குருசோ, இந்திய சரித்திரம், உலக சரித்திரம் முதலிய சிறந்த

---

5. தமிழ் மொழிபெயர்ப்பில் உலக இலக்கியம், ந. முருகேச பாண்டியன், தி பார்க்கர், சென்னை - 14, டிச. 2004, ப. 30.

மொழிபெயர்ப்பு நூற்கள் சங்கம் அளித்த பரிசு காரணமாக வெளிவந்தவை

என மயிலை சீனி. வேங்கடசாமி (பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், ப. 17) குறிப்பிட்டுள்ளார்.

குறிப்பாக 1. டேனியல் டீபோ எழுதிய 'தி லைப் அண்டு அட்வென்சர்ஸ் ஆப் ராபின்சன் குருசோ' எனும் கதையை **வீ. விசுவநாத பிள்ளை** (இராபின்ஸன் குருஸோ சரித்திரம், 1867, கிறித்துவ மெய்ஞ்ஞான சங்கத்தார்), 2. **தி. செல்வக்கேசவராய முதலியார்** (இராபின்ஸன் குருசோ, கழகம், 1915), 3. **சி.எஸ். செல்லப்பா** (ராபின்சன் குருசோ, 1915, எஸ்.பி.சி.கே. பிரஸ்) 4. **வி.எஸ்.வி. இராகவன்** (இராபின்சன் குரூசோ, 1954, கிறித்துவ இலக்கியச் சங்கம்), 5. **கு. பரமசிவம்** (இராபின்சன் குருசோ, 1958), 6. **ந.சி. கந்தையா பிள்ளை** (இராபின்சன் குரூசோ, ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், ஆ.ப. 1959), 6. **டி.எஸ். ராகவன்** (இராபின்சன் குரூசோ, பழனியப்பா பிரதர்ஸ், மு.ப. 1964) எனப் பலரும் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளனர்.

மேற்கண்ட வரிசைப்படி கிறித்தவ மெய்ஞ்ஞான சங்கத்தார் 1867ஆம் ஆண்டு தமிழ் மொழிபெயர்ப்பு முயற்சியில் ஈடுபட்டுள்ளனர் என்பதை அறியலாம். ஆங்கிலத்தில் ஜான் பனியன் எழுதிய பில்கிரிம்ஸ் பிராகிரஸ் என்ற நூல் 1793ஆம் ஆண்டில் 'ஒரு பரதேசி இந்த லோகத்தை விட்டு மறுமைக்கு நடந்தேறினது சொப்பனம்' என்ற தலைப்பில் தமிழில் வெளியாகியுள்ளது என நீ. கந்தசாமிப் பிள்ளை (மொ.பெ., தாமஸ்கிரேயின் இரங்கற்பா, மொழி பெயர்ப்புக் கட்டுரை, 131) குறிப்பிட்டுள்ளார். மில்ட்டன் எழுதிய 'பாரடைஸ் லாஸ்ட்' எனும் காப்பியம் பலராலும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. 'ஆதி நந்தவனப் பிரளயம்' என்ற பெயரில் **அ. வேதக்கண்** உரைநடை வடிவில் மொழிபெயர்த்து, கி.பி. 1863 இல் வெளி யிட்டுள்ளார். மில்ட்டனின் இந்த நூலை 1. **சாமுவேல் யோவான்** (பரதீசு உத்தியான நாசம், கி.பி. 1880). 2. **சாமுபவுல்** (பரதேசியின் மோட்சப் பயணம், 1882), 3. **சாமுவேல் வேதநாயகம் தாமஸ்** (பூங்காவனப் பிரளயம், 1887), 4. **ஹெச்.ஏ. கிருஷ்ணப்பிள்ளை** (இரட்சணிய யாத்திரிகம், 1894), 5. **வெ.ப. சுப்பிரமணிய முதலியார்** (சுவர்க்க நீக்கம், 1895) பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பலரும் தமிழில் மொழிபெயர்த்து வழங்கிய முன்னோடிகளாவர்.

ஆங்கிலேயரின் ஆட்சிமுறையும், கல்வி முறையும் தமிழகத்தில் பெரும் மாற்றங்களை உருவாக்கின. ஆங்கிலக் கல்வி முறையினால் ஆங்கில மொழிப் படைப்புகளை ஆர்வமுடன் படித்து அந்த இலக்கியங்களைப் போலத் தமிழிலும் வெளிவர வேண்டும் என்று

விரும்பியவர்கள், அந்த விருப்பத்தை நிறைவேற்றும் வகையில் ஆங்கில இலக்கியப் படைப்புகளைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கினர். இதனால் அக்காலகட்டத்தில் தமிழ்ப் பண்டிதர்கள், அறிஞர்கள் போன்றோர் கருத்து வெளிப்பாட்டிற்குச் செய்யுள் நடையைப் பின்பற்றி வந்தவர்களிடையே உரைநடையிலான மொழிபெயர்ப்பு இலக்கியம் செல்வாக்குப் பெறத் தொடங்கியது. தொடர்ந்து தமிழும் ஆங்கிலமும் அறிந்த அறிஞர்கள் பலர் நாவல், சிறுகதைகள், நாடகம், கவிதைகள், கட்டுரைகள், போன்றவற்றை மொழிபெயர்த்து வழங்குவதில் ஈடுபட்டனர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஷேக்ஸ்பியர் நாடகங்கள் தழுவலாகவும், மொழிபெயர்ப்பாகவும், கதைச் சுருக்கமாகவும் தமிழில் இடம் பெற்றிருப்பதைச் சுட்டிக் காட்டலாம்.

தொடர்ந்து இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஷேக்ஸ்பியர் நாடகங்களைச் **ச. பவானந்தம் பிள்ளை, பம்மல் சம்பந்த முதலியார், நா.ரா. தாதாசாரி, அ. சுப்பிரமணிய பாரதி, மதுரை கந்தசாமி பிள்ளை, கே. வெங்கட்ராம ஐயர், ஜி. வைத்திய நாதைய்யர், எஸ்.வி. ஸ்ரீநிவாச ஐயர், ஏ.ஆர். ஸ்ரீநிவாச முதலியார், ஏ.வி. கண்ணபிரான் பிள்ளை** ஆகியோர் தமிழில் பல்வேறு முறைகளில் வழங்கியுள்ளனர்.

மேலும் டேனியல் டீபோ, வால்ட்டர் ஸ்காட், ஜோனதன் ஸ்விப்ட், ஆலிவர் கோல்டு ஸ்மித், ரெயினால்ட்ஸ் போன்ற ஆங்கில இலக்கியப் படைப்பாளிகளின் படைப்புகளும் வரத் தொடங்கின. தொடர்ந்து அரபு, பாரசீகம் கவிதைப் படைப்புகளும் இடம் பெற்றன. எஸ். கிருஷ்ணமாச்சாரியார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, சுப்பிரமணிய யோகி, சாமி சிதம்பரனார் போன்றோர் பாரசீகக் கவிஞன் உமர்கய்யாம் பாடல்களை மொழிபெயர்த்த முன்னோடிகளாவர். கிரேக்கத்தின் புகழ்பெற்ற தொன்மை இலக்கியங் களான இலியட், ஒடிஸி தமிழில் இடம்பெற்றது குறிப்பிடத்தக்கது. 1920ஆம் ஆண்டில் **'உல்லாஸன் சரிதம்'** எனும் தலைப்பில் கே. வேங்கடராம் ஐயர் இலியதம் நூலை மொழிபெயர்த் துள்ளார். மேலும் ஹோமர் இலியதம், இலியதம் என்ற மொழி பெயர்ப்புகளும் தமிழில் இடம்பெற்றுள்ளன. 'ஒதிஸியம்' எனும் தலைப்பில் 'ஒடிஸி'யை ஏ. சிங்காரவேலு மொழிபெயர்த்துள்ளார்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வடமொழியில் இருந்த இராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசங்கள் தொடர்பான செய்யுள் இலக்கியங்களும், புராணங்கள் மற்றும் தத்துவம் தொடர்பான பல நூல்களும் மொழிபெயர்ப்பாளர் களால் வழங்கப்பட்டன. நூற்றுக்கும் மேற்பட்ட மொழிபெயர்ப் பாளர்கள் இந்தப் பட்டியலில் அடங்குவர்.

மொழிபெயர்ப்பு வரலாற்றில் கவிதை மொழிபெயர்ப்பு தனித்துவம் பெற்றதாக விளங்குகிறது. அரபு, பாரசீகம், கிரேக்கம், இலத்தீன், சீனம், செர்மன், போலிஷ், பல்கேரியன், உருஷ்யன், ஆங்கிலம், சிங்களம், வடமொழி, இந்தி, பிராகிருதம், குஜராத்தி, மராத்தி, வங்காளம், கன்னடம், தெலுங்கு, மலையாளம் போன்ற பல மொழிகளிலிருந்து கவிதைகளை தமிழில் மொழிபெயர்ப் பாளர்கள் வழங்கியுள்ளனர்.

> **ஆங்கிலக் கவிதை நூற்களைப் பதினாறு மொழிபெயர்ப் பாளர்கள் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர். கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, பகவானந்த ராவ், ஆர்.பி. குழந்தைசாமி ஆகியோர் தலா இரு கவிதை நூற்களை மொழிபெயர்த்துள்ளனர். பதின்மூன்று மொழி பெயர்ப்பாளர்கள் தலா ஒரு கவிதை நூலினை மட்டும் மொழிபெயர்த்துள்ளனர். ஐந்து கவிதை நூற்களில் மொழிபெயர்ப்பாளர் பற்றிய தகவல் இல்லை. ஆறு மொழிபெயர்ப்பாளர்கள் ரஷ்யக் கவிதை நூற்களை மொழிபெயர்த்துள்ளனர். நான்கு கவிதை நூற்களைப் பூ. சோமசுந்தரம் மொழிபெயர்த்துள்ளனர்.[6]**

ஆர்.பி. குழந்தைசாமி (அரசனின் ஆயற்பாட்டு), கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை (ஆசியஜோதி), அ. வேதக்கண் (ஆதி நந்தவனப் பிரளயம்), நீ. கந்தசாமிப் பிள்ளை (இரங்கற்பா), எச்.ஏ. கிருஷ்ணப்பிள்ளை (இரட்சணிய யாத்திரிகம்), வி.ஆர்.எம். செட்டியார் (கவிதை மின்னல்), அ.கு. ஆதித்தர் (கற்புக்கனல்), முதற்கனி (செ. ஜேசுதாசன்) போன்ற கவிதை மொழிபெயர்ப் பாளர்கள் இத்துறையில் முன்னோடிகளாகத் திகழ்ந்தனர்.

உருஷ்யக் கவிதை நூல்கள் சில தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுவதில் த. கோவேந்தன் முனைப்புக் காட்டியுள்ளார். எண்ணப் பறவைகள், சிவப்புக் குயில்கள் ஆகிய இரு கவிதைத் தொகுதிகளைத் த. கோவேந்தன் மொழிபெயர்த்துள்ளார். சோவியத் நாட்டுக் கவிதைகள், லெனின் கவிதாஞ்சலி ஆகிய இரு கவிதைத் தொகுதிகளை வழங்கிய தொ.மு.சி. ரகுநாதன், 'பரிசு' எனும் தலைப்பில் உருஷ்யக் கவிதைகளை வழங்கிய பூ. சோமசுந்தரம் ஆகியோர் இதில் முன்னோடிகளாவர்.

செர்மானிய இலக்கியத்தின் சிறப்புப் பகுதி (இடைக்காலம் முதல் தற்காலம் வரை) என்ற தலைப்பின்கீழ் கே. திரவியம், மா. சண்முக சுப்பிரமணியம், எம். அப்துல் வஹ்ஹாப், தெசிணி ஆகியோரும் ஜெர்மானியக் கவிஞர் 'கதே'யின் பாஸ்ட் எனும்

---

6. தமிழ் மொழிபெயர்ப்பில் உலக இலக்கியம், ந. முருகேச பாண்டியன், தி பார்க்கர், சென்னை - 14, டிச. 2004, ப. 138.

கவிதை நூலை பி. அய்யாசாமி, அ. துரைசாமிப் பிள்ளை ஆகியோரும் மொழிபெயர்த்த முன்னோடிகளாவர். சீனத்து மாசேதுங் கவிதைகளை எஸ். சிவசேகரம் மொழிபெயர்த்துள்ளார்.

வங்க இலக்கியத்தைப் பொறுத்தமட்டில் கவிதை எனும் நோக்கில் இரவீந்திரநாத் தாகூரின் பாடல்கள் பலராலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளதைச் சுட்டிக்காட்டலாம். வி.ஆர்.எம். செட்டியார், அ. சீநிவாசராகவன், அரங்க சீனிவாசன், ஈ.சி. ராமஸ்வாமி, நா. வீரப்பன், பெ. தூரன், த.நா. குமாரஸ்வாமி, த.நா. சேனாபதி, எஸ். டோரதி ஆகியோர் இம்மொழிபெயர்ப்பில் முன்னோடிகளாவர்.

இந்திய மொழிகளில் பலவற்றுள் இராமாயணம், மகாபாரதம், பகவத் கீதை போன்றவற்றின் தொடர்பான செய்யுள் இலக்கியங்களை மொழிபெயர்ப்பதில் பெரிதும் ஆர்வம் காட்டி உள்ளனர். தமிழிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வடமொழியிலிருந்து இக்கதைக் கூறுகளை தமிழில் மொழிபெயர்த்த முன்னோடிகளின் பட்டியல் நீண்டதாகும். தனிமனிதர்களின் சமூகம் சார்ந்த படைப்புகள் அக்காலத்தில் குறைவு. இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தெலுங்கு, மலையாளம், கன்னட மொழிக் கவிதைகள் சில தமிழ் மொழிபெயர்ப்பில் காணமுடிகிறது.

நாடக நூல்களை மொழிபெயர்த்து வழங்குவதில் பலரும் முனைப்புக் காட்டியுள்ளனர்.

> **தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட நாடக நூற்கள் 167இல் இங்கிலாந்து ஆங்கில மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட 127 நாடக நூற்கள் முதன்மையிடம் பெறுகின்றன. ரஷ்ய மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட எட்டு நாடக நூற்கள் இரண்டாமிடமும் பிரெஞ்சு, நார்வேஜியன் ஆகிய மொழிகளிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட தலா ஏழு நாடக நூற்கள் மூன்றாமிடமும் பெறுகின்றன.**

என்று ந. முருகேச பாண்டியன் 'தமிழ் மொழிபெயர்ப்பில் உலக இலக்கியம்' (ப. 48) எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

நாடகத்தைப் பொறுத்தமட்டில் 40க்கும் மேற்பட்ட மொழிபெயர்ப்புகள் ஷேக்ஸ்பியர் நூல்கள் வெளியிடப்பட்டிருந்தாலும் தற்காலம் வரை மீண்டும் மீண்டும் மொழிபெயர்ப்பாளர்கள் இந்நாடகங்களை மொழிபெயர்த்து வருகின்றனர்.

சிம்பலின், டெம்பஸ்ட், மாக்பெத், ஹாம்லெட், கிங்லியர், ஜூலியஸ் சீசர், ஆண்டனி அண்டு கிளியோபாட்ரா, ரோமியோ அண்ட் ஜூலியட், தி மெர்ச்சண்ட் ஆப் வெனிஸ், ஆஸ் யூ லைக்

இட், தி விண்டர்ஸ் டேல், தி டுவல்த் நைட், ஒத்தெல்லோ, மெஸர் பார் மெஸர்ஸ், காமடி ஆப் எர்ரர்ஸ், டேமிங் ஆப் தி ஷ்ரு, மச் அடோ அபவுட் நத்திங் ஆகிய ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் தமிழில் பல முறை தழுவலாகவும், மொழிபெயர்ப்பாகவும் அறிஞர்களால் வழங்கப்பட்டுள்ளன.

வீ. விசுவநாதபிள்ளை வெனிஸ் வர்த்தகன் எனும் பெயரில் கி.பி. 1870ஆம் ஆண்டு ஷேக்ஸ்பியரின் 'தி மெர்ச்சன்ட் ஆப் வெனிஸ்' நாடகத்தினை மொழிபெயர்த்துள்ளார். ஆங்கிலத்தி லிருந்து தமிழுக்கு வந்த முதல் நாடக நூலாக இது அமைந்துள்ளது. ச. பவானந்தம்பிள்ளை, வி. சண்முகசுந்தரம், அ. சிதம்பரஞ் செட்டியார், தி. சரவணமுத்து, நடேச சாஸ்திரியார், பம்மல் சம்பந்த முதலியார், வேணுகோபாலாச்சாரியார், வெ.ப. சுப்பிரமணிய முதலியார், அ. சுப்பிரமணிய பாரதி, தி. இரா. சலசலோசன செட்டியார், மதுரை கந்தசாமிப் பிள்ளை, கா. அப்பாத்துரை, வீ. கிருஷ்ணமாச்சாரியார், ஜி. வைத்திய நாதைய்யர், பி. சம்பந்தம், அர.சு. நாராயணசுவாமி நாயுடு, கே.ஆர். ஸ்ரீநிவாச அய்யங்கார், நாராயண சுவாமி அய்யர், ஏ. சீனிவாச ஐயங்கார், வி.வி. ஸ்ரீனிவாச ஐயங்கார், ஏகாம்பரநாதன் ஆகியோர் ஷேக்ஸ்பியர் நாடகங்களை மொழிபெயர்த்த முன்னோடிகளாவர். தொடர்ந்து எஸ். மகராஜன், கே.ஆர்.எஸ். ஐயங்கார், டி.என். சேஷாசலம், அரு. சோமசுந்தரம், கவிஞர் புவியரசு ஆகியோர் ஷேக்ஸ்பியர் நாடக மொழிபெயர்ப்பில் தனி ஈடுபாடு காட்டியுள்ளனர்.

நார்வே மொழிப் படைப்புகளுள் ஹென்ரிக் இப்சென் நாடகங்கள் தமிழ் மொழிபெயர்ப்பில் இடம்பெற்றமை குறிப்பிடத் தக்கது. இப்சென் இரு நாடகங்கள் (சமூகத்தின் தூண்கள், மக்களின் பகைவன்) மற்றும் தோல்வியின் சந்நிதானத்திலே, கோபுரத்தின் உச்சியிலே எனும் நாடக நூல்கள் கா. திரவியம் மொழிபெயர்ப்பில் வெளிவந்தன. சமூகத்தின் தூண்கள் (தி பில்லர்ஸ் ஆப் சொசைட்டி) அறிஞர் அண்ணாவால் தமிழில் வழங்கப்பட்டது. துரை. அரங்கசாமி இப்சென் நாடகங்கள், காட்டு வாத்து ஆகிய இரு நாடகங்களை மொழிபெயர்த்துள்ளார். 'பொம்மையா மனைவியா' எனும் இப்சென் நாடகத்தைக் க.நா. சுப்பிரமணியம் மொழி பெயர்த்து வழங்கியுள்ளார். இப்சென் நாடகங்கள் தமிழ்ப் படைப்பாளிகளிடையே பெரும் வரவேற்புப் பெற்றவையாகும்.

> ரஷிய மொழியிலிருந்து எட்டு நாடகங்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. டால்ஸ்டாய் எழுதிய நாடகமொன்று, இருளின் வலிமை என்ற பெயரில் 1942இல் நா. வானமாமலை மொழிபெயர்ப்பில் வெளியாகியுள்ளது. இதுவே ரஷிய மொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்

> **பட்ட முதல் நாடகமாகும். ஆண்டன் செகாவ் எழுதிய செர்ரி ஆர்சடு என்ற நாடகம், செர்ரித் தோட்டம் என்ற பெயரில் ரா. ஸ்ரீதேசிகனால் மொழிபெயர்க்கப் பட்டு 1948இல் வெளியிடப் பட்டுள்ளது. கோகல் எழுதிய இன்ஸ்பெக்டர் ஜெனரல் என்ற நாடகம் அதே தலைப்பில் 1958இல் ரதுலனாலும் கவர்ண்மெண்ட் இன்ஸ்பெக்டர் என்ற நாடகம், அரசு ஆய்வாளர் என்ற தலைப்பில் 1989இல் நா.முகம்மது செரீபுவினாலும் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப் பட்டுள்ளன. மக்சீம் கார்க்கி, பொககோடின், அர்டிஸிங் ஆகிய ரஷியப் படைப்பாளர்களின் நாடகங்களும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.[7]**

பிரெஞ்சு மொழிப் படைப்புகளில் நாவல், சிறுகதை ஆகியவை தமிழ் மொழிபெயர்ப்பில் இடம்பெற்ற அளவிற்கு நாடகங்கள் இடம்பெறவில்லை. பிரெஞ்சு மொழி நாடகங்களை மொழிபெயர்த்து வெளியிடுவதில் ப. சம்பந்த முதலியார், பி.ஸ்ரீ. ஆச்சார்யா, ஜி.ஆர். மயிலேறு, கே.எஸ். வேங்கடராமன், எஸ்.வி. கணபதி ஆகியோர் முன்னோடிகளாவர். மோலியரின் காளப்பன் கள்ளத்தனம் (ப. சம்பந்த முதலியார், 1931), குப்பன் பித்தலாட்டங்கள் (ஜி. ஆர். மயிலேறு, 1959), லோபியின் காதல் (எஸ்.வி. கணபதி, 1959) ஆகியன பிரெஞ்சு நாடகங்களின் தமிழ் மொழிபெயர்ப்பில் குறிப்பிடத்தக்கனவாகும்.

இந்திய மொழிகளில் வடமொழி, வங்காளம், இந்தி மொழி நாடகங்கள் பலவற்றை மொழிபெயர்ப்பதில் மொழிபெயர்ப் பாளர்கள் ஈடுபாடு காட்டியுள்ளனர். வடமொழியில் காளிதாசரின் நாடகங்கள் மிகுதியாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. சாகுந்தலம், இரகுவம்சம், குமாரசம்பவம், மாளவிகாக்னிமித்திரம், மேகசந்தேசம், விக்கிரம ஊர்வசி ஆகிய நாடகங்கள் தமிழில் பல முறை மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. டி. சுந்தரராஜ சர்மா, இராமச்சந்திரன், வெங்கடாச்சாரியார், என். சுவாமிநாத சாஸ்திரி, எஸ். பவானந்தம் பிள்ளை, ஆர். ராகவய்யங்கார், அ.கு. ஆதித்தர், கே. சந்தானம், மறைமலையடிகள், நாவலியூர் சோ. நடராசன், எஸ்.ஏ. ராமசாமி, சிறுகளத்தூர் ராமஸ்வாமி, எம்.எஸ். நடேச சாஸ்திரி, வி.எஸ். வெங்கட ராகவாச்சாரி, டி.தி. தாதாசார்யா, க.ரா. ஜமதக்னி, தி.ஈ. சீனிவாச ராகவாச்சாரியார், பம்மல் சம்மந்த முதலியார், மோ.க. சடகோபாலாச் சாரியார், எஸ்.ஏ. பாலாகிருஷ்ண ஐயர், வடுவூர் கி. துரைசாமி ஐயங்கார், மு. கதிரேசச் செட்டியார், கே.பி. ராமசுவாமி ஐயர், சுத்தானந்த

---

7. தமிழ் மொழிபெயர்ப்பில் உலக இலக்கியம், ந. முருகேச பாண்டியன், தி பார்க்கர், டிச. 2004, ப. 51.

பாரதி, ஆர்.வி. கிருஷ்ணமாச் சாரியார், எஸ்.ஏ. குமாரசாமிப் பிள்ளை, எஸ். ராஜாசாஸ்திரி, நலங்கிள்ளி ஆகிய பலரும் காளிதாசரின் நாடகங்களை மொழி பெயர்த்த முன்னோடிகளாவர்.

வ. கணபதி பிள்ளை (பில்ஹணீயம்), ஜி. ஹரிஹர சாஸ்திரி (ஸ்வப்ன வாசவதத்தம்), நாராயணசாமி ஐயர் (ஸத்ய ஹரிச்சந்திரன்), கே. சடகோபாலாச்சாரியார் (காதம்பரி சாரசங்கிரகம்), எஸ்.என். ஸ்ரீராம தேசிகன் (ஏழு நாடகக் கதைகள்), அன்பில் வேங்கடாச்சாரி (உத்தர ராமசரிதம்) போன்றோர் சமசுகிருத மொழி நாடகங்களைத் தமிழில் வழங்கிய முன்னோடிகளாவர்.

இந்தி மொழிப் படைப்புகளை மிகுதியாக வழங்குவதில் ஈடுபட்டவர்கள் சரசுவதி ராம்னாத், ஆர். சண்முகசுந்தரம், அ.கி. ஜெயராமன் ஆகியோராவர். அரையும் குறையும் (சரஸ்வதி ராம்நாத்), சந்திரகுப்தன் (ஆர். சண்முக சுந்தரம்), அடிவானத்திற்கு அப்பால் (அ.கி. ஜெயராமன்) ஆகிய நாடகங்களைத் தமிழாக்கம் செய்துள்ளதைச் சான்றாகக் காட்டலாம்.

வங்கமொழி நாடகங்களில் இரவீந்திரநாத் தாகூரின் படைப்புகள் மிகுதியாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளமை குறிப்பிடத் தக்கது. தபாலாபீஸ், தாகூரின் நகைச்சுவை நாடகங்கள், நடிகையின் பூஜை, புலைச்சி, மாலினி, ரவீந்திரர் நாடகத் திரட்டு, சித்ரா ஆகியவை குறிப்பிடத்தக்க மொழிபெயர்ப்புகளாகும். கே.ஸி. வீரராகவையர், த.நா. குமார சுவாமி, த.நா. சேனாபதி, ஆ. கந்தசாமி, டி.எஸ். பார்த்தசாரதி, எஸ். அழகப்பன் ஆகியோர் தாகூரின் நாடகப் படைப்புகளை வழங்கிய மொழி பெயர்ப்பாளர் களாவர். பி.கே. விஜயராகவன் (நூர்ஜஹான்), ராஜாராம் (பிறகொரு இந்திரஜித்) ஆகியோரும் வங்கமொழி நாடகப் படைப்புகளைத் தமிழில் வழங்கியுள்ளனர்.

இவையல்லாமல் ஏ. ராஜேந்திரநாதன் (துறந்தவாள்), மராத்தி மொழி நாடகத்தையும் பி. ஆதிமூலம் (அடிமை), சௌரி (கூட்டுப்பண்ணை) ஆகியோர் மலையாள நாடகங்களையும் மொழிபெயர்த்து வழங்கியுள்ளனர். இந்திய மொழிகளிலும், ஆங்கிலத்திலும் சிறந்த நாடகங்களைத் தேர்வு செய்து சுமார் 20 நாடக நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இம்முயற்சியில் ஈடுபட்ட திருமதி சரசுவதி ராம்னாத், முனைவர் பி. பானுமதி ஆகியோரைக் குறிப்பிடத்தக்க மொழிபெயர்ப்பாளர்களாகச் சுட்டிக்காட்டலாம். திருமதி சரசுவதி ராம்னாத் 'இந்திய மொழி நாடகங்கள்' என்ற தலைப்பில் மொழி பெயர்த்து வெளியிட்ட இந்நூலுக்குச் சாகித்திய அகாதெமியின் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருது 1993ஆம் ஆண்டு கிடைத்தது.

நாடகங்களுக்கு இணையாகச் சிறுகதைகளும், புதினங்களும் மிகுதியாக மொழிபெயர்க்கப்படலாயின. உலகப் புகழ்பெற்ற பிறமொழிக் கதையிலக்கியங்கள் தமிழில் வருவிக்கப்பட்டன. பு.வே. சபாபதி முதலியார் மொழிபெயர்த்த 'வெண்டாமரையாள்' (Soldier's wife) என்ற புதினம், 1901இல் கதாமஞ்சரியில் வெளிவந்த முதல் மொழி பெயர்ப்புப் புதினமாகும் சிறப்புப் பெற்றது. (தாமரை, சூன் 1979, பக். 42). டேனியல் டீபோவின் இராபின்சன் குருசோ, சர் வால்டர் ஸ்காட்டின் ஐவன்ஹோ, அலெக் ஸாண்டர் டூமாஸின் லாகம்டே, விக்டர் ஹியூகோவின் லெஸ்மிஸரபில்ஸ் என்பனவும் வங்கமொழிப் புதினங்களும் (ஆனந்தமடம் – மகேச குமார சர்மா– 1906; சந்திரசேகரன் – சி. திருச்சிற்றம்பலம் – 1908; கிருஷ்ணகாந்தன் உயில் – த.நா. குமாரஸ்வாமி – 1938; தேவி சந்த்வியானி – சுவர்ணாம்பாள் – 1939, பிரபாவதி – ஸ்ரீசைலாதாதாசாரியார் – 1909, ஸவிதா– அ.கி. ஜயராமன் – 1928, விஷவிருக்ஷம் – த.நா. குமார ஸ்வாமி – 1937 என்பன சில சான்றுகள்) குறிக்கத் தக்கன. இந்திச் சிறுகதையாசிரியர் பிரேம்சந்த் கதை களும் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாக ஜைலனி மொழிபெயர்த்த பிரேமபஞ்சமி (1940), கே.எஸ். சீனிவாசாசார்யாவின் பிரேம்சந்தின் சிறந்த சிறுகதைகள் (1942) ஆகியவற்றைச் சுட்டலாம்.[8]

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மொழிபெயர்ப்பு நாவல்கள் தமிழில் மிகுதியாக வெளிவந்துள்ளன. 'தமிழிலக்கியத்தைப் பொறுத்தவரையில் நாவல் என்ற இலக்கிய இனம் ஆங்கில இலக்கியப் பாதிப்பினால் உருவானதாகும். தமிழில் முதல் நாவல் எழுதப்படுவதற்கு முன்னரே, சில ஆங்கில நாவல்கள் தமிழ் மொழிபெயர்ப்பில் வெளியிடப்பட்டுள்ளன. உலகின் முதல்நாவல் தோன்றி 265 ஆண்டுகள் கழிந்த பின்னர் 1879 ஆம் ஆண்டு தமிழில் முதல் நாவலான பிரதாப முதலியார் சரித்திரம் வெளியானது என்ற செய்தியை 'தமிழ் மொழிபெயர்ப்பில் உலக இலக்கியம்' (ப. 53) எனும் தமது ஆய்வு நூலில் ந. முருகேசபாண்டியன் குறிப்பிட்டுள்ளார். இதைப் போலவே தமிழில் வெளியான முதல் மொழி பெயர்ப்பு நாவல் பற்றிக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்.

மரியா எட்ஜ் வொர்த் எழுதிய தி லிட்டில் மெர்ச்சண்ட் எனும் இங்கிலாந்து ஆங்கில நாவலின் சுருக்கம் எஸ். வெங்கடாசாரியாரால் மொழிபெயர்க்கப்பட்டு, பால வியாபாரிகள் கதை என்ற பெயரில் 1882இல்

8. மொழிபெயர்ப்புத் தமிழ், முனைவர் ச. சிவகாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113, முப. 2004, பக். 72-73.

> வெளியாகியுள்ளது. இந்நூலே இவ்வாய்வில் கண்டறியப் பட்ட முதல் மொழிபெயர்ப்பு நாவலாகும்.
>
> முழு நாவலும் முழுமையாக வெளியிடப்பட்டதெனில் வீ. விசுவநாதம் பிள்ளையின் மொழிபெயர்ப்பில் 1906-இல் வெளியான இராபின்சன் குருசோ சரித்திரம் நாவலினைக் குறிப்பிடலாம். இந்நாவலாசிரியர் துரைத்தன வித்தியா வகுப்பில் துவிபாஷிகராகப் பணியாற்றியது பற்றிய தகவல் நூலில் இடம் பெற்றுள்ளது.
>
> இங்கிலாந்து ஆங்கில மொழியிலிருந்து 184 நாவல் நூற்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. மொத்த மொழிபெயர்ப்பு நாவல் நூற்களில் மூன்றிலொரு பங்கு இங்கிலாந்து ஆங்கில நாவல் நூற்களாகும். ஒட்டுமொத்த நாவல் மொழிபெயர்ப்பில் 36% இடம்பெறுகின்றன. தமிழில் மொழிபெயர்க்கப் பட்ட தொடக்ககால நாவல்கள் பெரும்பாலும் ஆங்கில மொழியை மூலமாகக் கொண்டுள்ளன.[9]

என்று தம் ஆய்வின் மூலம் ந. முருகேசபாண்டியன் கண்டறிந்துள்ளார்.

ஒரே நாவல் பலமுறை மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளது குறிப்பிடத்தக்கது. சார்லஸ் டிக்கன்ஸ் எழுதிய 'ஆலிவர் ட்விஸ்ட்' நாவலை இ.மா. பக்தவத்சலன் (1956), கு. பரமசிவன் (1957), தே. வீரராகவன் (1959), வீரசிம்ஹன் (1960), பூவை அமுதன் (1981) ஆகியோர் தமிழில் வழங்கியுள்ளனர். இராபின்சன் குருசோ சரித்திரம் நாவலைப் பலரும் மொழிபெயர்த்துள்ளதை முன்பே குறிப்பிட்டுக் காட்டியுள்ளோம். ஆரணி குப்புசாமி முதலியார் பல நாவல்களைத் தழுவலாக வழங்கியவராவார். கிருபை சத்திய நாதன் அம்மாள் 1869ஆம் ஆண்டு ஒரு ஆங்கில நாவலைத் தமிழில் 'கமலம்' எனும் பெயரில் எஸ்.பி.சி.கே. பிரஸ் மூலம் வெளியிட்டுள்ளார்.

ஆலிவர் டுவிஸ்ட், இராபின்சன் குருசோ, எல்லாள் அல்லது நல்ல மனைவியே நல்ல பொருள், ஐவன்ஹோ, கருங்கணை, கிறக்கும் உச்சி, குவெண்டின் டர்வர்டு, கெனில் வொர்த், கைமேனரிங், சுவிஸ் குடும்ப ராபின்சன், டேவிட் காப்பர் பீல்ட், பகட்டுச் சந்தை, பவளத்தீவு, பாம்பேயின் கடைசி நாட்கள், ராப்ராய், மாண்டி கிரிஸ்டோ பெருமகன், மூன்று வீரர்கள் எனப் பல நாவல் மொழிபெயர்ப்புகளைக் கு. பரமசிவன் வழங்கியுள்ளார்.

---

9. தமிழ் மொழிபெயர்ப்பில் உலக இலக்கியம், ந. முருகேச பாண்டியன், தி பார்க்கர், டிச. 2004, ப. 55.

சுத்தானந்த பாரதியார், மறைமலையடிகள், வ.சு. செங்கல் வராய பிள்ளை, எம். ராமலிங்க முதலியார், டி.எஸ்.டி. சாமி, பெ.நா. அப்புசுவாமி, நடேச அய்யர், கா. அப்பாத்துரை, சரோஜினி பாக்கியமுத்து, வை. கோவிந்தன், த.நா. சேனாபதி, நாகமுத்தையா, புதுமைப்பித்தன் என இன்னும் பல மொழிபெயர்ப்பாளர்கள் ஆங்கில நாவல்களை தமிழில் வழங்கினர்.

ஆங்கில நாவல்கள் இலக்கியவாதிகளைக் கவர்ந்ததுபோல உருசிய நாவல்கள் பலருடைய கவனத்தை ஈர்த்தன. தமிழ் மொழிபெயர்ப்பில் வெளிவந்த நாவல்களில் நான்கில் ஒரு நூல் உருசிய மொழி நாவலாக அமைந்துள்ளது.

> லியோ டால்ஸ்டாய் எழுதிய நாவலினை வாழ்க்கையின் வெறுப்பு அல்லது கழிந்த காமம் என்ற தலைப்பில் யோகி சுப்பிரமணியம் 1937இல் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ள நூல் ரஷ்ய மொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட முதல் நூலாகும்.[10]

மாக்ஸிம் கார்க்கி, லியோ டால்ஸ்டாய், இவான்துர்கெனெவ், பியாதோர் தஸ்தாவ்ஸ்கி, சிங்கிஸ்ஐத்மாத்தவ், மிகையில் ஷோலகவ், புஷ்கின் ஆகிய புகழ்பெற்ற உருசியப் படைப்பாளிகளின் படைப்புகள் பெரும் வரவேற்பைப் பெற்றன. வி.எஸ். வெங்கடேசன், பூ. சோம சுந்தரம், ஆர். இராமநாதன், ரா. பாஸ்கரன், ரா. கிருஷ்ணையா, ரகுநாதன், நா. முகம்மது ஷெரீபு, நா. தர்மராஜன், ப. ராமஸ்வாமி, தா. பாண்டியன், மீனவன், எஸ். இராம கிருஷ்ணன், மாஜினி, முல்லை முத்தையா, சொக்கலிங்கம், கிருஷ்ணமூர்த்தி, சு. சோமசுந்தரம், எஸ். சங்கரன் ஆகியோர் உருசிய மொழியின் சிறந்த நாவல்களையும் சிறுகதைகளையும் மொழிபெயர்த்துள்ளனர்.

பிரெஞ்சு மொழிப் படைப்புகள் பலவும் தமிழ் மொழி பெயர்ப்பில் வழங்கும் முயற்சி 1914ஆம் ஆண்டு முதல் தொடங்கி யுள்ளது. என்.சி. கோபாலகிருஷ்ண பிள்ளை அலெக்சாண்டர் டூமாஸ் எழுதிய 'மாண்டி கிறிஸ்டோ' எனும் நாவலை 'அமர சிம்ஹன்' என்ற பெயரில் மொழிபெயர்த்து 1914ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளார். ஆரணிகுப்புசாமி முதலியார் இந்நாவலைத் தழுவலாகத் தமிழில் எழுதி வெளியிட்டார். விக்டர் ஹ்யூகோவின் லெஸ்மிஸரபிள் நாவலைச் சுத்தானந்த பாரதியார் தமிழில் 'ஏழை படும் பாடு' எனும் தலைப்பில் வெளியிட்டார். இது புகழ்பெற்ற

10. தமிழ் மொழிபெயர்ப்பில் உலக இலக்கியம், ந. முருகேச பாண்டியன், தி பார்க்கர், டிச. 2004, ப. 59.

மொழிபெயர்ப்பாக அமைந்தது. 'இளிச்சவாயன்' (லோம்கிரி - விக்டர் ஹ்யூகோ), சாது ஜவானி (ராஜியோவானி - அந்தோல் பிரான்ஸ்) ஆகியனவும் சுத்தானந்த பாரதியாரின் பிரெஞ்சு மொழி நாவல்களின் மொழிபெயர்ப்புகளாகும். கா. அப்பாத்துரை, புதுமைப்பித்தன், ரதுலன், ந. குழந்தைவேலன், எஸ். சங்கரன், எஸ்.வி. வெங்கட்ராம், எஸ்.கே. சாமி, எஸ். வேதரத்னம், கு. பரமசிவன், பி.எஸ். சுப்பிரமணியம், வெ. ஸ்ரீராம் ஆகியோர் பிரெஞ்சு மொழிப் படைப்புகளைத் தமிழில் வழங்கியுள்ளனர். வெ. ஸ்ரீராம் சிறந்த மொழிபெயர்ப்பாளராகப் பிரெஞ்சு அரசால் சிறப்பிக்கப்பட்டார்.

சில ஜெர்மன் மொழி நாவல்களும் தமிழில் இடம்பெற்று வந்தன. ந. ஞானமுத்துப் பிரசங்கி (தாரகை இராஜகுமாரி கதை) ந. கணபதி பிள்ளை (பூஞ்சோலை), திருலோக சீதாராம் (சித்தார்த்தன்), இரா. முத்துக்குமாரசாமி (சிறுமி எய்தி), ஆர். கோபிநாதராவ் (இளமைப் போராட்டம்), கே. ராமநாதன் (காலம் வீணானதே), எஸ். சங்கரன் (பிரிந்த சொர்க்கம்) ஆகியோர் குறிப்பிடத்தக்கவராவர்.

இதுபோன்று உலகமொழிப் படைப்புகளைத் தமிழில் வழங்கும் முயற்சியில் ஈடுபாடு உடையவர்கள் இந்திய மொழிகள் பலவற்றுள்ளும் சிறந்து விளங்கிய நாவல்களை மொழிபெயர்த்து வழங்கியுள்ளனர்.

இந்தி மொழியில் வெளிவந்த நாவல்களைக் கா.ஸ்ரீ.ஸ்ரீ., ரா. வீழிநாதன், சரஸ்வதி ராம்னாத், கா. அப்பாத்துரை, எம்.வி. வெங்கட்ராம், ர. சௌரிராஜன், மாஜினி ஆகியோர் மொழி பெயர்த்துள்ளனர்.

வங்கமொழியின் மிகச் சிறந்தப் படைப்பாளிகளின் படைப்புகள் தமிழில் மொழிபெயர்த்து வழங்க வேண்டும் என்று பலரும் முனைப்புடன் செயல்பட்டுள்ளனர். கலைமகள் வெளியீடு, அல்லயன்ஸ் வெளியீடு, ஜோதி நிலையம், பாரி நிலையம், ஸ்டார் பிரசுரம் போன்ற நிறுவனங்கள் மூலம் வங்க மொழி நாவல்கள் தமிழில் தமிழ் நாவல்கள் போலவே இடம்பெற்றன. த.நா. குமார ஸ்வாமி, த.நா. சேனாபதி இருவரும் தாகூரின் படைப்புகளைத் தமிழில் வழங்குவதில் முழுமூச்சுடன் செயல்பட்டனர். சரத்சந்திரர் படைப்புகளை அ.கி. ஜெயராமன், ஆர் சண்முகசுந்தரம் வெளியிட்டனர். வைகுந்தன் உயில், ஸ்ரீகாந்தன், சந்தியா, சாவித்திரி, பதேர் பாஞ்சாலி, புது மணப்பெண், மலர்ந்த உள்ளம், மிதுன லக்னம், மேகத்திரை, ஜமீந்தாரிணி ஆகிய வங்கமொழி நாவல்கள்

ஆர். சண்முகசுந்தரம் மொழிபெயர்ப்பில் வெளிவந்தவை என்பது ஒரு சான்றாகும்.

பங்கிம்சந்திரரின் படைப்பில் 'துர்க்கேச நந்தினி' 1905ஆம் ஆண்டு தமிழில் சென்னை ஆனந்தா ஸ்டீம் பிரஸ் மூலம் வெளியிடப் பட்டுள்ளது. வங்கமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட முதல் நாவலாக இது அமைகிறது. தொடர்ந்து பங்கிம் சந்திரரின் சந்திரசேகர் எனும் நாவல் சி. திருச்சிற்றம்பலம் பிள்ளை (1908), மஹேச குமார சர்மா (1912), வி.எஸ். வெங்கடேசன், அ.கி. ஜெய ராமன் (1977) ஆகியோரால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இவருடைய மற்றொரு படைப்பான 'கபாலகுந்தலா' அந்தப்புர ரகசியம் அல்லது இராஜேஸ்வரி எனும் தலைப்பில் எம். ராமலிங்க முதலி 1907, 1919ஆம் ஆண்டுகளில் தழுவல் படைப்பாக வெளியிட்டுள்ளார். கபால குண்டலா என்னும் தலைப்பில் த.நா. குமாரஸ்வாமி மொழிபெயர்த்துள்ளார். சிதம்பர புன்னைவன நாத முதலியார், மஹேச குமாரசர்மா, சு. கிருஷ்ணமூர்த்தி, குகப்பிரியை, வி.எஸ். வெங்கடேசன், கே.எஸ். அப்பாசாமி, எம்.வி. வெங்கட்ராம், கு.ப. ராஜகோபாலன், சுவர்ணாம்பாள், ஆர்.பி. குழந்தைசாமிப் பிள்ளை, ஸ்ரீ சைலதாதாசாரியார், கி. சாவித்திரி அம்மாள், எஸ். குருஸ்வாமி, பி.எஸ். நெல்லை யப்பர் ஆகிய மொழிபெயர்ப்பாளர்கள் வங்க மொழி நாவல்களைத் தமிழில் வெளியிட்டனர். இவர்களின் முயற்சியில் தாரா சங்கர் பந்த்யோத்பாத்யாய், பங்கிம் சந்திரர், தாராசங்கர் பானர்ஜி, விபூதிபூஷன் பந்தோபாத்யாயா, சரத்சந்திரர், சீர்ஷேந்து முகோபாத்யாய, இரவீந்திரநாத் தாகூர், ரமேஷ் சந்திரதத்தர், நாகேந்திரநாத் சட்டர்ஜி, தாரகநாத் பந்த்யோபாத்யாய ஆகியோரின் நாவல்கள் தமிழில் இடம்பெற்றுள்ளன.

மராட்டிய மொழியின் மிகச் சிறந்த நாவலாசிரியரான வி.ஸ. காண்டேகரின் அனைத்து நாவல் சிறுகதைகளை முழுமையாகத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கி மிகச் சிறந்த மொழிபெயர்ப் பாளராக விளங்கியவர் கா.ஸ்ரீ.ஸ்ரீ. தமிழ்ப் படைப்பாளிகளிடம் மிகப் பெரும் தாக்கத்தை உண்டாக்கியது இவருடைய தமிழாக்கம் ஆகும்.

குஜராத்தி மொழி நாவல் படைப்புகளான சரஸ்வதி சந்திரன், சோரட் உனது பெருகும் உள்ளம், ராஜநர்த்தகி, வாழ்க்கை ஓர் நாடகம், ஜயதேவன் அல்லது கூர்ஜரத்தின் செல்வன், ஜெய சோமனாத் ஆகியவற்றை டி.கே. ஜெயராமன், எஸ். கிருஷ்ண மூர்த்தி, சரஸ்வதி ராம்னாத், துளசி ஜெயராமன் ஆகியோர் மொழிபெயர்த்துள்ளனர்.

தென்னிந்திய மொழிகளில் மலையாள மொழிப் படைப்புகள் தமிழில் வெளிவந்துள்ளதைக் குறிப்பிட்டுக் காட்டலாம். மலையாள நாவல்களை மிகுதியாக மொழிபெயர்த்து வழங்கியவர் **சி.ஏ. பாலன்.** இவர் ஏணிப்படிகள் (தகழி சிவசங்கரன்பிள்ளை), ஓர் அழகியின் சுயசரிதை (பி. கேசவதேவ்), குஞ்ஞாலி மரைக்கார் (கே. பத்மநாபன்), நாயர், நடிகை (பி. கேசவதேவ்), நான் (பி. கேசவ தேவ்) ஆகிய நாவல்களை மொழிபெயர்த்துள்ளார். **கா. அப்பாத்துரை** (இந்துலேகா), **கே.ஸி. சங்கரநாராயணன்** (அண்டை வீட்டார், வெறும் மனிதன்), **டி. ராமலிங்கம் பிள்ளை** (இரண்டு படி), **புஷ்பவேணி கோவி** (இளம்பருவத்துத்தோழி), **கே.சி. சங்கர நாராயணன்,** (எங்கள் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது), **ஜி. ஸ்ரீதரன்** (ஐயப்பன், பி. பாலகிருஷ்ண மேனன்) (கண்ணாடி), **ஆனந்த தீர்த்தன்** (சாக்கடையிலிருந்து) மங்கையர்க்கரசி (சுட்டிராமன்), **சுந்தர ராமசாமி** (செம்மீன், தோட்டியின் மகன்), **அ. மாதவன்** (பரிசு), **சி.எஸ். விஜயம்** (பாத்தும்மாவுடைய ஆடும் இளம்பருவத்துத் தோழியும்), **மு. வேங்கடசாமி** (பேராசிரியர்) ஆகியோர் மலையாள மொழியின் சிறந்த நாவல்களை, படைப்பாளர் களைத் தமிழுக்கு அறிமுகம் செய்து அருந்தொண்டாற்றியுள்ளனர்.

கன்னட மொழி நாவல் படைப்புகள் பலவும் தமிழில் வெளி வந்துள்ளன. **எம். சித்தலிங்கையா** கன்னட மொழிப் படைப்புகளைத் தமிழில் வழங்குவதில் முனைப்புடன் செயல்பட்டுள்ளார். சிவராம காரந்தனின் அழிந்த பிறகு, பாட்டியின் கனவுகள், மண்ணும் மனிதரும் ஆகிய நாவல்களை எம். சித்தலிங்கையா தமிழில் மொழி பெயர்த்து வழங்கியுள்ளார். 'மண்ணும் மனிதரும்' மொழிபெயர்ப்புக்காகச் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதினைச் சாகித்திய அகாதெமி வழங்கியுள்ளது. கே.வி. ஐயரின் சாந்தலை, ஸ்ரீமதி திரிவேணியின் பூனைக்கண் ஆகிய கன்னட மொழி நாவல்களை **எஸ்.கே. சீதாதேவி** தமிழில் வழங்கியுள்ளார். **ஆனந்த தீர்த்தன்,** சொப்பன மாளிகை எனும் நாவலையும் **பி.ஆர். பரமேஸ்வரன்** 'நினைவுகள் அழிவதில்லை' எனும் கன்னட நாவலை மலையாள மொழி பெயர்ப்பிலிருந்துத் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர். மாஸ்தி வெங்கடேச அய்யங்கார் எழுதிய சிக்க வீர ராஜேந்திர எனும் நாவலை **ஹேமா ஆனந்த தீர்த்தன்,** சுப்பண்ணா எனும் நாவலை **ஜெயலட்சுமி, ஸ்ரீனிவாசன்** ஆகியோர் மொழிபெயர்த்துள்ளனர்.

நாவல் படைப்புகள் பலவும் தமிழில் வழங்கியதைப் போலவே இத்துறையில் ஈடுபாடு உடைய அறிஞர்கள் சிறுகதை களையும் மொழிபெயர்த்துத் தொகுதிகளாக வெளியிட்டுள்ளனர். அரபுக் கதைகள் பலவும் 19ஆம் நூற்றாண்டு முதல் வெளி

வந்துள்ளன. 1875, 1876ஆம் ஆண்டுகளில் அண்ணாசாமி முதலி என்பவரால் வழங்கப்பட்ட 'அரபிக் கதைகள்' எனும் மொழியாக்க நூல் முதல் நூலாக அமைந்துள்ளது.

**சையத் இப்ராஹீம், தாவுத் ஷா, அற்புதானந்தா, எஸ்.எஸ். மாரிசாமி, அ.லெ.நடராஜன், மே.ச. பரதன், தி. செல்வகேசவராய முதலியார், ஏ. சங்கரலிங்கம் பிள்ளை, சிங்காரம் பெலவேந்திர பிள்ளை** ஆகியோரின் அரபுக் கதைகளின் தமிழாக்கம் இடம்பெற்றுள்ளன.

கிரேக்க மொழிச் சிறுகதைகளான கிரேக்கக் கதைகள் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையின் மொழிபெயர்ப்பில் இடம் பெற்றுள்ளன. மனிதப்பறவை (14 கிரேக்க புராணக் கதைகள், அநாமதேயம்), **சி. இராமச்சந்திர ஐயர்** (ஈசாப் இயற்றிய 300 கட்டுக் கதைகள்), **ஏ. திருவேங்கடம்பிள்ளை** (ஈசாப் கதைகள்), **எஸ்.எம். நடேச சாஸ்திரி** (நீதிக்கதைகள்), **அ. சுப்பிரமண்ய பாரதி** (ஈசாப் இயற்றிய நீதிக்கதைகள்), **எம்.ஆர். அப்பாத்துரை** (ஈசாப் நீதிக் கதைகள்), **அ.லெ. நடராஜன்** (ஈசாப் நீதிக் கதைகள்) எனப் பலரும் இச்சிறுகதைகளைத் தமிழில் வழங்கியுள்ளனர்.

ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்தில் இந்தியாவில் அறிமுகப் படுத்தப்பட்ட ஆங்கிலக் கல்வி முறையால் ஆங்கிலச் சிறுகதை வடிவம் செல்வாக்குப் பெற்றது. ஆங்கில மொழியில் வெளிவந்த சிறந்தப் படைப்புகளைத் தமிழில் அறிமுகப்படுத்தும் முயற்சி தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், படைப்பாளர்கள் பலரும் மேற்கொண்டனர். அதன் விளைவாகத் தமிழ்ச் சிறுகதைப் படைப்புகளும் தோற்றம் பெற்று வளர்ச்சி அடையத் தொடங்கின.

ஆங்கில மொழிச் சிறுகதைகள் பலவற்றை **கா. அப்பாத்துரை** மொழிபெயர்த்துத் தொகுதிகளாக வெளியிட்டுள்ளார். **ஏ. சோமசுந்தரம்** (ஆங்கில அருங்கதைகள்), **ஆ. சுப்பையா** (ஆஸ்கார் ஒயில்ட் - சிறந்த சிறுகதைகள்), **வி.எஸ். வெங்கடேசன்** (ஓ ஹென்றியின் கதைகள்), **அழ. வள்ளியப்பா** (எக்காலத்துக்கும் ஏற்ற கதைகள்), **சிவஞானம்** (பலதேசத்துத் தேவதைகள் கதை), **ச.து.சு. யோகியார்** (ருட்யார்டு கிப்லிங்கின் கதைகள்) எனப் பலரும் மொழிபெயர்ப்புச் சிறுகதைத் தொகுதிகளை வெளி யிட்டுள்ளனர்.

ஆங்கிலம், உருசிய, பிரெஞ்சு, ஜெர்மன், ஹங்கேரி, ஸ்வீடிஷ், போலீஷ், இத்தாலி, டேனிஷ், பர்மியன், ஸ்பானிஷ், (இலத்தீன் அமெரிக்கா) சீனம், அரபி, துருக்கி, கிரேக்கம் என உலக மொழிகளின் சிறுகதைகள் பல மொழிபெயர்ப்பாளர்களால் தமிழில் இடம்பெற்றுள்ளன.

**தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள 195 சிறுகதை நூல்களில், எழுபத்தெட்டு ரஷிய சிறுகதை நூற் களும் இருபது இங்கிலாந்து ஆங்கிலச் சிறுகதை நூற்களும், பதினான்கு அரபி மொழிச் சிறுகதை நூற்களும் முக்கிய இடம்வகிக்கின்றன. மொத்தச் சிறுகதை நூற்கள் வெளியீட்டில், ரஷிய சிறுகதை நூற்கள் 40% பெறுகின்றன."**

உருசிய மொழியில் டால்ஸ்டாயின் சிறுகதைகள் மிகுதியாக மொழிபெயர்ப்பில் இடம்பெற்றுள்ளன. சிறுகதைகள் மொழிபெயர்ப்பில் மார்க்சீம் கோர்க்கி, அந்தோன்செகாவ், தாஸ்தாயேவ்ஸ்கி, வசீலி ஷீக்ஷின், ஷெலகோவ் புஷ்கின் போன்றோர் தமிழ் மொழி பெயர்ப்பில் இடம்பெற்றுள்ள குறிப்பிடத்தக்க ஆசிரியர்களாவர்.

உருசிய சிறுகதைகள் என்ற தலைப்பில் 4 தொகுதிகளாகத் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன. பிரெஞ்சு மொழியில் பால்ஸாக், மாப்பசான் கதைகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. எஸ்.எம். நாராயணன், ஜீவகன், அகிலன், ஸ்ரீரெங்கன், டி.என். ராமச் சந்திரன், புதுமைப்பித்தன் ஆகியோர் பிரெஞ்சு மொழிச் சிறுகதைகளைத் தமிழில் வழங்கியுள்ளனர்.

இந்திய மொழிகளில் வடமொழி, இந்தி, மராத்தி, குஜராத்தி, வங்காளம், பஞ்சாபி, உருது, மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளின் சிறுகதைகள் தமிழில் வெளிவந்துள்ளன. வடமொழியில் புகழ்பெற்ற பஞ்சதந்திரக் கதைகள் தாண்டவராய முதலியாரால் 1826 ஆம் ஆண்டில் தமிழில் தழுவலாக வெளியிடப் பட்டுள்ளது. நூல் வடிவில் வெளிவந்த முதல் நூலாக இதைக் காண முடிகிறது. 1847, 1865, 1881 ஆகிய ஆண்டுகளில் மீண்டும் மீண்டும் இது பதிப்பிக்கப்பட்டுள்ளது. எஸ். ருத்திரபதி, கே.எஸ். வேங்கட சுப்பையா, அனுசூயா இளந்தென்றல், ந.ரா. நாச்சியப்பன், வெ.நீ. தட்சணா மூர்த்தி, எஸ். லீலா, அ.லெ. நடராசன் எனப் பலரும் பஞ்சதந்திரக் கதைகளைத் தமிழில் வழங்கியுள்ளனர்.

இந்தி மொழிச் சிறுகதைகளை மிகுதியாகத் தமிழில் வழங்கியவர் சரஸ்வதி ராம்னாத். இந்தி மொழியின் மிகச் சிறந்த படைப்பாளரான பிரேம்சந்த் கதைகள் மிகுதியாகத் தமிழில் இடம்பெற்றுள்ளன. கா.ஸ்ரீ.ஸ்ரீ., ரதுலன், சௌரி, ஆக்கூர்

---

11. தமிழ் மொழிபெயர்ப்பில் உலக இலக்கியம், ந. முருகேச பாண்டியன், தி பார்க்கர், டிச. 2004, பக். 61-62.

அனந்தாச்சாரி, வி.எஸ். ரங்கநாதன் ஆகியோர் இந்தி மொழிக் கதைகளைத் தமிழில் வழங்கியுள்ளனர். மராட்டிய மொழியில் புகழ் பெற்ற எழுத்தாளரான வி.ஸ. காண்டேகரின் கதைகள் கா.ஸ்ரீ.ஸ்ரீ. மொழிபெயர்த்து 12 தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. அரும்பு, ஆஸ்திகன், ஓடும் ரயிலிலே, கண்ணாடி அரண்மனை, கவியும் நனியும், கள்ளக்காதலி, கறுப்பு ரோஜா, கோடைமழை, தாழைமுள், மிஸ் லீலா, வாரி கன்னிகை, ஜமீன்தார் மாப்பிள்ளை ஆகிய தலைப்புகளில் கா.ஸ்ரீ.ஸ்ரீ. யின் மொழிபெயர்ப்பில் காண்டேகரின் கதைகள் இடம்பெற்றுத் தமிழகத்தில் பெரும் வரவேற்பைப் பெற்றன. பி.ஆர். ராஜாராம் 'மராத்தியச் சிறுகதைகள்' எனும் தலைப்பில் ஒரு பெருந்தொகுதியாக மொழிபெயர்த்து, சாகித்திய அக்காதெமி (புதுதில்லி)யால் வெளியிடப்பட்டுள்ளது.

'பஞ்சாபிக் கதைகள்' எனும் தலைப்பில் ரா. வீழிநாதன் வெளியிட்டுள்ளார். இவர் 'உர்தூக் கதைகளையும் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். கே. நாராயணன் (கதாபாரதி மலையாளச் சிறுகதைகள்), நீல பத்மநாபன் (குருக்ஷேத்ரம்), ம. இராஜாராம் (சமீபத்தில் மலையாளச் சிறுகதைகள்), இளம்பாரதி (மரக்குதிரை), புஷ்பவேணி கோவி (மலையாளச் சிறுகதைகள்) ஆகியோர் மலையாள மொழிச் சிறுகதைகளைத் தமிழில் வெளியிட்டுள்ளனர்.

கே.என். சிந்தாமணி (தெலுங்குச் சிறுகதைகள்), இளம்பாரதி (அடுத்த வீடு தெலுங்கு மொழிச் சிறுகதைகள்), பி. பாலசுப்பிர மணியன் (கதாபாரதி தெலுங்குச் சிறுகதைகள்), எஸ். முத்துசாமி (கதா ரத்னாவளி), கி.மா. பக்தவத்சலன் (தெனாலிராமன் கதைகள்), வே. கபிலன் (விஜயநகரக் கதைகள்) ஆகியோர் தெலுங்கு மொழிக் கதைகளைத் தமிழில் வெளியிட்டுள்ளார். கெந்தம் வரதராஜுலு நாயுடு 'ஸ்ரீராம ஹ்ருதயம்' என்னும் ஷட்சக்கரவர்த்திகளின் 'இந்திர ஜாலக் கதைகள்' எனும் நூலை 1898ஆம் ஆண்டு வெளி யிட்டுள்ளார். தெலுங்கிலிருந்து தமிழில் முதல் முயற்சியாக வெளியிடுவதில் முனைப்புக் காட்டியுள்ளார். கன்னடச் சிறுகதைகள் 1960களுக்குப் பிறகு தொகுதி நூல்களாக வெளியிடப்பட்டுள்ளன. எஸ்.கே. சீதாதேவி (கன்னடச் சிறுகதைகள்), ஹேமா அனந்த தீர்த்தன் (குருதட்சிணை), இரா. மதிவாணன் (சிவகோட்டாச் சாரியாரின் நல்லறக் கதைகள்) ஆகியோர் கன்னடச் சிறுகதைகளை வழங்கியுள்ளனர். சாகித்திய அக்காதெமி கன்னட மொழிகளின் மிகச் சிறந்த சிறுகதைகளைத் தொகுத்துத் தமிழாக்கி வெளியிடுவதில் முனைப்புக் காட்டியுள்ளது.

உரிமையை வெ. சாமிநாத சர்மா, அறிஞர் பெசு. மணி அவர்களுக்கு வழங்கியுள்ளார்.

சாமிநாதசர்மா 17-9-1895 ஆம் ஆண்டு வெங்களத்தூர் என்னும் ஊரில் பிறந்தார். இந்த ஊர் தற்போது திருவண்ணாமலை மாவட்டத்தில் இடம்பெற்றுள்ளது. இவருடைய தந்தை பெயர் முத்து சுவாமி ஐயர்; தாயார் பெயர் பார்வதி. நாகேசுவர சர்மா, சாமிநாதசர்மா, துரைசாமி சர்மா என்று அக்காலத்தில் இவருக்கு மூன்று விதமான பெயர்கள் இருந்துள்ளன. காலப்போக்கில் இந்த மூன்று பெயர்களில் 'வெ. சாமிநாதன்' என்று கையெழுத்திட்டுத் தமது பெயரை உறுதிப் படுத்தியுள்ளார். பின்னாளில் சாமிநாதசர்மா என்று பெயரிட்டுக் கொண்டதற்கான காரணத்தைத் தமது நாட்குறிப்பில் குறிப்பிட்டு வைத்துள்ளார்.

> ***1912இல் உயர்நிலைப் பள்ளியில் 'தமிழ்' என்னும் பொருளில் இவர் பேசவிருந்ததை அக்காலத் தமிழ் நாளேடு ஒன்றில் "சாமிநாதய்யர், தமிழ் என்னும் பொருளில் பேசுவார்" என்று விளம்பரப்படுத்தப் பட்டது. சாமிநாதய்யர் என்றால், அது மகாமகோ பாத்தியாய உ.வே. சாமிநாதய்யர் என்று எண்ணிச் சொற்பொழிவைக் கேட்கக் கிறித்துவக் கல்லூரித் தமிழ்ப் பண்டிதர் காரப்பங்காடு கோபாலாச்சாரியார், பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பண்டிதர் கா.ரா. கோவிந்தராஜ முதலியார், முதலான தமிழறிஞர்கள் சிலர் சொற்பொழிவு நிகழ்ச்சிக்கு வந்தனர். ஆனால் எதிர்பார்த்த சொற்பொழிவாளர்க்குப் பதிலாக வேறொருவர் பேசியதைக் கேட்டுத் தமிழறிஞர்கள், பெயர்க் குழப்பத்தை மறந்து பாராட்டினர். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சாமிநாதசர்மா என்றே தம் பெயரை அமைத்துக் கொண்டார்***[1]

இவர் உயர்நிலைப் பள்ளிக் கல்வியோடு தமது கல்வித் தகுதியைச் செங்கற்பட்டு நேடிவ் உயர்நிலைப்பள்ளியில் முடித்துக் கொண்டாலும் தொடர்ந்து தாமே முயன்று பல்துறை அறிவுபெறும் வகையில் நூல்களைப் பயின்றார். "உண்மையில் பள்ளிக்கூடத்தை விட்ட பிறகுதான் என் படிப்பு ஆரம்பமாயிற்று" என்று சாமிநாத சர்மா தமது கல்வி வளர்ச்சியைப் பற்றிக் கூறியதுண்டு. இவருக்குப் பன்மொழிப்புலமை, குடும்பப் பாரம்பர்யச் சொத்தாகவும் வாய்த்தது. இவருடைய பாட்டனார் நாகேஸ்வர சர்மாவும், தந்தையார் முத்துசுவாமி ஐயரும் தமிழ், தெலுங்கு, சமசுகிருத மொழிகளில் புலமை பெற்றவர்கள். சாமிநாதசர்மா, ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, சமசுகிருதம், கன்னடம், இந்தி ஆகிய மொழிகளில் தேர்ச்சிப் பெற்றவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

> தந்தை முத்துசுவாமி ஐயர் கலையுணர்வு மிக்கவர். இசைக் கூத்துக் கலைகளில் தோய்ந்தவர். தமிழ், தெலுங்கு, சமசுகிருத மொழிகளில் இசைப் பாடல்களை இயற்றியுள்ளார். இந்தச் சூழல் சாமிநாத சர்மாவிற்கு இளமையிலேயே எழுத்தார்வத்திற்கு வித்திட்டது.[2]

சாமிநாதசர்மா மாணவப் பருவத்திலேயே வரலாறு, ஆங்கிலம், தமிழ் ஆகிய பாடங்களில் மிகுந்த நாட்டம் உடையவராக விளங்கியுள்ளார். 1905 ஆம் ஆண்டு அன்றைய உருஷ்ய ஜார் மன்னனின் பேரரசை ஜப்பான் தோற்கடித்த வரலாற்று நிகழ்ச்சி இவருடைய இளம் இதயத்தில் புதிய உற்சாகத்தை உருவாக்கியது. ஜப்பானின் இந்த வெற்றியைப் பாராட்டி மாணவர் விவாதச் சங்கமொன்றில் ஆங்கிலத்தில் பேசித் தம் திறமையை வெளிப்படுத்தினார். தட்டச்சு, சுருக்கெழுத்துப் பயிற்சியும் பெற்ற சாமிநாத சர்மா வேலை தேட நேரிட்டது. சென்னைப் பவழக்காரத் தெருவில் நகரத்தார் ஒருவரின் வட்டிக்கடையில் பெட்டிப் பையனாகவும், சுருக்கெழுத்துப் பயின்ற பள்ளியில் ஆசிரியராகவும், ஆயுள் காப்பீட்டுக் கழக அலுவலகத் திலும், பின்பு கூட்டுறவுத் துறை அலுவலகத்திலும் சொற்ப ஊதியம் பெற்று ஊதியம் செய்து வந்தார்.

இவ்வாறு பணியாற்றிக் கொண்டிருந்தாலும் அவருடைய சிந்தனை எழுத்துப் பணியையே நாடியது. அவர் பதினேழாவது வயதில் முதன் முதலில் தமிழில் எழுதிய கட்டுரையொன்று அக்காலத்தில் புகழ்பெற்ற 'இந்துநேசன்' இதழில் வெளியாகியுள்ளது. இதையடுத்து மைசூர் ராச்சியம் தோன்றிய வரலாற்றைப் பற்றிச் சர்மா எழுதிய கட்டுரை 'பிழைக்கும் வழி' என்னும் இதழில் வெளிவந்துள்ளது. தொடர்ந்து நாடகம் எழுதும் முயற்சியிலும் ஈடுபட்டுள்ளார். தமிழில் அவர் எழுதி வெளிவந்த முதல் நூல் 'கௌரிமணி'. இந்நூல் 1914இல் சாமிநாதசர்மா நிறுவிய செந்தமிழ்ச் சங்கம் என்னும் அமைப்பின் சார்பில், இவருடைய சொந்த வெளியீடாக வெளியிடப்பட்டது. இந்நூல் 48 பக்கங்கள் கொண்டது. 1914ஆம் ஆண்டில் மங்களம் என்னும் பெண்மணியைத் திருமணம் செய்து கொண்டார். அவருடைய எழுத்துப் பணிக்கு உறுதுணையாக விளங்கிய இவ்வம்மையார் 1956ஆம் ஆண்டு பிப்ரவரி 13ஆம் நாள் இயற்கையெய்தியதால் அவர் அடைந்த அந்தத் துன்பத்தை 'அவள் பிரிவு' (1957) எனும் கடித இலக்கிய நூலாக வெளியிட்டுள்ளார்.

திரு.வி.க. தொடங்கிய தேசபக்தன் (1917), நவசக்தி (1920), 'ஆந்திர கேசரி' டி. பிரகாசம் நடத்திய 'ஸ்வராஜ்யா' (1924 முதல் 1926 வரையில்) ஆகிய இதழ்களில் சாமிநாதசர்மா துணை ஆசிரியராகப் பணியாற்றி இதழியல் துறையில் தமது தனித்த முத்திரையைப் பதித்துச் சென்றார்.

பிறகு 1930-31இல் அடையாறு பிரம்ம ஞான சபை நூல் வெளியீட்டுத் துறையிலும் 'விவேக போதினி' இதழிலும் சில காலம் பணியாற்றினார்.

இந்த அனுபவத்துடன் 1932ஆம் ஆண்டு மியான்மார் என்று அழைக்கப்பட்ட பர்மாவில் பத்தாண்டுக்காலம் மனைவியுடன் வாழ்ந்தார்.

> பர்மாவின் தலைநகரமான இரங்கூனில் 'பாரத்பந்தர்' என்னும் பெயரில் ஒரு கடையை நடத்தினார். சுதேசிப் பொருட்கள், கதர், தரமான தமிழ் நூல்கள் முதலானவை பாரத்பந்தரில் விற்பனையாயின. இங்கும் அவருடைய இதழியல் பணியார்வத்திற்கு வாய்ப்பு ஏற்பட்டது. இரங்கூனில் செல்வாக்குடன் வாழ்ந்து வந்த 'செட்டி நாட்டுச் சமூகத்தார் நடத்தி வந்த 'தனவணிகன்' என்னும் இதழில் அவர் பணியாற்றினார். 1936–இல் அரு. சொக்கலிங்கம் செட்டியார் சாமிநாதசர்மாவின் நூல்களை மட்டுமே வெளியிடுவதற்காகப் 'பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம்' என்னும் பெயரில் ஒரு நூல் வெளியீட்டகத்தை நிறுவினார். இத்துடன் கண. முத்தையா என்னும் மற்றொரு செட்டி நாட்டன்பர் நடத்தி வந்த 'புதுமலர்ச்சி நூற்பதிப்புக் கழக'மும் சாமிநாத சர்மாவின் சில நூல்களை வெளியிட்டது. மற்றும் மின்னொளி பிரசுரங்கள், அறிவுச்சுடர் என்னும் பதிப்பகங்கள் சார்பிலும் சாமிநாதசர்மாவின் சில நூல்கள் இரங்கூனில் வெளியிடப்பட்டன. இரங்கூனில்தான் சாமிநாதசர்மாவிற்குப் பெரும் புகழை அளித்து, ஆசிரியப் பீடத்தில் அமர்த்திய 'ஜோதி' என்னும் தமிழ் மாத இதழ் வெளிவந்தது. பிறகு 'ஜோதி' இதழ் வெளிவரவில்லை. பதினான்கு ஆண்டுகள், ஏழுமாத காலம் ஜோதி ஆசிரியப் பணியில் அவருடைய இதழியல் அருமையின் பன்முகச் சிறப்புகளை அறிய முடிகின்றது.[3]

சிறப்பாகப் பணியாற்றிக் கொண்டிருந்த அறிஞருக்குப் பர்மாவில் ஏற்பட்ட போர்ச் சூழலினால் பலவிதமான இடையூறுகள் தொடர்ந்தன.

## பர்மாவிலிருந்து மீண்டும் இந்தியா திரும்புதல்

1942 ஆம் ஆண்டு ஏற்பட்ட இரண்டாம் உலகப் போரின் விளைவாகப் பர்மா வாழ் இந்தியர்கள் பலர் இந்தியா திரும்ப வேண்டியதாயிற்று. சாமிநாதசர்மாவும் அவருடைய மனைவி மங்களம் அம்மையாரும் இரங்கூனிலிருந்து 21-2-1942ஆம் நாள் புறப்பட்டு நடைப்பயணமாக 24-4-1942ஆம் நாள் கல்கத்தா வந்து

சேர்ந்தனர். இந்த வழிநடைப்பயண அனுபவத்தைச் சாமிநாதசர்மா "பர்மா வழிநடைப்பயணம்" (1980) எனும் நூலாக எழுதி வெளியிட்டுள்ளார். இந்த வழிநடையில் அனுபவித்த துன்பத்துடன் பிளேட்டோவை அவர் விடாமல் தமிழில் மொழிபெயர்த்துக் கொண்டு வந்த அனுபவத்தைப் படிக்கும்பொழுது சொற்களால் குறிப்பிடமுடியாத இந்த மேன்மையை, அறிவின் நாட்டத்தை வாசகர்கள் உணருவார்கள். கல்கத்தாவில் இருந்து சாமிநாதசர்மா சென்னை திரும்பியதும் 'சக்தி' வை. கோவிந்தன் அரும்பாடுபட்டு அரிய தமிழ் மாத இதழாக நடத்தி வந்த 'சக்தி' இதழில் இவருடைய எழுத்துப் பணி தொடர்ந்தது. பிறகு 1945 முதல் 1946 வரை ஏ.கே. செட்டியாரின் 'குமரி மலர்' இதழிலும், 1953 இல் சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் இதழான 'பாரதி' இதழிலும் ஓராண்டுக் காலம் ஆசிரியராக இருந்தார். இதற்கிடையில் 1947 ஆம் ஆண்டு முதல் 'பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம்' மீண்டும் இயங்கத் தொடங்கியதால் தொடர்ந்து சாமிநாத சர்மாவின் பலதுறை சார்ந்த நூல்கள் வெளிவரத் தொடங்கின.

### வெ.சாமிநாதசர்மாவின் நூல்கள்

வெ. சாமிநாதசர்மா எழுதி வெளிவந்த நூல்கள் 78. கதைகள் (2), நாடகங்கள் (7), மணிமொழிகள் (3), அரசியல் (17), வரலாறு (5), கட்டுரை நூல்கள் (10), வாழ்க்கை வரலாறுகள் (22), கடித இலக்கிய நூல்கள் (3), பயண இலக்கியம் (1), மொழிபெயர்ப்புகள் (10), ஆங்கில நூல் (1) என இவருடைய நூல்கள் அமைந்துள்ளன.

சாமிநாதசர்மா சிறந்தப் படைப்பாளி என்பதை அவருடைய கதைகளும், நாடகங்களும் உணர்த்துகின்றன. பெண் கல்வியை வலியுறுத்தி அவர் எழுதிய 'கௌரிமணி' (1914) என்ற கதையும், அக்காலச் சமூக அவலங்களைப் பல கோணங்களில் சித்திரிக்கும் 9 சிறுகதைகள் அடங்கிய 'தலைதீபாவளி' (1955) எனும் பெயரில் வெளியிடப்பட்ட தொகுப்பு நூலும் இவர் ஒரு சிறந்த படைப்பாளி என்பதைக் காட்டுகின்றன.

லட்சுமிநாதன் (1915), உத்யோகம் (-), மனோதர்மம், அபிமன்யு (1934), பாணபுரத்துவீரன் (1924), உலகம் பலவிதம் (1957) ஆகிய நாடகங்கள் நூல்களாக வெளியிடப்பட்டுள்ளன. இவர் எழுதிய 'லவகுசன்' நாடகம் விவேக போதினி இதழில் தொடர்ந்து வெளியிடப்பட்டது. நூல்வடிவம் பெறவில்லை. இவருடைய 'ஜீவபாலன்' என்னும் பிரச்சார நாடகமும் நூல் வடிவம் பெறவில்லை; ஆனால் நாடகமாக நடிக்கப்பட்ட பொழுது அன்னி பெசண்ட் அம்மையாரும், தியோசாபிகல் சொசைட்டியின் பிரமுகரான ஜி.எஸ். அருண்டேல் அவர்களும் கண்டு களித்துள்ளனர். 'பீஷ்மன்' எனும் நாடகம் ஜோதி இதழில் தொடர்ச்சியாக வெளிவந்தது. இது

நூலாக வெளிவரவில்லை. இந்நாடகங்களுள் 'பாணபுரத்து வீரன்' மிகவும் புகழ்பெற்ற நாடகமாக விளங்கியது டி.கே. சண்முகம் நாடகக் குழுவினரால் நடிக்கப் பெற்ற இந்நாடகம் மக்களிடையேயும் அக்கால அரசியல் தலைவர்களிடமும் பெரும் வரவேற்பைப் பெற்றது. கலைஞர் டி.கே. சண்முகம் குறிப்பிட்ட உணர்ச்சி மிக்க சாமிநாத சர்மாவின் தொடக்கக் காட்சியில் உள்ள வீரவுரையில் ஒரு பகுதி, அவருடைய நாட்டுப்பற்றையும், உள்ளத்தில் கிளர்ந்த எழுச்சி மிக்க உணர்வையும் வெளிக்காட்டுவதாக உள்ளது.

> **ஏழைகளையும், தேசாபிமானிகளையும், பரநலத்துக்கு உழைப்பதே பிறவிப் பயனென எண்ணி ஒழுகுபவர் களையும் இவ்வுலகத்தினின்றும் ஓட்டிவிடக் கடவுள் உத்தரவு செய்யவில்லை...... யான் என் தாய்நாட்டின் மீது அதிகப் பற்றுள்ளம் கொண்டிருந்தேன் என்பது உண்மை. அப்பற்றுள்ளம் ஒரு குற்றமாயின், அக் குற்றத்தின் பயனாக ஏற்படும் தண்டனைகளுக்கு நான் உட்படுகிறேன். தேசாபிமானி என்று கூறி எனக்குத் தாங்கள் தண்டனை விதிப்பின், அதனைச் சந்தோஷமாக ஏற்றுக் கொள்ளச் சித்தமாயிருக்கிறேன். என் நாட்டின் பொருட்டு என் உயிரைக் கொடுக்க ஒரு சிறிதும் பின்வாங்கமாட்டேன். தான் பிறந்த நாட்டின் மீது அபிமானம் கொள்ளாதிருப்பவன் ஒரு மாணவனோ? உடலெனும் வீட்டில் தேசபக்தியெனும் சுடர் விட்டு எரியாவிட்டால் அவ்வுடல் இருள்மயமான இல்லத் திற்கு ஒப்பாகும். நான் செய்த குற்றமெல்லாம் யான் கொண்டிருந்த தேசபக்தியாயின், அக்குற்றத்திற்காக நான் தண்டிக்கப்படுவேனாயின், அந்தத் தண்டனை யிலிருந்தும் விடுதலையான பின் மறுபடியும் அக் குற்றத்தையே நான் செய்வேன் என்பதைத் தாங்கள் உணரவேண்டும்[4].**

இந்நாடகம் கலைஞர்களிடையேயும், மக்களிடையேயும் பெரும் வரவேற்புப் பெற்றது. தமிழ் நாடக இலக்கியத் துறையில் ஓரங்க நாடகங்கள் போதிய அளவு வெளிவராத காலத்தில் சாமிநாதசர்மா பல ஓரங்க நாடகங்களை எழுதியுள்ளார். **உலகம் பலவிதம், நடுவிலே வந்த வாழ்வு, வேலை கிடைக்குமா? ஆபத்திலே வேற்றுமை, பசிக்கொடுமை, சுகம் எங்கே? போனகுடி வந்தது. வாடகைக்கு இடம், கடவுளும் வாழ்க்கையும், சொல்லும் செயலும், காந்தி தரிசனம், தேர்தலுக்கு முந்தி, காலேஜ் படிப்பு** ஆகிய பதின்மூன்று ஓரங்க நாடகங்களை எழுதி நாடகத் துறைக்கும் தனது மாபெரும் பங்களிப்பைச் செய்துள்ளார். நாடகத்தைப் பொறுத்தமட்டில் வங்காள மகாகவி பாபுதுவேஜேந்திரலால் ராய்

அவர்களின் நாடகங்களை இந்தி மொழிபெயர்ப்பில் படித்து, அவரையே தனது குருவாக மதிப்பதாகக் குறிப்பிட்டுள்ளார்.

> **என்னைப் பொறுத்த மட்டில் என்னை அதிகமாகக் கவர்ந்தவை துவேஜேந்திரலால்ராய் நாடகங்கள்தான். நாடகத்துறையைப் பொறுத்தமட்டில் அவர் என்னுடைய குருஸ்தானத்தில் வீற்றிருக்கிறார் என்று இங்கே பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அவருடைய நாடகங்கள் இந்தி மொழிபெயர்ப்பில் தான் நான் படித்திருக்கிறேன்[5]**

என்று குறிப்பிட்டுள்ளார் அறிஞர் வெ. சாமிநாதசர்மா. அவரைப் பின்பற்றி நாட்டுப்பற்றையும், சமூக ஒழுக்கத்தையும் எடுத்துக்காட்டும் நாடகங்களைச் சாமிநாதசர்மா வழங்கியுள்ளார்.

சுதந்திர முழக்கம் (1943), மாஜினியின் மணிமொழிகள் (1950), இந்தியாவின் தேவை ஆகியன அரசியல் அறிவைப் புகட்டும் கருத்துகளின் தொகுப்பாக வெளியிடப்பட்டுள்ளன. ஏப்ரல் 1919 அல்லது பஞ்சாப் படுகொலை (1919), பிரிக்கப்பட்ட பர்மா (1937), பெடரல் இந்தியா (1935), சமஸ்தான இந்தியா (1936), உலகக் கண்ணாடி (1937) ஸ்பெயின் குழப்பம் (1937), செக்கோஸ்லோவேகியா (1936) பாலஸ்தீனம் (1939), அரசியல் வரலாறு (1947), அரசாங்கத்தின் பிறப்பு, பிரஜைகளின் உரிமைகளும் கடமைகளும் அரசியல் கட்சிகளும் (1949), நமது தேசியக்கொடி (1950), பார்லிமெண்ட் (1950), புராதன இந்தியாவில் அரசியல் (1954), சுதந்திரமும் சீர்திருத்தமும் (1956), நாடும் மொழியும் (1956) ஆகிய 19 நூல்கள் அரசியல் நூல்களாக வெளியிடப் பட்டுள்ளன.

வெளிநாட்டு அரசியல் நடப்புகளைத் தமிழ் மக்கள் அறிந்து அரசியல் அறிவு பெற வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டு அந்தந்தக் காலகட்டங்களில் நடைபெற்ற வரலாற்று நிகழ்ச்சிகளை எடுத்தும் கூறும் நோக்குடன் இந்நூல்களை வெளியிட்டுள்ளார். அவர் எழுதிய நூல்களுள் அரசியல் துறையைச் சார்ந்த நூல்கள் மிகுதி எனலாம்.

> **இந்தத் துறைகள் பற்றிய நூல்கள் தமிழில் அதிகமாக இல்லை. இந்தக் குறையை நம்மால் இயன்ற வகையில் தீர்ப்போம் என்று என்னுள் எழுந்த எண்ணம் இந்தத் துறைகளில் என்னை அதிகமாக ஈடுபடுத்தியது[6]**

என்று குறிப்பிட்டுள்ளார் சாமிநாதசர்மா.

> **சமயம், அரசியல் இப்படி ஏதோ ஒன்றை அடிப்படை யாகக் கொண்டு எழுந்துள்ள எந்த ஒரு கட்சியிலும் அல்லது அமைப்பிலும் நான் சேர்ந்தவனில்லை. எங்கே**

> நல்லது இருக்கிறதோ அதைத் தேடிச் செல்கிறவன் நான். பொதுவாக ஒரு விஷயத்தை எடுத்துக் கொண்டால் அதனைக் கூடிய மட்டில் தெளிவுபடுத்திக் காட்டிவிட வேண்டுமென்பதில் என் ஆவல் செல்கிறதே தவிர அதனைப் பற்றித் தீர்ப்புக் கூறுவதில் செல்வதில்லை[7]

என்று தன்னுடைய சார்பற்ற அணுகுமுறையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

வரலாற்று அரசியல் நிகழ்வுகளைப் பற்றி வெளிவருகின்ற ஆங்கில நூல்கள், இதழ்களிலிருந்து செய்திகளைத் தேடித் திரட்டி அவற்றை ஒரு கோர்வையாக ஒழுங்குபடுத்தித் தமிழுக்குரிய நூலாக மாற்றித் தரும் கலையைச் சாமிநாதசர்மா நன்கு அறிந்தவர். இவை யாவும் பிறமொழிகளிலிருந்து பெறப்பட்ட செய்திகள் என்று அறியா வண்ணம் இடம் பெற்றதினால் தமிழ் ஆர்வலர்களின் பெரும் வரவேற்புக்குரியனவாக அவருடைய நூல்கள் வெளிவந்தன. 1920ஆம் ஆண்டில் வெளிவந்த 'ஏப்ரல் 1919 அல்லது பஞ்சாப் படுகொலை' எனும் நூல் இதற்கு ஒரு சான்றாகும்.

சாமிநாத சர்மாவின் இந்நூல், மொழிபெயர்ப்பாக அல்லாமல் வரலாறாக எழுதப்பட்டது. 208 பக்கங்கள் கொண்ட இந்நூல், பாஞ்சால நாடு, பஞ்சாபின் ஆட்சி முறை, ரௌலட் சட்டமும் சத்யாகிரகமும், பஞ்சாப் மாகாணமும் இராணுவச்சட்டமும், சில கோரமான சாட்சியங்களும் என்னும் ஐந்து தலைப்புகளில் எழுதப்பட்டது. இந்நூலை எழுதியதெப்படி என்பதைக் குறிப்பிட்டு நூலாசிரியர் சாமிநாதசர்மா "ஒருமொழி" என்னும் முன்னுரையில் எழுதியுளளதாவது.

> இந்நூல் ஒரு தலைச்சார்பானதன்று; ஒருவருடைய கூற்றின் மொழிபெயர்ப்பன்று. பஞ்சாப் சம்பவங் களைப் பற்றிப் பலர் பல அறிக்கைகளை வெளி யிட்டிருக்கின்றனர். ஒவ்வொருவருடைய கூற்றையும் இதில் எடுத்துக்காட்டி என்னாலியன்றவரை நடுநிலை வழுவாது எழுதியிருக்கிறேன். கூடியவரை இந்நூலில் என் அபிப்பிராயத்தை அதிகமாகக் கூறாமல் விடுத்திருக்கிறேன். ஒரு சரித்திரக்காரனுடைய கடமை, நடந்த விஷயங்களை விளக்கிக் கொண்டு செல்வதேயன்றி, படிப்பவருடைய அபிப்பிராயத்தைத் தன் நோக்கிற்கு இணங்கியவாறு கட்டுப்படுத்தலன்று[8]

என்று இந்த நூலை எழுதிய விதம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இந் நூலுக்கு முன்னுரை வழங்கிய திரு.வி.க. "பிற்காலத்தில் சரித பாட மாகவும் ஏற்றுக்கொள்ளப்படலாம்" என்பதைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

> **1919ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் நிகழ்ந்தவற்றைத் திரட்டி இந் நூல் வடிவாகத் தமிழ்நாட்டிற்கு வழங்க வந்த ஸ்ரீமான் வெ. சாமிநாதசர்மா அவர்களுக்குத் தமிழுலகங் கடமைப்படுதல் வேண்டும். இந்நூல் எளிய இனிய தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இந்நூலை வாசிக்குங் காலத்துப் பஞ்சாபும், அதன்கண் நிகழ்ந்தனவும் எதிரில் வந்து உலவுகின்றன. ஆசிரியர் இந் நூலை எழுதுங்காலத்து விடயத்தோடு ஒன்றுபட்டு எழுதியுள்ளார் என்பது இந்நூல் வாசிப்போர்க்குப் புலனாகும். இந்நூல் சரித முறையாக எழுதப்பட்டுள்ளமையால் பிற்காலத்தில் சரித்திரப் பாடமாகவும் ஏற்றுக் கொள்ளப்படலாம்'**[9]

என்று திரு.வி.க. குறிப்பிட்டுள்ளார்.

சாமிநாதசர்மாவின் எழுத்து அனைத்துத் தரப்பினைரையும் கட்சிப் பாகுபாடின்றி அனைவரையும் கவர்ந்தது. அரசியல் நோக்காளர்களுக்கு இவருடைய நூல் ஒரு கைவிளக்கு என்றால் மிகையாகாது. குறிப்பாகக் கிரேக்கம் தொடர்பான நூல்களைத் தமிழிலேயே படித்துச் சுவைக்கும் வாய்ப்பை வழங்கியவர் அறிஞர் வெ. சாமிநாதசர்மா. மொழிபெயர்ப்பாகவும், மொழிபெயர்ப்பு அல்லாமலும் அவர் கிரேக்கம் தொடர்பாகக் '**கிரீஸ் வாழ்ந்த வரலாறு, பிளேட்டோவின் அரசியல், பிளேட்டோவின் கடிதங்கள், ராஜதந்திர யுத்த கள பிரசங்கங்கள்** ஆகிய பண்டைய கிரேக்கம் தொடர்பான நூல்களை முதன்முதலாகத் தமிழில் அறிமுகப்படுத்திய பெருமை இவரைச் சாரும்.

### கிரீஸ் வாழ்ந்த வரலாறு

கிரேக்கத்தைப் பற்றித் தமிழில் வெளிவந்த முதல் வரலாற்று நூல் 'கிரீஸ் வாழ்ந்த வரலாறு'. இந்நூல் நேரடியான மொழி பெயர்ப்பல்ல. ஆனால் கிரேக்க வரலாற்றைக் கூறும் பல ஆங்கில நூல்களின் பிழிவாக இந்த நூல் அமைந்துள்ளது. பண்டைய கிரேக்கத்தில் நிலவி வந்த கலை இலக்கியம், அரசியல் அமைப்பு, அரசியல் நிகழ்வுகள், அரசியல் தத்துவங்கள், ஆகியவற்றைச் சாதாரணப் பாமர மக்கள் புரிந்து கொள்ளும் மொழிநடையில் எடுத்துக் கூறுகின்றது. இந்நூல் 32 அத்தியாயங்களைக் கொண்டது. சாமிநாத சர்மாவின் நூல்களில், எழுதுவதற்கு மிகுந்த காலத்தை எடுத்துக்கொண்ட நூல் இந்த நூலாகும்.

> **கிரீஸின் சரித்திரத்தை எழுதுவது எவ்வளவு சிரமமான காரியம் என்பதைச் சரித்திராசிரியர்கள் பல இடங்களில் நன்கு எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். நூலை எழுதும்போதுதான் இந்தச் சிரமம் தெரிகிறது. காலத்தின் தொடர்ச்சியை அனுசரித்துக் கொண்டு**

> போனால் இடத்தின் தொடர்ச்சி விட்டுப் போகிறது. இடத்தின் தொடர்ச்சியை அனுசரித்துக் கொண்டு போனால் காலத்தின் தொடர்ச்சி விட்டுப் போகிறது. இரண்டையும் இணைத்துக் கூடிய மட்டில் வாசகர்களுக்குச் சலிப்புத் தட்டாமலிருக்கும் வண்ணம் இந்த நூலை எழுத முயன்றிருக்கிறேன்[10]

என்று சாமிநாதசர்மா இந்த நூலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். கிரேக்க மொழிச் சொற்களைத் தமிழில் தருவதற்கு, கிரேக்க மொழிப் பண்பாட்டின் மரபை நன்கு கற்றறிந்து கொள்வதற்காக மிகுந்த காலத்தை எடுத்துக் கொண்டு இந்நூலை எழுதியுள்ளார். தமிழ் வாசகர்களுக்குத் தேவையான அடிக்குறிப்புகளை வழங்கியுள்ளார்.

பண்டைய கிரேக்க அரசியல் சூழலை, அரசியல் அமைப்பை, சமுதாய நிலையை, பல்வேறு காலங்களில் நடந்த போர்களை, கலை, இலக்கிய வளர்ச்சியை, கிரேக்க வரலாற்றில் இடம்பெறும் மாமனிதர்களைப் பற்றி அறிந்து கொள்ளப் பேருதவியாகத் திகழும் இந்நூல் ஓர் அரிய ஆய்வு நூல் எனலாம். நவீனக்கால அரசியல் சிந்தனை வளர்ச்சிக்குக் கிரேக்கத்தின் பங்களிப்பு எத்தகையது என்பதைப் பெரும் அரசியல் சிந்தனையாளர்கள் முதல் சாதாரண மக்கள் வரை படித்தறியும் வகையில் இந்நூலை வழங்கியுள்ளார் சாமிநாதசர்மா. இதுபோன்று பலநாட்டு வரலாறுகளைத் தமிழில் மக்கள் படித்தறியும் நோக்குடன் உருஷ்யாவின் வரலாறு, சீனாவின் வரலாற்றையும் தமிழில் வழங்கினார்.

'பிரபஞ்சஜோதி' பிரசுராலயத்தின் முதல் வெளியீடாக அமைந்த நான்கு அரசியல் நூல்களும் சாமிநாதசர்மாவின் நூல்களாகும். 1936 ஆம் ஆண்டு முதல் அடுத்தடுத்து நான்கு நூல்கள் வெளியிடப்பட்டன. முதல் நூலாக முசோலினியும், இரண்டாவதாக 'அபிசீனிய சக்கரவர்த்தியும்', மூன்றாவதாக 'ஹிட்லரும்', நான்காவதாக 'ஸ்பெயின் குழப்ப'மும் வெளியிடப்பட்டன. குறிப்பாக விடுதலை உணர்வு பெறும் வகையில் மக்களுக்குப் பலநாட்டு விடுதலை வரலாற்றை அறிமுகப்படுத்த வேண்டும் என்ற நோக்கமும் பதிப்பக உரிமையாளரான அரு. சொக்கலிங்கம் செட்டியாருக்கு உண்டு.

> 1935 இறுதியில் திட்டம் போட ஆரம்பித்தோம். அந்தச் சமயம் பல தேசங்களில் சர்வாதிகார ஆட்சி நிலவிக் கொண்டிருந்தது. அந்தந்தத் தேசங்களில் வாழும் ஜனங்கள் சுபிட்சமாக இருப்பதாகவும் பறைசாற்றப்பட்டு வந்தது. ஜனநாயக நாடுகள் தன்னம்பிக்கை இழந்திருந்தன. அவை காலனி ஆட்சியைக் காப்பாற்றத் திணறிக் கொண்டும் இருந்தன. அந்நிய ஆட்சியால் அல்லலுற்றிருக்கும் நமக்கு, ஆட்சி

செலுத்தும் நாடு எந்த ஜனநாயகத்தை அனுஷ்டித்து வந்த போதிலும் அந்த ஜனநாயகத்தின் பேரால்தான் நாம் அழுத்தப்பட்டிருக்கிறோம் என்ற ஒரு எரிச்சலும் ஏற்பட்டிருந்தது. ஆனால் இந்த அந்நிய ஆட்சி சீக்கிரம் நம்மைவிட்டு நீங்கித்தான் போகும் என்பதில் நம்பிக்கையும் கொண்டிருந்தோம். அந்நிய ஆட்சியிலிருந்து விடுபட்டவுடன் மக்கள் தான்தோன்றித் தனமாக மாறிவிடக்கூடாதே என்ற கவலையும் எங்களுக்கு ஏற்பட்டது. சுயராஜ்யம் கிடைத்ததும் அராஜகமும் தலைக்கனமும் ஏற்பட்டு எல்லோரும் இந்நாட்டு மன்னர்கள் என்ற பாணியில் ஜனங்கள் வளர்ந்து விடாமல் இருக்க ஒரு சில ஆண்டுகளாவது நம்நாடு ஒரு சிறந்த தேசபக்தி சர்வாதிகார ஆட்சியிலிருந்து விடுவது நலமென்றும் சிந்திக்க ஆரம்பித்தோம். அதன் முடிவுதான் முதன் முதலாக முஸோலினியின் வாழ்க்கையை எழுதி வெளியிட எங்களைத் தூண்டியது. அவன் ஆட்சியில் உள்ள நல்ல அம்சங்களையும் சித்திரித்து வெளி யிட்டோம். அதையடுத்து ஹிட்லர் வாழ்க்கையை வெளியிட்டோம். அந்த நிலையில் சர்வாதிகார மானது, பக்கத்திலுள்ள அப்பாவி நாடுகளைக் கபளீகரம் செய்ய ஆரம்பித்தது. அது எங்களை அந்த அப்பாவி நாடுகளின் பால் அனுதாபம் கொள்ளச் செய்தது. அபிசீனிய சக்ரவர்த்தியின் வாழ்க்கையை அப்பொழுது வெளியிட்டோம். அதையடுத்து 'ஸ்பெயின் குழப்பம்' என்னும் நூலை வெளியிட்டோம்"

என்று தாம் நூல்கள் வெளியிட்ட நோக்கத்தைப் பற்றிக் கூறியுள்ளார்.

இந்த நோக்கத்தை நிறைவேற்றும் வகையில் சாமிநாதசர்மா உலக வரலாற்றை உற்றுக் கவனித்து அந்தந்தக் காலகாட்டத்திற்கு ஏற்ப நூல்களை எழுதி வழங்கினார். சாமிநாதசர்மா தமது முன்னுரையில் முஸோலினியை ஒரு சரித்திர நாயகனாகக் குறிப்பிட்டு எழுதிய வரிகள் முக்கியத்துவமுடையன.

முஸோலினி ஒரு சரித்திர புருஷர். வேற்றுமை களினால் அரிக்கப் பெற்றும், சோர்வினால் உறங்கியும் கிடந்த ஒரு சமூகத்திற்குத் தன்மதிப்பு, கடமை, ஒழுங்கு, ஒழுக்கம் ஆகிய மருந்துகளை உட்புகுத்தி, அதனைத் தலைநிமிர்ந்து நிற்கச் செய்வதோடு மற்ற சமூகங்களுக்கு எதிரே தோள்தட்டவும் செய்வித்தவன் ஒரு சரித்திர புருஷனாக அல்லது வேறு எவ்விதமாக இருக்க முடியும்?[12]

என்று முஸோலினியின் சிறப்பைப் பற்றிக் கூறுகிறார். இரண்டாம் உலகப் போரில் ஹிட்லருடன் இணைந்து முஸோலினி நிகழ்த்திய 'யுத்தவெறி'யை வரலாறு கண்டது. இதற்கு முன் இருந்த முஸோலினியை அறிமுகப் படுத்த உலகப் போருக்கு முன் 1936 ஆம் ஆண்டில் இந்நூல் வெளிவந்துள்ளது.

இந்நூலை அக்கால இதழ்கள் பலவும் பாராட்டியுள்ளன. நாட்டுப்பற்றுக்கு எடுத்துக்காட்டாக இந்நூல் அமைவதாகப் பாராட்டப்பட்டுள்ளது. தனிமனிதன் ஒருவன் ஒரு நாட்டின் வரலாற்றை உருவாக்குகிறான் என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டாகும்.

> பெனிடோ முஸோலினி சமீபத்தில் இறங்கியுள்ள அபிசீனிய யுத்தம் அதர்மமானதென்பதில் அபிப்பிராய பேதத்திற்கு இடமில்லை. ஆனால் அது வேறு விஷயம். அவருடைய ஜீவிய சரிதை ஒரு இலட்சிய மாகக் கொள்ளக்கூடியது. தாய்நாட்டுப் பற்றால் ஊக்கப்பட்டவராய் இத்தாலியை முன்னுக்குக் கொண்டுவர வேண்டுமென்னும் உயரிய இலட்சியம் கொண்டவராய், மிகவும் ஏழ்மையான ஸ்திதியிலிருந்தும் தமது உழைப்பினாலும், உறுதியினாலும் சர்வாதிகாரியாகி தனது தேசத்தை உலக வல்லரசு களுள் ஒன்றாக்கிய பெருமை முஸோலினியையே சாரும். ஆச்சரியமான அவரது ஜீவிய சரித்திரம் தமிழ் மக்களனைவரும் படித்தறிந்து கொள்ள வேண்டியதே[13]

என்று 'சுதேசமித்திரன்' இதழ் மதிப்புரை எழுதியுள்ளது.

இந்நூல் தமிழ்த் தாத்தா உ.வே.சா.வின் பாராட்டுகளையும் பெற்றுள்ளது.

> இப்போது பிரபஞ்ச ஜோதியின் பிரசுரமாக அவர்கள் எழுதியுள்ள முஸோலினி, அபிஸினிய சக்ரவர்த்தி, என்னும் இரண்டு சுடர்களையும் படித்துப் பார்த்தேன். இவை இக்காலத்தில் நமது நாட்டிற்கு நல்விருந்தாக இருக்கும் என்பது என் கருத்து. அங்கங்கே யுத்தம் நிகழ்ந்ததும், நிகழ்வதும் ஜனங்களிற் பெரும்பாலோர்க்குப் பொதுவாகத் தெரியுமேயல்லாது தேசத்தின் அமைப்பு களும் இயல்புகளும் தெளிவாகவும், உண்மையாகவும் தெரியமாட்டா. ஆதலின் அவற்றை உள்ளது உள்ளவாறு அறிந்துகொள்ளுவதற்கு இந்நூல்கள் தக்க கருவி களாகும்.[14]

இதேபோன்று 'ஹிட்லர்' நூலைத் திரு.வி.க. பாராட்டியுள்ளார். இராஜாஜியும் இந்நூலை வியந்து பாராட்டியுள்ளார். இதற்கு முக்கியக் காரணம் சாமிநாதசர்மா ஏராளமான வரலாற்றுக் குறிப்புகளைச்

சேகரித்துச் சாதாரண வாசகனுக்குப் பயன்படும் வகையில் நூலை எழுதி வழங்கியுள்ளார். தனிமனித வரலாறாக எழுதிய இந்நூல்கள் அனைத்தும் தமிழ் மக்கள் இவர்களைப் பற்றிப் பல புதிய விவரங்களை அறிந்து வரலாற்று அறிவு பெறப் பெரிதும் பயனுடையனவாகும். இவை அனைத்தும் சமுதாயத்திற்குப் பயன்படும் வகையில் மனிதன் வாழ வேண்டும் என்ற உயரிய இலட்சியத்தைக் கற்பிப்பவனவாகவும் அமைந்துள்ளன.

இதுகாறும் கண்ட சாமிநாதசர்மாவின் நூல்கள் நேரடி மொழிபெயர்ப்புகள் என்றில்லாமல் திரட்டப்பட்ட செய்திகளின் வழியாகப் பெறப்பட்டவையாகும். இனி நேரடி மொழிபெயர்ப்பாக அமைந்த நூல்களைப் பற்றிக் காணலாம்.

## மொழிபெயர்க்கப்பட்ட நூல்கள்

சாமிநாதசர்மா தமிழில் மொழிபெயர்த்த நூல்கள் அனைத்தும் ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவையாகும். சிற்சில கட்டுரைகள் மட்டும் கன்னட மொழியிலிருந்தும் இந்தி மொழியிலிருந்தும் மொழிபெயர்த்துள்ளதாகக் குறிப்பிடப்படுகின்றன. **மானிட ஜாதியின் சுதந்திரம், மனோதர்மம், மகாத்மாகாந்தி, மாஜினியின் மனிதன் கடமை, சமுதாய ஒப்பந்தம், பிளேட்டோவின் அரசியல் ராஜதந்திர யுத்தகளப் பிரசங்கங்கள், சுதந்திரத்தின் தேவைகள் யாவை? பிளேட்டாவின் கடிதங்கள், வரலாறு கண்ட கடிதங்கள்** ஆகிய பத்து நூல்கள் சாமிநாதசர்மாவின் மொழிபெயர்ப்பு நூல்களாகும். இவற்றுள் 'பிளேட்டோவின் அரசியல்' என்னும் நூல் அவருடைய அளப்பரிய மொழிபெயர்ப்புப் பேராற்றலை எடுத்துக் காட்டுவதாகும்.

> **பிளேட்டோவின் அரசியல் சாமிநாதசர்மாவின் மொழி பெயர்ப்பு நூல்களுள் சிகரமாகும். பிளேட்டோவும், சாக்ரடீசும் தமிழிலேயே உரையாடியிருப்பார்களோ என்று வியந்து சில வாசகர்கள் குறிப்பிட்டதாகச் சாமிநாதசர்மா கூறியுள்ளார்.**[15]

## பதுங்குக் குழியில் மொழிபெயர்ப்பு

பிளேட்டோவின் சுமார் நாற்பது நூல்களில் ரிபப்ளிக் (Republic) என்னும் கிரேக்க நூல் மிகச் சிறந்ததெனப் போற்றப்படுகிறது. மொழிபெயர்க்கப்பட்ட தமிழ் நூல்களுள் இந்த நூலுக்குத் தனி வரலாறு உண்டு. 1939ஆம் ஆண்டு முதல் அறிஞர் வெ. சாமிநாதசர்மா இரங்கூனில் புதுமலர்ச்சி நூற்பதிப்புக் கழகம் மூலம் தன் நூல்களை வெளியிட்டுக் கொண்டிருந்தார். அந்த வரிசையில் 1941ஆம் ஆண்டு ஜப்பானியரின் விமானத் தாக்குதலுக்கு இரங்கூன் உள்ளான

காலகட்டத்தில் பிளேட்டோவின் 'ரிபப்ளிக்' எனும் நூலைச் சாமிநாத சர்மா தமிழில் மொழிபெயர்த்துக் கொண்டிருந்தார். அவர் பதுங்குக் குழியில் இருந்து கொண்டும், பர்மாவை விட்டு இந்தியாவை நோக்கித் தரைமார்க்கமாக நடந்து வந்த போதும் பிளேட்டோவின் ரிபப்ளிக் நூலை மொழிபெயர்த்துக் கொண்டு வந்தார். மொழி பெயர்ப்பு வரலாற்றில் இது போன்ற பெரும் துன்பத்தை அனுபவித்துக் கொண்டு மொழிபெயர்க்கப்பட்ட ஒரு நூல் 'ரிபப்ளிக்' என்பது இதன் தனித்துவம். இந்த அனுபவத்தைப் பற்றிக் கூறும்பொழுது-

> *1941ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 25ஆம் தேதிக்குப் பிறகு அநேகமாக ஒவ்வொரு நாளும், இரவு பகல் வேற்றுமை பாராட்டாமல், ஜப்பானிய விமானங்கள் இரங்கூனில் சுற்றுப் பக்கங்களைத் தாக்கி வந்தன. பகல் நேரத் தாக்குதலின்போது பத்திரிகாலயத்தில் இருந்தால் வீட்டுக்கு வரமுடியாது. ஆனால் நான் எங்கிருந்தாலும் எத்தனை விமானங்கள் வந்து எத்தனை குண்டுகளை எறிந்து கொண்டிருந்தாலும், பிளேட்டோ மட்டும் என் கூடவே இருந்தான்.*
>
> *வீட்டில் ஆள் பதுங்கிக் குழியில் அடைக்கலம் புக வேண்டிய அவசியம் நேரிடுகிறபொழுது, பிளேட்டோவின் அரசியல் என்ற நூலின் ஓரிரண்டு ஆங்கிலப் பதிப்புகள், கத்தை காகிதங்கள், ஊற்றுப்பேனா இவை சகிதம் செல்வனே். ஜப்பானிய விமானங்கள் குண்டு களைப் பொழிந்த வண்ணம் இருக்கும். குண்டுகள் எட்டு, பத்துகிலோமீட்டர் தொலைவில் விழுந்தாலும், வீழ்ச்சியின் அதிர்ச்சியில் அந்தக் குழியின் பக்க வாட்டுகளில் உள்ள மண், சரிந்து விழுந்து கொண்டே இருக்கும். குண்டு விழுகிற ஒவ்வொரு தடவையும் குழியில் இருக்கிறவர்களைத் தூக்கிவாரிப் போடும். ஆனால், அந்த நேரத்தில் - என்னைப் பொறுத்த மட்டில் சொல்லிக் கொள்கிறேன். உயிரைத் துரும்பாக மதிக்கக்கூடிய மனப்பான்மைதான் எனக்கு ஏற்பட்டது. இப்பவோ பின்னையோ மற்றெந்த நேரத்திலோ என்ற நிலைக்கு என் மனம் தயாராய் இருந்தது. ஆதலால் உயிர் பிரிவதற்கு முன்பு பிளேட்டோவின் அரசியல் நூலைத் தமிழாக்கித் தருகிற ஒரு நல்ல காரியத்தைச் செய்து விட்டுப் போக வேண்டும் என்ற உறுதி எனக்கு ஏற்பட்டது.*
>
> இந்த உறுதி ஏற்பட்டிருந்ததனால், ஆள் பதுங்கிக் குழியில் இருந்த நேரங்களில், அச்சகத்திலிருந்து கொண்டு வந்திருந்த பிளேட்டோ சம்பந்தமான ப்ரூப்களைத் திருத்துவதோ, பிளேட்டோவை, மேற் கொண்டு மொழிபெயர்த்து வருவதோ எனக்குச்

*சிரமமாகத் தோன்றவில்லை. அபாய அறிவிப்புச் சங்கு ஊதியவுடன் நான் என் எழுத்துப் பணிக்குரிய தளவாட சாமான்களுடன் ஒரு யந்திரம் போல் ஆள் பதுங்கிக் குழியில் சென்று அமர்வேன். ஒரு மணி நேரமோ, இரண்டு மணி நேரமோ அங்கேயே இருந்து எழுதிக் கொண்டிருப்பேன். நேரம் போவது தெரியாது. விமானங்களின் இரைச்சலோ, அவைகளைத் தாக்கிய பிரிட்டிஷ் யந்திர பீரங்கிகளின் சப்தமோ என் செவிகளில் விழமாட்டா. பசி, தாகம் எதுவும் தெரியாது. அச்சம் காரணமாகச் சிலருக்கு மார்பு படபடக்குமே அந்தப் படபடப்பும் எனக்கு ஏற்பட வில்லை. உண்மையில் என்னை மறந்த ஒருவனாக, ஆனால் பிளேட்டோவின் வசப்பட்டவனாக என் எழுதுகோலை ஓட்டிக் கொண்டிருந்தேன். எப்படியோ மேலே சொன்ன பிரகாரம் 1942ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் இரண்டாவது வார முடிவில் முதல் பகுதி வெளிவந்தது; இரண்டாவது பகுதியை மொழிபெயர்த்துக் கொண்டிருந்தேன்.*[16]

இதற்குப் பிறகு ஜப்பானியப் படைகள் இரங்கூனைத் தாக்கத் தொடங்கியதால் சாமிநாதசர்மாவும் அவருடைய மனைவியும் எல்லாவற்றையும் அப்படியே போட்டுவிட்டு இந்தியாவை நோக்கித் தரைமார்க்கமாக நடக்கத் தொடங்கினர். இந்தப் பயணத்தின்போது சாமிநாதசர்மா பிளேட்டோவின் அரசியல்-ஆங்கில மூலநூலையும், பேனா, நோட்டுப்புத்தகம், அதுவரை மொழிபெயர்க்கப்பட்ட பகுதி ஆகியவற்றை மட்டும் எடுத்துக் கொண்டு புறப்பட்டார். வழியில் இடை இடையே ஓய்வெடுக்கும் பொழுதெல்லாம் பிளேட்டோவை மொழிபெயர்த்துக் கொண்டு வந்தார். நெடுந்தூர நடை பயணத்தால் காலில் கீல் வாய்வு தொல்லை ஏற்பட்டுப் பெரும் துன்பமுற்றார். சென்னை வந்த பிறகு புதிய வாழ்க்கையைத் தொடங்குவதாகி விட்டது. இடையில் பிளேட்டோ மொழிபெயர்ப்பை நிறுத்தி விட்டு, படுக்கையில் ஒருக்களித்துப் படுத்துக்கொண்டே 'கார்ல் மார்க்ஸ்' என்ற நூலை எழுதத் தொடங்கினார். கார்ல்மார்க்ஸ் பற்றித் தமிழில் எத்தனையோ நூல்கள் வந்தாலும் எளிமையான நடையில் பாமரர்கள் புரிந்து கொள்ளும் மொழிநடையில் எழுதப்பட்ட இந்த நூலுக்கு இன்றும் ஒரு தனிச் சிறப்பு உண்டு. இப்படி 'கார்ல் மார்க்ஸ்' பற்றிய நூலை எழுதிக் கொண்டிருந்த வேளையில் வலியிலிருந்து சிறிது நேரம் விடுதலை பெற மீண்டும் பிளேட்டோவை மொழிபெயர்த்துக் கொண்டு வந்துள்ளார். ஒருவாறு இரண்டாம் பாகமும் எழுதி முடித்த பிறகு 1945 ஆம் ஆண்டில் முதல் பாகமும், இரண்டாம் பாகமும் சேர்க்கப் பெற்று ஒரே நூலாக வெளியிடப்பட்டது. இந்நூலைச் சக்தி

காரியாலாயம் வெளியிட்டுள்ளது. எந்த நூலுக்கும் இல்லாத ஒரு வரலாறு இந்த நூலுக்கு உண்டு. மொழிபெயர்ப்பு வரலாற்றில் இத்தகைய அனுபவத்துடன் வெளிவந்த இந்த நூலுக்கு இணையாக வேறு எந்த நூலையும் சொல்லமுடியாது. அவருக்கு இணையான மொழிபெயர்ப்பாளரையும் சுட்டிக்காட்ட முடியாது.

### பிளேட்டோவின் கடிதங்கள்

பிளேட்டோவின் கடிதங்களை மொழிபெயர்த்த சாமிநாத சர்மா அந்த நூலின் முக்கியத்துவத்தையும் நோக்கத்தையும் வாசகர்களுக்கு முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

> **பொதுவாக இந்தக் கடிதங்கள் இடம், காலம், இனம், மொழி ஆகிய பல்வேறு வேற்றுமைகளைக் கடந்து நிற்கும் உண்மைகள் பலவற்றைத் தாங்கி நிற்கின்றன என்று சொல்லலாம். பிரதியொரு மனிதனும் மெய்ப் பொருளை நாடவேண்டும்; ஆளும் பொறுப்பைப் பெறுதல் வேண்டும்; நல்லவர்களைத் தேர்ந்தெடுத்து நண்பர்களாக்கிக் கொள்ள வேண்டும்; தீமை செய்தவர் களுக்கு நன்மை செய்ய வேண்டும்; ஆடம்பர வாழ்க்கையை விலக்கி எளிய வாழ்க்கையை மேற் கொள்வதில்தான் இனிமையும் நிறைவும் இருக்கின்றன. இப்படிப் பல உண்மைகள், பல நியதிகள் இந்தக் கடிதங்களில் விரவியிருக்கின்றன[17]**

எனப் பிளோட்டோவின் சிறப்பையும் கிரேக்க மொழி நடையையும் பற்றிச் சாமிநாதசர்மா குறிப்பிடுகிறார்.

> **பிளேட்டோவின் நூல்கள் பலவும் தமிழில் வெளிவர வேண்டும். அப்படி வெளிவந்து அவைகளைத் தமிழர்கள் விரும்பிப் படிப்பார்களானால் அவர்கள் தங்களைச் சுதந்திரத்திற்குத் தகுதிப்படுத்திக் கொண்டவர் களாவார்கள்[18]**

என்று சாமிநாதசர்மா ஒரு குறிக்கோளுடன் பிளேட்டோவின் நூல்களைத் தமிழில் வழங்கி வந்தார். இவ்வகையில் பிளேட்டோவின் 13 கடிதங்களை ஆங்கில மொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

> இந்தக் கடிதங்களை நான் மொழிபெயர்த்துக் கொண்டு வருகிறபோது ‘தற்காலத்திற்குப் பிளேட்டோ’ என்ற பெயரில் அமெரிக்காவில் வெளியான ஓர் ஆங்கில நூலைப் படித்தேன். அதில் அந்த நூலாசிரியன், பிளேட்டோவின் கோட்பாடுகள் அமெரிக்க அறிஞர் களிடையே நாளுக்கு நாள் அதிக செல்வாக்குப் பெற்று

வருகிறதென்றும், 1960 ஆம் ஆண்டில் மட்டும் பிளேட்டோவின் நூல்களைக் கொண்ட இருபத்தைந்து விதமான பதிப்புக்களைத் தான் பார்த்ததாகவும், தன் பார்வைக்குப்படாமல் இன்னும் எத்தனையோ பதிப்புகள் வெளிவந்திருக்கக் கூடுமென்றும் பெருமையோடு கூறுகிறான். உலகியலில் அதிகமாக ஈடுபட்டிருக்கும் அமெரிக்காவிலேயே பிளேட்டோ செல்வாக்குப் பெற்று வருகிறானென்றால், அவன் படைப்புகளின் ஆழமும் சிரஞ்சீவித் தன்மையும் ஒருவாறு புலனாகும். மற்ற நாடுகளில் அவன் எவ்வளவு அதிகமான செல்வாக்கைப் பெற்றிருக்கிறான் என்பதைப் பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை. உலகத்துப் பல்வேறு மொழிகளிலும் பிளேட்டோவின் படைப்புகள் பல்வேறு பதிப்புகளாக வெளிவந்திருக்கின்றன. அது போல் தமிழ்மொழியிலும், அவனுடைய படைப்புகள் பலவும் பல பதிப்புகளாக வெளிவரவேண்டுமென்பது என் ஆசை[19]

எனச் சாமிநாதசர்மா இந்நூலின் முக்கியத்துவத்தைக் குறிப்பிட்டுக் காட்டுகிறார். கிரேக்கம் தொடர்பாக, கிரேக்கச் சிந்தனைகள் தொடர்பாகத் தமிழில் வெளியிடுவதில் சாமிநாதசர்மா மிகுந்த அக்கறையும், முயற்சியும் மேற்கொண்டுள்ளார். இந்த வகையில் அவர் மொழிபெயர்த்த 'ராஜதந்திர - யுத்தகளப் பிரசங்கங்கள்' என்ற நூலும் குறிப்பிடத்தக்க தாகும்.

### ராஜதந்திர – யுத்தகளப் பிரசங்கங்கள்

கிரேக்க நாட்டில் கி.மு. 431 முதல் கி.மு. 404 வரை பெலப்போனேசியர்களுக்கும் ஆத்தினியர்களுக்கும் நடைபெற்ற போரின் வரலாற்றை ஆத்தினியனான தூஸிடிடீஸ் (Thucidies) கிரேக்க மொழியில் எழுதினார். இது ஆங்கிலத்தில் History of Peloponnesion war என மொழிபெயர்த்து வெளியிடப்பட்டது.

தூஸிடிடீஸின் பெலொப்போனிசிய யுத்த சரித்திரத் திற்கு ஆங்கில மொழிபெயர்ப்புகள் பல வெளியாகி யிருக்கின்றன. இவையனைத்தையும் வைத்துக் கொண்டுதான் பிரசங்கங்களைத் தமிழ்ப்படுத்தி யிருக்கிறேன். பிரசங்கங்களை மொழிபெயர்க்கிற போது தூஸிடிடீஸின் கருத்தையே முக்கியமாகத் தழுவிக்கொண்டு போயிருக்கிறேன்[20]

என இந்நூலின் மொழிபெயர்ப்பு முறை குறித்து வாசகர்களுக்கு அறிமுகப்படுத்துகிறார் சாமிநாதசர்மா. வரலாற்று மேதை எனப் போற்றப்படும் தூஸிடிடீஸின் சிறப்புகளையும், அவர் எழுதிய இந்தப்

போர் நிகழ்ச்சிகளைப் பற்றியும் அந்த நூலின் முக்கியத்துவம், பயன் ஆகியவற்றையும் மிகத் தெளிவாக, எளிமையாக 48 பக்கங்களில் சாமிநாதசர்மா எடுத்துக்கூறியுள்ளார்.

> தூஸிடிடீஸின் இந்தச் சரித்திர நூல், அரசியல்வாதிகள் ஒவ்வொருவரிடத்திலும் இருக்க வேண்டிய கைப் புத்தகம். அப்படித்தான் இதுகாறும் இருந்து கொண்டு வந்திருக்கிறது. அரசியல்வாதிகளை எதிர்நோக்கும் பல பிரச்சினைகள் ஆராயப்படுகின்றன. இதில் ஜன ஆட்சியின் இலட்சணங்களென்ன, ஓர் ஏகாதிபத்தியம் தன்னுடைய ஆட்சியை நிலைத்திருக்கச் செய்ய வேண்டுமானால் எப்படிக் கடுமையான முறைகளை அனுஷ்டிக்க வேண்டியிருக்கிறது. ஓர் ஏகாதிபத்தியம் என்னென்ன காரணங்களினால் தேய்ந்து மாய்கிறது; இப்படிபட்ட பல விஷயங்களும் பிரசங்கங்களின் வாயிலாக எடுத்துக் காட்டப்படுகின்றன........ இன்னோரன்ன பிரச்சினைகள் பல பிரசங்கங்களினூடே தோன்றி அரசியல்வாதிகளின் சிந்தனையைத் தூண்டிவிடக்கூடியவனாயிருக்கின்றன. இந்த ஒரு காரணத்திற்காகவே பிரசங்கங்களை மட்டும் பொறுக்கி எடுத்து இந்த நூலாகத் தருகிறோம்[21]

என இந்நூல் வெளியீடு குறித்துக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த நூலின் முதல் பதிப்பு 1953 ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. ஒரு நூலின் தேவை என்ன? என்பதை நன்கு அறிந்து கொண்டு அதற்கேற்பத் தேர்வு செய்து மொழிபெயர்த்தவர் சாமிநாதசர்மா. இப் போர் உண்மையில் கிரேக்க நாட்டை அதிகமாக நிலைகுலையச் செய்த நிகழ்ச்சியாகும். கிரேக்கர் அல்லாதோர் அடங்கிய உலகில் பெரும் பகுதியை இந்நிகழ்ச்சி அக்காலத்தில் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளது என வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்.

## ரூசோவின் 'சமுதாய ஒப்பந்தம்'

சாமிநாதசர்மாவின் புகழ்பெற்ற மொழிபெயர்ப்பு நூல்களில் ரூசோவின் 'சமுதாய ஒப்பந்தம்' (The Social Contract) எனும் சமுதாய அரசியல் தத்துவ நூல் குறிப்பிடத்தக்கதாகும். ரூசோ பதினெட்டாம் நூற்றாண்டில் (1712-78) பிரெஞ்சு நாட்டில் ஜெனிவாவில் தோன்றிய மிகச் சிறந்த அரசியல் மேதை. அவர் காலத்தில் நிலவிய பிரெஞ்சு நாட்டின் கடுமையான சமுதாய, அரசியல், பொருளாதாரச் சூழல் அவரை உலகின் தலைசிறந்த புரட்சிகர சிந்தனையாளராக உருவாக்கியது. பிரெஞ்சு நாட்டு அரசியல் முறை சீர்கெட்டுக்கிடந்த நிலையில் மக்கள் புதிய விழிப்புணர்வும், விடுதலை உணர்வும் பெறச் செய்தவர். ஆளப்பிறந்தவர் தனி இனம்; ஆளும் உரிமை எல்லோருக்கும்

கிடையாது. உடைமையாளர்களுக்கும், உயர்குடியில் பிறந்தவர் களுக்குந்தான் ஆட்சி உரிமை உண்டு என்ற கருத்தை எதிர்த்து உழைப்பின் பயனாக வாழ்ந்து வரும் பாட்டாளி வர்க்கத்திற்கும் நாட்டின் நிர்வாகத்தில் பங்கு உண்டு. ஒவ்வொரு மனிதனுக்கும் பிரதிநிதித்துவ உரிமையும், சுதந்திரமும் உண்டு, அவை மனித சமுதாயம் அனைத்துக்கும் பொதுவான அடிப்படை உரிமைகள் எனத் தம் நூல்களில் மனித சுதந்திரத்தைப் பற்றியும், உரிமையைப் பற்றியும் வரையறுத்துள்ளார்.

ரூசோ எழுதிய 12 நூல்களில் 'சமுதாய ஒப்பந்தம்' உலகப் புகழ் பெற்றதாகும். இந்நூல் 1762 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. 1789ஆம் ஆண்டிற்கு முன்பு இந்நூலை மக்கள் அறியவில்லை. ஜனநாயக சங்கத்தின் தீவிரவாதிகள் இந்நூலை மக்களிடையே பரவச் செய்தனர். 1788 ஆம் ஆண்டில் மர்ரே என்பவர் பொதுக்கூட்டங்கள் மூலமாக இந்நூலைப் பலரும் அறியும்படிச் செய்தார் என நூல்கள் வாயிலாக அறியமுடிகிறது. ரூசோ இறந்து 11 ஆண்டுகளுக்குப் பிறகு பிரெஞ்சுப் புரட்சிக்கும், அதற்குப் பிறகு ஏற்பட்ட அமெரிக்கப் புரட்சிக்கும் இந்நூல் தூண்டுகோலாக அமைந்தது. பிரெஞ்சுப் புரட்சியை நடத்துபவர்கள் இதனை வழிகாட்டி நூலாகக் கருதினர்.

> **உலக சரித்திரத்திலேயே ஓரிரண்டு நூல்களைத் தவிர ரூசோவின் சமுதாய ஒப்பந்தத்தைப் போல வேறெந்த நூலும் மக்களின் மனதில் ஆதிக்கம் செலுத்தவில்லை**

என மெயின் (Ancient Law by Maine, Chap. V) என்ற அறிஞர் குறிப்பிடுகிறார். மத இயல் அடிப்படையில் அமைந்த ஆட்சி முறையை மாற்றி மனித இயல் அரசியல் முறையை வரையறுத்துக் கூறியதால் இந்நூலினைப் பிரெஞ்சு நாடாளுமன்றம், 'நாத்திகநூல்' என முடிவு செய்து தீயிலிட்டுப் பொசுக்கும்படி உத்தரவு பிறப்பித்தது. அத்துடன் ரூசோவைப் பிரெஞ்சு அரசு நாடு கடத்தியது. இத்தகைய வரலாற்றுச் சிறப்புமிக்க நூலைத் தமிழில் முதன்முறையாக அறிமுகப்படுத்திய பெருமை வெ. சாமிநாத சர்மாவைச் சேரும். ரூஸ்ஸோவின் சமுதாய ஒப்பந்தத்தைத் தமிழில் முதன் முதலாக மொழிபெயர்க்க முயற்சியெடுத்தவர் வ.வே.சு.ஐயர் (1881-1925). புதுச்சேரியில் பாரதியார் ஆசிரியராக இருந்த 'இந்தியா' வார இதழில் 5-6-1909 முதல் இந்த மொழிபெயர்ப்பு வெளிவரத் தொடங்கியது. ஆனால் இந்த மொழிபெயர்ப்பு எவ்வளவு காலம் வந்தது! முழுமையாக வெளிவந்ததா? என்பதை அறிய இயலவில்லை எனும் செய்தியைப் பெ.சு. மணி தம் நூலில் (வெ. சாமிநாதசர்மா - ப. 43) வெளியிட்டுள்ளார்.

இருப்பினும் நூல் வடிவில் வாசகர்களுக்கு முழுமையான மொழிபெயர்ப்பாகக் கிடைத்துள்ள ரூஸ்ஸோவின் முதல் நூல்

சாமிநாத சர்மாவின் நூலாகும். இந்நூல் 1941ஆம் வருடம், அக்டோபர் மாதம் புதுமலர்ச்சி நூற் பதிப்புக் கழகத்தால் (பர்மாவில்) 'சமுதாய ஒப்பந்தம்' என்ற பெயரில் முதற் பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது. இதே நூலைச் 'சமூக ஒப்பு நெறி' என்ற பெயரில் கே.எஸ். வெங்கட்ராமன் அவர்கள் மொழிபெயர்த்து 1964ஆம் ஆண்டு சாகித்திய அகாதெமியால் வெளியிடப்பட்டார்.

சாமிநாதசர்மா தனது நூலின் முன்னுரையில்,

> ரூஸ்ஸோ எழுதியது பிரெஞ்சுப் பாஷையில், அதனைப் பல அறிஞர்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார்கள். அந்த மொழிபெயர்ப்புகளை வைத்துக்கொண்டு நான் இந்த நூலைத் தமிழ்ப்படுத்தி யிருக்கிறேன். தமிழில் மொழிபெயர்க்கிறபோது நான் ரூஸ்ஸோவின் கருத்துகளுக்குத்தான் முக்கியத்துவம் கொடுத்திருக்கிறேனே தவிர எழுத்துகளுக்கல்ல. இதனால் அனேக இடங்களில் கூடுதல் குறைச்சல்கள் இருக்கின்றன. இஃதெனக்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது. ஆனால் என்னுடைய நோக்கம் தமிழ் நாட்டு மகா ஜனங்கள் இதனைக் கூடியவரையில் சலிப்பின்றிப் படிக்க வேண்டுமென்பதுதான். சலிப்பின்றிப் படித்தவர்கள் சிந்தனை செய்யத் தொடங்கிவிடுவார்களல்லவா?[22]

என இந்நூலின் மொழிபெயர்ப்பு குறித்துக் குறிப்பிட்டுள்ளார். அக்காலத்தில் வடமொழிச்சொற்கள் கலந்த மொழிநடையில் இவருடைய மொழிபெயர்ப்பு அமைந்துள்ளதைக் காண முடிகிறது.

சாமிநாதசர்மா மொழிபெயர்ப்பதோடு தன் கடமை முடிந்ததாகக் கருதாமல் உரிய சொற்களுக்கு அல்லது செய்திகளுக்கு விளக்கம் அளிக்கும் வகையில் ஆங்காங்கே வரலாற்று நிகழ்ச்சிகளை, குறிப்புகளை அளித்துள்ளார். அவ்வாறு அவர் அடிக்குறிப்பாக அளித்துள்ள வரலாற்றுக் குறிப்புகளில் சான்றாக ஒன்றைக் காணலாம்.

> ஆர்க்கேடியர்களுக்கும், ஸைரேனியர்களுக்கும் பிளேட்டோ சட்டமியற்றிக் கொடுக்க மறுத்துவிட்டான். ஏனென்றால் இரு ஜாதியினரும் பணக்காரர்கள் என்பதும், அதனால் எல்லோரும் சம உரிமையோடு வாழவேண்டுமென்று விரும்பமாட்டார்களென்பதும் அவனுக்குத் தெரியும். அதே கிரிஸீல் கிரேட் பிரதேசத்தில், நல்ல சட்டங்களும் கெட்ட மனிதர் களும் ஒன்று சேர்ந்திருந்தார்கள், ஏன்? மினேஸ் என்பவன் துன்மார்க்கங்களில் ஈடுபட்டிருந்த ஜனங் களிடத்தில் ஒருவித ஒழுங்கை நிலைநாட்டப் பார்த்தது தான் இதற்குக் காரணம் (சமுதாய ஒப்பந்தம், பக். 84-85).

இப்பகுதியைப் படிப்போர்க்கு ஆர்க்கேடியா, ஸைரேன், கிரேட், மினோஸ் போன்ற சொற்கள் புதியனவாகத் தோன்றலாம். இச் சொற்களுக்கு விளக்கம் அளிக்க வேண்டிய கடமை மொழி பெயர்ப்பாளருக்கு உண்டு என்பதைச் சாமிநாதசர்மா உணர்த்துகிறார்.

> **ஆர்க்கேடியா என்பது, கிரீஸ் தேசத்தின் மத்தியில் உள்ள ஒரு பிரதேசம். இங்கு முற்காலத்தில் இடையர் களும், வேடர்களுமே வாழ்ந்து கொண்டிருந்தார் களென்று சொல்லப்படுகிறது. கிரேக்க இதிகாசத்தில் இந்த ஆர்க்கேடியா ஒரு முக்கிய இடம் பெறுகிறது.**
>
> **ஸைரேன் என்பது ரோம ஏகாதிபத்தியத்தைச் சேர்ந்த ஒரு பிரதேசமாயிருந்தது. பல அறிஞர்களுடைய பிறப்பிடமாக இது பிரசித்தி பெற்றிருக்கிறது.**
>
> **கிரேட் என்ற தீவு கிரேக்க சாம்ராஜ்யத்திற்குட்பட்டு, பிறகு பலபேருடைய கைமாறி, கடைசியில் 1941ஆம் வருடம் ஜெர்மனியின் சுவாதீனமாயிற்று**
>
> *(சமுதாய ஒப்பந்தம், ப. 84-85).*

தமிழ் மக்களுக்குப் புதியனவாக இடம்பெறும் சொற்களுக்கு மொழிபெயர்ப்பாளர் இம்முறைப்படி விளக்கமளிக்கலாம். மொழி பெயர்ப்பாளர் தான் ஊகிப்பதையோ அல்லது மறுத்துக் கூறுவதைக் கூட அடிக்குறிப்பில் குறிக்கலாம் என்பதுவும் இந்நூல் மூலம் அறியப்படுகிறது.

> **ஆங்கில மொழிபெயர்ப்புகள் பலவற்றை வைத்துக் கொண்டு நான் இந்த நூலைத் தமிழ்ப்படுத்தி யிருக்கிறேன். சமுதாய ஒப்பந்தம், சிந்தனைக்கு ஒரு தூண்டுகோல் அறிவுக்கு ஒரு சாணைக்கல். இந்த இரண்டு வகையிலும் இந்த நூல் தமிழ் நாட்டுக்குப் பயன்படவேண்டும் என்பது என் பிரார்த்தனை[23]**

என்று சாமிநாதசர்மா குறிப்பிட்டுள்ளார். அரசியல் நோக்காளர் களும், மேடைப் பேச்சாளர்கள் பலரும் இந்நூலைப் பரவலாக மேற்கோள்கள் காட்ட வாய்ப்பாக அமைந்தது. ரூஸ்ஸோவின் வாழ்க்கை வரலாற்றையும் சாமிநாதசர்மா எழுதினார். இந்நூல் 1941ஆம் ஆண்டு மின்னொளி பிரசுரமாகப் பர்மாவில் வெளிவந்தது. 'ரூஸ்ஸோ' என்ற மனிதனின் அரிய ஆளுமையை, புதிய சிந்தனை வெளிப்பாட்டை, ஆட்சியாளர்களாலும், மத நிறுவன அமைப்பு களாலும் ரூஸ்ஸோ எதிர்கொண்ட துன்பங்களையும், எதிர்ப்பு களையும், நாடு கடத்தப்பட்ட வாழ்க்கையையும், இந்த நிலையிலும் தன்னுடைய வாழ்உரிமையையும், பிறருடைய உரிமையுணர்வையும்

பாதுகாக்க நடத்திய போராட்டத்தை எளிமையான நடையில் தமிழில் சாமிநாதசர்மா விளக்கியுள்ளார். இது மொழிபெயர்ப்பு அல்ல.

> **ரூஸ்ஸோ வெளிவந்த 1941 அக்டோபர் மாதத்திலேயே 'சமுதாய ஒப்பந்தமும்' இரட்டைப் பிறவிகளாக வெளிவந்தன. இவையிரண்டையும் முதன்முதலில் பர்மாவில் புதுமலர்ச்சி நூற்பதிப்புக் கழகத்தின் சார்பில் வெளியிட்டவர், சாமிநாதசர்மாவின் இலக்கியத் தோழர் கண. முத்தையா. பின்பு இவை சற்று விரிவாக்கம் பெற்றுப் பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம் வெளியீடுகளாகவும் வந்தன.[24]**

இந்நூல்கள் இரண்டும் மக்களிடம் பரவலாகச் செல்வாக்குப் பெற்றன. இதே போன்று மாஜினியின் 'மனிதன் கடமை', இங்கர்சாலின் 'மானிட ஜாதியின் சுதந்திரம்' ஆகிய இரு நூல்களும், பரவலாக அறிமுகமாயின. 'The Duties of Man' என்னும் ஜோசப் மாஜினியின் நூலின் தமிழாக்கத்தினை 'மாஜினியின் மனிதன் கடமை' என்னும் தலைப்பில் வெளியிடப்பட்டது. ராபர்ட் கிரீன் இங்கர்சால் (1833-1899) எனும் அமெரிக்க நாட்டின் தலைசிறந்த பேச்சாளராகவும், மதவாதிகளுக்குச் சவாலாகத் திகழ்ந்த நாத்திகராகவும் விளங்கிய பேரறிஞர். அவருடைய சொற்பொழிவுத் தொகுப்பு நூலிலிருந்து 'The Liberty of Man, Woman and Child' எனும் பகுதியை 'மானிட ஜாதியின் சுதந்திரம்' எனும் தலைப்பில் மொழிபெயர்த்துள்ளார். இங்கர்சாலின் ஆங்கில மொழி நடை ஓட்டத்தை, கருத்துகளை அப்படியே தமிழில் வழங்கியுள்ளதை இம்மொழிபெயர்ப்பில் காண முடிகிறது.

> **இங்கர்ஸால் ஒரு நாத்திகன் என்று சிலர் சொல்கிற வர்கள் இருக்கலாம். அதைப்பற்றி நமக்குக் கவலை யில்லை. ஆனால் இவன் ஓர் அறிஞன், சுயமாகச் சிந்திக்கிற சக்தியுடையவன். அப்படித் தான் சிந்தித்ததை தைரியமாக வெளியிலே சொல்லும் ஆற்றலுடையவன் என்பதில் யாருக்கும் எவ்வித அபிப்பிராய பேதமும் இருக்க முடியாது[25]**

என இங்கர்சாலைப் பற்றித் தமிழ் மக்களுக்கு அறிமுகம் செய்துள்ளார். இதுபோன்றே உலகின் பல சிந்தனையாளர்களைத் தமிழ் மக்களுக்கு அறிமுகம் செய்த பெருமை அறிஞர் வெ. சாமிநாதசர்மாவிற்கு உண்டு.

### சுதந்திரத்தின் தேவைகள் யாவை?

ஐரோப்பிய நாடுகள் சிலவற்றில் தோன்றி உலகமெங்கும் பரவி வந்த புதிய விழிப்புணர்வை, புரட்சிகர உணர்வைச் சாமிநாதசர்மா தமிழ் வாசகர்களுக்குப் புரிய வைக்க முயன்றுள்ளார். 'சீனக் குடியரசின் தந்தை' எனப் போற்றப்பட்ட ஸன்யாட்ஸென் (1866-1925),

சீனாவின் கான்ட்டன் நகரத்தின் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்திய பதினெட்டுச் சொற்பொழிவுகளின் தமிழாக்கத்தைச் சாமிநாதசர்மா 'ஜோதி' இதழில் வெளியிட்டு வந்துள்ளார். இவை யாவும் தொகுக்கப்பட்டு 1940ஆம் ஆண்டு

> **'சுதந்திரத்தின் தேவைகள் யாவை' எனும் பெயரில் நூலாக வெளியிடப்பட்டுள்ளன. ஸன் யாட் ஸென்னின் சொற்பொழிவுகளை முதன்முதலாக வெளிக்கொணர்ந்த பெருமை இந்திய மொழிகளில் தமிழ் மொழிக்கே உண்டு என்ற சிறப்பும் இதற்கு உண்டு. 1944ஆம் ஆண்டு 'புதிய சீனா' என்ற நூலையும் வெளியிட்டுள்ளார்.[26]**

'ஸன் யாட்ஸென் வாழ்க்கை வரலாறு' என்ற நூலை 1961 ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளார். மஞ்சு வம்சத்தினர் ஆட்சிக்கு எதிராகப் புரட்சித் திட்டம் தீட்டி, 'கோமின்டாங்' எனும் அரசியல் கட்சியைத் தொடங்கி, தொடர்ந்து மக்களுக்காகப் போராடியவர் ஸன்யாட்ஸென். இவரைப் பற்றித் தமிழர்கள் அறியும் நோக்குடன் இந்நூலை வெளியிட்டுள்ளார். இதையடுத்து 1962ஆம் ஆண்டு 'சீனாவின் வரலாறு' என்னும் நூலையும் சாமிநாதசர்மா வெளியிட்டுள்ளார். பண்டைய வரலாறு முதல் புரட்சிகர சீனாவையும் இன்றைய மக்கள் சீனத்தின் வரலாற்றையும் அறிவதற்கு வேண்டிய முதல் கருவி நூல்களாகச் சாமிநாதசர்மாவின் இந்நூல்கள் வெளிவந்துள்ளன.

'மகாத்மா காந்தி' எனும் நூலும் இவருடைய மொழி பெயர்ப்புத் திறனுக்கு ஒரு சான்று. தத்துவமேதை டாக்டர் எஸ். இராதா கிருஷ்ணன் காந்தியடிகளைப் பற்றி அறுபத்து மூன்று உலக அறிஞர்கள் எழுதிய கட்டுரைகளைத் தொகுத்து 'Mahatına Gandhi' எனும் நூலாக 1939ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார். காந்தியின் மீது பெருமதிப்புக் கொண்ட சாமிநாத சர்மா இந்நூலைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்குவதை ஒரு நல் வாய்ப்பாகக் கருதி இப்பணியைச் செய்துள்ளார். இந்நூல் 1941ஆம் ஆண்டு இரங்கூன் புதுமலர்ச்சி நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்டது.

இம்மொழிபெயர்ப்பு நூல்கள் மூலம் சாமிநாதசர்மா இத்துறையில் பெரும் பங்களிப்பைச் செய்துள்ளார் என்பதைத் தமிழுலகம் நன்கு அறியும். அவர் மறைவுக்குப் பின் வெளியிடப்பட்ட மொழிபெயர்ப்பு நூல் **'வரலாறு கண்ட கடிதங்கள்'** அமரர் சாமிநாத சர்மாவின் முதலாண்டு நினைவு அஞ்சலியாக 9-1-1979ஆம் நாளன்று வெளியிடப்பட்டுள்ளது. கிரேக்க ஞானி டயோஜைனீஸ், பாரசீக அரசன் மூன்றாம் டேரியஸ், கிரேக்க வரலாற்று அறிஞர் புளூடார்க், ரோம் நாட்டரசன் நீரோவின் தாயார், ரோம் நாட்டரசன் அரேலியன், கிறிஸ்தவஞானி செயின்ட் ஜெரோம், சீனயாத்திரிகர் ஹியூன்த்ஸாங்,

இத்தாலியக் கவிஞர் தாந்தே, வைணவ தத்துவ அறிஞர் வேதாந்த தேசிகன், கொலம்பஸ், மராட்டிய ஞானி துகாராம், ஜஹாங்கீர், ஷாஜஹான், அவுரங்கசீப், சிவாஜி, கரிபால்டி, ஸாமுவேல் ஜான்சன், ரஷ்ய எழுத்தாளர் செகாவ், ஏ.ஓ.ஹீயூம், திலகர் ஆகியோரின் கடிதங்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. வரலாற்றுச் சிறப்பு மிக்க இக்கடிதங்களை எளிய நடையில் புரிந்து கொள்ளத் தமிழுக்கு வந்த ஓர் அரிய நூல் எனலாம்.

சாமிநாதசர்மா ஒவ்வொரு மொழிபெயர்ப்பு நூலின் முன்னுரையிலும் 'வாசகர்களுக்கு' என்று தலைப்பிட்டு அந்த நூலின் மூல ஆசிரியர், அந்நூலின் சிறப்பு, பயன், அந்நூலைத் தான் மொழிபெயர்த்த விதம் ஆகியவற்றை வாசகனைத் தமக்கு அருகே அமர வைத்துப் பேசுவதைப் போல எழுதிச் செல்வார். மொழி பெயர்ப்புப் போலத் தோன்றாமல் சரளமான மொழிநடையைக் கையாளுவதில் சாமிநாதசர்மா தேர்ச்சி பெற்றவர்.

### சாமிநாதசர்மாவின் மொழிநடை

சாமிநாதசர்மாவின் மொழிபெயர்ப்பு மொழிநடையும், அவர் தமிழிலேயே எழுதுகின்ற மொழிநடையும் ஒன்று போலவே காணப்படுவது ஒரு தனிச்சிறப்பாகும்.

> *உலக நாடுகள் வரலாறு, உலக அரசியல் தலைவர்கள் வரலாறு, உலக அரசியல் தத்துவங்கள் முதலான வற்றைத் தமிழில் வழங்கும்பொழுது, அவற்றை விரும்பிக் கற்க வாசகர் கூட்டம் ஒன்று சாமிநாதசர்மாவின் தமிழ்நடை காரணமாகவும் உருவாகியது. தமிழ்நடை அமைப்பில் தமிழ்மொழி மரபும், இலக்கணக் கட்டுக்கோப்பும் பொதுவாக மீறப் படாமல் பார்த்துக் கொள்வதில் சாமிநாதசர்மா கருத்துச் செலுத்தி யுள்ளார். மிக நீண்ட தொடர்களைத் தவிர்த்தல், படிப்போரைத் தம் பக்கம் ஈர்க்கும் விளிகள், அஃலங்கார அடுக்குச் சொற்களைப் பயன்படுத்தாது பேசுவது போலவே எழுதுவது போன்ற பண்புகள் இவர் நடைக்குரியன.*[27]

ஒரு மொழிபெயர்ப்பு எவ்வாறு அமைய வேண்டும் என்பதற்குச் சாமிநாதசர்மாவின் மொழிபெயர்ப்புகள் எடுத்துக் காட்டுகளாகத் திகழ்ந்துள்ளன. சாமிநாதசர்மாவின் தமிழ்நடையை ஆய்வு செய்த மு. அருணாசலம் அளித்துள்ள மதிப்புரை இதற்குச் சான்றாகும்.

> பொதுவாய் வேறெங்கும், தமிழ் நடையில் அழகு என்று சொல்லும்போது, உயிரற்ற நடைக்கே மற்றவர்கள் அலங்காரம் செய்யக் காண்கிறோம். இது

> *வெறும் பிரேதலங்காரமாய்ச் சிலருடைய நடை, பொம்மைக்குச் செய்யும் அலங்காரம் போல் இருக்கும். ஆனால் சர்மாவின் நடையிலுள்ள அழகு, உயிருள்ள குழந்தைக்குச் செய்யும் அலங்காரத்தை யொத்தது. குழந்தையே கவர்ச்சியுடையது. அலங்காரமும் சேர்ந்தால் இன்னும் விசேஷம். இவர் எழுதும் பாணியை எழுத்தாளர்கள் கற்றுக் கொண்டால் அவர்களுக்கு எவ்வளவோ நன்மையுண்டு.*
>
> *சாமிநாதசர்மா தனது மொழிநடையில் வடசொற்கள் கலப்பாக எழுதிய போதிலும், மொழிபெயர்ப்புப் பணியை ஒரு இலட்சியமாகவே கருதி, தமிழரும், தமிழுலகமும் அதுவரை அறிந்திராத, நடைமுறைத் தேவையான சிறந்த வரலாற்று, அரசியல் துறைக்குரிய நூல்களைத் தேர்வு செய்து மொழிபெயர்த்து அளித்துள்ளது ஓர் அரிய சாதனையாகும்*

என்று குறிப்பிட்டுள்ளார்.

## சாமிநாதசர்மாவின் மொழிபெயர்ப்புக் கொள்கை

ஒரு மொழிபெயர்ப்புக்கு உரிய அடிப்படைத் தகுதிகள் என ஆங்கில மொழிபெயர்ப்பியல் அறிஞராக விளங்கிய பெஞ்சமின் ஜோவெட் (Benjamin Jowett) குறிப்பிட்டுள்ள விதிமுறைகளை முதன் முதலில் தமிழாக்கம் செய்து அதைப் 'பிளேட்டோவின் அரசியல்' எனும் நூலின் முன்னுரையில் வாசகர்களுக்கு வழங்கியவர் சாமிநாதசர்மா. இன்று மொழிபெயர்ப்பைப் பற்றி எழுதுவோர் பலரும் இவ்விதிமுறைகளை மேற்கோள்களாகக் கையாண்டுள்ளனர். இந்நெறிமுறைகளைச் சாமிநாதசர்மா தன் அனுபவத்தின் வாயிலாகக் கையாண்டுள்ளதையும் குறிப்பிட்டுக் காட்டலாம்.

> *ஆங்கில மொழிபெயர்ப்பாசிரியர்களின் மத்தியில் உன்னத ஸ்தானம் வகிக்கும் பெஞ்சமின் ஜோவெட் என்ற அறிஞர் தனது மொழிபெயர்ப்பு நூலின் முகவுரையில் ஒரு மொழிபெயர்ப்பு என்னென்ன இலட்சணங்களோடு கூடியிருக்க வேண்டுமென்பதைப் பற்றி விஸ்தரித்துக் கூறுகிறான்.*
>
> 1. *ஒரு மொழிபெயர்ப்பு, அறிஞர்களுக்கு மட்டுமல்ல சாதாரண ஜனங்களுக்கும் புரியக்கூடியதாய் இருக்க வேண்டும்.*
> 2. *ஒரு பாஷையிலுள்ள வார்த்தையை மற்றொரு பாஷையில் அப்படியே கொண்டு வந்துவிட வேண்டு மென்பதையும், மூலநூலின் அமைப்பு வரிசைக் கிரமம் முதலியவைகளை அப்படியே பின்பற்ற வேண்டுமென் பதையும் நோக்கமாகக் கொள்ளக் கூடாது.*

3. மூலநூலாசிரியன் உபயோகித்திருக்கிற வார்த்தையைக் காட்டிலும் அவன் எந்த பாவத்துடன் அந்த வார்த்தையை உபயோகித்திருக்கிறான் என்பதையே முக்கியமாகக் கவனிக்க வேண்டும்.

4. மொழிபெயர்ப்பாசிரியன், மூலநூலாசிரியனுடைய பணியாளனாக அவன் பக்கத்திலேயே இருந்து கொண்டிராமல் அவனுக்குப் பின்னால் ஏறி நின்று பார்க்க வேண்டும்.

5. மொழிபெயர்த்துக் கொண்டு செல்கிறபோது இது காறும் வந்த விஷயங்களென்ன, இனிவரப்போகும் விஷயங்களென்ன என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும்.

6. மொழிபெயர்ப்பாசிரியன், மூலநூல் முழுவதையும் மனதில் நன்றாக வாங்கிக் கொண்டு மொழிபெயர்க்க வேண்டுமென்பது தான் முக்கியமே தவிர மூல நூலாசிரியன் கையாண்டிருக்கிற வார்த்தைக் கிரமம் பதப் பிரயோகம் முதலியவற்றை அப்படியே பின்பற்ற வேண்டுமென்பது அவசியமில்லை.

7. மூலநூலின் ஆற்றொழுக்கான நடை, அந்த நடையிலே உள்ள எளிமை, இனிமை, கம்பீரம், அர்த்தபுஷ்டி முதலியன கூடிய மட்டில் மொழிபெயர்ப்பில் இருக்க வேண்டும்.

8. சுருக்கமாக, மொழிபெயர்ப்பு மூலத்தைப்போல இருக்க வேண்டும்[28]

என இந்த நெறிமுறைகளை எடுத்துக்காட்டியதுடன், இந்த நெறி முறைகளைப் பின்பற்றிப் பிளேட்டோவின் அரசியலை மொழி பெயர்த்துள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார். அவருடைய மொழிபெயர்ப்பு நூல்களின் முன்னுரையிலிருந்து அவருடைய மொழிபெயர்ப்பு முறைகளைப் பற்றி அறிந்து கொள்ளலாம்.

1. தமிழில் மொழிபெயர்க்கிறபோது நான் கருத்துகளுக்குத் தான் முக்கியத்துவம் கொடுத்திருக்கிறேனே தவிர எழுத்துக்களுக்கல்ல என்று சுருக்கமாகத் தனது மொழிபெயர்ப்பு அணுகுமுறையைக் குறிப்பிட்டுள்ளார். (சமுதாய ஒப்பந்தம், முன்.)

2. தமிழில் படிக்கின்றபோது கூடியவரை தொடர்பு விடாமலும், சுவை குன்றாமலும் இருக்க வேண்டும் என்பதற்காக மூலநூலில் உள்ள மேற்கோள்கள் அனைத்தையும் உதாரணங்கள் அனைத்தையும் அப்படியே மொழிபெயர்ப்பில் தராமல் தேவை யானவற்றை மட்டும் தந்தால் போதுமானது (பிளேட்டோவின் அரசியல், முன்.) என்பது அவருடைய கருத்தாக உள்ளது.

3. ஒவ்வொரு மொழிக்கும் ஒவ்வொரு மரபு உண்டு. இதனைத் தெரிந்து கொள்வதும் ஒரு மொழிபெயர்ப்பாசிரியனுடைய முதற் கடமையாகும். இந்தக் கடமையை ஒருவாறு உணர்ந்த நிலையில் இருந்து கொண்டு, இந்தப் பிரசங்கங்களுக்குத் தமிழுடையை அணிவித்திருக்கிறேன். (சுதந்திரத்தின் தேவைகள் யாவை?, முன்.) என மொழிபெயர்ப்பாளரின் கடமையை அறிவுறுத்துகிறார்.

4. ஒரு விஷயம் இங்குக் கூறவேண்டியது அவசியமாயிருக் கிறது. அந்நிய நாட்டுப் பெயர்களை, வழக்கில் உள்ளபடி உபயோகித்தல் நலம். அதை விடுத்து அந்நியப் பெயரைத் தமிழ்ப்பெயராக மாற்றுதல் பொருந்தாது. உதாரணமாக 'அரிஸ்டாட்டில்' என்ற கிரீக் ஆசிரியனை 'அரிஸ்தோத்தலன்' என்றும் 'பிளேட்டோ' என்பானைப் 'பிளாத்தன்' என்றும் கூறுவது பொருத்தமேயன்று (பிளேட்டோவின் அரசியல், முன்.) என்று அந்நியப் பெயர்களை உரிய முறையில் எழுதுதல் குறித்துக் கூறியுள்ளார்.

5. சீனாவில் குடும்பத்திற்கு அதிக மரியாதை கொடுப்பது வழக்கம். குடும்பப் பெயரைத்தான் முதலில் வைத்துக் கொள்வார்கள். அதைத் தொடர்ந்து வரும் மற்ற பெயர்கள் அவ்வப்பொழுது மாறும். அதாவது பள்ளிக்கூடத்தில் சேர்க்கப் படுகிறபோது ஒரு பெயர், விவாக காலத்தில் ஒரு பெயர். இப்படி வாழ்க்கையின் முக்கியமான திருப்பங்களின்போது பெயர்களை மாற்றிக் கொள் வார்கள். உதாரணமாக ஸன் என்பது குடும்பப் பெயர். குழந்தைப் பருவத்தில் ஸன்டை சியோங் (Suntai Cheong) என்று அழைக்கப் பட்டார். டைசியோங் என்றால் 'கடவுளின் தொண்டன்' என்று அர்த்தம். ஸன்டை சியோங் பெரியவனான பிறகு ஸன்யாட்ஸென் ஆனான். கடைசியில் ஸன்வென் (Sunwen) என்ற பெயரை ஏற்றுக் கொண்டான். (சுதந்திரத்தின் தேவைகள் யாவை? - முன்) என ஒரு பெயரைப் பற்றிய முழுமையான தகவல்களைத் தேடித்திரட்டி வைத்துக் கொண்டு மொழிபெயர்த்துள்ளார் சாமிநாதசர்மா.

6. வரலாற்று நாயகர்களை படர்க்கை ஒருமையில் அழைப் பதற்கு வ.வே.சு. ஐயரைப் பின்பற்றியதாகக் குறிப்பிட்டுள்ளார். இந்த நூலில் முஸோலினியை, படர்க்கை ஒருமையிலேயே அழைத் திருக்கிறேன். இப்படி அழைப்பதே கம்பீரமாகவும் சரித்திர நாயகனுக்குப் பெருமையைத் தருவதாகவும் இருக்கிறதென்பது எனது கருத்து. காலஞ்சென்ற வ.வே.சு. ஐயர் அவர்களே இதில் எனக்கு வழிகாட்டி' (முஸோலினி-முன்.) எனக் குறிப்பிடுகிறார். இது அவருடைய தனிப்பட்ட அணுகுமுறையாக உள்ளது.

சாமிநாதசர்மாவின் இந்த மொழிபெயர்ப்பு அணுகு முறைகளின் மூலம் மொழிபெயர்ப்பாளர்களுக்குச் சில வழி முறைகளைக் காட்டியுள்ளார்.

அவை

1. மூலமொழியில் உள்ளதை அப்படியே பெயர்ப்பு மொழியில் தருவது மட்டும் ஒரு சிறந்த மொழிபெயர்ப்பாளரின் கடமையாகிவிட முடியாது. தமது உரிமையை, அறிவைக் காட்டுகின்ற பணியும் அவருக்கு உண்டு என்பதை நினைவூட்டுகிறார்.

2. கருத்து விளக்கம் கொடுக்கின்ற வகையிலும், சொல் விளக்கம் கொடுக்கின்ற வகையிலும், மூலநூலாசிரியரின் கருத்தை மறுக்கும் வகையிலும், மூலநூலாசிரியரின் கருத்தினைக் கொண்டு மொழிபெயர்ப்பாளர் மேலும் ஊகிக்கும் நிலையிலும் மூலநூல் சொற்கள் அந்தந்தக் காலக்கட்டத்தில் எந்தப் பொருளில் வழங்கி வந்தன எனக் குறிக்கின்ற முறையிலும் அடிக்குறிப்புகள் மூலம் ஒரு மொழிபெயர்ப்பாளர் உரிமை எடுத்துக் கொள்ளலாம் என்பதை உணர்த்துகிறார்.

3. மூலநூல் கருத்தை விளக்கும் வகையில் ஒரு மொழி பெயர்ப்பாளர் ஓரளவிற்கு உரிமை எடுத்துக் கொள்ளலாம். அவ்வாறு உரிமை எடுத்துக் கொண்டு மொழிபெயர்த்தால், சரளமாகவும், எளிமையாகவும், தெளிவாகவும் அமையும் என்பது இவரது மொழிபெயர்ப்பினால் பெறப்படுகின்ற கருத்தாகும்.

### வாழ்க்கை வரலாறுகள்

சாமிநாதசர்மா தமிழ் வாசகர்களைக் கவர்ந்து அறிவூட்டும் வகையில் 22 வரலாற்றுச் சிறப்பு மிக்கோரைப் பற்றி நூல்களை வெளியிட்டுள்ளார்.

1. லோகமான்ய திலகர், 2. ரமண மகரிஷி, 3. பண்டிட் மோதிலால்நேரு, 4. முஸோலினி, 5. அபிசீனிய சக்கரவர்த்தி, 6. ஹிட்லர், 7. காந்தியும்- ஜவஹரும், 8. காந்தியும் விவேகானந்தரும், 9. சார்லஸ் டார்வின், 10. ஸர் ஐஸக் நியூட்டன், 11. ஸர் ஜகதீச் சந்திரபோஸ், 12. தாமஸ் எடிசன், 13. சர். பிரபுல்ல சந்திரரே, 14. ஸர்சி.வி. ராமன், 15. கமால் அத்தாதுர்க், 16. ரூஸ்ஸோ, 17. கார்ல் மார்க்ஸ், 18. இராம கிருஷ்ணர் ஒரு தீர்க்கதரிசி, 19. மாஜினி, 20. ஸன் யாட்ஸென், 21. நான் கண்ட நால்வர், 22. சமுதாயச் சிற்பிகள்.

இவ் வாழ்க்கை வரலாறுகளை வெளியிடுவதன் மூலம் தமிழ் வாசகர்கள் நல்ல படிப்பினைகளைப் பெறுவார்கள்; பயனடைவார்கள் என்பது அவருடைய எதிர்பார்ப்பாக இருந்துளது.

> இந்நூல் வரிசையில் விஞ்ஞான சாஸ்திரிகள், வான சாஸ்திரிகள், தத்துவ சாஸ்திரிகள் முதலிய பலதுறை அறிஞர்களின் ஆராய்ச்சி விளக்கத்தைக் காண முடியாது. அந்த நோக்கத்தோடு இந்த வரிசை நூல்கள்

எழுதப்படவில்லை. அவர்கள் எங்கே பிறந்தார்கள். எந்தச் சூழ்நிலையில் வளர்ந்தார்கள். வறுமை, நோய், ஏளனம், எதிர்ப்பு முதலியவற்றையெல்லாம் எப்படிச் சமாளித்தார்கள். அவர்களுடைய அன்றாட வாழ்க்கை எவ்வாறு நடைபெற்றது. மிக மிகச் சாதாரண நிலைமையிலிருந்து, எங்ஙனம் தங்களுடைய சலியாத முயற்சியினாலும், இடைவிடாத உழைப்பினாலும் படிப்படியாக முன்னுக்கு வந்தார்கள் என்பன போன்ற விவரங்களே சுருக்கமாகத் தரப்பட்டிருக்கின்றன. இந்த நூல் வரிசையைப் படிக்கின்ற அன்பர்கள், சிறப்பாக இளைஞர்கள், அவர்களைப் போல் முயன்று, உழைத்து, மேலுக்கு வரவேண்டுமென்பதே என் பிரார்த்தனை[29]

என்று குறிப்பிட்டுள்ளார். 'மின்னொளி பிரசுரங்கள்' என்ற வெளியீடுகளாக இரண்டணா விலையில் 18 நூல்கள் வெளி வந்துள்ளன. இவற்றுள் **பிரிக்கப்பட்ட பர்மா, பெடரல் இந்தியா, சமஸ்தான இந்தியா, இந்தியாவின் தேவை, காந்தியும் ஜவஹரும், நமது ஆர்யவர்த்தம், புராதனகாலம் – வேதகாலம், இதிகாச காலம், பௌத்த காலம், மௌரியர் ஆட்சி, குப்தமன்னர்** ஆகிய அரசியல், வரலாறு தொடர்பான சாமிநாதசர்மாவின் இந்நூல்கள் மின்னொளி பிரசுரம் மூலமாக வெளியிடப்பட்டுள்ளன. இவை சாமிநாதசர்மா பர்மாவில் வாழ்ந்த போது 1936 முதல் 1939 வரையிலான காலக்கட்டத்தில் சிறு, சிறு வெளியீடுகளாக எளிமையாக மக்களிடம் போய்ச்சேரும் வகையில் இந்நூல்களை வெளியிட்டுள்ளனர்.

இந்தச் சுறுசுறுப்பான காலத்தில் உலகத்தின் பல பாகங்களிலும் எத்தனையோ விஷயங்கள் மின்னொளி போல் தோன்றுகின்றன. அவை மறைந்து போகா வண்ணம், தமிழர்கள் உள்ளத்திலே பதிய வைப்பதே இந்த மின்னொளி பிரசுரங்களின் நோக்கம். குறைந்தது மாதத்திற்கொரு முறை, பல முக்கிய விஷயங்களைச் சுருங்கிய வடிவில் தாங்கி இந்தப் பிரசுரங்கள் வெளியாகும். இவ்வாறு திட்டமிடப்பட்ட வகையில் இரண்டணா விலையில் பதினெட்டுச் சிறு வெளியீடுகள் வந்தன.[30]

சாமிநாதசர்மா பல புனைபெயர்களில் இதழ்களில் கட்டுரைகளை எழுதி வந்தார். இவர் சரித்திரக்காரன், குடியேறியவன், ஓர் அரசியல் மாணக்கன் என்ற புனைபெயர்களில் எழுதியுள்ளதும் குறிப்பிடத் தக்கதாகும். வெளிநாடுகளின் வரலாறு தொடர்பாக 69 கட்டுரைகள் எழுதியுள்ளார். பொருளாதாரம் தொடர்பாக 18 கட்டுரைகள், அறிவியல் மற்றும் அறிவுத் துறை தொடர்பாக 14

கட்டுரைகள் நூல் மதிப்புரைகள்; எனப் பல துறைகளிலும் தமது பங்களிப்பை வழங்கியுள்ளார். குறிப்பாகத் தமிழில் அரசியல் இலக்கியம் என்ற ஒரு பிரிவிற்கு வித்திட்டு, பாதை வகுத்தவர் சாமிநாதசர்மா.

> தமிழர்களாகிய நாம் இன்னும் வெளிநாட்டு விவகாரங்களில் அதிகமாகச் சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமென்பதே என் கோரிக்கை[31]

என்ற அவரின் பேராவல் தமிழர்கள் பிறநாட்டறிவைப் பெற்றுத் தம் நாட்டு பிரச்சினைகளை, சிக்கல்களைத் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கம் அவரைப் பல நூல்களை எழுத வைத்தது. இவையன்றிப் பொதுவான வாழ்வியல் நூல்களும் வாசகர்களுக்குப் பயன்படும் வகையில், சிந்தனையைத் தூண்டும் வகையில் வெளியிட்டுள்ளார்.

1. எப்படி வாழவேண்டும், 2. மனிதன் யார், 3. பெண்மையிலேதான் வாழ்வு, 4. இக்கரையும் அக்கரையும், 5. நகைத்தல் நல்லது, 6. நாடும் மொழியும், 7. சுதந்திரமும் சீர்திருத்தமும் ஆகிய நூல்கள் இவ் வரிசையில் இடம் பெற்றுள்ளன. "Essentials of Gandhism" (1943) என்னும் 41 பக்கங்கள் கொண்ட சிறு நூல் ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

சாமிநாதசர்மாவின் வாழ்வில் பெரும் சோதனைக் களமாக அமைந்தது பர்மாவிலிருந்து அவர் வழிநடைப் பயணமாக இந்தியா திரும்பிய அனுபவமாகும். பலருடைய வாழ்க்கை வரலாறுகளை எழுதிக் குவித்த சாமிநாதசர்மா தன்னைப் பற்றி முழுமையாக நூல் எதுவும் வெளியிடாமல், 'பர்மா வழிநடைப் பயணம்' என்ற தலைப்பில் இந்த அனுபவத்தை மட்டும் எழுதி வெளியிட்டுள்ளார். இவருடைய வாழ்வையும், தொண்டுள்ளத்தையும் அறிய உதவும் மூல நூலாக இந்நூல் உள்ளது. தனது மனைவியின் பிரிவு குறித்து எழுதிய 'அவள் பிரிவு' (1957) நான் கண்ட நால்வர் (19159) எனும் தலைப்பில் திரு.வி.க. வ.வே.சு. ஐயர், சுப்பிரமணிய சிவா, சுப்பிரமணிய பாரதியார் ஆகியோரைப் பற்றி எழுதப்பட்ட இந்நூலில் ஓரளவு அவருடைய அனுபவங்களைக் காணலாம். 'வாசகர்களுக்கு' எனும் தலைப்பில் அமைந்த அவருடைய எழுத்து மென்மை, இனிமை, எளிமை, ஆற்றல் மிக்க சிந்தனை, ஆரவாரமில்லாத தன்மை, அனைத்தையும் காணலாம்.

> நான் சொந்தமாக எந்தப் பத்திரிகையும் நடத்தவில்லை. ரங்கூனில் சுமார் ஐந்து வருஷகாலம் நடந்து வந்த 'ஜோதி' என்ற மாதப் பத்திரிகையின் பூரணப் பொறுப்பும் என்னுடையதாக இருந்தது. அதாவது, அதன் ஆசிரியராகவும் வெளியிடுவோராகவும்

> **இருந்தேன். அதனால் தான் பெற்ற அனுபவம் மனக்கவலை, பணக்கஷ்டம், ஆனால் அதற்கு நல்ல பெயர் இருந்தது. அது எனக்கு ஆறுதலளித்து வந்தது. சுமார் 30 ஆண்டுகளுக்கு முன் நடைபெற்ற அந்தப் பத்திரிகையின் தரத்தைச் சிலாகித்து இப்பொழுதும் அனேகர் பேசுகிறார்கள். அதைக் கேட்டு என் மனம் குளிர்ச்சியடைகிறது**[32]

என்று 1971ஆம் ஆண்டு சாமிநாதசர்மா அளித்துள்ள நேர்காணலில் குறிப்பிட்டுள்ளார். எத்துணையோ துன்பங்கள், இடையூறுகள் பாதிப்புகள் ஏற்பட்டாலும் இறுதிவரை எழுத்தையே அதுவும் இலட்சிய எழுத்தையே உயிராகக் கொண்ட இப்பெருந்தகையின் பணியைத் தமிழகம் என்றும் புறக்கணிக்க முடியாது.

மொழிபெயர்ப்பு என்றால் அறிஞர் வெ. சாமிநாதசர்மா என்ற சிறப்புடன் வாழ்ந்து தமிழுக்கு இறுதிவரை பணியாற்றி 1-1-1978 ஆம் ஆண்டு மறைந்தார். அவருடைய இடத்தை வேறு எவரும் இட்டு நிரப்ப இயலாது என்பதைத் தமிழுலகம் நன்கறியும்.

## குறிப்புகள்

1. வெ. சாமிநாதசர்மா, பெ.சு.மணி, இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை, சாகித்திய அகாதெமி, பதி. 1998, ப.9.
2. மேற்படி, ப.11.
3. மேற்படி, ப.11.
4. மேற்படி, ப.107-108.
5. மேற்படி, ப.109.
6. மேற்படி, ப.24.
7. மேற்படி, ப.25.
8. மேற்படி, ப.29
9. மேற்படி, ப.29
10. கிரீஸ் வாழ்ந்த வரலாறு, வெ. சாமிநாதசர்மா, பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம், புதுக்கோட்டை, இபதி, மே, 1963, முன்னுரை.
11. வெ. சாமிநாதசர்மா, பெ.சு. மணி, இந்திய இலக்கியச் சிற்பிகள், பதி. 1998, ப.30.
12. மேற்படி, ப.31-32.
13. மேற்படி, ப.31

14. மேற்படி, ப.33.

15. மேற்படி, ப.119.

16. பிளேட்டோவின் அரசியல், வெ. சாமிநாதசர்மா, திருமகள் நிலையம், பதி. டிச. 1985, பக்.19-20.

17. பிளேட்டோவின் கடிதங்கள் (தமி.) வெ. சாமிநாதசர்மா, திருமகள் நிலையம், இ.ப. நவ.1984, முன்.ப.10.

18. பிளேட்டோவின் அரசியல், வெ. சாமிநாதசர்மா, திருமகள் நிலையம், சென்னை, டிச.1985, பக். முன்.

19. பிளேட்டோவின் கடிதங்கள் (தமி.) வெ. சாமிநாதசர்மா, திருமகள் நிலையம், பதி. டிச.1985, முன்.

20. ராஜதந்திர யுத்தகளப் பிரசங்கங்கள், (தமி.) வெ. சாமிநாதசர்மா, சோமு புத்தக நிலையம், பதி. டிச. 1985, முன்.

21. மேற்படி, ப.40.

22. சமுதாய ஒப்பந்தம், ரூஸ்ஸோ, புதுமலர்ச்சி நூற்பதிப்புக் கழகம், பர்மா, மு.பதி. 1941, முன்.

23. மேற்படி.

24. வெ. சாமிநாதசர்மா, பெ.சு.மணி, இந்திய இலக்கியச் சிற்பிகள், சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி.1998, பக்.42.

25. மானிட ஜாதியின் சுதந்திரம், ராபர்ட் கிரின் இங்கர்சால், (தமி.) வெ. சாமிநாதசர்மா, பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம், மு.பதி.1942, முன்.

26. வெ. சாமிநாதசர்மா, பெ.சு.மணி, ப.123.

27. அறிஞர் சாமிநாதசர்மாவின் தமிழ்ப்பணி, பெ.சு.மணி, நியுசெஞ்சுரி புக் ஹவுஸ், பதி. மார்ச் 1990, ப.167.

28. பிளேட்டோவின் அரசியல், (தமி.), வெ. சாமிநாதசர்மா, திருமகள் நிலையம், பதி. டிச.1985, முன்.

29. வெ. சாமிநாதசர்மா, பெ.சு. மணி, இந்திய இலக்கியச் சிற்பிகள், சாகித்திய அகாதெமி, பதி. 1998, ப.185.

30. மேற்படி, ப.95.

31. வெ. சாமிநாதசர்மாவின் தமிழ்ப்பணி, பெ.சு.மணி, நியுசெஞ்சுரி புத்தக நிறுவனம், பதி. மார்ச் 1990, ப.102.

32. மேற்படி, ப.95.

# க.ரா. ஜமதக்னி

ஒரு மொழியின் இலக்கிய வளர்ச்சிக்கு அந்த மொழியில் படைக்கப்படும் புதிய ஆக்கங்கள், பிறமொழி இலக்கியங்களைத் தழுவி எழுந்த நூல்கள், பிற இலக்கியங்களிலிருந்து பெறும் மொழிபெயர்ப்புகள் ஆகிய மூன்று வழிமுறைகள் அடித் தளங்களாக அமைந்துள்ளன. மொழிபெயர்ப்பு மூலம் அறிஞர்கள் பலர் ஏராளமான படைப்புகளைத் தமிழில் கொண்டு வந்து சேர்த்தனர். அவர்களுள், ஒருவரான அறிஞர் க.ரா. ஜமதக்னி சில படைப்புகளையும், சில அரிய நூல்களின் மொழிபெயர்ப்பு களையும் தமிழுக்கு அளித்து அருந்தொண்டாற்றியுள்ளார். இவர் வடார்க்காடு மாவட்டத்தில் உள்ள காவேரிப்பாக்கத்திற்கு அருகில் உள்ள கடப்பேரி என்னும் சிற்றூரில் 1903ஆம் ஆண்டு ஏப்ரல் 15ஆம் நாள் ஒரு எளிய குடும்பத்தில் பிறந்தார். தந்தையின் பெயர் இராகவன். தாயின் பெயர் முனியம்மாள்.

பள்ளி வாழ்க்கையில் பிற சிறுவர்களைப் போல மரம் ஏறுதல், மலையேறுதல், நீந்துதல், மற்றவர்களுடன் சண்டையிடுதல், அடித்தல், அடிவாங்குதல் போன்ற துணிச்சலான செயல்களில் ஈடுபட்டவர்தான் க.ரா. ஜமதக்னி. பள்ளி வாழ்க்கையில் இவர் நுண்ணறிவு படைத்திருந்தார் என்று சொல்வதற்கில்லை என்று இவரைப் பற்றிக் குறிப்பிடப்பட்டாலும் இளம்வயதிலேயே ஊர் மக்கள் நடுவே அமர்ந்து புராண இதிகாசங்களின் உரைநடைக் காவியங்களைப் படித்து வந்தார் என்ற செய்தி இவருடைய புலமையைக் காட்டுவதாகவே உள்ளது.

ஜமதக்னி நான்காம் வகுப்பு படிக்கும் பொழுது ஓர் நாள் இரவு, வெள்ளையன் வந்தால் ஒரு கை பார்க்கிறேன் என்று தடியெடுத்துக் கொண்டு முழங்கிய வண்ணம் வாலாஜாபேட்டைத் தெருக்களில் சுற்றியுள்ளார். கிளைவ் வரலாறு படித்து ஆங்கிலேயரின் ஆதிக்கப் போக்கைக் கண்டு நெஞ்சங் குமுறினார்.

> ஆர்க்காட்டுக் கோட்டையில் தில்லி வழியின் கீழே, ஆங்கிலத்தில் கிளைவ் இவ்வழியாகச் சென்றான் என்ற வாக்கியம் பொறித்திருந்தது கண்டு பிள்ளை க.ரா. ஜமதக்னி கொதித்தெழுந்தான் அதைக் கல்லால் சிதைக்க முயன்றான்.[1]

இந்நிகழ்ச்சிகள் க.ரா. ஜமதக்னி இளம் வயதிலேயே நாட்டுப் பற்றாளராக, விடுதலை வேட்கையாளராகத் திகழ்ந்தார் என்பதைக் காட்டுகின்றன.

க.ரா. ஜமதக்னி இண்டர்மீடியட் தேர்வில் தேர்ச்சி பெற்ற பின் ஆறு மாதங்கள் பள்ளியாசிரியராகப் பணிபுரிந்துவிட்டுப் பிறகு காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்து பணியாற்றினார். காந்தியடிகளின் விடுதலை இயக்கத்தில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். கருத்தில் தீவிரவாதத் தன்மை உடையவராக விளங்கினார். பல்லாண்டுகளாகத் தொடர்ந்து பொதுச்சேவைகளில் ஈடுபட்டவர். நீலன்சிலை சத்தியாக்கிரகம் (1927) உப்புச் சத்தியாக்கிரகம் ஆகியவற்றில் ஈடுபட்டதற்காக 9 ஆண்டுகள் சிறைத்தண்டனை அனுபவித்து, சொல்லொணாத் துயரடைந்தவர்.

இவருடைய நெருங்கிய நண்பரான ஆக்கூர் அனந்தாச் சாரியார் இவரைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது,

> **அவர் சிறையிலேயே நூல்கள் பயின்று தமது அறிவைப் பெருக்கிக் கொண்டார். காந்தியடிகளை மிக மிக விரும்பினார். அவர் பொதுமக்கள் முன் நின்று வீரமொழிகள் பொழியும் போது பன்முறை நான் அருகே இருந்திருக்கின்றேன். நெருப்புப் பொறி பறக்கும். ஒழுகூர் என்ற சிற்றூரில் ஓர் நாள் கூட்டத்தில் சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டி ருந்தார். அவருடைய பேச்சினால் ஆவேசங் கொண்டு ஓர் தள்ளாத கிழவன் தடியைச் சுழற்றிக் கொண்டு எங்கே அந்த வெள்ளையர் என்று துள்ளிக் குதித்தான். இச்சொற்பொழிவுக்கு ஓர் மாதம் பின்னர் சிறையில் வீழ்த்தப்பட்டார்.**[2]

என்று க.ரா. ஜமதக்னியைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

அறிஞர் க.ரா. ஜமதக்னி ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்தில் காவல்துறையினரின் தாங்க முடியாத கொடுமைக்கு ஆளானார். காவல்துறையின் ஒற்றர் படை அவரைக் கண்காணித்த வண்ணமே இருந்தது. ஆகையால் பொதுமக்களும் அவரைத் தமது வீட்டுத் திண்ணைகளில் படுத்துறங்கவிடவில்லை. நடுத்தெருவில் வெட்ட வெளியில் படுத்துறங்கியுள்ளார்.

1930 ஆம் ஆண்டு உப்புச் சத்தியாக்கிரகத்தின் போது சென்னைக் கடற்கரையில் காவல்துறையினர் அவரை மண்டையில் அடித்து வீழ்த்தினர். ஒரு மாதம் வரை பேச்சற்று மயக்க நிலையில் இருந்து பின் குணமடைந்தார். 1931ஆம் ஆண்டு அரக்கோணத்தில் மதுவிலக்கு மறியலின் போது கள்ளுக்கடை கைக்கூலிக்காரன்

ஒருவன் அவரைக் கத்தியால் குத்தி வீழ்த்தினான். அதிலும் அவர் தப்பிப் பிழைத்தார்.

> 1942 இல் விடுதலையடைந்து இவரைப் போன்றே சிறந்த தியாகம் புரிந்த அஞ்சலையம்மாளின் திருமகளான லீலாவதியைத் திருமணஞ் செய்து கொண்டார். அஞ்சலையம்மாளின் குடும்பம் முழுவதுமே சிறையில் கிடந்து, தியாகக் குடும்பம் என்ற பெயர் பெற்றது. இவரது வாழ்க்கைத் துணைவியும் நீலன்சிலை சத்தியாக் கிரகத்தினால் நான்காண்டு சிறைவாசம் புரிந்தவர்.[3]

க.ரா. ஜமதக்னியின் மாமியார் தமிழகச் சட்டமன்றத்தில் இடம் பெற்ற முதல் பெண்மணி கடலூர் அஞ்சலையம்மாள். இவர் 8 ஆண்டுகளும் மாமனார் முருகப்பா 6 ஆண்டுகளும் வெள்ளையர் ஆட்சியை எதிர்த்துச் சிறை சென்றனர். குடும்பத்தினர் அனைவரும் விடுதலைப் போரில் ஈடுபட்டவர்கள் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

அறிஞர் க.ரா. ஜமதக்னி வாழ்க்கை முழுவதும் பொதுத் தொண்டில் ஈடுபாடு கொண்டிருந்ததைப் போலவே இலக்கியப் பணிக்காகவும் தம்மை அர்ப்பணித்துக் கொண்டார். தொடக்கத்தில் இவர் சமசுகிருத மொழியில் மிகுதியான ஈடுபாடு காட்டியுள்ளார். பாரதம் பாடிய பெருந்தேவனார் காலம் தொட்டு, சமசுகிருத இலக்கியத்திற்கும் தமிழ் இலக்கியத்திற்கும் இடைவிடாத தொடர்பு இருந்து வந்துள்ளது. இராமாயணம், மகாபாரதம், பகவத்கீதை, தலபுராணங்கள், வேதாந்தத் தத்துவ நூல்கள் ஆகியன சமசுகிருத முதல் நூல்களைத் தழுவித் தமிழில் பல படைப்புகள் உருவாயின. அத்தகைய இலக்கியங்கள் அக்காலத்தில் போற்றி வரவேற்கப் பட்டன. ஜமதக்னியும் இராமாயணத்தின் மீது பெரு விருப்பம் கொண்டு அதையொட்டி வெளிவந்த படைப்புகளைப் படித்து ஆய்வு செய்துள்ளார்.

அறிஞர் ஜமதக்னி தமிழ், வடமொழி, ஆங்கிலம், இந்தி ஆகிய நான்கு மொழிகளையும் நன்கு அறிந்தவர். அத்துடன் அம்மொழிகளின் சிறந்த இலக்கியங்களை ஊக்கத்துடன் பயின்றவர். இவர் பக்த விஜயம், கனிந்த காதல், தேசிய கீதம் ஆகிய நூல்களும், திருமுருகாற்றுப்படை, கந்தரலங்காரம், கந்தரனுபூதி, குமரேச சதகம் என்ற நான்கு காவியங்களுக்கு விரிவுரையும் இயற்றியுள்ளார். 'பூமி வரலாறு', உயிர்களின் தோற்றம்', 'லெனின்' ஆகிய நூல்களையும் ஜமதக்னி வழங்கியுள்ளார். 1930ஆம் ஆண்டில் உப்புச் சத்தியாக் கிரகத்தில் சிறை சென்றபோது சென்னை மத்திய சிறையில் சிந்தனைச் சிற்பி சிங்காரவேலு அவர்களுடன் இருக்கும் வாய்ப்பினைப் பெற்றதால் மார்க்சியக் கோட்பாட்டில் ஈடுபாடு

கொண்டார். 1936 இல் காங்கிரசு - சோசியலிஸ்ட் கட்சி உருவான போது வட ஆற்காடு மாவட்டத்தில் பொதுக்காரியதரிசியாக இருந்தார். கம்யூனிஸ்ட் இயக்கம் உருவானபோது அதன் நிறுவன உறுப்பினராகவும் இருந்து கம்யூனிஸ்ட் பிரச்சாரம் செய்தார். 1938 இல் "மார்க்சியம் அல்லது சமூக மாறுதலின் விஞ்ஞானம்" "இந்தியாவில் சோசலிசம்", "அபேதவாத பாட்டுகள்" ஆகிய நூல்களை எழுதி வெளியிட்டார். 1941 ஆம் ஆண்டிலேயே 'மூலதன' முதல் புத்தகத்தைச் செம்மையாகப் பயின்று சிறையிலிருந்த அரசியல் தலைவர்களுக்கும், தொண்டர்களுக்கும் மார்க்சிய வகுப்பு எடுத்து வந்தார். அப்பொழுது தலைவர் காமராசர் கோவைச் சிறையிலிருந்தபோது ஜமதக்னி நடத்திய மூலதன வகுப்பில் கலந்து கொண்டதை நெருக்கடி காலத்தில் மீண்டும் ஜமதக்னியை அவர் சந்தித்தபோது நினைவு கூர்ந்துள்ளார். வாழ்வின் பெரும்பகுதி எழுத்துப்பணிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட ஜமதக்னி மார்க்சின் மூலதனத்தை 1981 சனவரித் திங்களில் மொழிபெயர்த்து முடித்த பிறகு "எனது பணி இவ்வுலகில் முடிந்து விட்டது" என்று அடிக்கடி கூறிவந்துள்ளார். 1981 ஆம் ஆண்டில் கம்பராமா யணத்தையும், வால்மீகி ராமாயணத்தையும் ஒப்பிட்டுத் தினமணி ஏட்டிற்காக இருபது கட்டுரைகள் தீட்டினார். அவர் மறைந்த பிறகும் அவருடைய கட்டுரைகள் வெளிவந்தன.

ஜமதக்னி சமஸ்கிருத மொழியில் மகாகவி காளிதாசரின் படைப்புகளைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளது குறிப்பிடத்தக்கது.

காளிதாசரின் நூல்கள் யாவும் புகழ்பெற்ற படைப்புகளாக இருந்தமையால் 1880 ஆம் ஆண்டு முதல் தமிழில் இப்படைப்புகளை தமிழில் மொழிபெயர்க்கும் முயற்சி பலரால் மேற்கொள்ளப் பட்டுள்ளது. சியாமளா தண்டகம், குமாரசம்பவம், இரகுவம்சம், நளோதயம், சந்திராலோகம், சுருதபோதம், நாநார்த்த சந்திரிகை, சாகுந்தலம், மாளவி காக்னி மித்திரம், விக்கிரமோர்வசியம், புட்ப பாண விலாசம், மேகசந்தேசம், சோதிவிதாபரணம், மிருதிசந்திரிகை, ஆசியார்ணம், சிருங்காரத் திலகம், பிரச்சினோத்தரம், இருது சங்காரம் என்னும் பதினெட்டு நூல்களை மகாகவி காளிதாசர் சமசுகிருத மொழியில் இயற்றினார்.

இவற்றுள் சாகுந்தலம், இரகுவமிசம், குமாரசம்பவம் மேகசந்தேசம், இரத்தினாவளி, மாளவிகாக்கினி மித்திரம், விக்கிரமோர்வசியம் ஆகிய படைப்புகள் மட்டும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

சாகுந்தலம் என்னும் நாடகத்தைச் சுந்தரராஜ சர்மா இராமச்சந்திரன், வெங்கடாசாரியார், என். சுவாமிநாத சாஸ்திரி,

எஸ். பவனாந்தம் பிள்ளை, பம்மல் சம்பந்த முதலியார், ஆர். ராகவய்யங்கார், அ.கு. ஆதித்தர், கே. சந்தானம் ஆகியோர் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர்.

இரகுவமிசம் என்னும் செய்யுள் காவியத்தைச் சிறுகளத்தூர் ராமஸ்வாமி சாஸ்திரி, யாழ்ப்பாண நல்லூர் பொன்னம்பல பிள்ளை, எம்.எஸ். நடேச சாஸ்திரி, டி.தி. தாதாசார்யா, வி.எஸ். வேங்கட ராகாவாசாரி, எஸ்.ஏ. ராமஸ்வாமி, க.ரா. ஜமதக்னி ஆகியோர் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர்.

குமாரசம்பவம் என்னும் செய்யுள் காவியத்தை எஸ்.ஏ.ராம ஸ்வாமி, எம். நடேச சாஸ்திரி, கே.பி. ராமசுவாமி ஐயர் ஆகியோர் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர்.

மேகசந்தேசம் என்னும் செய்யுள் காவியத்தை எம்.துரை சாமி ஐயங்கார், எஸ்.எ. இராமசுவாமிப்பிள்ளை, என்.எஸ். நடராசன், க.ரா. ஜமதக்னி, கே. சந்தானம், எஸ்.ஏ. ராமசுவாமி ஆகியோர் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர்.

இரத்தினாவளி என்னும் நாடகத்தைத் தி.ஈ. சீனிவாச ராகவாச்சாரியார், பம்மல் சம்பந்த முதலியார் ஆகியோர் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர்.

விக்கிரமோர்வசியம் என்னும் நாடகத்தைப் பம்மல் சம்பந்த முதலியார், எஸ். ராஜா சாஸ்திரி, எஸ்.ஏ. ராமசுவாமி ஆகியோர் மொழிபெயர்த்துள்ளனர்.

மாளவிகாக்கினி மித்திரம் என்னும் நாடகத்தை ஸ்ரீநிவாச ராகவாச்சாரியார், நடேச சாஸ்திரியார், ஆர்.வி. கிருஷ்ணமாச் சாரியார், பம்மல் சம்பந்த முதலியார் ஆகியோர் மொழி பெயர்த்துள்ளனர்.

இவ்வாறு காளிதாசரின் படைப்புகள் பலரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவ்வரிசையில் ஜமதக்னி தமது பங்களிப்பையும் வழங்கியுள்ளார். பிறருடைய மொழிபெயர்ப்பு களோடு ஜமதக்னியின் மொழிபெயர்ப்பையும் ஒப்பீட்டு நோக்கினால் பல சிறப்புக் கூறுகளைக் கண்டறிய முடியும்.

காளிதாசரின் மேகசந்தேசம், இரகுவமிசம் ஆகிய மொழி பெயர்ப்புகளுக்கு முன்பு 'காமாயனி' என இந்தியில் சயசங்கரர் எழுதிய நூலைத் தமிழில் 'காமன்மகள்' என ஜமதக்னி 1957 ஆம் ஆண்டு மொழிபெயர்த்துள்ளார். இந்த அனுபவத்தைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

> பாரத நன்னாட்டு மொழியாகிய இந்தியைப் பயின்று
> பிரவீண் தேர்வில் தேறினேன். அதன் தொடர்பிலே

> இந்தி மொழியின் ஒப்பற்ற கவிஞர் சயசங்கர பிரசாதரின் 'காமாயனி' என்ற மாகாவியம் பயில நேர்ந்தது. அது என் உள்ளத்தைக் கவர்ந்தது. யான் கடவுளெனக் கருதும் கம்பர் பெருமானின் பண்பாட்டில் அவர் கவிதை இருக்கக் கண்டேன். உடனே என் உயிரினும் இனிய தமிழ் மொழியில் அதைக் கவிதை வடிவில் இயற்ற வேண்டுமென முடிவு செய்தேன்[3]

என்று இந்நூலின் முன்னுரையில் ஜமதக்னி குறிப்பிடுகிறார். வேதங்களில் இடம் பெற்ற மனு, அவனது மனைவி காமன்மகள், மனுவின் வேள்வியால் தோன்றிய இடாதேவி ஆகிய மூவரின் கூற்றுகளைக் கூறுகிறது, 'காமன் மகள்' எனும் இந்நூல். இந்தி மொழியில் எழுதப்பட்ட இந்நூலை அறிஞர் ஜமதக்னி தமிழிலேயே எழுதப்பட்ட மூலநூலைப் போன்று தமிழில் செய்யுள் வடிவத்தில் மொழிபெயர்த்துள்ளார்.

> பனிப்போர்வை மெதுவாகப்
> பாரிலிருந் தகல்தோறும்
> புனல் தோய்ந்து முகங்கழுவிப்
> பொழில் மரங்கள் எழும்போலும்
> இனித் துக்கண் முகிழ்த்திருந்த
> வியற்கையாண் டெழும் போலுங்
> கனவலைகள் சோம்பலுறக்
> கடலுறங்கப் புகும் போலும்[4]

என்று மொழிபெயர்த்துள்ளார். இந்தி மொழியில் மகாகவி எனப் போற்றப்பட்ட சயசங்கர பிரசாத்தின் சிறந்த படைப்பாகத் திகழ்ந்த காமாயனியை ஜமதக்னி தமிழில் அழகிய கவிதை வடிவில் மொழிபெயர்த்தமைக்காக டாக்டர் மு.வரதராசனார் அவர்கள் பாராட்டுரை வழங்கியுள்ளார்.

> காமன்மகள் என்னும் இந்த மொழிபெயர்ப்புக் காவியம் கற்குந்தோறும் சுவை மிகுந்ததாக உள்ளது. பிரளயத்தின் பின் ஒரு மனத்தின் தனிமை, தனிமையுணர்ச்சிக்கிடையே காதல், பனி மூடிய சூழ்நிலை, இளவேனிலின் அழகிய காட்சிகள் உள்ளத்தே தோற்றுவிக்கும் நினைவுகள், பனி உருகிய பின் மரங்கள் தழைத்திடும் புதுமைத் தோற்றங்கள், காற்று, மழை வெள்ளம் பற்றி இயற்கை வருணனைகள் யாவும் நயமுற அமைந்துள்ளன. முதல் நூலாசிரியரின் கற்பனைகளில் பெரும்பாலானவை விஞ்ஞானம் உணர்த்தும் உண்மைகளோடு இயைந்து வருதல் சிந்தைக்கு இனிய விருந்தாகிறது[5]

என டாக்டர் மு.வ. இந்நூலின் தமிழாக்கத்திற்கு (1956) பாராட்டுரை வழங்கியுள்ளார். ஜமதக்னி பன்மொழிப் புலமை பெற்றவர் மட்டுமல்ல. சிறந்த கவிஞர் என்பதை மகாகவி காளிதாசரின் படைப்புக்களைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளதைக் கொண்டு அறியலாம். கவிதைகளை ஒரு கவிஞனே மொழிபெயர்ப்பது சாலச்சிறந்ததாகும். மொழிபெயர்ப்பு விதிமுறைகளில் இத்தகைய முறை ஒரு தகுதியாகக் குறிப்பிடப்படுகிறது. காமன் மகள் மொழிபெயர்ப்புக்குப் பிறகு "ஸ்ரீ ராதா மாதவப் பேரின்ப அமுதம்" என்ற தலைப்பில் 'ஸ்ரீ ராதா மாதவ ரஸ ஸீதா' என்ற நூலைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார் ஜமதக்னி.

உலகம் போற்றும் மகாகவி காளிதாசர் அளித்த காவியங்களில் மேக சந்தேசம் மிகச் சிறந்ததாகப் போற்றப்படுகிறது.

> ஜெர்மனி நாட்டுத் தலைசிறந்த மகாகவி 'கதே' என்பவர் காளிதாசருடைய இலக்கியத்தை மிகவும் புகழ்ந்து கூறியிருக்கிறார். ஜெர்மன் மகாகவி 'ஷில்லரும்' காளிதாசருடைய நூலைப் புகழ்ந்து மேக சந்தேசத்தைப் பின்பற்றித் தன்னுடைய 'மேரியஸ்ட்யூவர்ட்' என்ற காவியத்தில் ஸ்காட்லண்டு நாட்டின் ராணி மேரியஸ்ட்யூவர்ட் தன் இனத் தாருக்கு மேகத்தைத் தூதனாக அனுப்பியதைச் சிறப்பாக வர்ணிக்கின்றார்[6]

என்று மேகசந்தேசத்தின் முன்னுரையில் கே.எஸ். இராமசாமி சாஸ்திரியார் குறிப்பிட்டுள்ளார். இவர் புதுக்கோட்டையில் உயர்நீதிபதியாகப் பணியாற்றியவர். இவர் தாகூர், காளிதாசர், வான்மீகி ஆகியோரைப் பற்றி ஆங்கிலத்தில் நூல்கள் எழுதியுள்ளார்.

> அளகாபுரியில் இருந்த ஓரியக்கன் (யட்சன்) குபேரனது சாபத்தால் தன் மனைவியைவிட்டுப் பிரிந்து ஓராண்டுக்காலம் சீதாப்பிராட்டியார் நீராடிய புண்ணிய அருவி பெருகும் இராமகிரி, சித்திரக்கூட மலையில் உள்ள ஆசிரமத்தில் காலங்கழித்து வந்தான். அவன் தன் மனைவிக்குத் தன் அன்புச் செய்தியை அறிவிக்கும் நூலாகக் காளிதாசர் மேகசந்தேசக் காவியத்தை இயற்றினார். அதனில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. முதற்பகுதியில் மேகம் செல்ல வேண்டிய வழியைக் கூறும் முறையில் காளிதாசர் தம் தாய் நாட்டின் அழகையும் வளத்தையும் தம் தேசபக்தி நன்கு விளங்கும் முறையில் வர்ணிக்கின்றனர். பிற்பகுதியில் இயக்கன் மனைவியின் பண்பையும் பதிபக்தியையும் அழகான முறையில் கூறுகின்றார். முடிவில் தனபதி குபேரன் மேக சந்தேசத்தைக் கேட்டுத் தயையின் பெருக்கால்

*சாபத்தை நீக்கிக் கணவனையும் மனைவியையும்*
*ஒன்று கூடி இன்புற்று வாழச் செய்தான்'*

என்பது மேகசந்தேசத்தின் கதையாகும். மேகசந்தேசம் 124 செய்யுட்கள் கொண்டது. இச்செய்யுட்களை மொழிபெயர்த்த ஜமதக்னி ஒவ்வொரு செய்யுளுக்கும் அதற்கான விளக்கவுரையை வழங்கியுள்ளார். மூலமொழிப்பாடல் வரிகளையும் அளித்து விளக்கமளித்துள்ளார். சில இடங்களில் கம்பராமாயணப் பாடல்களோடு பொருத்தியும் காட்டியுள்ளார்.

'மேகம்' எவ்வாறு செய்தி கொண்டு போய்க் கூற முடியும் என்று சிலர் எதிர்க்கலாம். அதற்குக் காளிதாசரே செவ்விய விளக்கந் தருகின்றார். மேக சந்தேசம் முதற் பகுதியில் 5வது செய்யுளில் கூறுகின்றார்.

*'தூம ஜ்யோதிஸ் ஸலில மருதாம்ஸந்நிபாத, க்வமேக,*
*'ஸந்தேசார்தா; க்வபடுகரணை; பிராணிபி; பிராபணீயா;*

இதன் தமிழ்மொழிபெயர்ப்பு

*"புகை, நெருப்பு, நீர், காற்றுக் கூட்டுறவால்*
*புனைமேகம் எங்கே? ஈண்டுத்*
*தகைவலிய கால்கை யின தருமுயிர்கள்*
*எடுத்தேகும் செய்தி எங்கே?*

நாம் விடுக்க வேண்டிய வினாவைக் காளிதாசரே விடுத்துள்ளார்.

இயக்கன் ஏன் உயிரற்ற உணர்வற்ற மேகத்தை வேண்டு கின்றான்?

*இத்யௌத்ஸுக்யா தபரிகணயந் குஹ்யகஸ் தம் யயாசே'*

*"மிகையாவல் ஊக்கஇது வெண்ணாமல்*
*மேகத்தை இயக்கன் வேண்டும்"*

உயிரற்ற பொருள் மேகம், அது எப்படித்தான் சொல்லும் செய்தி எடுத்துப் போக முடியும்? பகுத்தறிவு இழந்தான் இயக்கன், பகுத்தறிவு இழப்பதற்குக் காரணம் என்ன?

*"காமார்தா ஹி பிரக்ருதி க்ருபணாஸ்*
*சேதனா சேதனேஷு"*

*'வகையறியார் உயிருமுயிர் அற்றனவும்*
*காமத்தால் மயக்க முற்றார்"*

காமத்தால் மயக்க முற்றவருக்குப் பகுத்தறிவு குன்றி விடுகின்றது. மேகத்தின் வாயிலாகச் செய்தி அனுப்ப முயல்கின்றானே. இது இயல்புடைத் தன்று என்று கருதற்க. ஒரு கற்பனைச் சூழ்நிலையை

நம்முன் உண்டாக்கித் தம் கருத்துகளை வரிசைப்படுத்தி, நமக்குக் கவிஞர் இன்பமூட்டுகின்றார் என ஜமதக்னி குறிப்பிட்டுள்ளார்.

ஜமதக்னியின் மொழிபெயர்ப்பு சொல் நயமும், பொருள் நயமும் மிக்க சிறந்த கவிதை நடையில் அமைந்துள்ளது. படிப்போர் இதை மொழிபெயர்ப்பு என்று உணரா வண்ணம் வழங்கப் பட்டுள்ளது. சான்றாக,

*நிலம்வீங்கப் பெய்மழையால் எழுமணத்தை*
*இளங்காற்று நெடிது கொள்ளும்*
*வலத்தோடும் யானையின்கைப் புழையூடே*
*முகர்வதனால் இனிதொ லிக்கும்*
*நிலக்காட்டின் அத்திமிகப் பழுக்கவது*
*நினதடிக்கீழ்க் குளிர்ந்து வீசும்*
*நிலத்தடிநின் றேறவுநீ தேவகிரி*
*முயற்சிசெயும் அந்த நேரம்[8]*

என மொழிபெயர்த்துள்ளார்.

*மழை பெய்வதால் மண் நனைந்து உப்புகிறது. ஒருவகை மணம் எழும்புகின்றது. அந்த மணத்தை யானைகள் புழைக்கை வாயிலாக இனிதொலித்து முகரும் தண்காற்றால் காட்டத்தி பழுக்கும். மேகம் தேவகிரிக்கு எழும்பொழுது அதனடியில் குளிர் காற்று வீசும்[9]*

என்று இச்செய்யுளின் கருத்தையும் மொழிபெயர்ப்பாளர் க.ரா. ஜமதக்னி வழங்கியுள்ளார். ஆனால் மூலமொழி நூல் முழுவதும் வடமொழியில் செய்யுள் வரிகளால் மட்டுமானது. வடமொழியில் எழுதப்பட்ட காளிதாசரின் இக்கவிதை தமிழின் சங்க இலக்கியப் பாடல்களைப் படிப்பது போன்ற உணர்வைத் தருகிறது.

புலவர் திரு. வேணுகோபாலப் பிள்ளை க.ரா. ஜமதக்னியின் மொழிபெயர்ப்பைப் பாராட்டிச் சாற்றுக் கவியொன்றை இந்நூலில் வழங்கியுள்ளார்.

*பொன்னனைய வடமொழியிற் புகன்றபுயற்*
*றூததனைப் புலவர் கற்று*
*மன்னுகவிச் சீருணர மாண்புறுநற்*
*றமிழ்ப்பாவாய் மணக்கச் செய்தான்*
*தென்மொழியும் வடமொழியுஞ் சிறக்கக்கற்*
*றின்புடனே திகழு நல்லோன்*
*என்னண்பன் சமதங்கி யெனும் பெயரான்*
*தமிழன்ப ரிதயத் துள்ளான்[10]*

என்ற சாற்றுக்கவி மொழிபெயர்ப்பாளர் ஜமதக்னியின் அறிவுத் திறத்தை எடுத்துக்காட்டுவதாக உள்ளது. இதைப்போன்றே

இவருடைய 'இரகுவமிசம்' என்ற மொழிபெயர்ப்பு நூலும் குறிப்பிடத்தக்கது. காளிதாசனின் காவியங்களில் தலைசிறந்தது ரகுவம்ச மகா காவியம் எனச் சிறப்புப் பெற்றது. இது பத்தொன்பது சருக்கங்களைக் கொண்டது. இந்நூல் ரகுவம்சத்து அரசர்களின் வரலாற்றைக் கூறுகின்றது. இதை இயற்றியதனால் காளிதாசனுக்கு 'ரகு-காரன்' என்ற பெயர் வழங்கலாயிற்று. அக்காலத்தில் வடமொழியில் காவ்யாலங்காரப் பேரறிஞர் எனப் போற்றப்பட்ட 'உத்படர்' என்பர் காளிதாசரின் காவியங்களை 'ரகுகார ஸரஸ்வதீ' என்று குறிப்பிட்டுள்ளார். அரசர்களுக்கு இருக்க வேண்டிய வீரம் அவர்கள் கடைப்பிடிக்கவேண்டிய முறைகள், குடிமக்களிடம் அவர்கள் காண்பிக்க வேண்டிய பரிவு, அவ்வாறே மக்கள் அரசரிடம் நடந்து கொள்ள வேண்டிய முறை, இவை அனைத்தையும் இரகு வமிசம் என்ற காவியத்தின் வாயிலாகக் காளிதாசர் எடுத்துரைக்கிறார்.

> கி.பி. 16வது நூற்றாண்டில் யாழ்ப்பாணத்தில் அரச மரபைச் சார்ந்த அரச கேசரி என்பவர் தமிழ்க் காப்பிய முறையைக் கைவிடாமல் முதுனூலையும் நெருங்கத் தழுவித் தமிழ்ச் செய்யுள் நடையில் இரகுவம்சத்தைப் பாடினார். இந்தப் பண்டை மொழி பெயர்ப்பு எட்டு ஸர்க்கங்கள் வரையுமே அச்சில் அகப்படுகிறது. இந்த நூற்றாண்டில் உரைநடையில், நாலு மொழிபெயர்ப்புகள் வெளியாயின. அவற்றுள் இரண்டே இரகுவம்சம் முழுவதற்கும் செய்யப்பட்ட மொழிபெயர்ப்புகள். மேற்கூறிய காரணங்களால் தற்போது நமக்கு அளிக்கப்பட்டதும் திரு. ஜமதக்னி செய்ததுமாயிருக்கிற இந்தப் புது இரகுவம்சம் மிகவும் வரவேற்கத்தக்கதும் போற்றத் தக்கதுமான பணியாகும். இதில் முதனூல் முழுவதும் செய்யுள் நடையில் செய்யப்பட்டிருக்கிறது"

எனப் பேராசிரியர் வ. ராகவன் இந்நூலில் குறிப்பிட்டுள்ளார்.

இரகுவமிசம் ஜமதக்னியின் மொழிபெயர்ப்பில் எவ்வாறு சிறப்புறக் கூறப்பட்டுள்ளது என்பதைப் பின்வரும் சான்று எடுத்துரைக்கும்.

ப்ரஸாதி காலம்பித மக்ர பாதமாக்ஷிப்ய காசித்
த்ரவராகமேவ
உத்ஸ்ருஷ்ட லீலா கதிர் ஆகவாக்ஷத் அலக்த காங்காம்
பதவீம் ததாந

(இரகுவமிசம், சுருக்கம் 7, சுலோகம் 7)

வண்ணமகள் மடிதாங்கி ஒருத்தியடி செம்பஞ்சு
வண்ணச்சாந் தூட்டினளே விரைவாக உலராத

வண்ணத்த அடியீர்த்தாள் அழகுநடை விட்டுச்செவ்வி
வண்ணத்தைச் சாளரத்தின் வழிமுழுவதும் பதித்தனளே
(ஜமதக்னியின் தமிழாக்கம்)

ஒரு வண்ணமகள் தன் மடியில் ஒருமாதின் அடியை வைத்துச் செம்பஞ்சுக்குழம்பு ஊட்டியவாறிருந்தாள். ஊர்வலம் வந்து விட்டது. உடனே பார்த்தல் வேண்டும் என அடியில் குழம்பு உலருவதற்கு முன்னரே அதனை வெடுக்கென இழுத்துச் சாளரம் நோக்கி இயல்பான அழகுநடையை விடுத்து ஓடுகிறாள். ஓடும்பொழுது சாளரவழி முழுவதையுஞ் சிவப்புநிற அடிச் சுவட்டைப் பதித்தாள்[12]

என இப்பாடலின் பொருளையும் ஜமதக்னி வழங்கியுள்ளார்.

சமஸ்கிருதம் அறியாதவர்களுக்கு இந்தக் காவ்யத்தின் பெருமையை அறிவிக்க ஆவல் கொண்டவராகத் திரு. ஜமதக்னி, இந்தப் பத்தொன்பது சர்க்கங் களுக்கும் செய்யுள் நடையில் மொழிபெயர்ப்புச் செய்துள்ளார். ரகுவம்ச காவியத்தில் கவி மாறுபட்ட விருத்தங்களைக் கையாண்டுள்ளதைப் போல திரு. ஜமதக்னி அவர்களும் பொருத்தமாக உள்ள சந்தங்களில் செய்யுள்களை அமைத்திருக்கிறார். சுலோகங்களில் உள்ள கருத்துக்கள் பூராவும் மொழிபெயர்ப்பில் கொண்டு வரப்பட்டுள்ளன. சுருக்கமான பொழிப்புரையையும் கொடுத்துள்ளார். தமிழ் மக்கள் நன்றாக ரகுவம்ச காவ்ய பெருமையை மொழிபெயர்ப்பில் அறிய முடிகிறது[13]

என்று கே.பாலசுப்பிரமணிய ஐயர் வழங்கியுள்ள மதிப்புரை இந்நூலுக்குப் பொருத்தமாகும்.

காளிதாசரின் குமாரசம்பவம், இரகுவமிசம், மேகசந்தேசம், மாளவிகை, விக்ரமோர்வசி, சகுந்தலை ஆகிய ஆறு படைப்புகளை சு. அ. இராமசாமிப் புலவர் "காளிதாசரின் நாடகக்கதைகள்" எனும் தலைப்பில் தமிழில் உரைநடை வடிவில் ஒரு நூலை வழங்கி யுள்ளார். திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1965 ஆம் ஆண்டு இந்நூலை வெளியிட்டுள்ளது. இம் மொழிபெயர்ப்பு செய்யுள் நடையை அகற்றித் தற்கால உரைநடை வடிவில் வழங்கியுள்ளமை காளிதாசரின் படைப்புகள் மேலும் எளிமையாக அறியும்படி உள்ளது. ஆனால் ஒவ்வொரு வடமொழி சுலோகத்தின் பொழிப்புரையாக இல்லாமல் ஒவ்வொரு தலைப்பிலும் சொல்லப்பட்ட செய்தியை சுருக்கமாகக் கதை வடிவில் வழங்கியுள்ளார் இராமசாமிப் புலவர் இத்தகைய

மொழிபெயர்ப்பைச் சாதாரணமாகத் தமிழ் படிக்கத் தெரிந்த ஒருவர் எளிமையாகப் படித்துப் புரிந்து கொள்ளலாம்.

இதைப் போன்றே வித்துவான் எம்.நாராயண வேலுப் பிள்ளை காளிதாசரின் குமாரசம்பவம், இரகுவமிசம், மேகசந்தேசம், இருது சம்காரம், மாளவிகாக்னிமித்திரம், விக்ரம ஊர்வசியம், சாகுந்தலம் ஆகிய ஏழு படைப்புகளைத் தமிழில் 1988 ஆம் ஆண்டு வழங்கியுள்ளார். நர்மதா பதிப்பகம் இந்நூலை வெளியிட்டுள்ளது. இவருடைய மொழிபெயர்ப்பும் தற்கால உரைநடை வடிவில் அமைந்துள்ளது. ஜமதக்னியின் கவிதைக்குக் கவிதை என்ற வடிவி லிருந்து இத்தகைய மொழிபெயர்ப்புகள் வேறுபட்டனவாகும்.

புராண இதிகாசங்கள் என்று மட்டுமில்லாமல் மார்க்சீய தத்துவ நூல்களை மொழிபெயர்ப்பதிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டார்.

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் முதல் பொதுச் செயலாளர் எழுதிய "நினைவுக் கட்டுரைகள்" என்ற நூலையும், கார்ல் மார்க்சின் 'மூலதனம்' (The Capital) என்ற நூலையும் தமிழில் மொழி பெயர்த்துள்ளதை இதற்குச் சான்றாகக் காட்டலாம்.

> ஜமதக்னி என்ற பெயர் மேட்டுக்குடிப் பெயர் போலத் தோன்றலாம். ஆனால் இந்தப் பெயருக்கு உரிமையுடைய பெரியவர் அண்மைக்காலம் வரை நம்மோடு வாழ்ந்தவர். பிற்படுத்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர். காந்தி இயக்கத்தில் ஈடுபட்டுத் தியாகத் தழும்புகளைப் பரிசாகப் பெற்ற விடுதலைக் கிளர்ச்சி யாளர். மார்க்சிய சிந்தனையாளர். காங்கிரஸ் பேரியக்கத்தில் தன்னைக் கரைத்துக் கொண்டு காந்தியப் பணிபுரிந்த இந்த அறிஞர், வாழ்வின் இறுதி நாள் வரை மார்க்சியம் தொடர்பாகச் சிந்தித்தார். அப்படி அவர் சிந்திப்பதற்கும், எழுது வதற்கும், சிங்காரவேலருடன் ஏற்பட்ட தொடர்பே பெருங்காரணமாயிற்று[14]

ஜமதக்னி 1927ஆம் ஆண்டு சிந்தனைச்சிற்பி சிங்கார வேலரைச் சந்தித்த பிறகு அவருடைய பாதையில் மாபெரும் மாற்றம் ஏற்பட்டது. விடுதலைப் போரில் ஈடுபட்டதால் 1927ஆம் ஆண்டு ஜமதக்னி சிறையிலிடப்பட்டார். தென்னிந்திய இரயில்வே சதி வழக்கில் தண்டிக்கப்பட்ட சிங்காரவேலரை ஜமதக்னி சிறையில் சந்தித்து, அவருடன் பழகும் வாய்ப்பு ஏற்பட்டது. சிங்காரவேலர் அப்பொழுது சிறையில் இளைஞர்களுக்கு மார்க்சியத்தை அறிமுகம் செய்து வைத்ததால், 'சிங்காரவேலரிடம் பார்த்துப் பழகு' விஷத்தை ஊட்டி விடுவார்' என்ற எச்சரிக்கை மொழியை ஜமதக்னிக்கும் பலர்

சொல்லி வைத்தனர். மார்க்சிய கோட்பாடுகளைச் சிங்காரவேலர் உணர்வோடு எடுத்துரைத்தபொழுது அந்த எச்சரிக்கை மொழி காற்றில் கரைந்து போனது. ஜமதக்னியின் உள்ளத்தில் மார்க்சியம் மலர்ந்தது. சிறையில் சிங்காரவேலர் கடுமையான காசநோயால் பாதிக்கப்பட்ட பொழுது ஜமதக்னி அவருக்கு உடன் இருந்து தொண்டு செய்யும் பணியை உவகையுடன் ஏற்றுக் கொண்டார்.

> ***சிங்காரவேலருக்கு நன்றி கூறுவதென்பது தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு 'மார்க்சின் கேபிட்டல்' என ஆங்கிலத்தில் அழைக்கப்படும் மூலதனம் என்ற புத்தகத்தை மொழிபெயர்ப்பதுதான் என முடிவெடுத்த ஜமதக்னி அப்பணியை 1981ஆம் ஆண்டு ஜனவரி மாதத்திற்குள் செய்து முடித்தார்***[15]

ஜமதக்னியின் 'மூலதனம்' நூல் தமிழ் மொழிபெயர்ப்பில் வெளிவரச் சிந்தனைச் சிற்பி சிங்காரவேலர் ஒரு காரணம் என்றால் மிகையாகாது. ஜமதக்னி தன்னைப் பற்றித் தோழர் சண்முகத்திற்கு 25.3.80 ஆம் நாள் எழுதிய ஒரு கடிதத்தில் குறிப்பிடும்போது,

> ***நான் நாட்டிற்கு 1947இல் இருந்து ஒரு தொண்டும் புரியவில்லை என்று சொல்லற்க. தமிழிற்குச் செய்த தொண்டு நாட்டிற்கு நன்மையல்லவா. உடம்பு உழைப்பு கம்யூனிசத்திற்குக் கொடுக்கவில்லை உண்மைதான், உடம்பும் வளையாதது ஒரு காரணம். ஆனால் மார்க்ஸிய இலக்கியங்களைப் பயிலாமல் இல்லை. அதன் பயன்தான் மூலதனம் 6 புத்தகங்கள், 3600 பக்கங்கள், 600 பக்கங்கள் இன்னும் பாக்கி. இதற்கிடையே முதற் புத்தகத்தைச் செம்மைப் படுத்திப் பெயர்த்து எழுதி வருகிறேன்***[16]

என்று ஜமதக்னி குறிப்பிட்டுள்ளார். மாமேதை காரல்மார்க்ஸ் பல்லாண்டுகள் பொருளாதாரம் பயின்றதன் விளைவாக அவருடைய அறிவுத்திறன் முழு அளவில் பயன்படுத்தப்பட்டு உருவானதுதான் "மூலதனம் மற்றும் மிகைமதிப்பு நூல்களாகும்". 1867ஆம் ஆண்டு ஜெர்மன் மொழியில் எழுதப்பட்ட இந்நூல் மாஸ்கோவில் உள்ள மார்க்சிய - லெனினிய ஆய்வு மையத்தால் 1963ஆம் ஆண்டு ஆங்கில மொழியில் மொழிபெயர்க்கப்பட்டு 1968ஆம் ஆண்டு வெளியிடப் பட்டது.

## ஆங்கிலப் பதிப்புக்கு முகவுரை

மூலதனம் ஜெர்மன் மொழியிலிருந்து சுமார் 100 ஆண்டுகள் கழித்து ஆங்கில மொழியில் வெளியிடப்பட்டுள்ளது. ஏன் இத்தனை நாள் வரை இந்த ஆங்கில மொழிபெயர்ப்பு காலம்

தாழ்த்தப்பட்டு வெளிவருகிறது என்பதற்கான விளக்கம் எதிர் பார்க்கப்படலாம். ஏனென்றால் இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய இரண்டு நாடுகளிலும் பருவ ஏடுகள், தற்கால எழுத்தாக்கங்கள் இவற்றில் சில ஆண்டுகளாக இந்த நூலில் பரிந்துரைக்கப்பட்டுள்ள கோட்பாடுகள் அடிக்கடி குறிப்பிடப்பட்டும் எதிர்க்கப்பட்டும் ஆதரிக்கப்பட்டும் பொருள் விளக்கம் தரப்பட்டும் தவறான பொருள் உய்த்துணரப்பட்டும் வந்துள்ளன (மூலதனம், க.ரா. ஜமதக்னி, ப.XIII). கார்ல் மார்க்ஸ் 1883 இல் இயற்கை எய்திய பிறகு மார்க்சுக்கும் ஏங்கெல்சுக்கும் உற்ற நண்பரான 'சாமுவேல் மூர்' என்பவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க இசைவு தெரிவித்தார். இந்தப் பணியை விரைவாக முடிக்க மார்க்ஸின் இளைய மகள் திருமதி அவெலின் நூலின் ஒரு பகுதியைத் தான் மொழி பெயர்த்துத் தருவதாக ஒப்புக்கொண்டு அந்தப் பணியைச் செய்ததுடன் நூலிலுள்ள மேற்கோள் உரைகளைச் சரிபார்த்து வழங்க வேண்டிய உதவிகளையும் செய்துள்ளார். மார்க்சின் பொருளியல் திறனாய்வின் வெளிப்பாடே மிகைமதிப்பாகும் (The Surplus Value). இத்தகைய வரலாற்றுச் சிறப்புமிக்க ஆறு தொகுதிகள் கொண்ட மூலதனம் என்ற நூலைக் க.ரா. ஜமதக்னி 1977 ஆம் ஆண்டு மொழிபெயர்க்கத் தொடங்கினார்.

இம்மொழிபெயர்ப்பைத் தமிழில் தமிழக அரசின் நிதி உதவியுடன் பதிப்பித்த சென்னைப் பல்கலைக்கழகப் பொருளியல் துறை பேராசிரியர் திரு. நாகநாதன் (ஜமதக்னியின் மருமகன்) இம்மொழிபெயர்ப்புக் குறித்துக் குறிப்பிடுகையில்

> **தினமும் பக்கத்திற்குப் பக்கம், வரிக்குவரி மொழி பெயர்த்து பலமுறைகள் என் போன்ற பொருளாதாரம் பயின்றோரிடம் விளக்கம் அளித்து மொழியாக்கத்தைத் தொடர்ந்தார், க.ரா. ஜமதக்னி தன் கைப்பட 10, 000 பக்கங்கள் எழுதினார். அவர் இப்பணியைத் தொடங்கும் போது அவருக்கு வயது 74. அவர் இப்பணியை முடித்த போது அவருக்கு வயது 78 நிறைவுற்றது[7]**

என்று குறிப்பிட்டுள்ளார்.

கார்ல் மார்க்ஸ் எழுதிய 'த கேபிடல்' (The Capital) என்ற நூலைத் தமிழில் மூவர் மொழிபெயர்த்துள்ளனர். அறிஞர் க.ரா.ஜமதக்னி 'மூலதனம்' என்ற தலைப்பில் மூன்று தொகுதி களையும், மிகை மதிப்பின் தேற்றங்களையும் தமிழாக்கி இருக்கிறார். திரு. தியாகு 'மூலதனம்' என்ற தலைப்பில் மூன்று தொகுதிகளைத் தமிழாக்கியுள்ளார். ம. சிங்காரவேலு, ப.ஜீவானந்தம், 'மூலதனம்' எனும் தலைப்பில் கார்ல்மார்க்ஸின் இத்தத்துவத்தைச் சாரமாக 1935-36 ஆம் ஆண்டுகளில் 'புது உலகம்'

என்ற மாத இதழில் வெளியிட்டுள்ளனர். 'புது உலகம்' அன்று ஒரு மார்க்சிஸ்ட் இதழாகவே சென்னையிலிருந்து வெளிவந்தது. தமிழ்நாட்டில் வெளியான முதல் மார்க்ஸிஸ்ட் இதழ் 'புது உலகம்' என்று சொல்வதிலும் தவறில்லை. இதன் ஆசிரியர் பொறுப்பைத் திரு டி.என். ராமச்சந்திரன் அவர்கள் வகித்திருந்தார். அவர்கள் 'புதுஉலகம்' இதழைத் தொடங்குவதற்கு முன், 'மூலதனம்' என்ற பெயரில் நாகபட்டினத்திலிருந்து ஒரு மாத இதழ் நடத்த முயன்றார். அப்பொழுது தஞ்சை மாவட்டக் கலெக்டராக இருந்த திரு. இ.இ. மாக் என்ற ஐ.சி.எஸ். அதிகாரி,

> **நீங்கள் பொதுஉடைமைக் கொள்கைகளைப் பரப்பக் கூடுமென்று தெரியவருவதால் என்று கூறிப் பத்திரிகைக்கு ஓராயிரம் ரூபாய் ஜாமீன் தொகை கட்ட வேண்டுமென்று ஆணையிட்டார், அதோடு, இதழை அச்சிடுபவரும் (அவரது தந்தையாரும்) ஜாமீன் தொகை கட்ட வேண்டுமென்று எச்சரித்தார். ஆனால் அச்சிடுபவர் பணம்கட்டக் கோருவதற்கு ஆதாரமில்லையே என்று திரு. டி.என். ராமச்சந்திரன் அவர்கள் எடுத்துக் கூறவே, மாவட்டக் கலெக்டர், ஆசிரியர் பொறுப்பை வகிக்கப் போகும் திரு. டி.என். ராமச்சந்திரன் அவர்கள் ஜாமீன் தொகை கட்ட வேண்டுமென்று ஆணை பிறப்பித்தார்.**
>
> **இந்த நிலைமைக்குப் பின்னரேதான், சென்னை யிலிருந்து தோழர் ம. சிங்காரவேலு அவர்களைச் சிறப்பாசிரியராகக் கொண்டு 'புதுஉலகம்' வெளிவரத் தொடங்கியது. அப்பொழுது தோழர் ம. சிங்கார வேலு அவர்களிடமிருந்து கட்டுரைகளைப் பெற்றுப் பத்திரிகையில் வெளிவர உதவியாக இருந்தவர் நாகை, தோழர் கே. முருகேசன் அவர்கள் ஆவார்.**[18]

இக்கட்டுரைகள் புது இலக்கியப் பதிப்பகத்தின் வெளியீடாக நவ. 1973ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளன. பொதுஉடைமைத் தத்துவத்தைப் பிரச்சாரம் செய்வது அக்காலத்தில் கடினமான பணியாகும். இத்தத்துவத்தின் அடித்தளமாக விளங்கும் மார்க்ஸின் கேபிடலை ஜமதக்னி மொழிபெயர்க்க முயன்றார். திரு. சோதிப் பிரகாசம் 'முதல்' என்ற பெயரில் கேபிடலின் முதல் தொகுதியின் மிகச் சிறிய பகுதியான ஒன்றாம் அதிகாரத்தை மட்டும் தமிழாக்கி யுள்ளார். கேபிடல் நூலின் சாரத்தை 1940ஆம் ஆண்டு வாக்கில் சுருக்கமாக எழுதி வெளியிட்ட பன்மொழிப் புலவர் 'முதலீடு' என மொழிபெயர்த்துள்ளனர். ம. சிங்காரவேலர், ப. ஜீவானந்தம் ஆகியோர் 'மூலதனம்' என மொழிபெயர்த்துள்ளனர். கேபிடல் என்ற நூலின் பெயர் இவ்வாறு மூலதனம், முதல், முதலீடு என்ற

சொற்களால் குறிப்பிடப்பட்டுள்ளது. கேபிடலின் முதல் அதிகாரம் 'Commodities' என்ற தலைப்பில் தொடங்குகிறது. க.ரா. ஜமதக்னி, தியாகு, சோதிப்பிரகாசம் ஆகிய மூவரும் 'சரக்குகள்' என்ற ஒரே சொல்லால் சுட்டி உள்ளனர். The Two factors of a commodity என்ற தொடரை முறையே ஒரு சரக்கின் இரண்டு பண்புக்கூறுகள், சரக்கின் இரு காரணிகள், ஒரு சரக்கின் இரண்டு சாயைகள் என்று மொழிபெயர்த்துள்ளனர். அதாவது பண்புக்கூறுகள், காரணிகள், சாயைகள் ஆகிய மூன்றும் ஃபேக்டர்ஸ் (factors) என்ற ஒரே சொல்லைக் குறித்த பல சொற்களாக நமது மொழிபெயர்ப் பாளர்களால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவ்வாறு பல சொற்களை எடுத்துக்காட்டாகக் கூறலாம். காலப்போக்கில் இந் நூல்களின் பயன்பாட்டில் எந்த மொழிபெயர்ப்பு படிப்போட்டம் மிக்கதாக, இருக்கும் என்பதை அறியலாம். மேற்குறிப்பிட்ட மொழிபெயர்ப்பாளர்களின் மொழிபெயர்ப்புகளை ஒப்பீடு செய்து 'சங்கொலி' இதழில் அதன் ஆசிரியர் க. திருநாவுக்கரசு மற்றும் சோதிப்பிரகாசம் ஆகிய இருவரும் கார்ல் மார்க்சின் சிந்தனைகள், அவற்றின் ஆழ அகலங்களோடு சிதையாமல் பெயர்க்கப்பட்டு இருக்கின்றனவா? என்ற நோக்கில் ஆய்வு செய்து ஆய்வுத் தொடர் கட்டுரை எழுதியுள்ளனர். இந்தத் திறனாய்வில் பல இடங்களில் அறிஞர் க.ரா.ஜமதக்னியின் மொழிபெயர்ப்பு சரியானது என்று சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

கார்ல் மார்க்சின் 'மிகைமதிப்பை' (The Surplus Value) மொழிபெயர்த்த பெருமை அறிஞர் க.ரா. ஜமதக்னியைச் சாரும். மார்க்சீய சிந்தனையாளராக, இலக்கிய ஆர்வலராகத் திகழ்ந்த அறிஞர் ஜமதக்னி 1981 ஏப்ரல் திங்களில் மூளைப்பிளவு நோய் தாக்கியதால் மறைவுற்றார். அவரது மறைவுக்குப் பின் மூலதனம் நூலை வெளிக்கொணருவதிலும் பல இடையூறுகள் ஏற்பட்டுள்ளன. இந்நூலின் பதிப்பாசிரியர் பேராசிரியர் நாகநாதன்,

> க.ரா. ஜமதக்னி மறைவுக்குப் பின் மூலதனம் மற்றும் மிகைமதிப்பு நூல்களைத் தமிழில் கொண்டு வரவேண்டுமென்ற பேரார்வத்தின் காரணமாகத் திருமதி இந்திராகாந்தி அம்மையார் தலைமை அமைச்சராக இருந்தபோது முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. மறைந்த பேரா. முனைவர் ந. சஞ்சீவி அவர்களும், தி.மு.க. நாடாளுமன்றக் குழுத்தலைவர் திரு.முரசொலி மாறன் அவர்களும் பரிந்துரை மடல்களை வழங்கினர். திருமதி. இந்திராகாந்தி அவர்களும் இத்திட்டத்திற்கு உதவி தரலாம் எனப் பரிந்துரைத்தார். அந்த அம்மையார் மறைவிற்குப் பின்னர் மத்திய அரசு இந்தத் திட்டத்திற்கு உதவி

> செய்வதில் அக்கறை காட்டவில்லை. சென்னையிலிருந்து மிகவும் இடர்ப்பாடுகளுக்கிடையே டெல்லிக்கு எடுத்துச் செல்லப்பட்ட ஜமதக்னியின் 10,000 பக்கங்கள் கொண்ட 20 பெரிய தொகுப்புகள் உதவி கிடைக்காததால் திரு. முரசொலிமாறன் அவர்களின் இல்லத்தில் பல மாதங்கள் பாதுகாத்து வைக்கப் பட்டு, மீண்டும் சென்னைக்கு எடுத்து வரப்பட்டன. 1996 இல் தமிழகத்தில் கலைஞர் ஆட்சி அமைந்த வுடன் தமிழக அரசின் நிதி உதவியுடன் மொழி யாக்கத்தை அச்சேற்றலாம் என்று எண்ணித் தமிழக முதல்வர் கலைஞர் அவர்களிடம் நிதி உதவி கோரப் பட்டது. பணிகள் தோய்வடையாமல் இருப்பதற் காகவும் விரைந்து முடிப்பதற்காகவும் பாரத ஸ்டேட் வங்கியிடம் கடன் உதவி பெறப்பட்டது. இப் பின்னணியில்தான் இம்மாபெரும் பணி தொடங்கி முடிக்கப்பட்டுள்ளது. இப்பெரும்பணி முடிப்பதற்குத் துணைபுரிந்து 1998–99 ஆம் ஆண்டு தமிழக நிதி நிலை அறிக்கையில் குறிப்பிடப்பட்டு ரூ. 5 இலட்சங்கள் நிதி உதவி அளிக்கப்பட்டது.[19]

மறைந்த ஜமதக்னியின் மறையாத புகழுக்கு உரிய இந்நூலை வெளியிட்ட மாண்புமிகு தமிழக முதல்வர் கலைஞர்

> கார்ல் மார்க்சின் படைப்புகள் அறிவின் எல்லைக் கோட்டை எட்டிப்பிடித்த வாழ்வியல் களஞ்சியங் களாகும். நாட்டின் விடுதலைப் போரில் குடும்பத்தையே ஈடுபடுத்திக் கொண்டு பல ஆண்டு சிறையேகிய பெரியவர் ஜமதக்னி அவர்கள் அறிவுத்திறன் – மொழிப் பற்று – தியாக உள்ளம் இவற்றின் காரணமாகத் தன் பெயரைப் புகழில் நட்டவர். அவர் தந்துள்ள இந்த மொழிபெயர்ப்புக் கருவூலம் தமிழர்க்குக் கிடைத்துள்ள புதையல்.

என்று இந்நூலின் அணிந்துரையில் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய அரிய பணியாற்றிய அறிஞர் க.ரா. ஜமதக்னி தமிழ் மொழிபெயர்ப்பு வரலாற்றில் சிறப்பிடம் பெறும் மாமனிதராக என்றும் போற்றப்படுவார்.

## குறிப்புகள்

1. காமன்மகள், சயசங்கரர், (மொ.பெ.) ஜமத்கனி, சாந்தி நிலைய வெளியீடு, சென்னை-21, 1957, ப.8.
2. மேற்படி, பக். 8,9.
3. மேற்படி, ப. 13.
4. மேற்படி, ப. 16.
5. மேற்படி, ப. 4.
6. மேகசந்தேசம், காளிதாசர் (தமி.) க.ரா.ஜமதக்னி, சாந்தி நிலைய வெளியீடு, சென்னை-21, பதி.1964, ப. 13.
7. மேற்படி, ப. 14.
8. மேற்படி, ப. 119.
9. மேற்படி, ப. 119.
10. காளிதாசரின் இரகுவமிசம், (தமி.) க.ரா.ஜமதக்னி, மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோயம்புத்தூர் 1, மு.ப.1969, ப. 5.
11. மேற்படி, ப. 6.
12. மேற்படி, ப. 141.
13. மேற்படி, ப. 5.
14. கடலோரத்து வானவில், முத்து குணசேகரன், போரொலிப் பதிப்பகம், திருவெண்காடு, சீர்காழி வட்டம், நவ.1991, ப. 93.
15. மேற்படி, ப. 95.
16. மூலதனம் மற்றும் மிகைமதிப்பு, கார்ல் மார்க்ஸ் (தமி.) க.ரா.ஜமதக்னி, (பதி.) மு. நாகநாதன், ஜமதக்னி சாந்தி, கதிரொலிப் பதிப்பகம், சென்னை-86, பதி.மு.ப.1998, ப. 8.
17. மேற்படி, ப. 4.
18. மூலதனம், ம. சிங்காரவேலு, ப. ஜீவானந்தம், புது இலக்கியப் பதிப்பகம், பதி.நவ. 1973, முன்.
19. மூலதனம் மற்றும் மிகைமதிப்பு, கார்ல் மார்க்ஸ் (தமி.) க.ரா.ஜமதக்னி, (பதி.) மு. நாகநாதன், ஜமதக்னி சாந்தி, கதிரொலிப் பதிப்பகம், சென்னை-86, பதி.மு.ப.1998, ப. 6.

**சுதந்திரப் போராட்ட வீரர் க.ரா. ஜமதக்னி அனுபவித்த சிறைத்தண்டனை பற்றிய விவரங்கள்**

| ஆண்டு | காலம் | சிறைச்சாலை | கைதி எண் | தண்டனைக்கான சட்டப்பிரிவு |
|---|---|---|---|---|
| 1927 | ஓர் ஆண்டு ஒரு மாதம் | லாகூர் | | நீலன் சிலை அகற்றும் போராட்டம் |
| 1928 | ஓர் ஆண்டு | | | ராஜதுரோக வழக்கு |
| 1930 | ஓர் ஆண்டு | சென்னை | 5092 | இந்தியன் பீனல்கோடு பிரிவு 117 உப்புச் சட்டம் பிரிவு 74 - பொதுஉடைமைச் சிற்பி சிங்காரவேலுவைச் சந்தித்தல் |
| 1932 | ஓர் ஆண்டு | வேலூர் | 4565 | இந்தியன் பீனல்கோடு பிரிவு 145 மற்றும் 188 |
| 1932 | | பெல்லாரி | | சட்ட மறுப்பு இயக்கம் |
| 1939 | பதினெட்டு மாதங்கள் | வேலூர் கோவை | 7008 196896 | இந்தியப் பாதுகாப்பு விதி D.I.R.பிரிவு 8 (5) |
| 1941 முதல் 25-6-1942 வரை | 17-4-1941 | வேலூர் | தடுப்புக் காவல் | இந்தியப் பாதுகாப்பு விதி கைதி D.I.R.பிரிவு 38 (5) |

'விடுதலைப் போராட்ட வீரர் க.ரா.ஜமத்கனி அவர்கள் ஒன்பது ஆண்டுகளுக்கு மேல் சிறைத்தண்டனை அனுபவித்துள்ளார். எனினும் அது பற்றிய விவரங்கள் முழுதும் கிடைக்கவில்லை. இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள விவரங்கள் அவர் கைப்பட எழுதிவைத்த குறிப்புகளில் இருந்த திரட்டப்பட்டவை ஆகும்' என்ற குறிப்புடன் 'மூலதனம்' முதல் தொகுதியில், வெளியிடப்பட்டுள்ளது - நன்றி.

# புதுமைப்பித்தன்

மேனாட்டரின் வருகையினால் தமிழ்நாட்டு அரசியல், சமூக அமைப்புகளில் மாற்றம் ஏற்பட்டது போல் இலக்கிய உலகிலும் (Fiction) புனைகதை என்ற இலக்கிய வகை தமிழில் அறிமுகமாகி பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது. நாவல், சிறுகதை என்ற இரு இலக்கிய வகைகளும் 'புனைகதை' என்ற பொதுச் சொல்லால் குறிப்பிடப்பட்டன. காலப்போக்கில் நாவலைக் காட்டிலும் சிறுகதைகள் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெறக் கூடியனவாக அமைந்தன. தமிழில் இச்சிறுகதை வரலாற்றில் புதுமையை உருவாக்கியவர் புதுமைப்பித்தன்.

> *தமிழ்ச்சிறுகதை வளர்ச்சியினை ஆராயும்பொழுது, புதுமைப்பித்தன் முக்கியமானவராகத் தோன்று வதற்கான முதற் காரணம் அவர் தம் இலக்கிய ஆக்கங்களைப் புனைகதைத் துறையளவில் வரை யறுத்துக் கொண்டமையே. புதுமைப்பித்தன் காலம் வரை தோன்றிய புனைகதை எழுத்தாளர்கள், அத் துறையையே தமது விசேட இலக்கியத் துறையாகக் கொள்ளவில்லை. வ.வே.சு. ஐயர் முதல் கல்கி வரை நாம் இவ்உண்மையைக் காணக் கூடியதாகவிருக் கின்றது. புனைகதை மூலம் - சிறப்பாகச் சிறுகதை மூலம் தமிழிலக்கியம் வளர்க்க முனைந்தவர்களுள் முதல்வர் புதுமைப்பித்தன்.*[1]

புதுமைப்பித்தனின் சொந்த வாழ்க்கை சமூகத்தின் முரண்பட்ட நிலைமையை அறியக் கற்றுக்கொடுத்தது.

## புதுமைப்பித்தனின் வாழ்க்கை

புதுமைப்பித்தன் 1906 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 25ஆம் நாள் கடலூருக்கு அருகிலுள்ள திருப்பாதிரிப்புலியூரில் பிறந்தார். இவருடைய இயற்பெயர் சொ. விருத்தாசலம். இவர் தந்தையார் சொக்கலிங்கம், வட்டாட்சியராகத் தமிழ்நாட்டில் பல இடங்களில் பணியாற்றினார். அதனால் அவருடைய வேலை மாற்றல் காரணமாகப் புதுமைப்பித்தன் செஞ்சி, திண்டிவனம், கள்ளக்குறிச்சி முதலிய ஊர்களில் தொடக்கக் கல்வி கற்றார். புதுமைப்பித்தன் தனது எட்டாவது வயதில் தாயை இழந்தார். தந்தையின் அன்பைப் பெற்றிராத அவ்வேளையில் சிற்றன்னைக் கொடுமைக்கும்

ஆளானார். இவர் தந்தையார் 1918 ஆம் ஆண்டு ஓய்வு பெற்றுத் தம் ஊரான திருநெல்வேலிக்குச் சென்று வண்ணாரப்பேட்டை என்னும் பகுதியில் குடியேறினார். அது முதல் புதுமைப்பித்தன் திருநெல்வேலி கிறித்துவர் திருச்சபையைச் சேர்ந்த புனித யோவான் கல்விக் கூடத்தில் சேர்ந்து பயிலத் தொடங்கினார். திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் படித்து 1931 ஆம் ஆண்டு பி.ஏ. பட்டம் பெற்றார். திருமணத்திற்குப் பிறகு வீட்டில் நிலைமை மோசமாகிவிடவே மனைவி கமலாவுடன் வீட்டை விட்டு வெளியேறிவிட்டார்.

'மணிக்கொடி' ஏட்டில் நடந்த ஒரு விவாதத்தில் கலந்து கொண்டு 'குலோப்சான் காதல்' என்ற கட்டுரையின் மூலம் இவர் தமிழ் எழுத்துலகிற்கு அறிமுகமானார். டி.எஸ். சொக்கலிங்கம், வ.ரா. முதலியவர்களோடு ஏற்பட்ட தொடர்பு அவரது எழுத்தார்வத்தை மேலும் மேலும் வளர்க்கவே, சிறுகதைகள் எழுதத் தொடங்கினார். வ.ரா.வின் மணிக்கொடியில் 'பொன்னகரம்', 'கவந்தனும் காமனும்', 'ஆண் சிங்கம்' முதலிய கதைகள் வெளிவந்தன. சென்னையில் வாழ்ந்த புதுமைப்பித்தன் எழுத்தின்மேல் கொண்ட தீராக்காதலால் இராய. சொக்கலிங்கத்தின் அழைப்பை ஏற்றுக் காரைக்குடி சென்று 'ஊழியன்' என்னும் இதழின் உதவியாசிரியராகப் பொறுப்பேற்றார். ஆனால், அங்கேயே தொடர்ந்து பணியாற்றும் சூழல் அமையாததால், அவர் மீண்டும் சென்னைக்கே வந்தார். 'தினமணி', 'தினசரி' ஆகிய ஏடுகளில் சிறிது காலம் அடுத்தடுத்துப் பணியாற்றினார். அப்பொழுதுதான் 'மணிக்கொடி' அன்பர்களின் கூட்டு முயற்சியால் தொடங்கப்பட்ட நவயுகப் பிரசுராலயத்தின் வாயிலாக இவரது முதல் கதைத் தொகுதி வெளிவந்தது. பி.எஸ். இராமையாவின் 'மணிக்கொடி'யில் இவர் பல கதைகளை அவ்வப்போது எழுதி வந்தார். பத்திரிகைத் துறையில் ஈடுபாடு கொண்டிருந்த புதுமைப் பித்தனுக்குத் திரைப்படத்துறையிலும் நாட்டம் பிறந்தது. 'காமவல்லி', 'ஔவையார்' முதலிய படங்களுக்கு உரையாடல் எழுதினார். பின் எம்.கே. தியாகராச பாகவதர் தம் சொந்தச் செலவில் எடுத்த 'இராசமுக்தி' என்னும் திரைப்படத்திற்கு வசனம் எழுதும் பொறுப்பை ஏற்றுப் பம்பாய்க்குச் சென்றார். சென்ற இடத்தில் எலும்புருக்கி நோய் என்னும் கொடிய பிணி பற்றிக்கொள்ளவே, உடல்நிலை சீர்கெட்டுத் திருவனந்தபுரத்திற்குத் திரும்பினார். பிணிக்கும் வறுமைக்கும் இடையே போராடினார். இவர் 1948 ஆம் ஆண்டு இவ் உலக வாழ்வை நீத்தார்.

## புதுமைப்பித்தனின் இலக்கியப் படைப்புகள்

உலக இலக்கியங்களைத் தேடிப் பிடித்துப் படிப்பதில் புதுமைப்பித்தன் வல்லவர். அவ்விலக்கியங்களை ஆழ்ந்து கற்று நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். அத்துடன் தமிழ் இலக்கியத்

திறனையும் நன்கு அறிந்திருந்தார். சங்க இலக்கியங்களை அனுபவிப்பதற்கு ஒரு தனிப்பயிற்சி வேண்டும்; அந்த இலக்கியத்தின் சமூகம், அதன் நாகரிகம் இறந்துவிட்டது. அதன் பதப் பிரயோகங்களின் இரகசியத்தை அறிந்தபின்தான் அந்த இலக்கியத்தின் உள்ளத்தைத் தொடமுடியும் என்று குறிப்பிடுகிறார். இதனால் சமுதாயத்தில் இலக்கியப் படைப்புகளின் பங்கு என்ன? என்பதை அவர் அறிந்ததால் தமது படைப்புகளைப் புதிய தன்மைகளுடன் உருவாக்கினார்.

சிறுகதை, நாவல், கவிதை, கட்டுரைகள், விமர்சனம், ஓரங்க நாடகம் என்ற பலவிதமான இலக்கிய வடிவங்களில் தமது படைப்புகளை வழங்கியுள்ளார். இருந்த போதிலும் சிறுகதையில் தான் அவர் மிகுதியான நாட்டம் செலுத்தியுள்ளார். இதில் பலவிதமான சோதனை முயற்சிகளையும் அவர் மேற்கொண்டார்.

> வாழ்க்கையைப் பற்றிய கூர்மையான பார்வை, ஒப்பற்ற சிந்தனை, தனது எண்ணங்களை அழுத்தமாகவும் புதிய முறையில் நயமாகவும் கூறும் துணிச்சல், அபாரமான தன்னம்பிக்கை, தேர்ந்து கொண்ட கதைப்பொருள்கள், அவற்றுக்குக் கலை வடிவம் கொடுத்த நேர்த்தி, ஈடு இணையில்லாத எழுத்தாற்றல், கையாண்ட நடை முதலிய தன்மைகள் காரணமாகப் புதுமைப்பித்தன் கதைகள் தனித்தன்மையோடு விளங்கலாயின.[2]

இப்படி ஒரு தனித்தன்மையுடன் தனது கதைகளில் யதார்த்த வாழ்க்கையைச் சித்திரிப்பதற்கான காரணத்தைப் புதுமைப்பித்தன் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> சுமார் இருநூறு வருஷங்களாக ஒருவிதமான சீலைப் பேன் வாழ்வு நடத்திவிட்டோம். சில விஷயங்களை நேர் நோக்கிப் பார்க்கவும் கூசுகிறோம். அதனால் தான் சக்கரவட்டமாகச் சுற்றி வளைத்துச் சப்பைக் கட்டு கட்டுகிறோம். குரூரமே அவதாரமான இராவணனையும், இரத்தக் களறியையும், மனக் குரூபங்களையும், விகற்பங்களையும் உண்டாக்க இடமிருக்குமேயானால் ஏழை விபசாரியின் ஜீவனோபாயத்தை வர்ணிப்பதாலா சமூகத்தின் தெம்பு இற்றுப்போகப் போகிறது? இற்றுப்போனது எப்படிப் பாதுகாத்தாலும் நிற்கப் போகிறதா? மேலும் இலக்கியம் என்பது மன அவசரத்தின் எழுச்சி தானே? நாலு திசையிலும் ஸ்டோர் குமாஸ்தா ராமன், சினிமா நடிகை சீதம்மாள், பேரம் பேசும் பிரமநாயகம் இத்யாதி நபர்களை நாள் தவறாமல்

> பார்த்துக் கொண்டிருந்து விட்டு இவர்களது வாழ்வுக்கு இடமளிக்காமல், காதல் கத்தரிக்காய் பண்ணிக் கொண்டிருப்பது போன்ற அனுபவத்துக்கு நேர் முரணான விவகாரம் வேறு ஒன்றும் இல்லை. நடைமுறை விவாகரங்களைப் பற்றி எழுதுவதில் கௌரவக் குறைச்சல் எதுவும் இல்லை[3]

என்று சிறுகதை பற்றித் தமது திறனாய்வை வெளிப்படுத்தியுள்ளார்.

புதிய அணுகுமுறையால் புதுமைப்பித்தனின் கதைகள் புதுமையாகவும் புரட்சிகரமாகவும் அமைந்தன. கவந்தனும் காமனும், கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும், பொன்னகரம், துன்பக்கேணி, தெரு விளக்கு, அகல்யை, போன்ற பல கதைகளைச் சுட்டிக்காட்டலாம்.

> புதுமைப்பித்தன் கதைகள் ஒவ்வொன்றும் ஒரு பிரச்னையைப் பற்றியதாகவே இருக்கும். அவருடைய கதைகள் பொழுது போக்குக்கான கதைகள் அல்ல. அவரது கதைகள் சமூகத்தை நோக்கிப் பல்வேறு ஆணித்தரமான கேள்விக்குறிகளை அடுக்குகின்றன. அழுகி நாற்றமெடுத்துப் போன சமூகத்தின் ஊழல் களைக் கீறிப் பிளந்து காட்டுகின்றன. வாழ்க்கையின் அன்றாடப் பாட்டின் அடிக்குரல் அவரது கதைகளிலே எதிரொலித்தது. சொப்பனவஸ்தையிலே சிக்கி, கனவு காணும் ஆபூதக் கலைஞனல்ல புதுமைப்பித்தன்[4]

என்று தொ.மு.சி. ரகுநாதன் புதுமைப்பித்தன் கதைகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். பொதுவாகவே, சாதாரண வாசகர்களாலும், திறனாய்வாளர் என்னும் தகுதிக்கு உரியவர்களிலும் தலை சிறந்த, தனித்துவம் மிக்க உலக இலக்கியத் தரத்திற்கான படைப்புகளாக நினைவுக்கூரப்பட வேண்டிய தலைப்புகள் 20. கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும் (1943), செல்லம்மாள் (1937), பொன்னகரம் (1934), கவந்தனும் காமனும் (1934), நினைவுப்பாதை (1937), காலனும் கிழவியும் (1937), சிற்பியின் நரகம் (1935), துன்பக்கேணி (1935), பால்வண்ணம்பிள்ளை (1934), உழி (1935), சாபவிமோசனம் (1943), கயிற்றரவு (1948), விபரீத ஆசை (1939), சொன்ன சொல் (1941), டாக்டர் சம்பத் (1935), மகாமசானம் (1941), மோட்சம் (1934), இவை மட்டுமன்றிக் குறுநாவல் (சிற்றன்னை), முற்றுப்பெறாத நாவல் (அன்னை இட்டதீ), மொழிபெயர்ப்புக் கதைகள் 60ஐ எட்டும், வாழ்க்கை வரலாற்று நூல்கள் (2), குறுநாடகங்கள் (3), நாரத ராமாயணம் மற்றும் கவிதைகள், கட்டுரைகள், மதிப்புரைகள், விவாதங்கள் என இவருடைய படைப்புகள் அமைந்துள்ளன (எங்கள் இலக்கியப் பித்தனின் நூற்றாண்டு - ஒரு குறிப்பேடு, எழிலமுதன்).

## படைப்புகள்

புதுமைப்பித்தனின் சிறுகதைகள் ஏழு தொகுதிகளாக வெளி வந்துள்ளன. 1. புதுமைப்பித்தன் கதைகள், 2. புதிய ஒளி, 3. காஞ்சனா, 4. அன்று இரவு 5. ஆண்மை, 6. விபரீத ஆசை, 7. சித்தி முதலிய ஏழு தொகுப்புகளிலும் அடங்கிய மொத்தக் கதைகளின் எண்ணிக்கை 98. அவை தவிர இதுவரை எத்தொகுப்பிலும் இடம்பெறாத 'இராமநாதனின் கடிதம்' என்னும் கதையும் ஒன்று உண்டு. இக்கதை 'எழுத்து' என்னும் இதழில் மறுவெளியீடு செய்யப் பட்டது. இதையும் சேர்த்தால் புதுமைப்பித்தன் எழுதியுள்ள கதைகளின் மொத்த எண்ணிக்கை 99 ஆகும் என்று கணக்கிடப் பட்டுள்ளது. தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் முன்னோடியாகக் குறிக்கத்தக்க பெருமை புதுமைப்பித்தனுக்கு என்றும் உண்டு. (**வாழ்வியற் களஞ்சியம்,** தொகுதி 12, ப.735-736) தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை).

## மொழிபெயர்ப்புகள்

புதுமைப்பித்தன் பிறமொழிகளிலிருந்து தமிழில் மொழி பெயர்த்த பல கதைகள் தொகுத்து நூல்களாக வெளியிடப்பட்டுள்ளன. பிரேத மனிதன், பலிபீடம் ஆகிய நாவல்கள் புதுமைப்பித்தனின் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன. இவர் மிகுதியாகத் தமிழில் மொழிபெயர்த்தவை சிறுகதைகளாகும். இவை மணியோசை, உலக அரங்கு, பிறமொழிச் சிறுகதைகள், உலகத்துச் சிறுகதைகள் எனத் தொகுப்பு நூல்களாக வெளிவந்துள்ளன. புதுமைப்பித்தன் எழுதிய கதைகள் வெளிவந்த அதே வேளையில் அவருடைய மொழி பெயர்ப்பில் பல நாட்டுச் சிறுகதைகள் பல இதழ்களில் வெளி வந்தன. இவை தழுவலா? மொழிபெயர்ப்பா? என்ற விவாதமும் பின்னாளில் பெரிதும் இடம்பெற்றது. உலகின் மிகச் சிறந்த சிறுகதைப் படைப்பாளிகளையும், அவர்களின் படைப்புகளையும் தமிழில் அறிமுகப்படுத்துவதில் முனைப்புடன் செயல்பட்டார் புதுமைப்பித்தன். இந்நோக்கத்தைச் சமகால எழுத்தாளர்கள் பலரும் நடைமுறைப்படுத்தி வருகின்றனர்.

'உலகத்துச் சிறுகதைகள்' என்ற நூலில் பல நாட்டுச் படைப்பாளிகளின் சிறுகதைகளை மொழிபெயர்த்துள்ளார் புதுமைப்பித்தன்.

| | |
|---|---|
| உருஷ்யா | - ஐவான் டர்ஜனீப், லியேனீட் ஆன்ட்ரீவ், ஷெக்காவ் |
| நார்வே | - பீட்டர் எக் |
| ஜெர்மனி | - ஹான்ஸ் பலாடா, ராபர்ட்நியூமான் |
| ஆஸ்திரியா | - பிரான்ஸ் காப்கா |
| ஹாலந்து | - லூயி கௌப்ரஸ் |

பிரான்ஸ் - அனதோல் பிரான்ஸ், ஹென்றி டிரெக்னியர், மொப்பஸான்

இத்தாலி - ஸீனர் லூயிஜி பிரான்டல்லோ, கிரேஸியா டெலாடா

இங்கிலாந்து - ஆர்.எஸ். ஸ்டீவன்ஸன், ஆர்.முரே கில்கிரைஸ்ட், இ.வி. லூக்காஸ், ரோனால்டு ஆக்டன், எல்.ஏ.ஜி. ஸ்ட்ராங்

அமெரிக்கா - நதானியேல் ஹாதர்ன், பிரட்ஹார்ட், எட்கார் ஆலன் போ

தென்கடல் தீவுகள்- ஒரு ஆசிரியர் (நட்சத்திர இளவரசி)

ஆகிய பல்வேறு நாடுகளின், மொழிகளின் சிறந்த படைப்பாளிகளின் சிறுகதைகளைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார் புதுமைப்பித்தன். இந்நூலை ஐந்திணைப் பதிப்பகம் வெளியிட்டுள்ளது.

புதுமைப்பித்தனுடைய சிறுகதைகளையெல்லாம் தொகுத்து 1030 பக்கங்களில் அச்சிட்டுப் பைண்டு வால்யூமாக இரு பதிப்புகளில் ஐந்திணைப் பதிப்பகம் வெளியிட்டுள்ளது. புதுமைப்பித்தனுடைய கவிதை, நாடகம், நாவல் கட்டுரைகளைத் தொகுத்து இரண்டாவது தொகுதியாக ஐந்திணைப் பதிப்பகம் (சென்னை) வெளியிட்டுள்ளது. மேற்குறிப்பிட்ட புதுமைப்பித்தனின் மொழிபெயர்ப்புச் சிறுகதைகள் அனைத்தையும் தொகுத்து மூன்றாவது தொகுதியாக 'உலகத்துச் சிறுகதைகள் என்ற தலைப்பில் ஐந்திணைப் பதிப்பகம் வெளியிட்டுள்ளது. மீனாட்சி புத்தக நிலையம் (மதுரை) வெளியிட்டுள்ள மற்றொரு சிறுகதைத் தொகுதியான 'பிறமொழிச் சிறுகதைகள்' எனும் தொகுதியில் பலநாட்டுச் சிறுகதைகளும் அடங்கியுள்ளன.

உருஷ்யன் - வாலரி புருஸ்ஸாப் எழுதிய '**பளிங்குச்சிலை**', மிக்கெய்ல் ஷோலக்கோவ் எழுதிய '**ஏ! படகுக்காரா**', நிக்கொலாய் டிக்கனேவ் எழுதிய '**அதிகாலை**', மாக்ஸிம் கார்க்கி எழுதிய '**அந்தப்பையன்**', எலியா எக்ரன்பர்க் எழுதிய '**ஓம் சாந்தி! சாந்தி!**'

ஆங்கிலம் - ஜான் கால்ஸ் வொர்த்தி எழுதிய '**முதலும் முடிவும்**', '**யாத்திரை**, இஎம். டிலாபீல்ட் எழுதிய '**இனி**' இவான் கூம்ஸ் எழுதிய '**தையல்மிஷின**' கிளேர் லூயிஸ் எழுதிய '**ஆசிரியர் ஆராய்ச்சி**'

பாலஸ்தீனம் - மோஷிபிள் மிலான்ஸ்கி எழுதிய '**லதீபா**'

ஜெர்மன் - எர்ன்ஸ்ட்டாலர் எழுதிய '**சித்திரவதை**'

கானடா - கே.பாயில் எழுதிய '**அம்மா**'

ஆகிய சிறுகதைகளைப் புதுமைப்பித்தன் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இவை யாவும் 'பிறமொழிச் சிறுகதைகள்' எனும் நூலில் வெளியிடப்பட்டுள்ளன.

'உலக அரங்கு' என்ற நூலும் புதுமைப்பித்தனின் மொழி பெயர்ப்பில் வெளிவந்துள்ளது. இதில் ஷேக்ஸ்பியர், மோலியர், ஹென்ரிக் இப்சென் ஆகியோரின் நாடகங்களைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். நாடக வடிவில் அமைந்த இப் படைப்புகளைப் புதுமைப்பித்தன் சிறுகதை வடிவில் மொழி பெயர்த்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

## மொழிபெயர்ப்பில் புதுமைப்பித்தனின் நாட்டம்

புதுமைப்பித்தன் தமிழில் சிறுகதைகளை எழுதி வந்தபோதிலும் மொழிபெயர்ப்பில் மிகுதியான நாட்டம் செலுத்தி வந்தார். இதற்கான காரணத்தை அவரே பின்வருமாறு கூறியுள்ளார்.

> **தமிழ்நாட்டு வாசகர்களின் விருப்பு வெறுப்புகளை மதித்து, கூடுமானவரை ஓரளவு கதைச்சத்து இருக்கக் கூடிய, ஆனால் அமைப்பு விசேஷங்களுடன் பொருந்திய கதைகளைப் பொறுக்கித் தொகுப்பதே என் நோக்கம். சாதாரண மனிதனுக்குப் பிறநாட்டு நாகரிகச் சம்பிரதாயங்கள் மீது உள்ள சந்தேகத் துடனும், பயத்துடனும் கலந்த வெறுப்பைப் போக்கி, மற்றவர்கள் இலக்கியங்களை அனுதாபத்துடன் அளவளாவ வைக்கும் நோக்கமே நான் கொண்டிருப்பது. ஸ்ரீமதி இட்சன் பிளாஸூம், கள்ளங்கபடமற்ற மிளிஸ்ஸூம், கொலைகாரன் மார்க்ஹமும், கர்ணாமிர்தமான கதைகளை வருஷிக்கும் ஆற்றல் படைத்திருந்தும் தனக்கும் கதை சொல்ல ஆள் தேடிய ஷெஹர்ஜாதியும், மனித சுதந்திரத்தைப் பற்றிப் பேசத் தெரிந்து வைத்திருந்த மீன்குஞ்சும், வேகத்தினால் பூனையோ தவளையோ தப்ப முடியாத எலியும் ஒரே வர்க்கத்தவரல்ல. அவரவர் மனப் போக்கும் அவரவர் கண்ட உலகமும் தனித் தனிப் பிரபஞ்சங்கள் என்றே சொல்ல வேண்டும். நம்முடனிருந்து சீடையும் முறுக்கும் தின்று வெற்றிலை பாக்குப் போட்டுக் கொள்ளத் தெரியாதவர்களா னாலும், அவர்களைக் கதைகளின் மூலமாகாவது பரிச்சயம் செய்து கொள்ள வேண்டாமா? எல்லாம் ஒன்றே என்ற விஸ்தாரமான வேதாந்தத்தைக் கதைத்துக் கொண்டிருந்தாலும், நமது மன வரம்பை ஒட்டுத் திண்ணை எல்லைக்கு வெளியே விட விருப்பமில்லாமல் இருப்பவர்களும்,**

> உலகத்தில் சொல்ல வேண்டியதையெல்லாம் மூவாயிரம் வருஷங்களுக்கு முன்பே கங்கைக் கரையிலும் காவிரிக்கரையிலும் சொல்லி முடித்துவிட்டதாக மமதை கொண்டிருக்கும் அரிசி உணவை உட்கொள்ளும் பிராணிகளும், தங்கள் மனோரதத்தைச் செலுத்தியாவது தேச யாத்திரை செய்து பார்க்கப் பிற நாட்டு இலக்கியப் பயிற்சியளிப்பதே இத்தொகுப்பின் நோக்கம். உலகம் இத்தொகுதிக்குள் அடங்கிவிடவில்லை. இதைப் போல எத்தனையோ வெளிவரவேண்டும்[5]

என்று புதுமைப்பித்தன் 'உலகத்துச் சிறுகதைகள்' நூலின் முன்னுரையில் தமது மொழிபெயர்ப்பின் நோக்கத்தை விளக்கமாக எடுத்துக் காட்டியுள்ளார்.

## பிரேத மனிதன்

புகழ்பெற்ற கவியான ஷெல்லியின் இரண்டாவது மனைவி மேரி ஷெல்லி எழுதிய 'பிராங்கன்ஸ்டைன்' என்ற நூல் புதுமைப் பித்தனுக்கு மிகவும் பிடித்தமான நூல். சார்லஸ் டார்வின், இன்னும் சில ஜெர்மன் தத்துவ அறிஞர்களின் கருத்தை மேரி ஷெல்லி இக்கதைக்கு கருவாக அமைத்து எழுதியுள்ளார். இலியாது, ஷேக்ஸ்பியரின் நடுவேனிற் கனவு, மில்டனுடைய சுவர்க்க நீக்கம் ஆகியவற்றின் போக்கில் அமைந்தது இக்கதை என்று மேரிஷெல்லி 'பிராங்கன்ஸ்டைன்' நூல் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். 'பிரேதமனிதன்' என்ற தலைப்பில் புதுமைப்பித்தன் இந்நூலை மொழிபெயர்த்துள்ளார். 1943 இல் இந்நூலை மீனாட்சி புத்தக நிலையம் (மதுரை) வெளியிட்டுள்ளது. புதுமைப்பித்தன் 'பிராங்கன்ஸ்டைன்' நூலைப் பற்றிப் பல செய்திகளை முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

> இதென்ன பிரேதத்தைக் கூட்டித் தைத்து உயிர் தருவதாவது என்று பலர் நினைக்கலாம். மனிதனுடைய மூல வம்சம் பற்றியும் ஜீவ பரிணாம நியதியைப் பற்றியும் ஆராய்ச்சி நடத்திய சார்லஸ் டார்வின், ஹக்ஸ்லி முதலிய பண்டிதர்கள், வருங்காலத்தில் சாத்தியம் என நினைத்த ஒரு கருத்தை, அதாவது சிருஷ்டி இரகசியம் நம் வசம் கிடைத்து விடும் என்பதை ஒட்டியே இந்தக் கதை ஜோடிக்கப் பட்டிருக்கிறது. இங்கிலீஷ் பாஷையிலே இந்தக் கருத்தையொட்டிப் பல நாவல்கள் வெளிவந்துள்ளன. எச்.ஜி. வேல்ஸ் எழுதிய ஐலண்ட் ஆப் டெரர் (பீதித் தீவு) என்ற நாவலிலும் ஒரு பண்டிதர் மிருகங்களை இரணசிகிச்சை மூலம் மனிதனாக்க முயலுவதாகக் கதை ஒன்று உண்டு. இங்கிலீஷ் பாஷையிலே, நன்மை

> தீமை என்ற இரண்டு சக்திகளை மோதவிட்டு அதன் விளைவுகளைப் பார்க்கும் கதைகள் பல உண்டு. டாக்டஸ் பாஸ்டர், டாக்டர் ஜெக்கில் அன்ட் மிஸ்டர் ஹைட், ஐலன்ட் ஆப் டெரர், இன்விஸிபிள் மேன் (சூட்சும சரீரி) முதலிய நாவல்களைப் போலத்தான் 'பிராங்கன்ஸ்டீன்' என்ற இந்தப் பிரேத மனிதனும் பிராங்கன்ஸ்டீன் சிருஷ்டித்த பிரேத மனிதன் அவனைக் கேட்கும் கேள்விகள், மனிதன் தெய்வத்தைப் பார்த்துப் போடும் கேள்விகளாகவே கொள்ள வேண்டும்'[6]

என்று பிரேத மனிதன் நூலைப் பற்றி முன்னுரையில் புதுமைப்பித்தன் குறிப்பிட்டுள்ளார். ஆங்கில இலக்கியங்களில் புதுமைப்பித்தனுக்கு இருந்த ஆழ்ந்த பயிற்சியை இம்முன்னுரை எடுத்துக் காட்டுகிறது. இம்மொழிபெயர்ப்பைப் பற்றிக் கூறும்பொழுது,

> என்னுடைய தமிழ்நகல், அப்பட்டமான மொழிபெயர்ப் பல்ல. கதையின் போக்கை மட்டும் அனுசரித்துக் கொண்டு கோவை தகர்ந்துவிடாமல் எழுதப்பட்டது. நம் நாட்டில் உள்ள நல்லரவான் கதை, யமனைத் தேடி சுரகுருவுக்காகத் தூதுபோன கதை முதலியனவும் இம்மாதிரி வாய்ப்பை அனுசரித்தவையேயாகும். கதையின்பெயர் விசேடங்கள் சிலரை மிரட்டலாம். ஆனால் கதைச்சத்து நம் பாவனைக்குப் பொருந்திய தேயாகும். 'பேயணையை முறித்திட்டு, பிணமெத்தை ஐந்தடுக்கி, நிலாத்திகழும் பஞ்ச சயனத்தின்' மேல் அமர்ந்த காளியை விடவா இது கோரமானது'[7]

என்று குறிப்பிட்டுள்ளார். திகிலூட்டும் கதைகள் தமிழுக்குப் புதியதல்ல என்ற நோக்கில் கலிங்கத்துப் பரணியில் காளி வீற்றிருக்கும் பயங்கரக் காட்சியை இங்குச் சுட்டிக் காட்டியுள்ளார். மேலும் புதுமைப்பித்தனுக்குத் திகில் கதைகளில் மிகுந்த ஈடுபாடு இருந்துள்ளது. அவருடைய இந்த ஈடுபாட்டைப் பற்றித் தொ.மு.சி. ரகுநாதன் பின்வருமாறு கூறுகிறார்.

> மேரிஷெல்லி, பிரேம் ஸ்டோக்கர், ஜோசப் செரிடன் லிபர்னு, திகில் கதை மன்னரான 'எட்கார் ஆலன் போ' ஆகியோரின் நாவல்கள் மற்றும் சிறுகதைகள் ஆகியவற்றை மட்டுமல்லாமல், வில்க்கி காலின்ஸ், டபிள்யூ.டபிள்யூ. ஜேக்கப்ஸ் ஆகியோரின் திகில் கதைகள் மற்றும் பேய்க்கதைகள் ஆகியவற்றையும் புதுமைப்பித்தன் படித்திருந்தார். அவற்றில் ஈடுபாடு கொண்டிருந்தார் என்பதையும், அல்கெர்னான் பிளாக்வுட் என்பவர் எழுதிய பேய் வீடு முதலிய

கதைகள் (Haunted House and other Stories) என்ற கதைத் தொகுதியையும், பழங்காலத்துப் பேய்க் கதைகள் (Ghost stories of Antiquary) என்ற கதைத் தொகுதியையும் அவர் படித்திருந்தார் என்பதையும் நான் அறிவேன். மேலும் அவரது 'உலகத்துச் சிறுகதைகள்' என்ற மொழிபெயர்ப்புச் சிறுகதைத் தொகுதியில்.... எட்கர் ஆலன் போவின் 'The Cask of Amantillado' என்ற கதையை, சாராயப் பீப்பாய் என்ற தலைப்பிலும், ஆர்.எஸ். ஸ்டீவன்ஸன் எழுதிய மார்க்ஹீம் என்ற பேய்க்கதையை அதே தலைப்பிலும் மொழிபெயர்த்துச் சேர்த்திருந்தார்.

இத்தகைய திகில் கதைகளில் புதுமைப்பித்தனுக்கு மிகுந்த ஈடுபாடு இருந்தது என்பது உண்மை. சொல்லப் போனால் இத்தகைய கதைகளைப் படிப்பதிலும் மேலைநாட்டுப் பிரபல எழுத்தாளர்களில் சிலருக்கும் ஈடுபாடு இருந்தது. உதாரணமாக, பாம்ப்பியின் கடைசி நாட்கள் (The Last days of Pompei) என்ற பிரபலமான நாவலை எழுதிய எட்வார்டு புல்வேர் லிட்டன், இரு நகரக்கதை (Tale of Two Cities) டேவிட் காப்பர்பீல்டு (David Copperfield) முதலிய பிரபல நாவல்களை எழுதிய சார்லஸ் டிக்கன்ஸ், ஷெர்லாக் ஹோம்ஸ் என்ற துப்பறியும் நிபுணரைப் படைத்துப் பல துப்பறியும் கதைகளை எழுதிய ஆர்தர் கானன்டாயில், இலக்கிய உலகம் நன்கறிந்த நாவலாசிரியரான எச். ஜி. வெல்ஸ், மற்றும் ஆர்.எல். ஸ்டீவன்ஸன், ஆஸ்கார் ஒயில்டு முதலிய ஆங்கில எழுத்தாளர்கள் பலரும் இத்தகைய திகில் கதை களையும் பேய்க் கதைகளையும் எழுதி வைத்தே சென்றுள்ளனர். எனவே புதுமைப்பித்தனும் இத்தகைய திகில் கதைகளை எழுதுவதிலும் ஈடுபாடு கொண் டிருந்தார் என்றால் அதில் வியப்பதற்கொன்றுமில்லை. மேலே குறிப்பிட்ட மேலைநாட்டுத் திகில்கதை ஆசிரியர்களிடமிருந்து, சிறுகதைத் துறையில் திகில் கதைகளை எழுதுகின்ற உத்திமுறைகளைத் தெரிந்து கொண்டு, அவற்றைத் தமது கதைகளில் தம் வழியில் செம்மைப்படுத்திக் கொண்டார் என்று வேண்டு மானால் சொல்லலாம்.[8]

புதுமைப்பித்தனுக்குத் திகில் கதைகளின் மீது இருந்த நாட்டத்தையும் உலகில் புகழ்பெற்ற திகில் கதை எழுதிய எழுத்தாளர்களையும் பற்றித் தொ.மு.சி. ரகுநாதன் இவ்வாறு குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். மேலைநாட்டுக் கதைகளைப் புதுமைப்பித்தன் மொழிபெயர்ப்பாகவோ, தழுவலாகவோ தமிழில்

வெளியிடுவது ஒரு முக்கியப் பணியாக மேற்கொண்டிருந்ததால் தாம் படைத்த சொந்தக் கதைகளில் அத்தகைய உத்திமுறை களையும், போக்குகளையும் கையாண்டார் என்பது தெளிவு.

### பலிபீடம்

அலெக்சாந்தர் குப்ரின் எழுதிய Yama, the pit என்ற நாவலைப் 'பலிபீடம்' என்ற தலைப்பில் தமிழில் புதுமைப்பித்தன் மொழிபெயர்த்துள்ளார். இந்நூலின் மொழிபெயர்ப்பைப் பூர்த்தி யடையாத நிலையில் புதுமைப்பித்தன் திரு. அ.கி. கோபாலனிடம் கொடுத்துள்ளார். பின்னர், க.நா.சுவைக் கொண்டு மொழிபெயர்க்கச் செய்து அதனை அ.கி. கோபாலன் வெளியிட்டுள்ளார். இதைப்பற்றி, 'கபாடபுரம்' கதைத்தொகுதியின் பதிப்புரையில் அ.கி. கோபாலன் குறிப்பிட்டுள்ளார்.

> **1947இல் என்று நினைக்கிறேன். நண்பர் கா.ஸ்ரீ. ஸ்ரீயைத் துணைக்குக் கூட்டிக் கொண்டு என்னிடம் வந்தார். மறுநாள் புனிதமான தமிழ் வருஷப்பிறப்பு. தம்மிடம் உள்ள கதைகளில் நீ விரும்பியவைகளைப் போட்டுக்கொள்' என்று ஒரு கட்டுக் கதைகளையும், கையெழுத்துப் பிரதிகளையும் கொடுத்துவிட்டுச் சென்றார். பிரித்துப் பார்த்தேன். பூர்த்தியற்ற கதைகளும் நாவல்களும் இருந்தன. அவைகளினின்று தொகுத்து முதலில் சிற்றன்னை என்ற நாவலையும், க.நா. சுப்பிரமணியம் அவர்கள் மூலம் பூர்த்தி செய்து 'பலிபீடம்' என்ற உலகப் பிரசித்தி பெற்ற நாவலையும் வெளியிட்டேன்.[9] (கபாடபுரம். 125)**

என்று இந்நாவல் வெளியீடு பற்றி அ.கி. கோபாலன் குறிப்பிட்டுள்ளார்.

இந்நாவல் பிரெஞ்சு, ஜெர்மன், இத்தாலி, ஜப்பானிய, ஸ்வீடிஷ், பின்னிஷ், லித்துவேனியா போன்ற பல மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

> **யாமா என்றால் ரஷ்ய பாஷையிலே பள்ளம், குழி என்று அர்த்தம். ஒரு காலத்தில் ஒரே பள்ளமாக இருந்து, ஜனங்கள் அந்தப்பக்கத்தில் வசிக்க ஆரம்பித்ததிலிருந்து அதற்கு அந்தப் பெயரையே கொடுத்துவிட்டார்கள். இப்பொழுது யாமா வேசைத் தொழிலுக்குப் பிரபலம். சர்க்கார் அநுமதியின் பேரில் உத்யோகஸ்தர் கண்காணிப்பின் கீழ், கண்டிப்பான விதிகளுக்கு உட்பட்டு சதை வியாபாரம், இந்தப் பகுதியில் நடக்கிறது. யாமா இரண்டு தெருக்கள் கொண்ட பகுதி. இந்த இரண்டு தெருக்கள் முழுவதையும் இத்தொழில் பிடித்துக் கொண்டுவிட்டது.[10]**

உருஷ்யமொழியில் 'Yama the pit' என்று ஏன் இந்நாவலுக்குப் பெயரிடப்பட்டுள்ளது என்பதை அறியலாம். பல பெண்கள் இந்த வேசைத்தொழிலில் ஈடுபட்டுத் தங்களையே அழித்துக் கொள்ளும் இப்பகுதி ஒரு 'பலிபீடம்' என்றுதானே கருதமுடியும். அதனால்தான் இந்நூலைத் தமிழில் 'பலிபீடம்' என்றே புதுமைப்பித்தன் மொழிபெயர்த்துள்ளார். விபச்சாரத்தில் ஈடுபடும் அப்பெண்களின் மனநிலைகளை, அவர்களின் நிர்ப்பந்தங்களை அவர்களின் நடவடிக்கைகளையும், வாடிக்கை யாளர்களாக வரும் விதவிதமான மனித மிருகங்களைப் பற்றியும் யதார்த்தமாகச் சித்திரித்துக் காட்டுகின்றது இந்நாவல். உருஷ்ய மொழிப் பெயர்களும், அவர்களின் உரையாடல்களும் தமிழ் வாசகர்களுக்கு அந்நியமாகத் தோன்றினாலும் புதுமைப்பித்தனின் மொழிபெயர்ப்பு ஒரு திகிலூட்டும் பரபரப்பான நாவலைப் படிப்பதுபோல இந்நாவலைப் படிக்கத் தூண்டிவிடும். அலெக்ஸாண்டர் குப்ரீன் தமது முன்னுரையில் இந்நூலைப் பற்றிப் பல செய்திகளை எடுத்துக்காட்டியுள்ளார். இந்த முன்னுரையை அப்படியே மொழிபெயர்த்து வழங்கியுள்ளது இந்நூலின் தனிச் சிறப்பாகும்.

> *என்னால் விபச்சாரத்தின் தீமைகளை மட்டும்தான் உள்ளபடி எடுத்துக்காட்ட முடிந்தது. ஆனால் என் நூல் திருப்திகரமான நூல் அல்ல. உருத்தெரியாமல் அதில் சில பகுதிகளைக் காரணம் இல்லாமல் ரஷ்யத் தணிக்கை அதிகாரிகள் மாற்றிவிட்டார்கள். மனச் சாட்சி தூண்டப் பொதுஜனம் என்னைத் திட்டியது. அநாமதேயமான பல கடிதங்கள் என்னை அளவு மீறித் தாக்கின. சமூகத்தின் விரோதி, யுவர்களை அழிக்கக் கங்கணம் கட்டிக்கொண்டவன் என்று என்னைத் தாக்கினார்கள். சில அறிவுள்ள பெண்மணிகள் மட்டுமே முதலில் புரிந்துகொண்டு எனக்கு ஆதரவளித் தார்கள். காமப்பசியால் அவஸ்தைப்பட்டும் நெறி தவறாத சில இளைஞர்கள் என்னைப் பாராட்டினார்கள். சில இளம்பெண்கள் எழுதினார்கள். பல வியாபாரி களின் கடிதங்களை நான் போற்றிப் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறேன்*[11]

என்று குறிப்பிட்டுள்ளார். சமூகத்தின் அவல நிலையை எடுத்துக் காட்டும் இந்நாவலின் முக்கியத்துவத்தை உணர்ந்து இதைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார் என்பதைச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை.

### மாப்பஸானின் கதைகள்

மாப்பஸான் கதைகள் மீது புதுமைப்பித்தனுக்கு இருந்த ஈடுபாட்டை அக்கால எழுத்தாளர்கள் பலரும் அறிந்திருந்தனர்.

குறிப்பாக, சிட்டி சுந்தரராஜன் எழுதிய 'புதுமைப்பித்தனும் மாப்பஸானும்' என்ற கட்டுரையில் புதுமைப்பித்தன் மாப்பஸானின் கதைகள்மீது கொண்டிருந்த நாட்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

> பிரெஞ்சு ஆசிரியர் மாப்பஸானின் கதைகளில் புதுமைப்பித்தனுக்கு மிகுந்த ஈடுபாடு இருந்தது உண்மை. ஆனால் பலர் தமது விமர்சனங்களிலும் கட்டுரைகளிலும், புதுமைப்பித்தன் கதைகள் சிலவற்றில் மாப்பஸானின் பாதிப்பு இருக்கிறதாகக் குறிப்பால் சொல்லியிருக்கிறார்கள் அல்லாமல் எவரும் போதிய ஆதாரத்தோடு எடுத்துக்காட்டி நிரூபிக்கவில்லை. சில கதைகளில் ஒருவித அன்னியத் தன்மையை அவர்கள் கண்டிருக்கலாம். ஆனால் அந்த அன்னியத்தன்மை எப்படிப்பட்டது. எந்த மொழி ஆசிரியருடையது என்று அவர்கள் தெரிந்து கொண்டதுமில்லை. தெரிந்து கொள்ள முயன்றது மில்லை என்று தெரிகிறது.[12]

இதே போன்று எழுத்தாளர் அகிலன் கதைக்கலை என்ற தமது நூலில்,

> தம் தொடக்கக் காலத்தில் புதுமைப்பித்தன் பிரெஞ்சு மொழியின் சிறந்த சிறுகதையாசிரியரான மாப்பஸான் கதைகள் சிலவற்றை மொழிபெயர்த் திருக்கிறார், தழுவியும் எழுதியிருக்கிறார்[13]

என்று குறிப்பிட்டுள்ளார். ஈ.சா. விஸ்வநாதன் 1968 ஆம் ஆண்டில் சென்னையில் நடந்த இரண்டாவது உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டில் வழங்கிய தமது கட்டுரையில்

> புதுமைப்பித்தன் வாழ்க்கை வரலாற்றையும், அவர் மொழிபெயர்த்த கதைகளையும் பார்த்தால், மாப்பஸான், அன்டன் செக்கோவ், நதானியல் ஹோதோர்ன், மற்றும் ஐரோப்பாவிலும் அமெரிக்கா விலுமுள்ள சிறந்த சிறுகதையாசிரியர்களது செல்வாக்கும் தாக்கமும் அவர் பெற்றிருந்தார் என்பதைக் காணலாம்[14]

என்று குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்.

டில்லி நேரு பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சி மாணவராயிருந்த காரைக்கால் ஆர். கிருஷ்ணமூர்த்தி, டாக்டர் மதனகோபாலன், சிட்டி, கொடுமுடி ச. சண்முகன் ஆகியோர் புதுமைப்பித்தன் மொழிபெயர்த்த அல்லது தழுவி எழுதிய மாப்பஸான் கதைகள் குறித்துப் பல்வேறு விதமான கருத்துகளை கூறியுள்ளனர். 1. L, Infirme 2. La Peur 3. Ce Cochon de Morin 4. La Main de Econche 5. La Tombe

ஆகிய பிரெஞ்சுமொழியில் மாப்பஸான் எழுதிய கதைகள் ஆங்கிலத்தில் முறையே 1. The Cripple, 2. The Fear, 3. That Pig Morin, 4. The Hand of the flayed Criminal, 5. The Tomb என்ற தலைப்புகளில் இடம்பெற்றுள்ளன. இக்கதைகளைப் புதுமைப்பித்தன் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார்.

> **மாப்பஸான் கதைகளின் ஆங்கிலத் தலைப்பு களையும் புதுமைப்பித்தன் கதைகளின் தமிழ்த் தலைப்புகளையும் ஒப்புநோக்கினால் ஓர் உண்மை புலனாகும். அதாவது Cripple என்ற தலைப்பைப் புதுமைப்பித்தன் அப்படியே தமிழில் 'நொண்டி' என்றும் 'Fear' என்ற தலைப்பை அப்படியே தமிழில் 'பயம்' என்றும் மொழிபெயர்த்துத் தந்திருக்கிறார். The hand of the flayed criminal என்ற தலைப்பை அப்படியே மொழிபெயர்த்தால் 'கொலை செய்த குற்றவாளியின் கை' என்று தமிழில் பொருள்படும். இந்தத் தலைப்பைப் புதுமைப்பித்தன் எந்த விதத்திலும் பொருள் மாறாமல் 'கொலைகாரன் கை' என்று தமிழில் தந்திருக்கிறார். 'Tomb' என்ற தலைப்பு தமிழில் 'கல்லறை' அல்லது 'சமாதி' என்று பொருள் படும். புதுமைப்பித்தன் அதனைச் 'சமாதி' என்று தந்திருக்கிறார். That pig Morin என்ற தலைப்பு தமிழில் 'அந்த முட்டாள் (அல்லது அசடு) மோரின் என்று பொருள்படும். மோரின் என்பது ஒருவனின் பெயராதலால், புதுமைப்பித்தன் அதற்குப் பதிலாக வேணு என்ற தமிழ்ப் பெயரைப் பயன்படுத்தி 'அந்த முட்டாள் வேணு' என்று எழுதியுள்ளார். எனவே புதுமைப்பித்தன் தாம் தழுவி எழுதியுள்ள மாப்பஸான் கதைகளின் மேற்கண்ட பிரஞ்சுத் தலைப்புகள் எதையும் வேறுவிதமாக மாற்றி எழுதாமல் அநேகமாக அவற்றை அப்படியே தமிழிலும் தந்திருக்கிறார் என்பது தெளிவு[15]**

எனக் குறிப்பிடுகிறார் தொ.மு.சி. ரகுநாதன். மேலும் இவர் "The Olive Grove and other Stories" என்ற மாப்பஸான் கதைகளின் ஆங்கில மொழிபெயர்ப்புத் தொகுதியொன்றில் இடம்பெற்றுள்ள 'Denis' என்ற கதை 'புதிய ஒளி'த் தொகுப்பில் 'நல்ல வேலைக்காரன்' என்ற தலைப்பில் மாப்பஸான் தழுவல் கதையாக இடம்பெற்றுள்ளதையும் சுட்டிக்காட்டியுள்ளார். இதேபோன்று 'தமிழ் படித்த பெண்டாட்டி' (மாப்பஸான் கதையின் தழுவல் 7-10-1934 மணிக்கொடி) என்ற கதையும் குறிப்பிடத்தக்கது. புதுமைப்பித்தன் மொழிபெயர்த்த 'உலகத்துச் சிறுகதைகள்' என்ற தொகுப்பிலும் 'La felle' மாப்பஸானின் என்ற பிரெஞ்சுக் கதையைத் தமிழில் 'பைத்தியக்காரி' என்ற தலைப்பில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார்.

புதுமைப்பித்தன் 1934 ஆம் ஆண்டு முதல் 1935 வரை 'ஊழியன்' என்ற இதழில் உதவியாசிரியராகப் பணியாற்றி வந்தார். அவ்வாறு பணியாற்றும் பொழுது 'சொ.வி' என்ற பெயரிலும் 'நந்தன்' என்ற பெயரிலும் மாப்பஸான் கதைகளைத் தமிழில் வழங்கி யுள்ளார். மாப்பஸான் கதைகளைத் தமிழில் தழுவி எழுதினார் என்றும் அதை அப்படியே மொழிபெயர்த்துள்ளார் என்றும் பலவிதமான கருத்து மோதல்கள் உருவாகியுள்ளன என்பதைப் புதுமைப்பித்தன் பற்றிக் கூறும் நூல்கள் வழியாக அறிகிறோம். புதுமைப்பித்தன் தாம் மொழிபெயர்த்த கதைகளை அப்படியே மொழிபெயர்ப்பு எனவும், தழுவல் கதைகளைத் 'தழுவல்' எனவும் வழங்கியுள்ளார் என்பதைத் தொ.மு.சி ரகுநாதன் அவர்களின் நீண்ட, ஆழமான ஆய்விலிருந்து வழங்கியுள்ள குறிப்புகளிலிருந்தும் அறிய முடிகிறது.

புதுமைப்பித்தனின் இலக்கியப் பணிகளில் அவருடைய மொழிபெயர்ப்புகள் பரந்த விரிந்த உலகைக் காட்டுவதாக அமைந்துள்ளன. மொழிபெயர்ப்பு அல்லது தழுவல் எதுவாய் இருப்பினும் புதுமைப்பித்தன் தான் இதை எப்படி தமிழில் வழங்க வேண்டும் என்பதை முடிவு செய்து கொண்டு பிறமொழி இலக்கியங்களைத் தமிழில் வழங்கியுள்ளார் என்பதைக் கூறிவிட முடியும்.

## புதுமைப்பித்தனின் மொழிநடையும் மொழிபெயர்ப்பு நடையும்

உரிய சொற்கள் உரிய இடங்களில் பொருந்துமாறு அமைத்து எழுதுவது மொழிநடை. பொதுவாக ஒவ்வொரு படைப் பாளியும் ஒவ்வொரு விதமான மொழிநடையைக் கையாளுவது இயல்பு.

> **புலவரின் உள்ளத்தில் உண்மையும் உறுதியும் சிறந்து விளங்கினால் அவருடைய நடை திட்பமும் நுட்பமும் அமைந்ததாகும். அவருடைய உள்ளத்தில் தெளிவு இருந்தால் நடையில் எளிமை விளங்கும். அவருடைய உள்ளத்தில் ஆர்வம் மிகுதியானால் நடையில் ஆற்றல் மிகுதியாகும். அவருடைய உள்ளத்தில் துன்ப உணர்வு பெருகினால் நடையில் சோர்வும் குழைவும் பெருகும். அவருடைய உள்ளத்தில் இன்ப உணர்வு பெருகினால் நடையில் சுவையும் கவர்ச்சியும் பெருகும். அவருடைய உள்ளத்தில் குழப்பமும் கலக்கமும் இருந்தால் நடையில் சிக்கலும் தடுமாற்றமும் காணப்படும்**[16]

என்று டாக்டர் மு.வ. அவர்கள் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். ஒரு படைப்பைத் திறனாய்வு செய்யும் பொழுது இவ்உண்மை நமக்குப்

புலப்படும். ஒரு காலக்கட்டத்தில் பின்பற்றப்படும் ஒரு பொதுவான மொழிநடையைப் பின்பற்றாமல் முற்றிலும் தமக்கென ஒரு தனி முத்திரையைப் பதிக்கும் எழுத்தாளர்களும் உண்டு.

இதற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குபவர் புதுமைப்பித்தன். இவர் சிறுகதை நடையில், தமிழ்ப் பண்புக்கு முற்றிலும் புதிதான ஒரு நடையை வகுத்துக் கொண்டு, தனக்கென ஒரு தனிப்பாதையை வகுத்துக் கொண்டார்.

> **கருத்தின் வேகத்தையே பிரதானமாகக் கொண்டு வார்த்தைகளை வெறும் தொடர்பு சாதனமாக மட்டும் கொண்டு தாவித்தாவிச் செல்லும் நடை ஒன்றை நான் அமைத்தேன். அது நானாக எனக்கு வகுத்துக் கொண்ட பாதை. தமிழ்ப்பண்புக்கு முற்றிலும் புதிது. அதைக் கையாண்ட நானும் ஆங்கிலக் கல்வி கற்றதின் விளைவாகப் பாஷைக்குப் புதிது. இதனால் பலர் என்ன எழுதுகிறேன் என்பது பற்றிக் குழம்பினார்கள். சிலர் நீங்கள் எழுதுவது பொது ஜனங்களுக்குப் புரியாது என்று சொல்லி அனுதாபப்பட்டார்கள்.**[17]

புதுமைப்பித்தன் எவரையும் பின்பற்றாமல் தன்னுடைய தனித்தன்மையைக் கதைக்கருவிலும், மொழிநடையிலும், கதை சொல்லும் உத்தியிலும் பதித்துக் காட்டினார்.

> **எழுத்து நடையில் லகுவில் சிக்காது நழுவும் விசயங்களையும் இழுத்துப் பிடித்துக் கொண்டு வந்து அற்புதமான சொல்லாட்சியினால் தமது வசனகதிக்குள் சிறைப்படுத்தும் அசுர சாதனை புதுமைப்பித்தன் ஒருவரிடம்தான் இருக்கிறது.**

என்று தொ.மு.சி. ரகுநாதன் குறிப்பிட்டுள்ளார் (*புதுமைப்பித்தன் வரலாறு*, ப. 185).

> **புதுமைப்பித்தன் நடையிலே ஆங்கில இலக்கியத்தில் காணப்படும் சொல்லடுக்கள், உருவகங்கள், வாக்கிய ரசனை தென்பட்டாலும் அந்த இழைகள் இவர் காவியப்பட்டிலே நன்றாய் அழகுபெற நெய்யப் பட்டிருக்கின்றன.** (புதுமைப்பித்தன் கதைகள், முன்னுரை, இரா.ஸ்ரீ.தேசிகன்)

எனப் புதுமைப்பித்தன் மொழிநடை குறித்துப் பலரும் மதிப்பீடு செய்துள்ளனர்.

புதுமைப்பித்தனின் படைப்புலகத்துக்குள் முதலில் காலடி எடுத்து வைக்கும் வாசகனைக் கவர்வது அவரது மொழி.

*அவரது மொழி 'சுயமானது; அவரால் கண்டுபிடிக்கப் பட்டது' என்றெல்லாம் நாம் கூறவிரும்புகிறோம். மண்ணில் பிறந்து விழுந்த குழந்தை அதன்பின் கற்றுக் கொள்வதெல்லாம் அதன் வாழ்க்கைச் சூழலிலிருந்து தான் என்ற நியதியை மறந்து நாம் புதுமைப் பித்தனைப் பற்றிப் பேசமுடியாது. சில சமயம் பெற்றுக் கொள்பவற்றை ஒரு ஆளுமை மாற்றும் விதம் பெற்றுக்கொள்ளப்பட்டவற்றின் மூலங்களையே கண்டுபிடிக்க முடியாமல் அடித்து விடுகிறது. புதுமைப்பித்தனோ பெரிய ரசவாதியாக இருப்பினும் வீராசாமிச் செட்டியார் (விநோத ரசமஞ்சரி) அ. மாதவய்யா (பத்மாவதி சரித்திரம்) ஆகியோரின் வசன நடையின் பாதிப்பு அவரிடம் நிழலாடுவதை உணர முடிகிறது. ஆங்கில வாக்கியங்களின் ஈர்க்கப் பட்ட மனத்தால் அவர் பல தமிழ் வாக்கியங்களை இதமாக உருவாக்கியிருக்கிறார் (சுப்பு அய்யரின் வீடு ஜன்னல்களுக்குப் பெயர் போனதல்ல கலியாணி) மொழியின் மரபில் அவருக்கு இருந்த ஈடுபாடு காரணமாக அவ் வாக்கியங்கள் – முதலில் சற்று விலகி நின்றன என்றாலும் பின்பு வித்தியாசம் காட்டாமல் – தமிழில் கரைந்து விட்டன. மரபு மீறப்படுவதும் மீறப்பட்ட மரபின் ஒரு பகுதி மரபில் இணைந்து கொண்டு விடுவதும் மற்றொரு பகுதி உதிர்ந்து போய்விடுவதும் சமூக நியதியாகவே இருக்கின்றன. அவரது நடையில் அவருடைய ஆளுமை வெளிப்படும் கோலங்கள் நூதனமானவையாகவும் எண்ணற்ற வகைப் பேதங்கள் கொண்டவையாகவும் வெளிப்படுகின்றன. எழுத்து மொழியின் பாதிப்பைப் பெற்றிருந்த அளவுக்கு அவர் பேச்சு மொழியின் பாதிப்பையும் ஏற்றுக் கொண்டிருந்தார். இதன் பொருள் மொழி உருவானதில் அவரது கண் ஆற்றிய பங்கை அவரது செவியும் ஆற்றியிருக்கிறது என்பதுதான்.*

என எழுத்தாளர் சுந்தரராமசாமி 'புதுமைப்பித்தன்: ஆளுமையும் ஆக்கங்களும்' எனும் தலைப்பில் '**புதுமைப்பித்தன் கதைகள்**' தொகுப்பின் முன்னுரையில் எழுதியுள்ளார்.

இதில் இடம்பெற்றுள்ள இக்குறிப்பு புதுமைப்பித்தனின் மொழிநடையின் பலவிதமான பரிமாணங்களைக் காட்டுகிறது. அவருடைய மொழிநடையில் பிறமொழி இலக்கியத் தாக்கமும் பெருமளவு பங்காற்றியுள்ளது என்பதை அறியலாம்.

ஒரு உருஷ்ய மொழிக் கதையை ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்த்து எழுதுகிறார் என்ற சுவடு தெரியாமல் அமைந்திருப்பது மொழிபெயர்ப்பில் அவருக்குக் கிடைத்த வெற்றி. எது மொழி பெயர்ப்புக்கதை, எது அவருடைய சொந்தக் கதை என்று பிரித்தறியாத அளவிற்குப் பலரையும் மயங்க வைத்தது அவருடைய மொழிநடை.

> *அவனுக்குத் திருட்டுக் குற்றத்திற்காக ஒரு வருஷம் கடுங் காவல் தண்டனை விதித்து, சிறையிலிட்டார்கள். கோர்ட்டில் விசாரணை நடக்கும்பொழுது அந்தக் கிழவனுடைய நடத்தை என் மனத்தைப் பிடித்திழுத்தது. வழக்கும் விசித்திரமானதுதான். அனுமதி பெற்று அவனைச் சிறையில் பார்க்கச் சென்றேன். முதலில் பார்க்க மாட்டேன் என்றான். பிறகு என்னுடன் பேச மறுத்தான். கடைசியாக அவன் தனது கதையைச் சொன்னான்.*[18]

'வாலா புருஸ்லாப்' உருஷ்ய மொழியில் எழுதிய 'பளிங்குச் சிலை' என்னும் கதை இவ்வாறு தொடங்குகிறது. தமிழில் புதுமைப் பித்தன் எழுதுவது போலவே அவருடைய மொழிபெயர்ப்பும் அமைந்துள்ளது. மிகவும் எளிமையான சரளமான நடையில் மொழிபெயர்ப்பு அமைவது கடினம். சிறந்த படைப்பாளர் களாகத் திகழுகின்ற எழுத்தாளர்கள், மொழிபெயர்க்கும்பொழுது அப்படி அமைவது இயல்பாகிறது. ஆனால் மொழிபெயர்க்க எடுத்துக் கொள்ளப்பட்ட கதையின் கதாபாத்திரங்கள், அதன் நிகழ்வுகள் வேற்று பூமியை நம் கண்முன் நிழலாட வைக்கின்றன.

> *அவனை அவமானப்படுத்துவதற்காகக் குருட்டிக்காவ் தொலைக் கண்ணாடியை மாற்றிப் பிடித்துக் கொண்டு அதன் வழியாகப் பார்த்தான். பிம்பம் துருக்கியனைக் கொசுவாக்கியது. அதற்கப்புறம் குருட்டிக்காவ், வழிகாட்டிச் செல்லும் பரிவாரக் கோஷ்டித் தலைவரான போடாவி என்பவனுடன் பேச்சுக்கொடுத்து உறவு பண்ணிக் கொண்டான். அந்த நபர் இவனுடைய தளத்தில் இவனுக்குக் கீழ் சேவை செய்தான். போடாவியும் உறவு கொண்டாட குருட்டிக்காவ் நெஞ்சின் கொதிப்பை எல்லாம் அவனிடம் திறந்து கொட்டினான். வழிகாட்டியாகப் போவதுடன் இராத்திரியில் தங்குமிடம் தேடிக் கொடுக்கும் வேலையும் போடாவிக்கு ஒப்புவிக்கப் பட்டிருந்தது.*[19]

உருஷ்ய எழுத்தாளர் நிக்கோலாய் டிக்கனோ எழுதிய 'அதிகாலை' என்னும் சிறுகதை புதுமைப்பித்தன் மொழிபெயர்ப்பில் இப்பகுதி இடம்பெற்றுள்ளது. இப்பகுதியில் இடம்பெற்றுள்ள கதா பாத்திரங்கள் அந்த நாட்டிற்கும் மொழிக்கும் உரிய அடையாளத்தைத் தாங்கியுள்ளன. அதேபோன்று அந்த நாட்டில் நிகழுகின்ற நிகழ்ச்சியும் வாசகனுக்கு ஓர் அந்நிய நிலத்தின் வாசனையைப் பரப்புகின்றது. தன்னை மறந்து தமிழ் வாசகனை பிறமொழி பேசும் மக்களிடையே அழைத்துச் செல்லும் போக்கு மொழிபெயர்ப் பாளனுக்குக் கிடைத்த வெற்றியாகும். ஒரே நேரத்தில் இரண்டு ஆசிரியர்களுக்கு உரிய பணியை ஏற்பது மொழிபெயர்ப்பாளருக்கு உரிய முக்கியக் கடமையாகும். இதிலிருந்து வழுவி உருமாற்றினால் அது தழுவலாக அமைந்துவிடும். புதுமைப்பித்தன் நேரடி மொழி பெயர்ப்புக்கும், தழுவலுக்கும் இடையே உள்ள வேறுபாட்டை அறிந்தவர்

புதுமைப்பித்தன் மொழிபெயர்ப்பு, தழுவல் இரண்டு முறைகளைக் குறித்தும் அவற்றிற்குரிய வரையறைகளைக் கொண்டிருந்தார்.

### மொழிபெயர்ப்பு

> **கதைகளை மொழிபெயர்ப்பது என்றால், கூடியவரை, பாஷை வளைந்து கொடுக்கக் கூடியவரை, ஓர் குறிப்பிட்ட அந்நிய நாட்டுச் சரக்கை, அதன் சாரம் கெடாமல் எடுத்துத் தருதல்.**

### தழுவல்

> **அதாவது ஒரு குறிப்பிட்ட அந்நிய நாட்டுக் கதையின் முக்கியச் சம்பவங்களை வைத்துக் கொண்டு ஏறக் குறைய அதைப் போல் ஆனால் அதன் அழகுகள் அவ்வளவும் இருக்க வேண்டியது அவசியமில்லை. ஒரு கதை ஜோடித்தல், சமீபத்தில் சிலர் சூரியனைத் தூக்கிச் சட்டைப்பையில் போட்டுக் கொள்ளும் முயற்சியை – தழுவல் என்கின்றனர்;அது வெறும் திருட்டு.[20]**

பிறநாட்டு இலக்கியங்களைத் தமிழாக்குவதற்கு ஏற்ற முறை தழுவலா, மொழிபெயர்ப்பா என்பதைப் பற்றி 1937ஆம் ஆண்டு 'மணிக்கொடி' இதழில் ஒரு விவாதம் நடைபெற்றுள்ளது. புதுமைப் பித்தன், 'பாதசாரி', கி.ரா., கு.ப. ராஜகோபாலன், என். சிதம்பர சுப்ரமண்யன், 'காற்றாடி', க.நா. சுப்பிரமணியன், 'வியாசன்' ஆகியோர் இந்த விவாதத்தில் கலந்து கொண்டுள்ளனர். புதுமைப் பித்தனை ஒரு தழுவல் இலக்கியக் கர்த்தா என்று முத்திரை குத்தும் முயற்சியைச் சிலர் மேற்கொண்டு வந்துள்ளனர். இதற்குப் பதில் அளிக்கும் வகையில் 'புதுமைப்பித்தன் கதைகள் சில விமர்சனங்களும்

விஷமத்தனங்களும்' எனத் தொ.மு.சி. ரகுநாதன் ஒரு பெருநூலை வெளியிட்டுள்ளார். இந்நூலின் நோக்கம் குறித்துக் கணையாழி இதழில் (நவ. 1999, ப. 43-33) தொ.மு.சி. ரகுநாதன் ஒரு கட்டுரை வழங்கியுள்ளார். இதில் இப்படிப்பட்ட ஒரு விவாதம் எப்படி உருவானது என்பதைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

> குறிப்பாக இந்த முயற்சிகள் புதுமைப்பித்தனின் மறைவுக்குப் பின்னரே அதிகமாயின. 1934 இல் காரைக்குடி இராய. சொக்கலிங்கம் நடத்தி வந்த 'ஊழியன்' வாரப் பத்திரிகையில் உதவியாசிரியராகப் புதுமைப்பித்தன் பணியாற்றி வந்த காலத்தில், அதில் தமது சொந்தக்கதைகள் சிலவற்றை எழுதியதோடு, வாராவாரம் பத்திரிகையின் பக்கங்களை நிரப்ப வேண்டிய நிர்ப்பந்தம் காரணமாக, 'புதுமைப் பித்தன்' என்ற பெயரில் எழுதாமல் நந்தன், சொ.வ. முதலிய வேறு பெயர்களில் பிரபலமான பிரஞ்சுக் கதாசிரியர் மாப்பஸானின் சிறுகதைகள் சிலவற்றை, அவற்றின் தலைப்புகளைக் கூட அவர் மாற்றாமல், அப்படியே தழுவி எழுதி அவற்றை 'ஊழியனில்' வெளியிட்டிருந்தார். புதுமைப்பித்தன் உயிரோடு இருந்த காலத்தில் அவர் தேர்வு செய்து கொடுத்திருந்த அவரது எந்தவொரு சிறுகதைத் தொகுதியிலும் இந்தக் கதைகள் இடம்பெறவேயில்லை. புதுமைப்பித்தனின் மறைவுக்கு ஐந்தாண்டுகளுக்குப் பின்னர் அவரது படைப்புகளைத் தொகுத்து முறையாக வெளியிடத் தொடங்கிய சென்னை ஸ்டார் பிரசுரம் 1953 இறுதியில் 'புதிய ஒளி' என்ற கதைத் தொகுதியில் இத்தகைய கதைகளையும் சேர்த்து அவர் பெயரால் தவறுதலாக வெளியிட்டு விட்டது. இவ்வாறு அத்தொகுதியில் இடம் பெற்றுவிட்ட மாப்பஸான் கதைகளின் தழுவல்கள் சிலவற்றை, கால்நூற்றாண்டுக் காலத்துக்குப் பின்னர் 1979 இல் இனம் கண்டறிந்த காரைக்கால் கிருஷ்ணமூர்த்தி என்பவர், இதனைக் கொண்டே புதுமைப்பித்தனை ஒரு தழுவல் இலக்கியக் கர்த்தா என்று முத்திரை குத்த முயன்றார்..... இவ்வாறு கிருஷ்ணமூர்த்தி எழுதியதை ஆதாரமாகக் கொண்டு, புதுமைப்பித்தனோடு சேர்ந்த மணிக்கொடிப் பத்திரிகையில் எழுதி வந்தவர்களில் ஒருவரான 'சிட்டி' என்ற பெ.கோ. சுந்தரராஜன் புதுமைப்பித்தன் மீது இதே முத்திரையைக் குத்த அரும்பாடுபட்டார். இவ்வாறு புதுமைப்பித்தன் மீது தழுவல் இலக்கியக் கர்த்தா என்ற முத்திரையைக் குத்தும் முயற்சியை

> நியாயப்படுத்துவதற்காக, புதுமைப்பித்தன் சுயமாக எழுதிய சொந்தக் கதைகள் சிலவற்றின்மீதும், விமர்சனம் ஆராய்ச்சி என்ற பெயரால் விஷமத் தனங்கள் புரிந்து, இதே முத்திரையைக் குத்தச் சிலர் முயன்று வந்தனர்; வருகின்றனர். இத்தகைய விஷமத்தனங்களில் சிட்டிக்கு மட்டுமல்லாமல் க.நா.சு. உள்ளிட்ட வேறு சிலருக்கும் பங்குண்டு[21]

என்று விளக்கமளித்துள்ளார் தொ.மு.சி. ரகுநாதன். இவ்விளக்கம் புதுமைப்பித்தனைப் பற்றி ஆராய்ச்சி செய்வோருக்கு மிகவும் பயன்தரக்கூடிய ஒரு முக்கியமான உண்மையாகும் என்பதில் அய்யமில்லை.

* * * * *

## புதுமைப்பித்தனின் மொழிபெயர்ப்புகள்

1. பிரேத மனிதன் (மேரிஷெல்லி), முதற்பதிப்பு, டிச. 1943, இப. அக்.1977, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, பக். 64).
2. பலிபீடம் (Yama the pit) அலெக்ஸாண்டர் குப்பரின், தமிழில் புதுமைப்பித்தன், மு.ப. 1951, மூன்றாம் பதிப்பு, டிச. 1977, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, பக். 178.
3. மணியோசை, சிறுகதைத்தொகுப்பு - தமிழில் புதுமைப்பித்தன், மு.ப. டிச. 1953, இ.ப. பிப். 1978, பக். 180.

இதில் உள்ள சிறுகதைகள்

1. மணியோசை - ஜப்பான்
2. எமனை ஏமாற்ற - ஜப்பான்
3. அஷ்டமா சித்தி - ஜப்பான்
4. மகளுக்கு மணம் செய்து வைத்தார்கள் - ஜப்பான்
5. சிரித்த முகக்காரன் - அமெரிக்கா
6. உயிர் ஆசை - அமெரிக்கா
7. காதல் கதை - அமெரிக்கா
8. ஒருவனும் ஒருத்தியும் - பிரான்ஸ்
9. தாயில்லாக் குழந்தைகள் - இங்கிலாந்து
10. தெய்வம் கொடுத்த வரம் - ஸ்வீடன்
11. யுத்த தேவதையின் திருமுக றூண்டலம் - அமெரிக்கா
12. கிழவி - ஸ்வீடன்
13. ஆட்டுக் குட்டிதான் - இங்கிலாந்து

14. சகோதரர்கள் - ஜப்பான்
15. பலி - ஹங்கேரி
16. இந்தப் பல் விவகாரம் - உருஷ்யா

4. உலக அரங்கு, (தமி.) புதுமைப்பித்தன், மீனாட்சி புத்தக நிலையம், சென்னை - 5, ஆறாம் பதிப்பு, டிச. 1977. (இதில் இடம்பெற்றுள்ள கதைகள் - இவை நாடக வடிவில் உள்ளவை).
   1. டைமன் கண்ட உண்மை - ஷேக்ஸ்பியர் (Timon of Athens)
   2. மணி மந்திரத் தீவு - ஷேக்ஸ்பியர் (The Tempest)
   3. தருமதேவதையின் துரும்பு - ஷேக்ஸ்பியர் (Hamlet)
   4. ஆஷாடபூதி - மோலியர்
   5. ராஜ்ய உபாதை - ஹென்றிக் இப்ஸன்

5. பிறமொழிச் சிறுகதைகள் (தமி.) புதுமைப்பித்தன், ஐந்திணைப் பதிப்பகம், ஏழாம் பதிப்பு, ஏப். 1990.
   1. பளிங்குச் சிலை - வாலரி புருஸ்லாப் (உருஷ்யா)
   2. ஏ. படகுக்காரா - மிக்கெய்ல் ஷோலொகோவ் (உருஷ்யா)
   3. அதிகாலை - நிக்கொலாய் டிக்கனோவ் (உருஷ்யா)
   4. அந்தப் பையன் - மாக்ஸிம் கார்க்கி (உருஷ்யா)
   5. ஓம் சாந்தி! சாந்தி - எலியா எக்ரன் பர்க் (உருஷ்யா)
   6. முதலும் முடிவும் - ஜான் கால்ஸ் வொர்த்தி (இங்கிலாந்து)
   7. யாத்திரை - ஜான் கால்ஸ் வார்த்தி (இங்கிலாந்து)
   8. இனி - இ. எம். டிலாபீல்ட் (இங்கிலாந்து)
   9. தையல் மிஷின் - இவான் கூம்ஸ் (அமெரிக்கா)
   10. ஆசிரியர் ஆராய்ச்சி - ஸின் கிளேர் லூயிஸ் (அமெரிக்கா)
   11. லதீபா - மோஷி ஸ்மிலான் ஸ்கி (பாலஸ்தீனம்)
   12. சித்திரவதை - எர்னஸ்ட்டாலர் (ஜெர்மனி)
   13. அம்மா - கே. பாயில் (கனடா)

6. உலகத்துச் சிறுகதைகள் (தமி.) புதுமைப்பித்தன், ஐந்திணைப் பதிப்பகம், மூன்றாம் பதிப்பு, ஜூன். 1990.
   1. கனவு - ஐவான் டர்ஜனீப் - (உருஷ்யா)
   2. பொய் - லியேனீட் ஆன்ட்ரீவ் - (உருஷ்யா)

3. நாடகக்காரி - ஷெக்காவ் - (உருஷ்யா)
4. சமத்துவம் - ஒரு உருஷிய ஆசிரியர் - (உருஷ்யா)
5. வீடு திரும்பல் - பீட்டர் எக் - நார்வே
6. இஷ்டசித்தி - ஹான்ஸ் பலாடா - ஜெர்மனி
7. துறவி - ராபர்ட் நியூமான் - ஜெர்மனி
8. ஒரு கட்டுக்கதை - பிரான்ஸ் காப்கா - ஆஸ்திரியா
9. தந்தை மகற்காற்றும் உதவி - லூயி கௌப்ரஸ் - ஹாலந்து
10. பூச்சாண்டியின் மகள் - லூயி கௌப்ரஸ் - ஹாலந்து
11. பாஸ்தஸார் - அனதோல் பிரான்ஸ் - பிரான்ஸ்
12. ஷெஹர்ஜாதி - கதை சொல்லி - ஹென்றி டிரெக்னியர் - பிரான்ஸ்
13. பைத்தியக்காரி - மொப்பஸான் - பிரான்ஸ்
14. துன்பத்திற்கு மாற்று - ஸீனர் லூயிஜி பிரான்டல்லோ - பிரான்ஸ்
15. கலப்பு மணம் - கிரேஸியா டெலாடா - பிரான்ஸ்
16. மார்க்ஹீம் - ஆல்.எல். ஸ்டீவன்ஸன் - இங்கிலாந்து
17. சுவரில் வழி - ஆர் முரே கில்கிரைஸ்ட் - "
18. காரையில் கண்ட முகம் - இ.வி. லூக்காஸ்-"
19. சூனியக்காரி - ரோனால்டு ஆக்டன் - "
20. தேசிய கீதம் - எல்.ஏ.ஜி. ஸ்ட்ராங் - "
21. ரோஜர் மால்வினின் ஈமச்சடங்கு - நதானியேல் ஹாதார்ண் - அமெரிக்கா
22. மிளிஸ் - பிரட் ஹார்ட் - "
23. சாராயப் பீப்பாய் - எட்கார் அல்லன் போ "
24. நட்சத்திர இளவரசி - தென்கடல் தீவு

## குறிப்புகள்

1. **தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்**, கார்த்திகேசு சிவத்தம்பி, பாரி நிலையம், சென்னை, பதி. ஜூலை 1967, ப.45.
2. **புதுமைப்பித்தன் இலக்கியப் பணி**, 22.8.2000, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னையில் நடைபெற்ற நிகழ்ச்சி, சொற்பொழிவில் வல்லிக்கண்ணன்.
3. **உலகத்துச் சிறுகதைகள்**, (தமி.) புதுமைப்பித்தன், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, மு. பதி. ஜூன் 1990, முன்னுரையில்.
4. **புதுமைப்பித்தன் கதைகள்**, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, பதி. ஆறாம் பதிப்பு 1977, ப.7.
5. **உலகத்துச் சிறுகதைகள்**, புதுமைப்பித்தன், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, மு.பதி. 1990, முன்.
6. **பிரேத மனிதன்** (மொ.பெ.), புதுமைப்பித்தன், மீனாட்சி புத்தக நிலையம், அக். 1977, இ.ப.1977, முன்.
7. மேற்படி.
8. **புதுமைப்பித்தன் கதைகள், சில விமர்சனங்களும் விஷமத் தனங்களும்,** தொ.மு.சி. ரகுநாதன், மு.ப. ஆக. 1999, ப.117.
9. **பலிபீடம்**, அலெக்சாண்டர் குப்ரின் (தமி.) புதுமைப்பித்தன், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை மு. பதி. டிச.1977, முன்.ப.13
10. மேற்படி, பக்.10-11.
11. **புதுமைப்பித்தன் சில விமர்சனங்களும் விஷமத்தனங்களும்,** தொ.மு.சி. ரகுநாதன், மு.ப. ஆக. 1999, ப.133.
12. மேற்படி, ப.133.
13. மேற்படி, "
14. மேற்படி ப.146.
15. **இலக்கியத்திறன்,** மு. வரதராசன், பாரிநிலையம், சென்னை பதி. 1965, ப.238.
16. **புதுமைப்பித்தன் சிறுகதைகள்**, நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, புதுதில்லி, பதி. 1973, ப. XI.
17. **பிறமொழிச் சிறுகதைகள்** (தமி.), புதுமைப்பித்தன், ஐந்திணைப பதிப்பகம், சென்னை-5, ஏழாம் பதிப்பு, ஏப்.96, ப. 1.
18. மேற்படி, ப. 31.
19. **அன்னை இட்ட தீ** - புதுமைப்பித்தன், பதி. ஆ.இரா. வேங்கடாசலபதி, காலச்சுவடு பதிப்பகம், டிச. 1998, ப. 265.
20. **கணையாழி**, நவ. 1999, பக். 43-44.

# கா. அப்பாத்துரை

ஒரு நாட்டின், மொழியின், இனத்தின் உயர்வுக்கெனத் தம்மை அர்ப்பணித்துக் கொள்ளும் மனிதர்கள் மனித சமுதாயத்தின் சொத்தாக மதிக்கப்படுவர். இவ்வகையில் தமிழ்மொழி வளர்ச்சிக்கென அரும்பணி ஆற்றிய அறிஞர் பெருமக்களுள் பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார் குறிப்பிடத்தக்கவர். சிறந்த ஆராய்ச்சியாளர், பன்மொழி அறிஞர், மொழிபெயர்ப்பாளர், நூலாசிரியர், கவிஞர், பேச்சாளர் எனப் போற்றப்பட்டவர் கா. அப்பாத்துரையார்.

**எப்பாத் துறைக்கும்**
**இவனோர் பழம்புலவன்**
**அப்பாத் துரையறிஞர்**
**ஆழ்ந்த கன்ற - முப்பால்பா**
**நூலறிவு! நூறு புலவர்கள்**
**சேரினிவன்**
**காலறிவு காணார் கனிந்து**[1]

என்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பன்மொழிப் புலவரைப் பாராட்டியுள்ளார். கா. அப்பாத்துரையார் தமிழினப் பெருமையை உலகளாவிய நிலையில் பெருமையுடன் எடுத்துரைக்க வேண்டும் என்பதில் முனைப்பாக இருந்தவர்.

பன்மொழிப் புலவரின் எழுத்துப்பணி திராவிட இயக்கப் பணியாக உருப்பெற்றது. தந்தை பெரியாரும் அறிஞர் அண்ணாவும் அவருடைய தமிழ்ப்பணியைப் போற்றி அவருக்கு மதிப்பளித்து வந்தனர். தமிழ் நிலத்தின், தமிழ் மக்களின், தமிழ் மொழியின் சிறப்பை உணர்ந்ததுடன் பகுத்தறிவுச் சிந்தனையும், பொதுஉடைமைத் தத்துவ நோக்கும் பன்மொழிப்புலவர் எழுத்தின் உயிரோட்டமாக அமைந்தன.

இவருடைய ஆராய்ச்சிப் புலமைக்காக இவரை, 'திராவிட இயக்கத்தின் ஞானாசிரியர்' என்று கூறுவதுண்டு. மொழி, இலக்கியம், தொடர்பாக எந்தச் சிக்கல் வந்தாலும் தலைவர்கள் இவரை நாடித் தெளிவு பெற்றுள்ளனர். அறிஞர் அண்ணா பன்மொழிப் புலவரின் மணிவிழாவில்,

**பன்மொழிப்புலவர் தமிழின் மூலத்தையே ஆராய முனைந்தவர்; தமிழ் இனத்தின் வரலாற்றைத் துருவித்**

> **துருவி ஆராய்வதின் மூலம் தமிழ் இனத்துக்கும் மற்ற இனத்துக்கும் இடையே பகை மூட்ட அல்ல - தோழமையை ஏற்படுத்த நற்பணி செய்திருக்கிறார். அப்பாத்துரையாரின் நூல்களை - ஏடுகளை - வீடு தோறும் வாங்கி வைக்க வேண்டும். அப்பாத்துரையார் எழுதிய நூல்களில் 'தென்னாட்டுப் போர்க்களங்கள்' என்னும் நூல் என்னை மிகவும் கவர்ந்த ஒன்றாகும். அந்த நூலின் ஒரே ஓர் ஏட்டை எழுத அவர் எத்தனை ஆயிரம் கவிதைகளை இலக்கியங்களைத் திரட்டிப் பார்த்திருக்க வேண்டும் என்பதை எண்ணி வியந்தேன்[2]**

என்று பாராட்டினார். அப்பாத்துரையார் எழுதிய, மொழிபெயர்த்த நூல்கள் அனைத்தும் அவரின் கடுமையான உழைப்பைப் பறைசாற்றும்.

> **அவர் இதுவரை சலியாமல் உழைத்த உழைப்பையும் ஆற்றியுள்ள தொண்டுகளையும் காணுகின்ற பொழுது அவரைத் தக்கவிதத்தில் தமிழுலகு போற்றிப் புகழ்ந்து பயன்படுத்திக் கொள்ள முன்வரவில்லையே என்ற ஏக்கம் என் போன்றவர்க்கு ஏற்படுவதுண்டு[3]**

என மா.சு. சம்பந்தன் குறிப்பிட்டுள்ளார். அப்பாத்துரையார் வாழ்வில் பல இடர்ப்பாடுகளைச் சந்தித்த போதிலும் தனது பணியை இறுதி வரை தொய்வின்றித் தொடர்ந்தார்.

## இளமைப்பருவம் - கல்வி - வாழ்க்கை

தமிழகத்தில் தென்கோடியில் குமரி மாவட்டத்தின் வட எல்லையாக உள்ள ஆரல்வாய்மொழி என்ற சிற்றூரில் 1907 ஆம் ஆண்டு ஜூன் 24ஆம் நாள் அப்பாத்துரையார் பிறந்தார். அவர் தந்தையார் பெயர் காசியாப்பிள்ளை. அன்னையார் பெயர் முத்தம்மையார். பன்மொழிப்புலவரின் பள்ளி வாழ்க்கை ஆரல்வாய் மொழியிலும் நெல்லை மாவட்டத்தில் குலசேகரன் பட்டினத்திலும் தொடங்கியது. நான்காம் வகுப்பு முதல் கல்லூரிக் கல்வி முதலிரு வகுப்புகள் வரை நாகர்கோவிலிலேயே கழிந்தன. முதலில் தமிழ்க்கல்வி வாய்ப்புக்காகவே நாகர்கோவிலுக்குக் குடியேறிய புலவரின் தாய்க்குடும்பம், மேற்கல்விக்காகவும் அங்கேயே தங்கிவிட்டது. அப்பாத்துரையார் உலகமொழிகள் பலவற்றையும் கற்றுப் புகழ்பெற வேண்டும் என அவருடைய தந்தை மிகவும் விரும்பினார். அவருடைய வழி காட்டுதலால் நான்காம் வகுப்புக்குச் செல்லுமுன்னரே, அந்நாளைய ஆங்கில ஏடுகளையும், ஆங்கில அறிஞர் ஜி.யு. போப்பின் நாலடியார், திருக்குறள் மொழிபெயர்ப்புகளையும், பிரம்மஞான சங்கம், 'ஹோம் ரூல்' இதழ்களைக் கற்கும் பழக்கமும் ஏற்பட்டது. பத்து வயதுக்குள் ஆங்கில மொழி அறிவு பெற அவர் தந்தை அளித்த

பயிற்சியே காரணம். ஆறாம் வகுப்பிலிருந்து சமசுகிருத மொழியும், ஏழாம் வகுப்பிலிருந்து இந்தியும் தன் சொந்த முயற்சியினால் கற்றுக் கொள்ளத் தொடங்கினார். முதல் வகுப்பில் மலையாளமே பாட மொழியாக இருந்ததால் மலையாள இலக்கிய அறிவைப் பெற முடிந்தது. பள்ளி நாள்களில் மட்டுமல்லாமல் கோடை விடுமுறை நாள்களில் குலசேகரன்பட்டினத்திலுள்ள 'பத்தம்மாள் ஏடகத்'தின் மூலம் தமிழ், ஆங்கில, சமசுகிருதச் சைவ சமய ஏடுகளையும், கல்லூரி முதலிரு வகுப்புகளில் நாகர்கோவில் ஸ்காட் கிறித்துவக் கல்லூரியின் ஏடகத்தின் மூலம் சமசுகிருத இலக்கியச் சமயச் சாத்திர ஆராய்ச்சிகளும், புதிதாக அங்குக் கிடைத்த வாய்ப்பினால், கிறித்தவ, இசுலாமியச் சமய நூல்களைப் படிக்கவும், கிரேக்க, இலத்தீன், பிரெஞ்சு, ஜெர்மன் மொழிகளின் அறிவும் அவற்றின் இலக்கிய அறிவும் பெற முடிந்தது.

திருவனந்தபுரத்தில் உள்ள மகாராசா கலைக்கல்லூரியில் பி.ஏ. ஆனர்ஸ் (1927 - 1930) படிப்பைத் தொடர்ந்தார். அங்கு ஆங்கில இலக்கியம் மட்டுமன்றி இந்தோ - அய்ரோப்பிய மூல மொழியியல் ஆராய்ச்சியிலும் சொல்லியல் ஆராய்ச்சியிலும் ஈடுபட வாய்ப்பு ஏற்பட்டது. 1930ஆம் ஆண்டு பி.ஏ. ஆனர்ஸ் பட்டத்துக்குரிய வாய்மொழித் தேர்வில் கலந்து கொள்ளச் சென்னை வந்தார். அப்போதுதான் 'திராவிடன்', 'ஜஸ்டிஸ்' ஆகிய தமிழ் ஆங்கில இதழ்களில் ஆறுமாதங்களும், பச்சையப்பன் கல்லூரியிலும் கூட்டுறவுத்துறையிலும் சில மாதங்கள் பணிபுரிந்தார். காரைக்குடியில் நடைபெற்ற காந்தி ஆசிரமக் குருகுலத்திலும், 'குமரன்' இதழில் ஆசிரியராகவும் துணை ஆசிரியராகவும் சிலகாலம் பணியாற்றினார். அதற்குப்பிறகு இரண்டாண்டுகள் முழுமையாக இந்திப் பிரச்சாரத்தில் ஈடுபட்டார். நெல்லை மாவட்டத்தில் நாசரேத் என்ற நகரிலும், பின் திருநெல்வேலி இந்துக் கல்லூரிப் பள்ளியிலும் இந்தி ஆசிரியராகப் பணியாற்றினார். பிறகு இந்தி எதிர்ப்பு இயக்கம் வலுப்பெற்றபோது இவரே முன்னணியில் நின்று இந்தித் திணிப்பை எதிர்த்துப் போராடினார். செட்டிநாடு கோனாபட்டில் சரசுவதி உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராக இரண்டாண்டுகள் பணியாற்றினார்.

### தந்தை பெரியாருடன் கா. அப்பாத்துரையார்

வைதீக வேதாந்தியாகவும், காந்தி பக்தராகவும், ஆங்கில, சமசுகிருத, இந்திப் பற்றாளராகவும் இருந்த அப்பாத்துரையார் தந்தை பெரியாருடன் ஏற்பட்ட தொடர்பினால் சீர்திருத்தவாதியாகவும், பெரியார், அண்ணா, புரட்சிக்கவிஞர் பாரதிதாசனின் சீடராகவும், தமிழ்ப்பற்றாளராகவும் மாறினார். அவருடைய எழுத்துகள் யாவும் திராவிட இயக்கத்தின் கொள்கை உறுதிக்குரிய நூல்களாக வெளிவந்தன. பெரியாருடைய தன்மான இயக்கத்தில் ஈடுபட்டதால்

ஒரு கூட்டத்தில் தனது பள்ளியிறுதிச் சான்றிதழையும் ஆங்கில எம்.ஏ. பட்டச் சான்றிதழையும் எரித்ததாகவும் குறிப்பிட்டுள்ளார். நாகர்கோயிலில் இருந்த போதே 1930ஆம் ஆண்டு முதல் பெரியார் அவர்களுடன் பன்மொழிப் புலவர் தொடர்பு கொண்டிருந்தார். நெல்லையில் இந்தி ஆசிரியராகப் பணியாற்றிய காலத்தில், இந்தி பற்றிய விவாதங்களுக்காகப் பெரியார் பன்மொழிப்புலவரைக் கல்லூரியில் அடிக்கடி சந்திப்பதுண்டு. 1943ஆம் ஆண்டு பாவேந்தர் பாரதிதாசன், அறிஞர் அண்ணா அவர்களின் துணையுடன், ஆதரவுடன் பன்மொழிப்புலவர் மனைவி அலமேலு அம்மையாருடன் சென்னையில் குடியமர்ந்தார். இவர் இந்தி ஆசிரியராகத்தான் தன் வாழ்க்கையைத் தொடங்கினார். பிறகு இந்தி எதிர்ப்பு இயக்கம் வலுப்பெற்றபோது இவரே முன்னணியில் நின்று இந்தித் திணிப்பை எதிர்த்துப் போராடினார். அந்தப் போராட்டங்களில் இவர் மனைவி அலமேலு அப்பாத்துரையும் ஈடுபட்டுச் சிறை சென்றார். திராவிட இயக்கம் நடத்திய ஒரு போராட்டத்தில் அப்பாத்துரையாரும் ஈடுபட்டுக் காவல்துறையினரின் தடியடிக்கு ஆளாகத் தவித்திருக்கிறார் என்பதும் இவரைப் பற்றி நினைவுகூரத்தக்க செய்தியாகும்.

'லிபரேட்டர்' என்ற ஆங்கில நாளேடு சென்னையில் டாக்டர் ஏ. கிருஷ்ணசாமியை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த பொழுது பாவேந்தர் பாரதிதாசன் உதவியுடன் உதவி ஆசிரியராகப் பத்து மாதங்களும், முத்தியால் உயர்நிலைப்பள்ளியில் இரண்டு ஆண்டுகள் ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார். 1947 முதல் 1949 வரை மைய அரசின் செய்தித் தொடர்புத்துறையில் (Public Information Bureau) பணியாற்றியபொழுது "India's Language Problem" (இந்தியாவின் மொழிச் சிக்கல்) என்ற ஆங்கில நூலை எழுதினார். இந்நூல் மறைமலையடிகளின் நாற்பது பக்க முன்னுரையுடன் வெளியிடப் பட்டது. இந்திய வரலாறு தென்பகுதியிலிருந்து தொடங்க வேண்டும் என்பதைக் குறிக்க இந்திய வரைபடத்தைத் தலைகீழாக வரைந்து நூலின் அட்டைப்படமாக அமைத்து வெளியிட்டதால் அப்பாத்துரையார் அரசுப்பணியிலிருந்து நீக்கப்பட்டார்.

1949ஆம் ஆண்டு முதல் 1959 வரை 11 ஆண்டுகள் அரசுப்பணி இல்லாமல் இருந்த காலத்தைக் கா. அப்பாத்துரையார் 'பொற்காலம்' என்று குறிப்பிடுகிறார். ஏனெனில்

> **இந்த ஓய்வைப் பயன்படுத்தி நூற்றுக்கும் மேற்பட்ட ஏடுகளை எழுதி என் வருவாயைப் பெருக்கிக் கொண்டேன். வளர்ந்து வந்த திராவிட இயக்கத்தை மேலும் வளர்க்கும் வாய்ப்பும் அதற்காகத் தியாகங்கள் செய்யும் பெரும் வாய்ப்புகளும் எனக்கும் அலமேலு வுக்கும் ஏற்பட்டன. என் வாழ்வின் பொற்காலம் என்றே இதைக் கூறலாம்**[4]

என்று குறிப்பிட்டுள்ளார் அப்பாத்துரையார். 1959ஆம் ஆண்டி லிருந்து 1965ஆம் ஆண்டு வரை அறிஞர் அண்ணா, பேராசிரியர் அன்பழகன் ஆகியோரின் உதவியினாலும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆங்கிலத் தமிழ் அகராதித் துறையில் டாக்டர் ஏ.சி. செட்டியாருடன் இணை ஆசிரியராகப் பணியாற்றிய பொழுது, அளவுக்கு மீறிய உழைப்பால் மயங்கி விழுந்த நிகழ்ச்சிகளும் உண்டு. 1961ஆம் ஆண்டு தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராக இருந்து தமிழ்த் தொண்டாற்றி வந்தார்.

இவருடைய வழிகாட்டலில் கவிஞர் கண்ணதாசன், கவிஞர் நாரா. நாச்சியப்பன், பொன்னி முருகு. சுப்பிரமணியம் போன்ற இலக்கியவாதிகள் உருவாகியுள்ளனர். தந்தை பெரியார், அறிஞர் அண்ணா, மறைமலையடிகள், திரு.வி.க., பாவேந்தர் பாரதிதாசன், கலைவாணர், ஜீவானந்தம் போன்றோரின் நட்புக்கும் அன்புக்கும் உரியவராக விளங்கினார். ஜஸ்டிஸ் கட்சியின் தமிழ் நாளேடான 'திராவிடன்', பெரியாரின் 'விடுதலை' இதழ் மற்றும் பொன்னி இதழிலும் பணியாற்றி வந்துள்ளார். இவர் எழுதிய 'தென்னாட்டுப் போர்க்களங்கள்' அறிஞர் அண்ணாவின் பாரட்டைப் பெற்றது. திருக்குறள்மணி விளக்க உரை போன்ற பல தமிழியல் ஆய்வு நூல்கள் என்றும் அறிஞர்களின் பாராட்டுக்கும் போற்றுதலுக்கும் உரியவை யாகும். திருக்குறளைப் பரப்புவதற்காகவே 'முப்பால் ஒளி' என்ற வரிசையையும் கொண்டு வந்தார். திருக்குறள் அறத்துப்பாலுக்கு மட்டும் 2000 பக்கங்களில் எழுதியுள்ள ஆங்கில உரையும், தமிழில் திருக்குறள் முழுமைக்கும் நான்கே வரிகளில் எழுதியுள்ள தெளிவுரையும் இன்னும் அச்சாகாமல் உள்ளன என்று 'முகம்' மாமணி (பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை, தினமணி 23.6.1996) குறிப்பிட்டுள்ளார். பல்வேறு ஆய்வுகளுக்கு இவர் முன்னோடியாக விளங்கினார். 'குமரிக் கண்டம்' அல்லது 'கடல் கொண்ட தென்னாடு' என்ற இவருடைய ஆராய்ச்சி நூல்தான் குமரிக்கண்டம் பற்றிய ஆய்வுக்கு வித்திட்டது என்று கூறுவர். 'விருந்து' இலக்கிய வரிசை என்று மாதம் ஓர் இலக்கியத்தைப் 'பொன்னி' இதழின் ஆசிரியராக இருந்தபோது கொண்டுவந்தது குறிப்பிடத்தக்க ஒரு பணியாகும்.

## பன்மொழிப்புலமை

அப்பாத்துரையார் தமிழ், ஆங்கிலம், இந்தி, சமசுகிருதம், மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளை நன்கறிந்தவர். பழைய புதிய மொழிகள் என ஆப்பிரிக்க மொழிகள் உள்பட நாற்பது மொழிகள் கற்றுக்கொண்டாலும் எழுத, படிக்க, பேச வாய்ப்பு இல்லாததால் அவை மறந்து போய்விட்டன என்று நினைவு கூர்கிறார். பன்மொழிப்புலமை என்பது அப்பாத்துரையாரின் குடும்ப மரபில்

வழிவழியாகத் தொடர்ந்து வந்துள்ளது. மொழிபெயர்ப்புப் பணிக்கும், அதற்கு உறுதுணையாக விளங்கும் சொல்லாக்கப் பணிக்கும் பன்மொழிப் புலமைத்திறம் அடிப்படையாக அமைந்தது. பல மொழிகளைக் கற்றுக்கொண்டாலும் தமிழ், மலையாளம், சமசுகிருதம், இந்தி, ஆங்கிலம் ஆகிய 5 மொழிகளில் பெரும் புலமை பெற்றவராகத் திகழ்ந்தார்.

இவர் எழுதிய 170 நூல்களில் 5 ஆங்கில நூல்கள். சுமார் 70க்கும் மேற்பட்ட நூல்கள் மொழிபெயர்ப்பாகவும், தழுவலாகவும் வெளிவந்துள்ளன. கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி, சென்னைப் பல்கலைக்கழக அகராதி, சட்டச்சொல் அகராதி ஆகியன பன்மொழிப் புலவர் அறிவுத் திறத்தை வெளிக்காட்டுவனவாகும்.

## மொழிபெயர்ப்புப்பணி

உலகின் பல மொழிகளில் வெளிவந்த சிறந்த படைப்பிலக்கியங்களையும், சமூக, அரசியல், தத்துவம் ஆகிய துறை சார்ந்த நூல்களையும் கா. அப்பாத்துரையார் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார்.

ஜேம்ஸ் ஆலன், ஷேக்ஸ்பியர், லியோ டால்ஸ்டாய் செர்வாண்டிஸ், சார்லஸ் டிக்கன்ஸ், சார்லஸ் கிங்ஸ்லி, சார்லஸ் லேம்ப், செஸ்டர்டன், செஸ்டர்பீல்ட், ஜான்கே, ஜேன்அயர், தாமஸ்டே, வில்லியம் கூப்பர், ஹேரேஸ் வால்போல், கோல்ட்ஸ்மித், ஹரால்ட் லஸ்கி, தாமஸ்ஹார்டி, கில்பர்ட் ஸ்லாட்டர், பிளேட்டோ, ரூசோ, காரல்மார்க்ஸ், பெஞ்சமின் பிராங்க்ளின், லேடி முரசாக்கி, கால்டுவெல், எம்.என். ராய் ஆகிய பல புகழ்பெற்ற அறிஞர்களின் எழுத்துகளைத் தமிழில் மொழிபெயர்ப்பாகவும் தழுவலாகவும் வழங்கியுள்ளார்.

1935 ஆம் ஆண்டுக்கு முன் கா. அப்பாத்துரையார் கவிதை எழுதுவதில் நாட்டம் கொண்டிருந்தார். இதற்குப் பின்னரே மொழிபெயர்ப்பில் நாட்டம் செலுத்தினார். இவர் முதன் முதலாக மொழிபெயர்த்த நூலைப்பற்றிக் குறிப்பிடும் பொழுது

> மருத்துவத்துறையைச் சீர்திருத்தம் செய்த பிளாரன்ஸ் நைட்டிங்கேல், சிறைச் சீர்திருத்தம் செய்த திருமதி ஃபிரை ஆகியோரின் வரலாறுகளைத் தமிழாக்கம் செய்து கொடுத்தேன். இவ்வேலைக்கு என் உணவு போக ரூ. 5 தரப்பட்டது. இத்தொகையைத் தாய்க் குடும்பத்துக்கு அனுப்பி வைத்தேன்.
>
> இச்சமயம் நாகர்கோவிலில் பி. சிதம்பரம்பிள்ளை என்ற பெருமகனார் இருந்தார். அவர் இயற்றிய ஓர் ஆங்கில நூலைத் திருவரங்கனார் என்னிடம் கொடுத்து மொழி பெயர்க்கச்

> **செய்தார். அந்தப் பணிக்காக எனக்கு ரூ. 25 கொடுத்தார்கள். அந்தத் தொகை அப்போது எனக்குப் பெரும் சொத்தாக விளங்கியது**[5]

என்று தனது முதல் மொழிபெயர்ப்பு அனுபவத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறார் கா. அப்பாத்துரையார். இதற்குப்பின் எம்.எஸ். பூரணலிங்கம்பிள்ளை 'Ravana the great' என்ற நூலுக்கு வேண்டிய தமிழிலுள்ள சான்று நூல் பகுதிகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வழங்கி ரூ. 25 ஊதியமாகப் பெற்றுள்ளார். இவ்வாறு தொடங்கிய மொழிபெயர்ப்புப் பணி, பல தலைசிறந்த நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட ஊக்கமளித்துள்ளது.

> ***1936–37 ஆண்டுகளில் திருநெல்வேலியிலுள்ள நாசரேத் பகுதியில் இந்திப் பிரச்சாரம் நடத்தினேன். பிறகு இந்துக் கல்லூரியில் இந்தி ஆசிரியனாகவும் பணியாற்றினேன். அச்சமயம் எனக்குத் திருமணம் ஆயிற்று. குடும்பச் சுமை அதிகரித்தது. அப்போது பிரம்ம சமாஜத்தின் செயலாளராக இருந்த திரு. பிச்சையப்பப் பிள்ளை என்பவருக்காகப் பிரம்ம சமாஜத்தின் பெருந்தலைவர் கவிஞர் தாகூரின் தந்தையான மகரிஷி தேவேந்திரநாத் தாகூர் ஆங்கிலத்தில் தன் வரலாற்றை எழுதியிருந்தார். அதைத் தமிழாக்கம் செய்து கொடுத்தேன்.***[6]

என்று தமது முதல் அனுபவத்தைப் பற்றிக் கூறியுள்ளார். அவருடைய முதல் எழுத்து அனுபவமே மொழிபெயர்ப்பில் தொடங்கியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

இலக்கியம், பொது மற்றும் தன் வரலாறு, சமூகவியல், வரலாறு, மொழி, அரசியல், தத்துவம், கட்டுரைகள், நாவல், சிறுகதை, நாடகம் ஆகிய பிரிவுகளில் இவருடைய மொழிபெயர்ப்பு நூல்கள் இடம்பெறுகின்றன.

## இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு

'The Dravidian Elements in Indian Culture' என்ற நூலை 1920-இல் 'கில்பர்ட் சிலேட்டர்' என்னும் இங்கிலாந்து நாட்டு அறிஞர் ஆங்கிலத்தில் எழுதினார். இந்நூல் திராவிடர் நாகரிகத்தின் தோற்றம் பற்றியும் இந்திய நாகரிக முழுமையிலும் அது கொண்டுள்ள பங்கு பற்றியும் விளக்கும் ஆராய்ச்சி நூலாகும். இதை அறிஞர் கா. அப்பாத்துரையார் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இந் நூலை 1955 (நவம்பர்)ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளது. அப்பாத் துரையார் இந்நூலைப் பற்றிப் பின்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

கில்பர்ட் சிலேட்டர் இந்நூலை எழுதிய காலம் சிந்துவெளி நாகரிகம் புதிதாக அகழ்ந்து காணப் பட்டதை அடுத்ததாகும். இந்தியாவின் மூலத் தொல்பழ நாகரிகமாகிய திராவிட நாகரிகம் எகிப்திய, சுமேரிய நாகரிகங்களைத் தாண்டி மேம்பட்டும் அவற்றுக்கு முற்பட்டும் உள்ளது என்பதும், அஃது இந்தியா முழுவதும், இலங்கையில் கூடப் பரவி யிருந்தது என்பதும் அதன் பின்னரே வெளிப்பட் டுள்ளன. ஆயினும் இந்நிலையில் கூட, சிலேட்டர் இந்தியாவின் அடிப்படை நாகரிக, சமய, பண்பாட்டுக் கூறுகள் திராவிடச் சார்பானவை என்பதையும், அவை சுமேரிய மற்றும் எகிப்துடனும் ஆரியர் வருகைக்கு நெடுநாள் முற்பட்டே, வரலாற்றுக்கு முற்பட்ட காலம் என்று நாம் குறிப்பிடும் எகிப்திய – சுமேரிய – சிந்துவெளி நாகரிக காலங்களுக்கும் முற்பட்டே ஆப்பிரிக்கா, ஆசியா, ஐரோப்பா எங்கும் பரந்து உலவிய பரிதிக்கல் வணக்க நாகரிகமென்னும் கடலோடி நாகரிகத்துடனும் தொடர்புடையதென் பதையும் அக்காரணங்களாலேயே அஃது உலகளாவிய நாகரிகப் பண்பாட்டுத் தொடர்பு களுடையதாய் இன்றும் நிலவுகிறது என்பதையும் இந்நூலில் விளக்கியுள்ளார்.

திராவிடரின் வானநூலாராய்ச்சித் திறம் பற்றிய குறிப்பு அறிவியல் துறையில் திராவிட நாகரிகத்தின் அடிப்படையை ஆராயப் புகுவோர்க்கு நல்ல தூண்டுதலாகும்[7]

என அப்பாத்துரையார் இந்நூலைப் பற்றிய தமிழாக்கக் குறிப்பை வழங்கியுள்ளார்.

இந்நூலைச் செம்மையான மொழி நடையில் மொழி பெயர்த்துள்ள அப்பாத்துரையார் ஆங்காங்குத் தமிழாக்க அடிக் குறிப்புகள், குறிப்புரைகள் மூலம் ஆராய்ச்சியுலக முடிபுகளையும், தம்முடைய கருத்துகளையும் அக்குறிப்புகளில் வழங்கியுள்ளார்.

வேதப்பழமைக்கு அணித்ததாகக் கூறக்கூடிய எதுவும் திராவிடச் செற்பத்தில் கிட்டாவிட்டாலும் அது பற்றிய செய்திகள் மொத்தத்தில் திராவிட நாகரிகம் ஆரிய நாகரிகத்தைவிடப் பேரளவு பழமையானது என்பதைக் காட்டுபவையாகவே உள்ளன. இலக்கிய வகையிலும் நிலை இதுவே. இன்றிருக்கும் இலக்கியத் துறையில் தமிழிலோ மற்ற எந்த மொழியிலோ மிக உயர்ந்த பழமைக்குரிய இலக்கியம் இருப்பதாகக் கூறமுடியாது[8]

என்று அறிஞர் கில்பர்ட் சிலேட்டர் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தை மறுக்கும் வகையில் அப்பாத்துரையார் நீண்ட விளக்கம் ஒன்றை அடிக்குறிப்பாக (ப. 59) வழங்கியுள்ளார்.

ஆசிரியர் முடிபுக்கு மாறுபட்ட கீழ்க்கண்ட செய்திகள் கவனிப்புக்குரியவை:

> வட இந்தியத் தாய்மொழி இலக்கியங்கள் பெரும் பாலும் 16ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவை. தென்னாட்டு மொழிகளின் இலக்கியங்கள் யாவுமே இதற்கு நான்கு நூற்றாண்டுகள் முற்பட்டவை. அதுமட்டுமன்று. கன்னட மொழியின் இலக்கியம் வடஇந்தியத் தாய்மொழி இலக்கியங்களுக்கு ஏழு நூற்றாண்டுகளுக்கும், தமிழ் இலக்கியம் குறைந்தது 16 நூற்றாண்டுகளுக்கும் முற்பட்டவை. மேலும் தென்னாட்டின் எல்லா மொழிகளிலுமே திராவிட இலக்கியம் அழிக்கப்பட்டும் அழிந்தும் வந்துள்ளது. பண்டைத் திராவிடச் சிற்பத்தின் அழிபாட்டின்பின் அவற்றின் கலைப்பண்புடன் அவ்வழிபாட்டின் மீது புதுக் கோயில்கள் இடைக்காலத்தில் கட்டப்பட்டன போலவே, பழைய திராவிட இலக்கியங்கள் பெரிதும் அழிந்த பின் இடைக்காலத்தில் அவற்றின் இலக்கியப் பண்பைப் பயன்படுத்திப் புத்திலக்கியங்கள் எழுந்துள்ளன என்பது கூர்ந்து கவனித்துணரத்தக்கது. குறிப்பாகத் தமிழில் திருக்குறளும் சங்க இலக்கியமும் தொல்காப்பியமும் பழம்பேரிலக்கியத்தின் பகுதிகளாக எஞ்சியுள்ளன. அத்துடன் அவற்றுக்கு முற்பட்ட அவற்றினும் பாரிய அகல் இலக்கிய இலக்கண வளம் இருந்தது என்பதற்கான முழுநிறை சான்றுகள் உள்ளன

என இதற்கான சான்றுகளை அளித்துள்ளார்.

மூலநூலில் உள்ளவற்றை அப்படியே தமிழில் மொழி பெயர்த்துத் தருவது ஒரு மொழிபெயர்ப்பாளரின் பணி என்றாலும் மூலநூலில் உள்ள சில செய்திகளை மறுத்து அதற்கான சான்றுகளை அளித்துள்ள இம்முறையானது அப்பாத்துரையாரின் ஈடுபாட்டையும், பொறுப்புணர்ச்சியையும் காட்டுகிறது. மொழிபெயர்ப்பாளர் எதனையும் தாமாகச் சேர்த்தல் கூடாது என்ற பொதுவான விதிமுறைகள் இருப்பதால் அக்கருத்துகளை அடிக்குறிப்புகளாகவே இவற்றை வழங்கியுள்ளார்.

ஜேம்ஸ் ஆலன் எழுதிய 'மக்களும் அமைப்புகளும்' என்ற நூலையும் கா. அப்பாத்துரையார் மொழிபெயர்த்துள்ளார். சமூகவியல் நோக்கில் இவ்விரண்டும் சிறந்த ஆய்வு நூல்களாக மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன.

பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையாரின் மொழி பெயர்ப்பு நூல்களுள் 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்' என்ற நூல் குறிப்பிடத்தக்கதாகும். ஏனெனில் பண்டைய தமிழக வரலாற்றைத் தக்க சான்றுகளுடன் எடுத்தியம்பும் ஆழ்ந்த ஆராய்ச்சிக் கருத்துகள் நிரம்பியது இந்நூல். 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட உலகின் அரசியல் பிரிவுகள், பண்டைத் தமிழ் இலக்கியம், தமிழ்நில இயல் பிரிவுகள், வெளிநாட்டு வணிகம், தமிழ்க் கிளை இனங்களும் கிளைகளும், சேர, சோழ, பாண்டியர் ஆட்சி, சமூக வாழ்வு, சமய வாழ்வு ஆகியன பற்றி ஆங்கிலத்தில் வி. கனகசபை எழுதியுள்ள 'The Tamils Thousand and Eight Hundred Years ago' என்ற நூலை 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்' என்ற தலைப்பில் கா. அப்பாத்துரையார் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இந்நூல் ஆங்கில மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது என்ற எண்ணம் வாசகர்களுக்கு எழும் வாய்ப்பு இல்லாதவாறு கா. அப்பாத்துரையார் மொழிபெயர்ப்பு சிறப்பாக அமைந்துள்ளது. இந்நூலை எளிய திட்ப நுட்பம் வாய்ந்த தமிழில் மொழிபெயர்த்தளிக்க இசைந்ததுடன் காலத்துக்கேற்ற அடிக்குறிப்புகள், விளக்கங்கள் ஆகியவை இணைத்து அதை இன்றைய தமிழர் அறிவுச்சூழலுடன் அறிந்து கொள்ள உதவியுள்ளார்.

கால்டுவெல்லின் ஒப்பிலக்கணத்தைத் தமிழில் முதன் முதலாக மொழிபெயர்க்கும் முயற்சியில் 1941 ஆம் ஆண்டில் ஈடுபட்டார். இது இந்நூலின் சுருக்க மொழிபெயர்ப்பாக வெளிவந்துள்ளது. காழி சிவ. கண்ணுசாமி பிள்ளையும் கா. அப்பாத்துரையாரும் இணைந்து **'கால்டுவெல் ஒப்பிலக்கணம்' கிரீயர்ஸன் மொழியாராய்ச்சிக் குறிப்புகளுடன்** என்ற தலைப்பில் தமிழில் மொழிபெயர்ப்புச் செய்து நூலை வெளியிட்டனர். இதற்குப் பின்னர்த் தெ.பொ. மீனாட்சிசுந்தரம், 'கால்டுவெல் ஒப்பிலக்கணம் - அடிச்சொற்கள்' என்ற தலைப்பிலும், கால்டுவெல் ஒப்பிலக்கணம் (ஒலி, வேர்ச்சொல்) என்ற தலைப்பில் கா. கோவிந்தன் (1955) அவர்களும் தமிழில் வெளியிட்டுள்ளனர். **திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்** எனும் தலைப்பில் மீண்டும் கா. கோவிந்தன், தா. சிங்காரவேலு அவர்களுடன் இணைந்து (டிச. 1959) தமிழில் மொழிபெயர்ப்பாக வெளியிட்டுள்ளார். பிறகு டாக்டர் கால்டுவெல் - திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' எனும் தலைப்பில் கா. கோவிந்தன், க. ரத்னம் அவர்களுடன் இணைந்து மொழிபெயர்த் துள்ளார். கா. கோவிந்தன் கால்டுவெல்லின் ஒப்பிலக்கணத்தைத் தமிழில் மூன்று முறை வழங்கியுள்ளார் என அறியமுடிகிறது.

## இலக்கியம்

சக்ரவர்த்தி நயினார் ஆங்கிலத்தில் எழுதிய நூல்களான 'இராவணன் வித்யாதரனா?', 'நீலகேசி' (தமிழ் ஜைனக் காப்பியம்) ஆகிய இரு நூல்களையும் கா. அப்பாத்துரையார் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

## கட்டுரைகள்

சார்லஸ் லாம்ப் எழுதிய 'ஈலியாவின் கட்டுரைகள்', வில்லியம் காபெட் எழுதிய 'நல்வாழ்வுக் கட்டுரைகள்' ஆகிய இரு நூல்களும் கட்டுரைகள் வரிசையில் கா. அப்பாத்துரையாரின் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன.

## கடிதங்கள்

வில்லியம் கௌபரின் கடிதங்கள், ஹோரேஸ் வால்போல் கடிதங்கள், செஸ்டர் பீல்டின் கடிதங்கள் ஆகியனவும் கா. அப்பாத்துரையாரின் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன.

## அரசியல் தத்துவ நூல்கள் – மொழிபெயர்ப்பு

கார்ல்மார்க்சின் 'முதலீடு' (Capital), ரூசோவின் 'சமூக ஒப்பந்தம்' (The Social Contract), 'குடியாட்சி' (Democracy), 'பொது உடைமை', 'போதும் முதலாளித்துவம்', 'சமதர்ம விளக்கம்', 'பொருளியல்வாதம்' ஆகிய அரசியல் தத்துவ நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். பட்டாபி சீதா ராமைய்யா எழுதிய காங்கிரசுக்கு ஏன் ஓட்டுப் போட வேண்டும்? (Why Vote for Congress) என்ற நூலையும் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். பொது உடைமைக் கோட்பாட்டில் ஈடுபாடு கொண்டுள்ளதால் அந்த நோக்கத்தை வலியுறுத்தும் நூல்களை மொழிபெயர்ப்பாகவும் தழுவலாகவும், சுருக்கமாகவும் நூல்களை எழுதி வெளியிட்டார். சான்றாக, கார்ல்மார்க்சின் 'தாஸ் கேபிடல்' நூலைத் தமிழில் மிகச் சுருக்கமாக 'மூலதனம்' என்ற பெயரில் தமிழில் மொழிபெயர்த்த முதல் மனிதர் என்ற சிறப்புக்குரியவர் கா. அப்பாத்துரையார். சாமிநாதசர்மாவின் மொழி பெயர்ப்பு ரூசோவின் 'சமுதாய ஒப்பந்தம்' சாமிநாதசர்மாவின் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளது. ஆனால் அப்பாத்துரையார் அந்நூலை மீண்டும் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். இத்தகைய நூல்களை மொழிபெயர்க்கக் காரணத்தைச் சுரேஷ் வைத்யாவின் சமதர்ம விளக்க நூலின் மொழிபெயர்ப்பின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

> இந்தியாவின் மற்றப் பகுதிகளையும் விடத் தமிழகத்தில் சீர்திருத்த இயக்கமும் அறிவியக்கமும் ஓரளவு நன்கு பரவியுள்ளன. ஆயினும் இவ்வியக்கங்கள் பெரும்பாலும் காங்கிரசுக்கும் மற்ற எல்லா இந்தியப் பரப்புடைய கட்சிகளுக்கும் புறம்பேயுள்ள தமிழகத் தனிக்கட்சியினராலேயே நடத்தப்பட்டு வருவதால், பல தேசியவாதிகள் இவற்றை மாகாண மனப் பான்மை வகுப்பு மனப்பான்மை என்று கூறிப் பொதுமக்களை அவ்வகையில் தப்பெண்ணம் கொள்ள வைக்கின்றனர். உண்மையான சமதர்மம் எந்தத் தேசீயத்திற்கும் மாறுபட்டதல்ல. அதன் அடிப்படைக் குறிக்கோள் தேச, மாகாண, மொழி வகுப்பு எல்லை களைக் கடந்தது. தமிழகத்திற்கும் தென்னாட்டிற்கும் மட்டுமின்றி, பிற இந்தியப் பகுதிகளுக்கும் உலகப் பகுதிகளுக்கும் பொதுவான இவ்வறிவியக்கக் கருத்துக்களைத் தமிழகத்தில் பல கோட்பாட்டினரும் பல கட்சியினரும் அறிந்து தெளிவுபெற வடநாட்டின் தேசிய சமதர்ம அறிஞருள் ஒருவரான ஆசிரியர் சுரேஷ் வைத்யாவினால் இயற்றப் பெற்ற இச்சிறு நூலின் தமிழாக்கம் உதவுமென்று நம்புகிறோம்[9]

என அப்பாத்துரையார் குறிப்பிட்டுள்ளார். இம்மொழிபெயர்ப்பு நூல்கள் 1950களில் பலரும் படித்துப் பயன்பெறக்கூடியனவாக இருந்தன. ஆகையால் சிறந்த நூல்கள் மீண்டும் மீண்டும் மொழி பெயர்ப்பில் இடம்பெறுகின்றன.

**நாவல்**

இரு நகரக் கதை, ஜேன்அயர், கடல்மறவர், குழந்தை உலகம், மருதூர் மாணிக்கம், மலைநாட்டு மங்கை, தாயகத்தின் அழைப்பு, பேரின்பச் சோலை, கெஞ்சிகதை, இந்துலேகா, பாலும்பழமும், அறக்கோட்டம், வாடாமலர், ஆகிய நாவல்கள் பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையாரின் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன. இம்மொழிபெயர்ப்புகள் ஆங்கிலம், மலையாளம், இந்தி ஆகிய மொழிகளிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட நூல்களாகும்.

**கெஞ்சி கதை (Genji Kathai - A Tale of Genji - Japanese classic by Lady Murasaki)**

கெஞ்சி கதை ஜப்பானிய மொழியில் 10ஆம் நூற்றாண்டில் வெளிவந்த நாவலாகும். இந்நூல் ஆங்கிலத்தில் 1944ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. இதை உலகத்தின் முதல் நாவல் என்றும், நம்ம ஊர் விக்கிரமாதித்தன் கதை போன்றது என்றும் அப்பாத்துரையார் குறிப்பிடுகிறார். இதன் ஆசிரியர் லேடி முரசாக்கி. கெஞ்சிகதை

ஹியான் ஆட்சி மரபுக்குரிய தலைசிறந்த எழுத்தாளரான முரசாக்கி சீமாட்டியால் (கி.பி. 975 - 1031) இயற்றப்பட்ட நெடு நீளமான நாவல் ஆகும். இவர் ஜப்பானியப் பேரரசியான ஜோதோ மோனின் தோழியாக இருந்தவர். ஜோதோமோன் இக்கதையை எழுதப் பெரிதும் ஊக்கப்படுத்தியுள்ளார். கெஞ்சி கதைகள் மொத்தத்தில் 54 சுவடிகளில் கூறப்பட்ட கதைகளாகும். இதில் 51 சுவடிகள் கதையின் நாயகனான கெஞ்சி ஹிக்காருப் என்பவனின் வாழ்க்கை பற்றியதாகும். காதலும், வீரமும் கலந்த சுவைமிக்க பகுதியாகும். கடைசி மூன்று சுவடிகளும் ஹிக்காருவின் புதல்வனைப் பற்றியதாகும். ஜப்பானிய இலக்கியத்தின் பொன்னேடுகளுள் ஒன்றாகக் கெஞ்சி கதைகளை (A Tale of Genji) முதன்மை வாய்ந்த இந்திய மொழிகள் எல்லாவற்றிலும் மொழி பெயர்க்கும்படி சாகித்திய அகாதெமி கேட்டுக் கொண்டது. இவ் வேண்டுகோளை ஏற்று அப்பாத்துரையார் தமிழில் மொழிபெயர்த்து வழங்கினார். 1965ஆம் ஆண்டில் சாகித்திய அகாதெமி இந்த நாவலை வெளியிட்டுள்ளது.

> அரண்மனை வாழ்வில் நடைபெற்ற எல்லா நிகழ்ச்சி களையும் அதன் பெருமக்களிடையே பிறங்கிய பிணக்கு பூசல்கள், காதல் ஊடாட்டங்கள், மென்னய மிக்க சூழ்ச்சி உட்சூழ்ச்சிகள் – ஆகிய அனைத்தையும் அவர் இடைவிடாது கூர்ந்து கவனித்து வந்தார். இக்காட்சியறிவையும் அதன் உள்ளப் பதிவுகளையும் அடிப்படையாகக் கொண்டுதான் ஒப்புயர்வற்ற நடை நயவனப்புடன் கூடிய இந்தப் பெருங்கதை வண்ணக் கதையாக எழுந்துள்ளது

என்று இந்நூலின் முன்னுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

> தற்போதைய தமிழாக்கம் வண்ணக்கதை முழுவதையும் உள்ளடக்கியதன்று. அதன் ஒரு பகுதியையே உட் கொண்டதென்று அறிகிறேன். ஆனால் இந்நிலையில் கூட ஓராயிரம் ஆண்டுகட்கு முன் இயற்றப்பட்ட இந்த ஜப்பானியக் கலைப்படைப்பின் சீர்த்திமிக்க நேர்த்தியை வாசகர் எளிதில் காணமுடியுமென்றே நம்புகிறேன். இவ்வண்ணக் கதையில் மக்கள் உளங்கவர்ந்த ஓர் இளம் பெருமகனின் காதல் தேட்டங்களிடையேயும், அதன் மாயப் புயல்களில் சிக்கி மாழ்குறும் வனிதையரின் துயரிடையேயும் ஆசிரியர் வாசகர்களின் கருத்தோட விடுகிறார். அவ்விடங்களில் மனித இன நலங்களிலும், ஆடவர் பெண்டிர்க்குரிய மென்தொடர்புகளினால் உருவாகும் நுண்ணயமிக்க உளப்பாட்டுப் பாங்குடைய நல்ல கட்டங்களிலும் ஆசிரியர் கொண்ட உள் நோக்கும் ஒத்துணர்வும் எவ்வளவு சீரியன என்பதைக் கண்டு வாசகர்கள் வியப்பார்வமுறாமலிருக்க முடியாது.

> அது மட்டுமன்று, அந்நாளைய பழக்க வழக்கங்கள், சமுதாய மரபுகள் மீது தம் கூரொளி விளக்கம் காட்டி வழுவற மதிப்பிடும் ஆசிரியர் திறம்; அறிவார்ந்த அம்முடிவுரைகளை இலக்கியத்துறைக்குரிய நுண்ணிய நேர்மை தவறாமல் வகுத்துணர்த்தும் அவரது ஆற்றல் ஆகியவை எவரது உள்ளத்தையும் தன் வயப்படுத் தாமலிருக்க முடியாது[10]

மிகப் பழமையான ஜப்பானிய நாவலைப் பற்றித் தமிழர்கள் அறிந்து கொள்ளவும், அவர்களுடைய அக்கால வாழ்க்கை முறை, பண்பாடு, மரபுகளை அறிந்து கொள்ளவும் இந்த நூல் பயன்படும் என்ற கருத்தில் கா. அப்பாத்துரையாரின் மொழிபெயர்ப்பில் சாகித்திய அகாதெமி இந்நூலை வெளியிட்டுள்ளது. சுமார் 400 கதாபாத்திரங்கள் கொண்ட இந்நாவல் உலகில் புகழ்பெற்ற நாவல் வரிசையில் குறிப்பிடத்தக்கதாகும்.

## இந்துலேகா

கா. அப்பாத்துரையார் மொழிபெயர்த்த 'இந்துலேகா' மலையாளத்தில் சந்துமேனேன் எழுதிய முதல் நாவலாகும். இந்நாவல் 1889இல் எழுதப்பட்ட மலையாள உரைநடை இலக்கியத்திற்கு முன்மாதிரியாக அமைந்ததுடன் மலையாள இலக்கியவாதிகளுக்கு, கருவூலமாகத் திகழ்கிறது. பலமொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு இடம்பெற்ற இந்நாவலை மொழிபெயர்த்துத் தமிழில் இடம்பெறச் செய்த பெருமை பன்மொழிப்புலவர் அப்பாத்துரையாரைச் சாரும். சந்துமேனன் இந்நாவலில் பெண்கல்வியை வலியுறுத்தி எழுதி யுள்ளார். பெண்கள் ஆங்கிலக்கல்வி கற்கவேண்டுமென்று பிரச்சாரம் செய்த அவர் தமது நாவல் வெளிவந்தவுடன் முதல் பிரதியை ஒரு ஆங்கிலேய நண்பருக்குத்தான் அனுப்பினார். அத்துடன் அவர் எழுதிய கடிதத்தில்,

> இந்தப் புத்தகத்தை நான் என் மனைவியின் விருப்பத்திற்காகவும் எனது மலையாள வாசகர்களே இப்படியான ஒரு புதிய இலக்கியக் கதையை விரும்பி படிப்பார்களா என்று அறியவும் எழுதினேன். அன்றியும் எனது நாயர் சமூகத்துப் பெண்கள், தமக்கு இயல்பாக உள்ள அறிவுடனும் அழகுடனும் ஆங்கிலக் கல்வி பெற்றுக் கொண்டார்களானால் சமூகத்தில் அவர்கள் மிகுந்த செல்வாக்குப் பெறுவார்கள் என்பதை எனது மலையாள சகோதரர்களுக்கு எடுத்துக் காட்ட விரும்பினேன்[11]

என்று குறிப்பிட்டுள்ளார். பெண் கல்வியை வலியுறுத்தி அக்காலத்தில் இந்நாவல் வெளிவந்தது பெருஞ்சாதனையாகும்.

ஸ்பானிஷ் மொழியில் செர்வாண்டிஸ் எழுதிய 'டான்குவிக் சோட்' என்ற கதையை 'மருதூர் மாணிக்கம்' என்னும் தலைப்பில் தழுவலாக அமைத்துள்ளார் அப்பாத்துரையார்.

> ஸ்பானிஷ் மொழியின் ஷேக்ஸ்பியர் என்று அழைக்கப் படும் புனைகதை ஆசிரியர் செர்வான்டிஸால் இயற்றப்பட்டது. அது மேலை உலக மொழிகள் எல்லாவற்றிலும் எத்தனையோ தடவை, எத்தனையோ வடிவங்களில் மொழிபெயர்க்கப் பெறும் பெருமை உடையது. ஆயினும் அதில் தீட்டப்பட்டுள்ள 'உலா வீரப்பண்பு' (chivalry) மேலைநாட்டு மரபுக்கே உரிய தனிச்சிறப்புடைய பின்னணியாதலால் கீழை உலக மொழிகளில் அது 'மொழிபெயர்க்கப்பட முடியாத தழுவிக்கூட எழுதப்பட முடியாத நூலாக இதுவரை கருதப்பட்டு வந்துள்ளது. ஆயினும் பின்னணியையும் தக்க முறையில் நாடு பெயர்த்தது. பண்பு பெயர்த்தது, இத்தமிழாக்கம் அதன் அகலத் தழுவலாகித் தமிழுக்கு அளிக்கப்படுகிறது[12]

என இந்நூலில் முன்னுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

தாமஸ் ஹார்டியின் 'ரிடர்ன் ஆப் த நேடிவிடி' (Return of the Nativity) புகழ் பெற்ற ஒரு நாவலாகும். 19ஆம் நூற்றாண்டில் எல்லை கடந்து இருபதாம் நூற்றாண்டிலும் பெரு வாழ்வு வாழ்ந்த படைப்பாளிகள் ஒருவர் தாமஸ் ஹார்டி. 1840 இல் பிறந்து 1928 இல் உயிர்நீத்தார். இவர் மறைந்தபோது 19ஆம் நூற்றாண்டு அப்போதுதான் மறைந்தது என்று மக்கள் கருதினராம். வாழ்க்கையின் ஒரு பகுதியை, ஒரு நாட்டின் தனிப்பின்னணியுடன் ஒரு தனிப்பண்பைக் குறுகி நுணுகி ஆய்ந்து தீட்டி, ஒரு தனித்துறையின் முடிசூடா மன்னனாய் விளங்கியவர் ஹார்டி. டிக்கன்ஸ், தாக்கரே போன்ற புகழ்பெற்ற படைப்பாளிகளைப் போலவே மெரிடித், ஹார்டி இருவரும் இணைதுணையாக விளங்கினர். வால்ட்டர் ஸ்காட் ஸ்காட்லாந்தையும், இங்கிலாந்தின் எல்லைப்புறத்தையும் சித்திரித்து அதன் பெருங் காப்பியங்களாகத் தம் புனைகதைகளைத் தீட்டியது போல் ஹார்டி தம் கதைகளனைத்தையும் வெஸ்ஸெக்ஸ் நாட்டுப்புற வாழ்வின் பெருங்காவியமாக்கினார். கிராம வாழ்க்கை முறைகளை, பெண்களின் துன்பங்களைச் சித்திரிப்பதில் ஹார்டி வல்லவராகத் திகழ்ந்தார். ஹார்டியின் Return of the Nativity, Far From Madly Crowd, Under the Greenwood Tree, என்ற மூன்று தலைசிறந்த நாவல்களிலும் இத் தன்மைகள் பொதுவாக இருப்பதைக் காணலாம். இத்தகைய சிறப்புமிக்க படைப்புகளைத் தேர்வு செய்து பன்மொழிப்புலவர் தமிழில் மொழிபெயர்த்தார்.

### மலைநாட்டு மங்கை

அசாமிய இலக்கியத்தில் சிறந்த வரலாற்று நாவலாசிரியராக விளங்கியவர் 'ரஜனிகாந்த் பர்தலீ' என்பவர். 'மீரி ஜீயரி', 'மனோமதி, தந்துயா துரோஹம், ரங்கீலி, நிர்மல பக்தன், தாமிரேசுவரி மந்திர், ரஹதாய் லிகிரி, ராதா - ருக்மணி, ஆகிய புகழ்பெற்ற நாவல்களைப் படைத்து வழங்கியுள்ளார். இதில் இவர் 1895ஆம் ஆண்டில் எழுதிய மீரி ஜீயரி' ('மீரி மகள்') இவருடைய முதல் நாவலாகும். 'மீரி' அல்லது 'மிச்விங்' என்ற பெயருடைய அசாமியப் பூர்வ குடிகளின் வாழ்க்கையை மையமாகக் கொண்ட இக்கதையைத் தமிழில் 'மலைநாட்டு மங்கை' என்ற பெயரில் கா. அப்பாத்துரையார் மொழிபெயர்த்துள்ளார். இந்நாவல் இவருடைய பிற மொழிபெயர்ப்பு நூல்களிலிருந்து வேறுபட்டதாகும். மீரிப் பழங்குடிகளை நன்கறிந்த அசாமிய வரலாற்று நாவலாசிரியரான ரஜனிகாந்த் பர்தலீயின் எழுத்துகளை அந்த மண்ணின் இயற்கை மணம் மாறாமல் வழங்கியுள்ளார் மொழிபெயர்ப்பாசிரியர் கா. அப்பாத்துரையார். இந்நாவல் அசாமிய மொழியிலிருந்து இந்தி மொழியில் 'பிரிஞ்சி குமார் பருவா'வால் மொழிபெயர்க்கப்பட்ட நூலைக் கொண்டு தமிழில் வெளியிடப்பட்டுள்ளது. இந்தியில் இந்நாவலை மொழி பெயர்க்கும்பொழுது

> நாவல் போன்ற அகன்றதோர் இலக்கிய அருங்கலைப் படைப்பினை ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு வடிவு பெயர்ப்பதென்பது எளிதான காரியமன்று. அதிலும் சமுதாயப் பின்னணியும் தாய்நிலை இயற்கை அழகு நயங்களும் மொழியுடன் மொழியாகப் பின்னி இழைந்துள்ள ஒரு மூல நாவல் வகையில், இம்முயற்சி இன்னும் சிக்கல் வாய்ந்ததாகும். குறிப்பிட்ட இந்நாவல் வகையில் மூல நூலுக்குரிய தனியழகையும் கவர்ச்சியையும் மொழிபெயர்ப்பு எந்த அளவில் புத்துயிர்ப்படுத்திக் காட்டியுள்ளது என்பது வாசகர்களின் மதிப்பீட்டுக்கே உரியது![13]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

இக்கதை அசாமிய நாட்டுப் பழங்குடியினரான மீரி மக்களின் சமுதாயப் பின்னணியில் அமைந்த சிறு காதற் காவியமாகும். மீரிப் பழக்க வழக்கங்களும், மீரி இனத்தாரின் நாட்டுப் பாடல்களும் இக்கதைப்போக்கின் இடைஇடையே அமைந்துள்ளன.

> வட்ட வட்டச் சீப்பு மரத்தாலே செய்த சீப்பு
> கண்ணாட்டி கொண்டைக்கு வரவிருக்குது யோகம்!
> கண்ணாட்டி கொண்டைக்கு வரவிருக்கும் யோகம்
> எட்டி எட்டிப் போச்சு, சீப்புத் தொலைஞ்சு போச்சு[14]

என்ற பாடலும்,

*ஆடவந்த கோமாட்டிக்கு ஆட்டி வைச்சுது காய்ச்சலாம்*
*ஆடவில்லை கண்ணாட்டி! அவள் ஆடவில்லை, கண்ணாட்டி*
*தேடிக்கோழிப் பூசை வைத்தால் ஓட்டிவைக்கும் காய்ச்சலாம்*
*ஆடவந்த கோமாட்டிக்கு இனி ஆடைகட்டும் மாய்ச்சலாம்'*

என்ற பாடலும் கா. அப்பாத்துரையாரின் மொழிபெயர்ப்புக்கு சான்றாகக் கொள்ளலாம். தமிழக நாட்டுப்புறப் பாடலைப் போன்று இப்பாடல்கள் அமைந்துள்ளன. இப்பாடல்கள் மீரி சமுதாயத்தினரின் மதச்சடங்கு முறைகள், அவர்களின் பழக்க வழக்கங்கள், மனைவினைப் பாங்குகள், போக்குவரவு நடவடிக்கைகள், சமுதாய நடப்புகள், அனைத்தும் தமிழ்ப் பண்பாட்டு முறைகளிலிருந்து பலவிதங்களிலும் மாறுபட்டதாகும். ஆகையால் தமிழ் வாசகர்கள் அசாமிய மக்களின் பண்பாட்டு முறைகளைப் புரிந்துகொள்ளும் வகையில் அந்தந்தப் பக்கங்களில் மிகுதியான அடிக்குறிப்புகள் வழங்கியுள்ளார். ஒரு சில இடங்களில் மட்டும் அசாமிய மொழிச் சொற்களைத் தமிழில் ஒலிபெயர்த்து வழங்கியுள்ளார்.

*தரமிஸி துலாய ஐ திரமேக திரமாஙாய*
*அகபே கன்வங் ஆபுனே ரேயேபே ரேயாபாய![16]*

'இதுவே மீரி மக்களின் இனப்பாடல் ஆகும். ஆனால் இதன் பொருள் என்ன என்பது பற்றி மீரி மக்களுக்கே தெரியாது இதன் பொருள் தேவ்தாயிக்கு மட்டுமே தெரிய வரும்' - மூல ஆசிரியர் (தேவதாயி - சாது)[16] என அடிக்குறிப்பில் விளக்கமளிக்கப்பட்டுள்ளது.

வேற்று மண்ணில் உருவாகும் ஓர் இலக்கியம் மற்றொரு மொழியில் மொழிபெயர்க்கப்படும் பொழுது மூலமொழிக்குரிய பண்பாடுகளுடன் பெயர்ந்து வருகிறது. பெயர்ப்பு மொழியில் படிக்கும் பொழுது இரண்டு மொழிப் பண்பாடுகளுக்குமிடையே உள்ள ஒற்றுமை, வேற்றுமைகளை உணர்த்துவதுடன் இலக்கிய உருவாக்கத்தின் தன்மைகளையும் வெளிப்படுத்துகிறது.

### சிறுகதைகள்

பலமொழிகளில் வெளிவந்த சிறுகதைகள் பலவற்றை, கா.அப்பாத்துரையார் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இவை சிறுகதைத் தொகுப்புகளாக வெளிவந்துள்ளன. ஆர்தர் சிறுகதைகள், சிங்காரச் சிறுகதைகள் (6 பாகம்), இரு குழந்தைகள், கிரேக்கக் கதைகள், பலநாட்டுச் சிறுகதைகள், புத்தரின் சிறுகதைகள், ஷேக்ஸ்பியர் கதைகள், யுத்தக் கதைகள், அன்பின் வெற்றி முதலியன வாகும். பெரும்பாலும் தழுவலாகவே இடம் பெற்றுள்ளன. இவை நேருக்கு நேரான மொழிபெயர்ப்பாக இல்லை.

கற்பனை, படிப்பினை, கருத்தாழம் மிக்க கதைகளைப் பலரும் விரும்பிப் படிக்கும் வகையில் அப்பாத்துரையார் தமிழில் வழங்கியுள்ளார்.

கிரேக்கக் கதைகள் என்ற தலைப்பில் இடம் பெற்ற ஏழு கதைகளும் தமிழில் வழங்கும் வீரதீர சாகசக் கதைகள், வேதாளக் கதைகள் போன்று அமைந்துள்ளன. இவற்றுள் பல சிறுகதைத் தொகுப்புகள் சிறுவர்களுக்கான கதைகளாகும். அப்பாத்துரையார் பள்ளி ஆசிரியராகப் பல ஆண்டுகள் பணியாற்றியதால் அத்தகைய கதைகளைத் தழுவலாக எழுதுவதில் விருப்பமுடையவராக இருந்தார். சான்றாக 'இரண்டு குழந்தைகள்' என்ற நூல் சிறுவர்களுக்கான சிறுகதையாகும். ஆங்கிலத்தில் சார்லஸ் கிங்ஸ்லி என்பவர் எழுதிய Water Babies (நீர்க்குழந்தைகள்) என்ற கதையின் தழுவலாகும்.

> தாய் பிள்ளைக்கு முதலில் சோறும் கறியும் ஊட்டுவ தில்லை. பால் ஊட்டுகிறாள். அறிவு நூல்கள், இலக்கியங்கள், சோறு, கறி போன்றவை. அவை நல்ல உணவுதான். ஆனால் சிறு பிள்ளைகள் முதலில் அவற்றை விரும்பி உண்ண முடியாது. முயற்சி யில்லாமல் தாமாக அவர்கள் உட்கொள்ளும் பால் போன்ற அறிவு உணவுகள் கதை, பாட்டு, உரையாடல் ஆகியவையே. இவை. சிறுவர்க்குச் சுவைபடத் தரப்படவேண்டும். சிறுபிள்ளைகளுக்கென்று பண்டே அவ்வைப் பிராட்டியார் தனி நூல்கள் எழுதினார். உலகிலேயே குழந்தை இலக்கியத்தை முதல் முதல் வகுத்தவர் அவரே. அந்த இலக்கியம் இன்று தமிழகத்தில் போதுமான அளவு வளரவில்லை. மற்ற நாடுகள் இத்துறையில் வழிகாட்டிவிட்டன. அவற்றைப் பின்பற்றி விரைவில் நாம் முன்னேற வேண்டும்[7]

என இந்நூலின் முன்னுரையில் அப்பாத்துரையார் குறிப்பிட்டுள்ளார். இதைப் போலவே 'கிரேக்கக் கதைகள்' என்ற நூலும் கிரேக்க நாட்டுக் கதைகளைத் தழுவி எழுதப்பட்டதாகும்.

வெல்போர்த் தீஸியஸ், ஒடிஸியின் அருச்செயல்கள், பொன்மறித்தேட்டம், மெலிகரின் வீர மறைவு, அட்லாண்டிக் ஓட்டப் பந்தயம், பெர்ஸியஸ், பறக்கும் குதிரை என்ற ஏழு கதைகளும் தமிழில் வழங்கும் வீரதீர சாகசக் கதைகள், வேதாளக் கதைகள் போன்று இவையும் அமைந்துள்ளன. கிரேக்க கதைகளைத் தமிழில் தழுவலாக எழுதி அமைத்தாலும் இதில் இடம் பெறும் கதை மாந்தர் பெயர், இடப்பெயர், ஊர்ப்பெயர் ஆகியன கிரேக்க மொழி மூலத்தின் தன்மையுடன் அமைந்துள்ளன என்பது இதன் சிறப்பாகும்.

> அன்றிரவு மீடியாவும் ஜோஸனும் பொன்மறியின் (பொன்மயமான) கம்பளியாடு தொங்கிய மரத்தை நோக்கிச் சென்றனர். அதைச் சுற்றிக் காத்திருந்த தூங்காத வேதாளம் அலறிக் கொண்டு வந்தது. ஒரு பெரிய அப்பத்தைத் தூக்கி அதன்முன் எறிந்தான். அது

> *அப்பத்தை அடக்கமுடியாத ஆவலுடன் தின்றது. சிறிது நேரத்திற்கெல்லாம் அது கண்மூடி அயர்ந்து உறங்கிற்று. ஜேஸன் மரத்திலேறிப் பொன்மறிக் கம்பளியை வெற்றிகரமாகக் கைப்பற்றி எடுத்துக் கொண்டு தன் தோழர்களுடன் விரைந்துக் கப்பலில் ஏறினான். மீடியா தான் உயிருக்குயிராய் நேசித்திருந்த தன் தம்பி அப்ஸிர்ட்டஸை மட்டும் எழுப்பித் தன்னுடன் கூட்டிக் கொண்டு கப்பலில் வந்து சேர்ந்தாள். கப்பல் புறப்பட்டது.*
>
> *ஜேஸனின் இடையூறுகள் இத்துடன் தீரவில்லை. பொன்மறியின் கம்பளி கையாடப்படுகிறது என்பதைப் பொன்மறியே கனவில் வந்து அரசனிடம் கூறிற்று. அரசன் உடனே எழுந்து ஏவலாட்களை அனுப்பி உசாவினான். கம்பளி பறிபோனது உண்மை என்று தெரியவந்தது. அவனுக்கு மீடியா மீது சீற்றம் பிறந்தது. அவளும் ஜேஸனும் ஓடிவிடுவார்கள் என்று அவன் எதிர் பார்க்கவில்லை. அது தெரிந்ததும் அவன் விரைந்து கப்பல்களைத் திரட்டிக் கொண்டு ஜேஸன் கப்பலைப் பின்தொடர்ந்தான்[18] (பொன்மறி, ப. 39).*

இம்மொழிபெயர்ப்பு தமிழில் விறுவிறுப்பான ஆர்வத்தைத் தூண்டும் கதைகளைப் போலவே அமைந்துள்ளது. இதில் ஆசிரியர் தனித்தமிழ் நடையைக் கையாண்டுள்ளார். தழுவலாகப் படைக்கப்படும் பொழுது சிலர் கதைமாந்தர் பெயர், ஊர்பெயர், இடப்பெயர்களை மாற்றி அமைப்பதுமுண்டு. ஆனால் இந்நூலின் மொழியாக்கத்தில் அப்பாத்துரையார் அவ்வாறு செய்யவில்லை.

பன்மொழிப்புலவர் பல மொழிகளுக்குரிய சிறுகதைகளைத் தமிழில் கொண்டு வர வேண்டும் என்ற கருத்துடையவர். அதனால் ஷேக்ஸ்பியர் சிறுகதைகள் மற்றும் யுத்தக்கதைகள், 'கைக்கடிகாரம்' என்ற தலைப்பில் உருஷ்யக் கதைகள், முத்துமாலை என்ற தலைப்பில் சீனக்கதைகள், 'கல் மனிதன்' என்ற தலைப்பில் ஸ்வீடன் சிறுகதைகள் ஆகியவற்றை தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார்.

## கா. அப்பாத்துரையாரின் கலைச்சொல்லாக்க முயற்சி

மொழிபெயர்ப்பு, ஒலிபெயர்ப்பு, சொல்லாக்கம் என்ற மூன்று நிலைகளில் தமிழில் கலைச்சொற்கள் உருவாகின்றன. கா. அப்பாத் துரையார் தாம் மொழிபெயர்க்கும் நூல்களிலும், அகராதி தயாரிப்பிலும் இம்மூன்று முறைகளை மேற்கொண்டு தமிழில் பல கலைச்சொற்களை வழங்கியுள்ளார்.

பல மொழிகளில் வழங்கப்படும் கலைச்சொற்களுக்கு இணையாகத் தமிழில் புதிய சொற்கள் வழங்க முடியும் என்பது அப்பாத்துரையாரின் செயல்திட்டமாக இருந்தது. கலைச்சொற்களை வழங்குவது ஒரு சோதனைப் பணியாக இருந்தாலும் பன்மொழிப் புலவர் இப்பணியை உற்சாகமான பணியாகக் கருதினார்.

> மாநில மொழிகளை மட்டுமல்ல உலகின் பல மொழிகளையும் சிறப்பாகக் கீழ்நாட்டு மொழிகளையும் இக்கடுந்தேர்வு பெரிதும் பாதிக்கவே செய்கின்றது. மேற்கு ஐரோப்பாவின் முன்னணி நாகரிக மொழிகளான ஆங்கிலம், ஃபிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய மொழிகளுள் ஏதேனும் ஒன்றிலிருந்து சொற்கள் இரவல் பெற்றே, பெரும்பாலானவை அவற்றின் இடத்தை ஓரளவு பெற்றுத் தன் மதிப்புப் பேணமுடிகிறது. இது மட்டுமன்று இவ்வெல்லா மொழிகளும், அம்முன்னணி மொழிகள் மூன்றும் கூட, இறந்துபட்ட பண்டை நாகரிக மொழிகளான கிரேக்கம், இலத்தீன், அரபு, பாரசீகம், சமஸ்கிருதம் ஆகியவற்றின் உதவியின்றி நாகரிக மொழிகளாய் இயங்க முடியவில்லை. ஆனால் தமிழின் நிலை இவ்வெல்லா மொழிகளுக்கும் நல்லெச்சரிக்கையாகவும் எடுத்துக்காட்டாகவும் முன் மாதிரியாகவும் அமைந்துள்ளது. அது பண்டைய மொழிகளையுந் தாண்டி இன்னும் வளமடையத்தக்க அகவளம் உடையதாயுள்ளது. இன்றைய கடுந்தேர்வு அதைச்சிறிதும் ஊறுபடுத்தாது என்று நாம் நம்பலாம். புதிய வாய்ப்பை மற்ற மொழிகள் முழுதும் பயன் படுத்தத் துணிந்தால் தமிழ், தானே முன்னேறுவதுடன் பிறமொழிகளுக்கும் வழிகாட்டியாய் இருக்கத்தக்க பண்புடையது ஆகும். தன்னகத்துள்ளே வேர்ச் சொற்களில் அடிப்படையிலேயே புதிய கருத்துக் கோட்டைக்கான புதிய செங்கல்கள் அமைக்கும் பண்புதான் தமிழ் தனக்கு வகுத்துக் கொண்ட மொழிப்பண்பு[19]

தமிழில் கலைச்சொல்லாக்கச் சொற்களை வழங்க முடியும் என்ற கருத்தை இதன்மூலம் எடுத்துக்காட்டியுள்ளார்.

தம்முடைய படைப்புகளில், மொழிபெயர்ப்புகளில், அகராதி தயாரிப்புகளில் இந்நோக்கத்தை செயல்படுத்திக் காட்டினார் கா. அப்பாத்துரையார். இவருடைய சொல்லாக்கம் புதுச்சொல்லாக்கம், மாற்றுச் சொல்லாக்கம் அல்லது புதுமையாக்கம், செம்மையாக்கம் என்ற இரண்டு நிலைகளில் அமைந்துள்ளது.

புதுமையாக்கம் என்பது உருபன் நிலையிலும் (Morphemes) சொல் நிலையிலும், தொடர் நிலையிலும் செயற்படும் மொழி பெயர்ப்பாகும் என்பது சொல்லாக்கக் கோட்பாடுகளில் ஒன்றாகக் குறிப்பிடப்படுகிறது.

**உலக மொழிகளை உற்றுநோக்கினால், புதுமையாக்கம் இரண்டு அடிப்படைகளில் அம்மொழிகளில் நிகழ்ந் திருப்பது புலனாகும்.**

1. **வேர்ச்சொல்லைக் கடன் வாங்கி, பெறும் மொழி ஆக்க உருபன்களால் பல்வேறு புதிய சொற்களை உருவாக்குவது.**
2. **மூலமொழி வேர்ச்சொல்லுக்குப் பெறும் மொழி நிகரனை உருவாக்கி, அதிலிருந்து பல்வேறு புதிய சொற்களை உருவாக்குவது[20]**

தமிழில் இந்த அடிப்படையில் பல துறைகளுக்குரிய கலைச்சொற்கள் உருவாக்கம் பெற்றுள்ளன. பன்மொழிப் புலவரின் சொல்லாக்கம் புதுமையாக்கம் என்ற நிலையில் பல கலைச்சொற்கள் அமைந்துள்ளன. (எ.டு).

1. Fossil - புதையுயிர்த்தடம்
2. Ecliptic - கோள்நெறி
3. Eclipse - கோள்மறைப்பு
4. Esplanade - அகல்வெளி, அகல்வழி
5. Character - பண்புறுப்பினர்கள்
6. Fern - சூரல், மலைநாட்டுப்பூண்டு
7. Fashion - காலவண்ணம்
8. Whine - கடுந்தேறல்
9. Bar - விருந்தகம்
10. Dynamo - மின்னாக்கி

என ஆங்கிலச் சொற்கள் பலவற்றிற்கு மொழிபெயர்ப்பாகத் தமிழில் புதிய கலைச்சொற்களை வழங்கியுள்ளார். இவை புதுமையாக்கம் பெற்ற சொல்லாட்சிகளாகத் தோற்றம் பெற்றுள்ளன.

பிறமொழிச் சொற்களுக்கு இணையான கலைச்சொற்கள், தமிழில் இதுவரை வழங்கி வந்த சொற்களுக்கு மாற்றுச் சொற்கள் என்ற இருநிலைகளும் பன்மொழிப் புலவரின் சொல்லாக்க முறைகளாக அமைந்துள்ளன. இவை பண்பாட்டைக் குறிக்கும்

வழக்குச் சொற்களாகவும் இலக்கியத் தன்மை வாய்ந்ததாகவும் அமைந்துள்ளன. (எ.டு.)

1. Beggars Opera - ஆண்டிமடம்
2. Dowager - பெருங்கோப்பெண்டு
3. Dumpling - கொழுக்கட்டை
4. Overlord - ஆண்டை
5. Ebony - கருங்காலி (மரம்)

இச்சொற்கள் அப்பாத்துரையார் மொழிபெயர்ப்பில் இணைச் சொற்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. பெரும்பாலும் மக்களின் வாழ்வியல், பண்பியல் கூறுகளுடன் இணைந்த பிறமொழிச் சொற்களுக்குத் தமிழில் ஏற்கெனவே உள்ள உரிய சொற்களை இணையாகப் பயன்படுத்துவது மொழிபெயர்ப்பில் மேற்கொள்ளப் படும் ஒரு வழி முறையாகும்.

> ஒவ்வொரு மொழிக்கும் அததற்குரிய சிறப்புக் கூறுகள் உண்டு. இதற்கு அம்மொழி பேசும் மக்களின் வரலாறு, கலாச்சாரம், அறிவு கலை வளர்ச்சி அவர்களுடைய வாழிடத்தின் புவியியல் அமைப்பு, தட்பவெப்ப நிலை போன்ற மொழியியல் அல்லாத காரணிகளும் காரணங் களாக அமைகின்றன. ஆகவே ஒரு மொழியின் பொருள் கூறுகள், இலக்கணக் கூறுகள் அனைத்துக்கும் இன்னொரு மொழியில் நிகரன்கள் இருக்க முடியாது. மூலமொழியின் சில கூறுகளுக்குப் பெறும் மொழியில் நிகரன்கள் இல்லாமலிருக்கலாம். சில கூறுகளுக்குப் பெறும் மொழியில் ஒன்றுக்கும் மேற்பட்ட நிகரன்கள் இருக்கலாம்.[21]

சொல்லாக்கப் பணியில் இணைச்சொற்கள் உருவாக இக்காரணங்கள் அடிப்படையாக அமைகின்றன. பன்மொழிப் புலவரின் மொழி பெயர்ப்புகளில் கீழ்காணும் வகையில் இணைச்சொற்கள் இடம்பெறுகின்றன.

1. மோனோ – நோ – ஆவாரே (சப்பானிய மொழிச் சொல்) – இயற்கையின் பரிவிரக்கம்
2. 'ஹிகரு கெஞ்சி' (சப்பானிய மொழிச்சொல்) – ஒளிதிகழ் கெஞ்சி
3. 'ஆராம்பிரிக்' (அசாமிய மொழிச்சொல்) – வெந்தரிகூப் பாத்தி
4. ஃபெல்லா (எகிப்திய சொல்) – வேளாளர்
5. சைக்ளோப்ஸ் (கிரேக்க மொழிச்சொல்) – ஒற்றைக் கண் அரக்கன் (கிரேக்கப் புராணக் கதை)

அந்தந்த மொழிகளுக்குரிய அடையாளங்களை உணர்த்தும் இச் சொற்களைத் தமிழில் படிப்பவர்கள் ஏறத்தாழ இதைப்போல என அறிந்துகொள்ளும் வகையில் இணைச் சொற்களாக இடம் பெறுகின்றன.

தமிழில் ஏற்கெனவே உள்ள கருத்துருக்கள் மாற்றுச் சொற்களில் வழங்கும் பொழுது செம்மையாக்கம் பெறுகின்றன. இவ்வகையில்

1. புதுவல் - திருத்தப்பட்ட நிலம்
2. பணிவிணக்கம் - இணங்கும் பண்பு
3. அறிவமைதி - அமைதியுடன் கூடிய அறிவு
4. அழகாரணங்கு - அழகான பெண்
5. வினைமுறை - செயல்முறை

போன்ற சொற்கள் ஏற்கெனவே தமிழில் உள்ள கருத்துருக்கள் புது வடிவம் தாங்கிச் செம்மையாக்கம் பெறும் வகையில் பன்மொழிப் புலவர் வழங்கியமைக்குச் சான்றாகும்.

பொதுவாகப் புதிய புதிய அறிவியல் கண்டுபிடிப்புகளும் தொழில் நுட்பக் கருவிகளும் ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு உடனடியாக அதனுடைய ஒலிபெயர்ப்பு வடிவத்தில் இடம் பெறுகின்றன. மொழிபெயர்ப்பில் ஆட்பெயர், இடப்பெயர், ஊர்ப்பெயர், சிறப்புப் பெயர் போன்றவை அந்தந்த மொழியின் ஒலிக்குறிப்பில் வழங்குவது இயல்பு. மொழி பெயர்ப்பில் இது ஒரு கோட்பாடாகவும் குறிப்பிடப்படுகிறது. பன்மொழிப் புலவரின் மொழிபெயர்ப்பிலும் இத்தகைய சொற்கள் அந்தந்த மொழியின் ஒலிக்குறிப்பில் இடம் பெறுகின்றன.

1. மீடியா ஜேஸன் - ஆள்பெயர் (கிரேக்கமொழி)
2. டான்குவிக்சோட் - ஆள்பெயர் (ஸ்பானிஷ் மொழி)
3. கியாட்டோ, இஷியாமா - இடப்பெயர் (ஜப்பானிய மொழி)
4. வெஸ்ஸெக்ஸ் - இடப்பெயர் (ஆங்கில மொழி)
5. மீரி - இனப்பெயர் (அசாமியமொழி)

பல மொழி அடையாளங்களுக்குரிய இத்தகைய சொற்கள் மூலமொழி ஒலித்தன்மையுடன் வழங்கியுள்ளார். இவற்றில் இடம் பெறும் வடசொற்களுக்குரிய எழுத்துக்கள் ஒலிபெயர்ப்பில் தவிர்க்க முடியாதவையாக அமைகின்றன.

தமிழில் பிறமொழிக் கலப்பாக இடம்பெற்ற வடசொற்கள், இதுவரை மொழிபெயர்க்கப்படாமல் ஆங்கிலத்திலும் பிற மொழியிலும் இடம் பெற்ற சொற்கள் ஆகியவற்றுக்குத் தமிழில் பல புதிய சொற்கள் வழங்கியுள்ளார். மறைமலையடிகளாருடன் அப்பாத்துரையாருக்கு ஏற்பட்ட தொடர்பு இதற்கு முக்கியக் காரணம் எனலாம்.

கழக ஆங்கில - தமிழ் அகராதியிலும், அவர் பதிப்பாசிரியராகப் பொறுப்பேற்ற சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதியிலும் இம்முயற்சியைக் காணலாம்.

> **'Amoeba' என்பதற்கு வயிற்றையே உடலாகக் கொண்ட சிற்றுயிர் என்கிற பொருளில் 'வயிற்றுடலி' என்றும், 'Canterbury' என்பதற்குச் சுவடிமனை, புத்தகந்தாங்கி என்று எளிதாகவும் 'Emmi' என்பதற்கு 'முசிவு', 'சடைவு' என்று சரி நுட்பமாகவும், 'Good - Humour' என்பதற்கு 'இன்முகச் செவ்வி' என்று இலக்கியமாகவும், 'Jury' என்பதற்கு 'முறை காண் ஆயம், அறங்கூறாயம்' என்று மரபு வழியாகவும் 'Nomen' என்பதற்குத் 'துறைச்சொல் வழக்கு' என்று தெளிவுபடுமாறும் 'Reciprocity' என்பதற்குக் கொண்டு கொடுப்புப் பாங்கு என்று அழகாகவும், 'Smash and Grab' என்பதற்கு 'உடைத்துக் கொள்ளையிடும் செயல்' என்கிற பொருளில் 'தகர்ப்பறிச் சூறையான' என்று தொகை யாகவும், Nerbution என்பதற்கு 'வெறுஞ் சொல்லார்ப்பு' என்று நயமாகவும் 'Zeit Geist' என்கிற ஜெர்மன் பதத்துக்குக் 'காலப் பண்பு' என்று மிகச் செறிவாகவும் பன்மொழிப்புலவர் மொழிபெயர்த்திருக்கும் பாங்கு என்றும் மகிழத்தக்கது[22]**

என்று குறிப்பிடுகிறார் ஊ. ஜெயராமன். பிற அறிஞர்களின் இத்தகைய கருத்துக் கணிப்பைப் பற்றிப் பன்மொழிப் புலவரும் சில கருத்துரைகளை வழங்கியுள்ளார்.

> பிறமொழிச் சொற்களைக் கலந்தே எழுதும் மற்ற இலக்கிய மொழிகளைத் தாண்டி, ஆங்கிலத்தின் எவ்வளவு நுட்பமான கருத்தையும் தமிழில் ஒரே சொல்லாக என் அகரவரிசை விளக்குகிறது என்பதைப் பல எழுத்தாளர்கள் என்னிடம் கூறியுள்ளனர். மேலும் ஆங்கிலச் சொற்களின் கருத்து நுட்பங்களுக்கேற்ப, நுட்பமான சொற் குறிப்புகளை அது கொண்டுள்ளது

என்பதை, ஆங்கில மொழியின் அவ்வத்துறை ஆராய்ச்சியாளர்களே படிப்படியாக உணர்ந்து வருகிறார்கள்.

> ஆங்கிலத்தில் **Physics** என்பதற்கு 'இயற்பியல்' என்ற தமிழாக்கம் ஓர் எடுத்துக்காட்டாகும். தமிழ் இலக்கணப்படி 'இயல்பியல்' என்றுதான் இருக்க வேண்டும் என்று கருதியவர்களும் உண்டு. ஆனால் பல்கலைக்கழக ஆங்கில அகரவரிசையின் தலைமை ஆசிரியரான டாக்டர் ஏசி. செட்டியாரே நண்பர், நட்பு, நண்பு என்பன போன்ற சொற்களை எடுத்துக் காட்டி 'இயற்பியல்' சரியான தமிழ்மட்டுமல்ல; திருவள்ளுவர் தமிழ் (நண்பு) போன்ற சரி நுட்பத் தமிழாக்கம் ஆகும் என்று வற்புறுத்தியுள்ளார்[23]

இவ்வாறு அப்பாத்துரையார் தனது சொல்லாக்க அனுபவத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அப்பாத்துரையாரின் கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி உரிய தமிழ்ச் சொற்களைத் தாங்கி வெளியிடப் பட்டது என்பது இதன் தனித் தன்மையாகும்.

> **Anglomania** என்கிற சொல்லுக்கு ஸ்ரீவில்லி அகராதியினர் 'அளவு மீறி ஆங்கிலேயரது வழக்கங்களை ஆதரித்தல்' என்று வழங்கியுள்ளனர். இது சரியான பொருள்தான் என்றாலும், நீண்ட விளக்கமாயிருக்கிறது; ஒரே துறைச் சொல்லாக (term) இல்லை; அப்பாத்துரையார் அதற்கு 'ஆங்கிலப்பித்து' என்று சுருக்கமாகக் கூறுகிறார். **Debut** என்கிற சொல்லுக்குத் தொடக்கம், ஆரம்பம் என்று மட்டுமே பெர்சிவல் தம் அகராதியில் சொல்லுகிறார். ஆனால் அப்பாத்துரையாரோ (அரங்கு) முதல் நுழைவு 'அரங்கேற்றம்' என்று துல்லியமாகக் கூறுகிறார். **Green Room** என்கிற வார்த்தைக்கு டிஏ. சுவாமிநாத ஐயர், நாடக சாலையில் வேஷம் போட்டுக் கொள்ளும் அறை (நேபத்திய சாலை) என்று பொருள் தருகிறார்; ஆனால் அப்பாத்துரையாரோ மிகச் சுருக்கமாக (நாடகக் கொட்டகை) 'ஒப்பனை அறை' என்று கொடுத்து விடுகிறார். **Memorandam** என்கிற வார்த்தைக்குப் பெர்சிவல் நினைப்பூட்டுப் பத்திரம், ஞாபகப்பத்திரம், யாதஸ்து என்கிறார். அதற்கு அப்பாத்துரையார் 'நினைவுக் குறிப்பு' என்று பொறித்துவிட்டார். **Regret** என்கிற பதத்துக்குக் கே.வி. சுப்பையர் 'துக்கம், மனநோய் என்று உரை கூறுகிறார். அப்பாத்துரையார் 'கழிவிரக்கம்' என்று தமிழ் மரபையொட்டிப் புதுப்பொருள் புகல்கிறார்.[24]

இவ்வாறு பிற அகராதிகளில் வழங்கி வந்த பல சொற்களுக்குப் புதுச்சொல் வழங்கியுள்ளார்.

பல்கலைக்கழக ஆங்கில - தமிழ்ச் சொற்களஞ்சியத்தின் முக்கியப் பதிப்பாசிரியராகப் பன்மொழிப்புலவர் அமர்த்தப்பட்டுச் சிறந்த முறையில் பணியாற்றினார்.

> 1959லிருந்து 1965 வரை சென்னைப் பல்கலைக்கழகம் ஆங்கிலத் தமிழ் அகராதி தயாரித்தது. டாக்டர் ஏ.சி. செட்டியார் ஆசிரியராகவும், இவர் இணையாசிரிய ராகவும் இருந்து அப்பணியை முடித்தனர். இந்தப் பணிக்கு இவரைப் பரிந்துரை செய்தவர்கள் அறிஞர் அண்ணாவும், பேராசிரியர் க. அன்பழகனும்தான் என்று அவரே நன்றியோடு நினைவு கூர்ந்திருக்கிறார்.[25]

தமிழில் இதுவரை வந்த அகராதிகளில் சிறந்ததும், தரமானதும், பெரியதுமான இவ்வகராதி சிறந்த முறையில் அமைந்ததற்குப் பன்மொழிப்புலவரின் சொல் அறிவுத்திறன் காரணம் என்றால் மிகையில்லை. பல ஆங்கிலச் சொற்களுக்குத் தக்க புதுச்சொல் தேடும் முயற்சியில் பல வெற்றிகள் கண்ட ஏடு என்ற சிறப்பினைப் பெற்றது இவ்வகராதி.

### அப்பாத்துரையாரின் தனித்தன்மை

Tide என்ற ஆங்கிலச் சொல்லுக்கு அப்பாத்துரையார் ஒரு புதிய சொல் வழங்க இருபது ஆண்டுக் காலம் முயற்சித்தார் என்பது அவருடைய சொல்லாக்க முயற்சியில் குறிப்பிடத்தக்க ஒரு நிகழ்ச்சியாகும். நிலாக்கோளின் ஈர்ப்பாற்றலினால் கடல் நீர் ஒவ்வொரு நாளும் பொங்கி முன்னேறுவதும் வடிந்து பின்னேறுவதும் ஆகும். இது ஆங்கிலத்தில் Tide என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

> மலையாள நாட்டு மீனவர்கள் இதற்கு ஒரு தனிச் சொல்லாக 'வேலி ஏற்றம்', 'வேலி இறக்கம்' என்று சொன்னார்கள். நான் அகராதியில் முதலில் 'கடல் ஏற்றம்', 'கடல் இறக்கம்' என்றுதான் குறிப்பிட்டேன். ஆனால் அதைவிட மலையாளச் சொல் சிறந்தது என்று தோன்றிற்று. கொஞ்சம் சிந்தித்தபின் இரண்டுமே நிறைவு தரவில்லை. . . . சென்ற இருபது ஆண்டுகளாக இந்தச் சொல் என் உள்ளத்தை அரித்துக் கொண்டே இருந்தது. பல பழந்தமிழ் இலக்கிய ஏடுகளை யெல்லாம் தூங்கும்போதும் நடக்கும்போதும் துருவித்துருவி தேடிக்கொண்டே இருந்தேன். பல அழகிய சொற்கள் அகப்பட்டன. ஆனால் அவற்றுள் சிறந்தது எது என்று

முடிவு செய்யப் பல நாட்களாயின. இப்போது முடிவு செய்தாலும் அதை அகராதியில் கொண்டு சேர்க்கும் வாய்ப்பில்லாமல் இருக்கிறேன். ஓதம், அலை, பேரலை முதலியவை Tide என்ற சொல்லுக்கும், பொங்கோதம், பொங்கலை, ஏற்றப் பேரலை ஆகியவை flow tide-க்கும், வற்றோதம், வற்றலை Ebb tideக்கும் உரியனவாகப் பலநாள் கருதினேன். ஆனால் சிலப்பதிகாரத்தில் 'பொங்கு நீர்வேலி' என்று வருமிடம் என் கருத்தைக் கவர்ந்தது. ஆகவே சற்று நீளமானாலும் மிக அழகிய சொற்களாக 'அலை நீர் வேலி' என்பதை Tide என்ற சொல்லுக்கும், பொங்கோதம் அல்லது 'பொங்கு நீர்வேலி' என்பதை High tide என்பதற்கும், வற்றோதம் அல்லது 'வடிநீர் வேலி' என்பதை low tideக்கும் பயன்படுத்துவது சாலச் சிறந்தது என்று இப்போது கருதுகிறேன். ஏனெனில் இளங்கோவின் முத்திரை அவற்றின் மீது படிந்திருக்கிறது. பொதுமக்களுக்கு விரைவில், எளிதாகப் பொருள் விளங்கும் தன்மையும் இவற்றில் இருக்கிறது.[26]

பன்மொழிப் புலவரின் இத்தகைய அயராத முயற்சியினால் தமிழில் பல நூறு சொற்கள் கலைச்சொற்களாகத் தோற்றம் பெற்றுள்ளன.

பன்மொழிப்புலவர் பல்வேறு அணுகுமுறைகளில் சொல்லாக்க முயற்சியை மேற்கொண்டுள்ளார். இவருடைய சொல்லாக்கத் திறமையை அறிந்த அரசு, சட்ட சொல்லாக்கக் குழுவில் (Legal Glossary Committee) பன்மொழிப் புலவரை உறுப்பினராக நியமித்துப் பல அரிய மொழிபெயர்ப்புப் பணிகளை அவரிடம் ஒப்படைத்தது. அதன்பின் பேரறிஞர் அண்ணா தமிழக முதல்வர் பொறுப்பேற்றவுடன் இச்சட்டச் சொல்லாக்கக் குழுவிற்குச் சென்னை உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதி திரு. அனந்தநாராயணன், திரு. மா. சண்முக சுப்பிரமணியம் ஆகியோர் அப்பாத்துரையாருக்கு உதவியாக செயலுறுப்பினராக இருந்தனர். பன்மொழிப்புலவர் இக்குழுவின் மையமாக இருந்து செயல்பட்டு 1967 ஏப்ரல் 15ஆம் நாள் சட்டக் கலைச்சொல் அகராதி, முதல் தொகுதி வெளியிடப்பட்டது. பன்மொழிப்புலவரின் இத்தகைய சொல்லாக்கப் பணிகள் தமிழ் வளர்ச்சிக்குப் பெருந்துணையாக அமைந்துள்ளன. சொல்லாக்கப் பணிகளில் ஈடுபடுவோருக்கு அப்பாத்துரையாரின் சொல்லாக்க முறைகள் சிறந்த வழிகாட்டியாக அமைவனவாகும்.

## குறிப்புகள்

1. பாரதிதாசன் கவிதைகள் (தொகு) ஆ. திருவாசகன், சுரதா கல்லாடன், அருள்சுடர் பதிப்பகம், சென்னை, பதி. 1993, ப. 1915.
2. அண்ணா போற்றிய பெருமக்கள் (தொகு) கவி. மறைமலையான், பெ. இளஞ்செழியன், தமிழ்நாடு அரசு வெளியீடு, தொகுதி 1, பதி. 1988, ப. 236.
3. பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார், மணிவிழா மலர் (கட்.) பன்மொழி அறிஞர் பேச்சாளர், மா.சு. சம்பந்தன், 20-9-1967, ப. 11.
4. அறிவுச்சுரங்கம் அப்பாத்துரையார், 'முகம்' மாமணி, நர்மதா வெளியீடு, சென்னை-17, பதி. ஏப். 1992, ப52.
5. மேற்படி, ப. 177.
6. மேற்படி, ப. 178.
7. இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு, கில்பர்ட் சிலேட்டர் (தமி.) கா.அப்பாத்துரை, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, பதி. 1963.
8. மேற்படி, ப. 59.
9. சமதர்ம விளக்கம், தமிழாக்கம், Text Book of Socialism by Prof. K.T.S. ஆசிரியர் கழகம், 1947.
10. கெஞ்சிகதை, முரசாக்கி (தமி.) கா. அப்பாதுரை, சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி. 1965, முகப்பு உரை ப. vi.
11. இந்துலேகா, சந்துமேனன், (தமி.) கா. அப்பாத்துரை, மலர் நிலையம், பதி. 1954, முன்.
12. மருதூர் மாணிக்கம், (டான்குவிக்சோட்), செர்வாண்டிஸ், அருணோதயம், பதி.1958, முன்.
13. மலைநாட்டு மங்கை, ரஜனிகாந்த் பர்தலீ, (தமி.) கா. அப்பாத்துரை சாகித்திய அகாதெமி, புதுதில்லி, மு.ப. 1968, ப. 9.
14. மேற்படி, ப. 30.
15. மேற்படி, ப. 30.
16. மேற்படி, ப. 34.
17. இரண்டு குழந்தைகள் (சார்லஸ் கிங்ஸ்லி எழுதிய Water Babies நூலின் தழுவல்), கா. அப்பாத்துரையார், கழகம் வெளியீடு, 1951, முன்.

18. கிரேக்கக் கதைகள், (தமி.) கா. அப்பாத்துரை, கழகம் வெளியீடு, 1957, ப. 39

19. கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி, கா. அப்பாத்துரை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை 1972 (முன்) ப. III.

20. மொழிபெயர்ப்பியல் கோட்பாடுகளும் உத்திகளும், சேதுமணி மணியன், செண்பகம் வெளியீடு, பதி. மார்ச் 1990, ப. 109.

21. மேற்படி, ப. 29-30.

22. பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார், மணிவிழா மலர் (கட்.) அப்பாத்துரையாரும் அகராதிக் கலையும், ஊ. ஜெயராமன், 20-9-1967, ப. 62.

23. அறிவுச்சுரங்கம் அப்பாத்துரையார், 'முகம்' மாமணி, நர்மதா வெளியீடு, சென்னை, பதி.ஏப். 1992, ப. 186.

24. பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார், மணிவிழா மலர் (கட்.) அப்பாத்துரையாரும் அகராதிக் கலையும், ஊ. ஜெயராமன், 20-9-1967, ப. 62.

25. பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார், 'முகம்' மாமணி, தினமணி, 23-06-96.

26. அறிவுச்சுரங்கம் அப்பாத்துரையார், 'முகம்' மாமணி, நர்மதா வெளியீடு, சென்னை, பதி.ஏப். 1992, ப. 80-81.

* * *

# த.நா. குமாரசுவாமி

வங்கம் இன்று என்ன சிந்திக்கிறதோ அதை இந்தியா நாளை சிந்திக்கும்[1]

என்பது இந்திய விடுதலைப் போராட்டக் காலத்தில் வங்க மக்களின் ஒரு நம்பிக்கைக் குரலாக இருந்தது. இது அரசியல் அரங்கத்தில் மட்டுமல்லாமல் இலக்கிய உலகிலும் எதிரொலித்தது. புதுக்கவிதையின் வளர்ச்சியை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலேயே வங்கத்தில் புதுக்கவிதை பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளது என்பதை வங்க இலக்கிய வரலாறு எடுத்துக் காட்டுகிறது. ஆனால் தமிழ்நாட்டில் 20ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் ஒரு பெரும் வீச்சாகப் புதுக்கவிதை வரத்தொடங்கியது என்பதை ஒரு சான்றாகக் கொள்ளலாம்.

தமிழிலக்கியத் தோற்றத்துடன் வங்க இலக்கியத் தோற்றத்தை ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது வங்க இலக்கியம் குறுகிய கால வரலாறு உடையது என்றே கூறத் தோன்றுகிறது. ஏனெனில் வங்க இலக்கியத்தின் தோற்றம் 10 ஆம் நூற்றாண்டு எனக் குறிப்பிடப் படுகிறது. ஆயினும் ஒரு பத்து நூற்றாண்டுகளுக்குள் வங்க இலக்கியம் மாபெரும் சாதனைகள் புரிந்து பெரும் வளர்ச்சி அடைந்துள்ளது. இவ்வளர்ச்சி குறிப்பாகக் கடந்த இரண்டு நூற்றாண்டுகளில் ஏற்பட்டுள்ளது. 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வங்கத்தில் ஏற்பட்ட சமுதாய மறுமலர்ச்சி இதற்குத் திருப்பு முனையாக அமைந்துள்ளது. ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியின் தலைநகரமாகக் கல்கத்தா இருந்த காரணத்தினால் மேனாட்டு அறிவியல், கலை இலக்கியம் ஆகியவற்றின் தாக்கம் வங்காளத்தில் ஏற்பட வாய்ப்பாக இருந்தது. வங்காளிகளுக்கும், கிழக்கிந்தியக் கம்பெனி நிர்வாகத் துறையினருக்குமிடையே இலக்கியப் பரிமாற்றம் ஏற்பட வாய்ப்பு ஏற்பட்டது.

கல்கத்தாவில் உள்ள ஃபோர்ட் வில்லியம் கல்லூரி, ஸ்ரீராம்பூரில் நிறுவப்பட்ட பாப்டிஸ்ட் மிஷன் ஆகியன வங்கமொழி இலக்கிய வளர்ச்சியில் பெரும் பங்காற்றியுள்ளன. அத்துடன் இராஜாராம்மோகன் ராய், ஈசுவர சந்திர வித்யாசாகர் ஆகியோரின் முயற்சியால் மேனாட்டு இலக்கியங்கள் வங்காளியில் மொழிபெயர்ப்பதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதனால் வங்காளிகள் மேலைநாட்டு இலக்கியங்களை அறியவும் வங்கமொழியில் புதிய இலக்கிய வடிவங்களை உருவாக்கவும் முயன்றனர்.

19ஆம் நூற்றாண்டில் நாட்டுப்பற்றும் விடுதலை வேட்கையும் வளரப் புதிய வங்க இலக்கியங்கள் உறுதுணையாயிருந்தன. உதாரணமாக

> அவுரிச்சாயத் தொழிலில் ஈடுபட்டிருந்த வெள்ளையர் விவசாயிகளுக்கு இழைத்த கொடுமைகளை உணர்ச்சி கரமாகச் சித்திரித்த தீனபந்து மித்ராவின் 'நீல தர்ப்பன்' என்ற நாடகம் மக்களை இக்கொடுமைகளுக்கெதிராகப் பொங்கியெழச் செய்தது. தேவேந்திரநாத் தாகூரும் அவருடைய நண்பர்களும் ஆண்டுதோறும் நடத்தி வந்த 'சுதேசிமேளா' நாட்டின் சமூக மறுமலர்ச்சிக்கும் தொழில் வளர்ச்சிக்கும் வழிவகுத்ததோடு தேசிய உணர்ச்சி மிக்க இலக்கியப் படைப்புகளுக்கும் ஊக்கமளித்தது[2]

பிறமொழியினரும் இத்தகைய படைப்புகளை வரவேற்றுத் தத்தம் மொழிகளில் பெயர்த்து வெளியிடலாயினர். 20ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் தமிழிலும் இந்த முயற்சி தொடங்கப்பட்டுள்ளது.

## வங்க இலக்கிய மொழிபெயர்ப்பாளர்கள்

வங்க இலக்கியப் படைப்புகளைத் தமிழில் வழங்கும் முயற்சியில் ஈடுபட்டவர்களுள் த.நா. குமாரசுவாமி, அவருடைய சகோதரர் த.நா. சேனாபதி, அ.கி. ஜெயராமன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர். இப்பணிக்காகத் தங்களது வாழ்நாளை அர்ப்பணித்தவர்கள். இம்மூவரும் வங்க மொழியிலிருந்து நேராகத் தமிழில் மொழிபெயர்த்தவர்களாவர். சரஸ்வதி ராம்னாத்தும் வங்க மொழியின் ஒரு சில படைப்புகளை இந்தி மூலமாகத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். சிதம்பரம் புன்னை வன முதலியார், மஹேசகுமாரசர்மா, எம். ராமலிங்க முதலியார், சி. திருச்சிற்றம்பலம் பிள்ளை, பாரதியார், தினகரன், கு.ப. ராஜகோபாலன், வி.கே. ராமநாதன், எம்.வி. வெங்கட்ராம், எஸ். குருசாமி, சுவர்ணாம்பாள், சாவித்திரி அம்மாள், ஆகியோர் வங்க மொழிப் படைப்புகளை ஆங்கில மொழிபெயர்ப்பின் வழியாகத் தமிழில் மொழிபெயர்த்தளித் துள்ளனர். இவர்களுள் வங்கமொழிப் படைப்புகளை மிகுதியாகத் தமிழில் மொழிபெயர்த்தளித்தவர் தண்டலம் நாராயண சாஸ்திரி குமாரசுவாமியான த.நா. குமாரசுவாமியாவார். இவர் 1907 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 24 ஆம் நாள் சென்னையில் பிறந்தார். இவர் தந்தை தண்டலம் சங்கரநாராயண சாஸ்திரியார், தாய் ராஜம்மாள். தந்தையார் சமசுகிருதம், ஆங்கிலம், தமிழ், மராட்டிய மொழிகளில் புலமை பெற்றவர். தமிழ் நாடக முன்னோடிகளில் ஒருவராகவும் குறிப்பிடப்படுகிறார். இவர் ஷேக்ஸ்பியர் நாடகங்களில் சிலவற்றைச்

சமசுகிருதத்தில் மொழியாக்கம் செய்துள்ளார். த.நா. குமாரசுவாமியின் இரு சகோதரர்களில் ஒருவரான த.நா. சேனாபதி இவருடன் இலக்கியப் பணியாற்றியவர். மொழிபெயர்ப்பிலும், மஞ்சரி இதழாசிரியர் பணியிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர். தமிழிலிருந்து வங்கமொழியில் மொழிபெயர்க்கப்பட்ட நூல்கள் குறைவு. ஆனால் வங்க மொழியிலிருந்து 367 நூல்கள் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன என்று Bengali literature in South Indian Languages, A Bibliography, (Bijoyadas, March 1998) எனும் தமது ஆய்வு நூலில் முனைவர் விஜயாதாஸ் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார்.

## த.நா. குமாரசுவாமி ஒரு படைப்பாளர்

தந்தையார் மூலம் பெற்ற இலக்கியச் சிந்தனை, சென்னை முத்தியால்பேட்டை உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றிய மூதறிஞர் கபாலி சாஸ்திரியாரின் வழிகாட்டுதல், தன் அத்தை கூறிய பலவிதமான கதைகளும் அவருடைய இலக்கிய அறிவைச் செழுமைப் படுத்தியிருக்கின்றன.

> தொடக்கத்தில் தமிழில் எழுத எனக்குப் பயிற்சியே போதாது. என் தந்தையாரின் விருப்பத்துக்கு இணங்கிச் சமஸ்கிருதமே பள்ளியில் கற்றேன். நானே விரும்பிப் படித்தது தெலுங்கு. என்னுடைய ஆசான் கபாலி சாஸ்திரி (பிற்காலத்தில் யோகி அரவிந்தருடன் இணைந்து ரிக்வேதத்துக்குத் தனி உரை கண்டவர்) வால்மீகி, காளிதாசன், பவபூதி, பாரவி, பட்டபாணன், மாகன் போன்ற கவிஞர்களின் ஆக்கங்களிலிருந்து அழகான பகுதிகளை விளக்குவார். அப்பால் கல்லூரியில் சேர்ந்து படிக்கும் நாட்களில் ஆங்கில எழுத்தாளர் களின் இலக்கியப் படைப்புகளில் தோய்ந்து விடுவேன். இப்பொழுது 'சிறுகதை' என்று நாம் குறிக்கும் ஒரு துறையை அம்மொழி வாயிலாகவே கண்டேன். ஆங்கிலத்தில் வருவன போன்ற கதைகளை வனைய எனக்கு ஒரே ஆசை. இதே காலத்தில் மகாகவி பாரதியாரின் பாடல்களைக் கேட்க எனக்கு வாய்ப்பு ஏற்பட்டது. அவருடைய நூலான சுதேச கீதங்களைப் பிரிட்டிஷ் அரசாங்கம் பறிமுதல் செய்ததால், மேலும் அவற்றைப் படிக்கவும் பாடவும் ஆர்வம் மூண்டது. தமிழ் நன்கு கற்க இது வலுவூட்டியது. சிறுசிறு காப்பியங் களைப் பாடம் கேட்டேன். அப்புறம் சிலப்பதிகாரம், ஒரு பொற்கவாடம் என் மனத்துள் திறந்தது[3]

என்று குறிப்பிடுகிறார்.

த.நா. குமாரசுவாமி முதன் முதலில் 1934ஆம் ஆண்டு எழுதிய 'கன்யாகுமரி' என்ற சிறுகதை தினமணி நாளேட்டில் வெளிவந்தது.

அவர் ஒரு படைப்பாளர் என்பதைக் 'கன்யாகுமரி' நிலைநாட்டியது. ஆனந்த விகடன், கலைமகள், கல்கி ஆகிய இதழ்களில் இவருடைய பல அரிய சிறுகதைகளும், நாவல்களும் தொடர்ந்து இடம்பெற்றன.

> **த.நா. குமாரஸ்வாமியின் சிறுகதைகள் 1930 முதல் 1980 வரையிலான ஐம்பது ஆண்டுக் காலத்தில், ஆனந்த விகடன், சுதேசமித்திரன், கல்கி, கலைமகள், அமுதசுரபி போன்ற இதழ்களில் வெளிவந்தன. அவருடைய முதல் கதை கன்யாகுமரி, த.நா.கு. கற்பனைக் கடலில் மூழ்கி எடுத்த ஆனிமுத்து.[4]**

என்று குறிப்பிடுகிறார் அவருடைய புதல்வரான த.கு. அஸ்வின்குமார். த.நா. குமாரசுவாமியின் 'ராமராயன் கோயில்', 'வைணிகர்', 'ஹீசைலம்' போன்ற சிறுகதைப் படைப்புகள் விகடனில் பரிசு பெற்றன.

> **த.நா. குமாரஸ்வாமியின் சிறுகதைகள் ஐந்து தொகுப்பு களாக வெளிவந்துள்ளன. முதல் தொகுதி, கன்யாகுமரி (பதினைந்து சிறுகதைகளைக் கொண்டது) சந்திர கிரகணம் (இருபத்தொரு கதைகள்); 'நீலாம்பரியில் பதினொரு சிறுகதைகளும்; இக்கரையும் அக்கரையும் என்ற தொகுப்பில் பன்னிரண்டு கதைகளும் உள்ளன. இதழ்களில் வெளிவந்து புத்தக வடிவில் வெளிவராத கதைகள் நூற்றுக்கும் மேல்[5]**

எனக் குறிப்பிடப்படுகிறது.

கதைகளை இரகம் இரகமான சரக்குகளாகப் பகுத்துக் காண்பதும், ஆடைகளில் வண்ண வண்ண வேலைப்பாடுகள் இருப்பதைப் போலக் கதைகளில் நுட்பங்ளைக் காண்பதும் ஒரு புதுமையாகும். இச்சிறுகதைகளைப் பற்றித் த.நா. குமாரசுவாமி ஒரு நெசவாளி போன்று தம் அனுபவத்தைக் கூறியுள்ளார்.

> **பல சந்தர்ப்பங்களில் நான் நெய்த இந்தக் கதைகள் இப்பொழுது ஒரு திரட்டாகக் கடைக்கு வந்திருக் கின்றன. இதில் ரகம் ரகமான சரக்குகள், ஜரிகைப் பட்டு போட்டதும் உண்டு. சாதாக் கரையும் கிடைக்கும். விசித்திர வர்ண இழைகள் போட்டதும் இருக்கும். சிலந்தி வலை போன்ற வெண்மையானதும், தடித்த நூலில் யாத்து, பழுப்பு நிறம் வாய்ந்ததும், 'லைட்கலர்' கொண்டதும், உத்திரவாதமுள்ள கெட்டிச் சாயம் உள்ளதும் நீங்கள் பார்வை இடலாம். எல்லாம் பச்சென்ற குளிர்ந்த கிராமத்தில் குடிலின் நிழலில் பாவுபோட்டுச் சொந்தத் தறியில் உருவானவையே[6]**

என்று மிகச் சிறப்பாகத் தன் கதைகளைப் பற்றி ஒரு மதிப்பீடு செய்துள்ளார்.

இவர் எழுதிய 6 புதினங்கள் வெளிவந்துள்ளன. அவை, விடுதலை (1940), ஒட்டுச்செடி (1955), குறுக்குச் சுவர் (1956), வீட்டுப்புறா (1961), அன்பின் எல்லை (1958), கானல் நீர் (1970) ஆகியனவாகும். அவர் காலத்தில் வெளிவந்த நாவல் சிறுகதைப் படைப்புகளிலிருந்து தாம் முற்றிலும் மாறுபட்ட கோணங்களில் தனித்தப் பாங்குடன் தனது படைப்புகளை வழங்க முனைந்திருக்கிறார்.

> பூண்டி நீர்த்தேக்கம் அமைக்கப்பட்ட போது தனது வீட்டை இழந்து கிராமத்தை விட்டு வெளியேறும் ஏழை விவசாயின் அளவறியா சோகத்தை, பிரச்சாரமின்றி மிகவும் செட்டான சம்பவங்களாலும், சொற்களாலும் நாவலாகப் படைத்துள்ளார். சொல்லப்பட்டதற்கு மேலே சொல்லப் படாத வாழ்க்கையும் சோகமுமே நாவலின் அடித்தளமாக உள்ளன (ஒட்டுச்செடி).[7]

த.நா. குமாரசுவாமி ஒரு சிறந்த மொழிபெயர்ப்பாளர், குறிப்பாக வங்கமொழிப் படைப்புகளைத் தமிழில் வழங்கியவர் என்று அறியப்பட்டிருந்தாலும் அவர் ஒரு சிறந்த படைப்பாளர் என்பதை அவருடைய சிறுகதைத் தொகுப்புகள், புதினங்கள், கட்டுரைகள் உணர்த்துகின்றன.

> த.நா. குமாரஸ்வாமியின் பாணி ஒரு தனிப்பாணி. தமிழில் அது போன்ற கதைகளை வேறு யாரும் எழுதியதில்லை. இன்றைய தமிழ்க்கதை வளத்தின் ஒரு முக்கியப் பகுதிக்கு ஆசிரியர் குமாரஸ்வாமி அடிகோலித் தந்தவர் என்று பாராட்ட வேண்டியது மிக அவசியம்[8]

என்று க.நா. சுப்பிரமணியன் வழங்கியுள்ள மதிப்புரை இதற்குப் போதுமான சான்றாகும்.

### த.நா. குமாரசுவாமி வங்கமொழி கற்றல்

பள்ளி நாட்களில் தாகூரின் கீதாஞ்சலியின் ஆங்கில மொழி பெயர்ப்பைப் படித்ததும், மூலமொழியிலேயே இந்நூலைப் படிக்க வேண்டும் என்ற ஆவல் இவர் வங்க மொழி கற்பதற்கு அடிப்படையாக அமைந்துள்ளது.

> அந்நாளில் பிரபலமாய் இருந்த ஒரு தலைவலித் தைலத்தின் பெட்டிக்குள் இருந்து, பலமொழிகளில் அச்சிடப்பட்ட விளம்பர விளக்கங்களில் வங்கமொழி எழுத்துக்களைத் தேடிக் குறித்துக் கொள்ளுவேன். அசட்டுத்தனமான செயலாக இது பின்னர் எனக்குத் தோன்றினாலும் வங்கமொழி கற்க வேண்டும் என்று பேராவலே, என்னை அவ்வாறு செய்யத் தூண்டியது.

*(த.நா.கு. - டைரிக் குறிப்புகள்) பங்கிம் சந்திரரின் பிரபலமான ஆனந்தமடம் நவீனத்தை 1908-ஆம் ஆண்டு மகேச குமார சர்மா தமிழில் மொழியாக்கம் செய்திருந்தார். அந்த மொழிபெயர்ப்பினை மிகவும் சிரமப்பட்டுத் தேடிப்பிடித்து, பிறகு பங்கிமின் அந்த நவீனத்தின் வங்கமொழி மூலநூலினைக் கல்கத்தாவி லிருந்து தருவித்து, மூலத்தையும் அந்த மொழி பெயர்ப்பினையும் ஆழ்ந்து ஒப்புநோக்கி, மூல மொழியின் மொழிஅமைப்பினை ஒருவாறு உணர்ந்து கொண்டது அவருடைய வங்கமொழி ஆர்வத்தை மேலும் பெருக்கியது. சமஸ்கிருத மொழியில் நல்ல தேர்ச்சி இருந்ததால் வங்கமொழியை, குறுகிய காலத்தில், அவரால் எளிதில் பயில முடிந்தது.*[9]

இந்த மொழிப் பயிற்சியை அப்படியே விட்டுவிடாமல் இதைச் சரியான முறையில் அவர் பயன்படுத்த முடிவு செய்த விதமே பெரும் பாராட்டுக்குரியதாகும். இதன் மூலம் தமிழ் வாசகர்களுக்கு வங்க மொழி இலக்கியத்தின் வழியாகப் புதிய நுகர்ச்சியும், விழிப்புணர்வும் பெறச் செய்ய வேண்டும் என்ற அவருடைய உறுதியான முடிவே அவர் கல்கத்தாவிற்குச் செல்லக் காரணமாக இருந்துள்ளது.

## கவி இரவீந்திரநாத் தாகூரை த.நா. குமாரசுவாமி சந்தித்தல்

தாகூரின் 'கீதாஞ்சலி' வங்கமொழி கற்பதற்குத் த.நா. குமார சுவாமியைத் தூண்டியது போல் கவி இரவீந்திரநாத் தாகூரின் படைப்புகளைத் தமிழில் வழங்க வேண்டும் என்ற தூண்டுதலினால் அவரை நேரில் சந்தித்து உரையாடும் வாய்ப்பும் த.நா.கு.விற்குக் கிட்டியது.

*1928ஆம் ஆண்டு குமாரஸ்வாமி, உளவியல், இந்தியத் தத்துவம் இவற்றில் பட்டப் படிப்பு முடித்ததும், வங்கம் சென்று கவி ரவீந்திரரைச் சந்தித்து, ஆசிபெற்று அவருடைய நூல்களைத் தமிழில் மொழியாக்கம் செய்ய வேண்டும் என்ற உந்துதல் மேலோங்கவே, கல்கத்தாவுக்குப் பயணமானார். அங்கு வங்கமொழி வல்லுநர் சுநீதி குமார சட்டர்ஜியின் உதவிபெற்று 1930ல் ரவீந்திரரை சாந்தினிகேதனில் சந்தித்தார். "அப்பொழுது அவர் சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டிருந்தார். மழை பெய்து அடங்கியதால், சாந்தினிகேதனில் மண்ணின் மணத்தை நுகர்ந்து கொண்டே, ஆர்வம் கலந்த ஒருவித நடுக்கத்துடன் பேசினேன். "நீ பேசியபோது இருந்த வடமொழி பாணியிலான வங்க உச்சரிப்பு நன்றாகவே இருக்கிறது" என்று கூறியவர் என் அருகில் நின்று கொண்டிருந்த சுநீதிகுமார்*

*சட்டர்ஜியை நோக்கி, தாகூர், சமஸ்கிருத உச்சரிப்பில் வங்காள மொழியை இந்த இளைஞன் போல் பேசுவதிலும் ஒரு தனி அழகு இருக்கிறது என நினைக்கிறேன்' என்றார். "உனக்கு என் பரிபூரண ஆசிகள்" என்று கூறி நான் தமிழில் மொழியாக்கம் செய்த அவருடைய சில கவிதைகளை ஆர்வத்துடன் கேட்டார். இந்தச் சந்திப்பு வங்கத்துக்கும் தமிழுக்கும் இடையே ஏற்பட்ட இலக்கியப் பாலத்தின் அடித்தளம் (த.நா.கு.வின் டைரிக் குறிப்புகள்)*[10]

வங்கமொழி மீது ஏற்பட்ட பற்று, தாகூரின் சந்திப்பு, ஆங்கிலேயர் மீது ஏற்பட்ட வெறுப்பு, தீவிரத் தேசீயப் பற்று ஆகிய நிகழ்ச்சிகள் த.நா. குமாரசுவாமியின் மொழிபெயர்ப்புப் பணியை மேலும் மேலும் தூண்டுவனவாக அமைந்தன.

*1930களில் சுதந்திரப் போராட்ட இயக்கத்தில், ஆந்திரக் கேசரி பிரகாசம் அவர்கள் தலைமையில், சென்னையில் தொடங்கிய போராட்டங்களில் தீவிரப் பங்கேற்றார் த.நா.கு. இந்தியத் தேசிய காங்கிரஸின் மூவர்ணக் கொடியை அவருடைய பாடி இல்லத்தில், சில போலீஸார் பலவந்தப்படுத்தி, கொளுத்திய சம்பவம், அவருக்கு ஆங்கிலேயர் மேல் கடும் வெறுப்பினையும் அதே நேரத்தில் தீவிரத் தேசியப் பற்றையும் ஏற்படுத்தியது. (அந்தச் சம்பவத்தைக் குறித்த செய்தி, மார்ச் 15, 1932 இல் ஸ்வராஜ்ஜியா ஆங்கில இதழில் வெளியாகியது). நாட்டுப் பற்றின் உந்துதலினால், நேதாஜி எழுதிய 'இளைஞன் கனவு' (தருணோர் ஸ்வப்ன) 'புதுவழி' (நொதுனேர் பத) ஆகிய நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தார். நேதாஜி சென்னை வந்தபோது அவரைச் சந்தித்து ஆசிபெற்றார். த.நா. குமாரஸ்வாமியை மிகவும் கவர்ந்த மற்றொரு வங்க எழுத்தாளர் தாராசங்கர் பானர்ஜி. அன்னாருக்கும் த.நா.கு.வுக்கும் முதலில் தொடங்கிய இலக்கியத் தொடர்பு; பிறகு ஆழ்ந்த நட்பாக மாறியது. இருவரும் அடிக்கடி சந்திக்க வாய்ப்புகள் இல்லாத சூழலிலும் இருவருக்குமிடையே உணர்வுப்பூர்வமான தொடர்பு இருந்து வந்தது*[11]

வங்கமொழிப் படைப்புகளுடனும், வங்கமொழிப் படைப்பாளர்களுடனும் த.நா. குமாரசுவாமிக்கு நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது. 1930களில் தொடங்கிய அவருடைய மொழிபெயர்ப்புப் பணி 1980 வரை 50 ஆண்டுக் காலம் தொடர்ந்து வந்துள்ளது.

## த.நா.குமாரசுவாமியின் வங்க இலக்கிய மொழிபெயர்ப்புகள்

1. பங்கிம் சந்திர சட்டர்ஜி 2. இரவீந்திரநாத் தாகூர் 3. தாராசங்கர் பந்தோபாத்யாயா, 4. மாணிக் பந்தோபாத்யாயா 5. பிரபோத் குமார் ஸான்யால் 6. சரோஜ் குமார்ராய் சௌதுரி 7. கல்யாணி முகோபாத்யாயா 8. பாலாய் சந்திர முகோபாத்யாயா 9. சரண்தாஸ்கோஷ் 10. சரத்சந்திரர் 11. ஹரிஸாதன் முகோபாத்யாய 12. தாஸ்ரஹல் பானர்ஜி 13. நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ஆகிய வங்கமொழிப் படைப்பாளிகளின் படைப்புகளைத் த.நா. குமாரசுவாமி தமிழில் வழங்கியுள்ளார்.

வங்க இலக்கிய வரலாற்றில் முதல் நாவலாசிரியராக விளங்குபவர் பங்கிம் சந்திர சட்டர்ஜி (1838-1894). வங்கமொழியில் புனைகதைகளே வெளிவந்து கொண்டிருந்த காலத்தில், மனித வாழ்வின் நடப்புகளை - நிகழ்வுகளை மையமாகக் கொண்டு வெளி வந்த பங்கிம் சந்திரரின் படைப்புகள் இந்தியப் படைப்பாளர்களின் கவனத்தைத் திருப்பின. இவருடைய **விஷவிருட்சம், ஆனந்த மடம், மயூகன், கிருஷ்ணகாந்தன் உயில், மாதங்கினி, கபால குண்டலா, துர்கேசநந்தினி** ஆகிய 7 புதினங்கள் த.நா. குமாரசுவாமியால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

பங்கிம் சந்திரரின் படைப்புகளில் 'ஆனந்தமாதி' (ஆனந்த மடம்) முதலிடம் பெறுகிறது. இந்நாவலை மஹேச குமார சர்மா முதன் முதலில் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். 1908-ஆம் ஆண்டு சி. திருச்சிற்றம்பலம் பிள்ளை தமிழில் மொழிபெயர்த்துள்ளார். 1930-ஆம்ஆண்டு த.நா. குமாரசுவாமியும், 1972-ஆம் ஆண்டு அ.கி. ஜெயராமனும் இந்நாவலைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர். இதில் த.நா. குமாரசுவாமியின் மொழிபெயர்ப்பு, வங்க மொழியிலிருந்து நேரடியாகத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது என்பது குறிப்பிடத் தக்கது. இது ஒரு சிறந்த மொழிபெயர்ப்பு நூல் என்று பத்திரிகைகளால் பாராட்டப்பட்டுள்ளது.

> அறுபது ஆண்டுகளாக இந்தியாவில நடந்து வந்த சுதந்திரக் கிளர்ச்சிக்கு 'வந்தே மாதரம்' கீதந்தான் தாரக மந்திரமாக இருந்திருக்கிறது. இன்னுங்கூட அது எல்லார் உள்ளத்திலும் தேசபக்தியை ஊட்டி வருகிறது. 1775இல் முதன்முதலாக அந்நிய ஆதிக்கத்தை எதிர்த்து நடந்த 'சந்நியாசிக் கலகம்' என்ற சுதந்திரக் கிளர்ச்சியின் போது இந்தக் கீதத்தைப் பாடுவதாக பங்கிம் கற்பனையில் வரைந்தார். சென்ற நூற்றாண்டின் இடையில் ஆங்கில ஆட்சியில் ஜில்லா மாஜிஸ் திரேட்டாக இருந்த ஒருவர் இப்படிப்பட்ட ஒரு நாவலை எழுதினார் என்றால் ஆச்சரியமாக இல்லையா?

> **ஆங்கிலத்தில் ஸர் வால்டர் ஸ்காட் அற்புதமான நாவல்கள் எழுதியது போலவே வங்காளத்தில் – ஏன், இந்தியாவிலேயே – முதல் முதலாக அருமையான பல நாவல்களை எழுதிப் பிரசித்தி பெற்றவர் பங்கிம். அவற்றில் பல தமிழிலும் பிற மொழிகளிலும் வெளியாகியிருக்கின்றன** *(பங்கிம் சந்திரர், மொ.பெ., த.நா. குமாரஸ்வாமி, மஞ்சரி ஆக.1977)*

என ஆனந்த மடம் மூலம் மூலநூலின் முக்கியத்துவம் எடுத்துக் காட்டப்பட்டது.

> **பங்கிம் சந்திரருக்கு அமரத்துவம் வந்ததற்குக் காரணம் தேசிய உணர்ச்சி ததும்பும் நவீனமான இந்த ஆனந்தமடமே. இதிலுள்ள 'வந்தே மாதர' கீதமே இதற்கு ஒரு தனிப்பெருமையை அளித்தது. தேசியப் பிரச்சாரத்திற்காக இது மிகவும் இன்றியமையாததாக இருந்தது. அதனால் இந்நவீனம் பல்வேறு மொழி களில் மொழிபெயர்க்கப்பட்டது**[12]

என்று குறிப்பிடுகிறார் த.நா. குமாரசுவாமி. சரத்சந்திரரின் படைப்புகளான **பைரவி** (1941) **ஸௌதாமினி** (1939), **மருமகள்** (1942) ஆகிய புதினங்களைத் த.நா. குமாரசுவாமி தமிழில் வழங்கியுள்ளார். இதில் 'பைரவி' கலைமகள் காரியாலயமும் பிற இரண்டு படைப்புகளை அல்லயன்ஸ் நிறுவனமும் வெளியிட்டுள்ளன.

தாரா சங்கர் படைப்புகளான **அக்கினி** (1940), **கமலினி** (1956), **கவி** (1972), **ஆரோக்கிய நிகேதனம்** ஆகியன த.நா.குமாரசுவாமியின் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன. இவையன்றிப் பிற வங்க மொழி ஆசிரியர்களின் 14 நூல்களைத் த.நா. குமாரசுவாமி தமிழில் மொழிபெயர்த்துள்ளார். அவை:

**விளக்கும் விட்டிலும்** (சரோஜ்குமார் ராய் சௌத்ரி- புதினம் சென்னை மங்கள நூலகம், 1945),

**மயூராக்ஷி** (சரோஜ்குமார் ராய் சௌதுரி - புதினம், சென்னை மங்கள நூலகம் - 1967),

**பொம்மலாட்டம்** (மாணிக் பானர்ஜி - புதினம், புதுதில்லி சாகித்திய அகாதெமி - 1962),

**சந்துவீடு** (ஸந்தோஷ்குமார் - புதினம், சென்னை, ஜோதிநிலையம், 1966),

**மயூகன்** (ராகால்தாஸ் பானர்ஜி - புதினம், சென்னை, அல்லயன்ஸ் கம்பெனி - 1940),

**துருவா** (ராகால்தாஸ் பானர்ஜி - புதினம், சென்னை, அல்லயன்ஸ் கம்பெனி - 1954),

| | |
|---|---|
| சித்திரா | (சரண்தாஸ் கோஷ் - புதினம், சென்னை, வேல் புத்தக நிலையம் 1957), |
| கொஞ்ச நேரம் | (பாலாயி சந்திரமுகோபாத்யாயா 'வனபுல்' - புதினம், சென்னை மங்கள நூலகம் - 1960), |
| ரங்க மகால் | (ஹரிஸாதன் முகோபாத்யாயா- புதினம், சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |
| யாத்ரிகன் | (பிரபோத் குமார் ஸான்யால் - பயண நூல் - சவுத் இந்தியன் லாங்வேஜ் புக் டிரஸ்ட் 1961). |

காகிதப்பட்டு எனும் தலைப்பில் மூன்று வங்கக் குறு நாவல்கள் (சென்னை, மங்கள நூலகம் - 1940, 1942), மால்கோஷ் (பல வங்க ஆசிரியர்களின் சிறுகதைகள் அடங்கிய தொகுதி - சென்னை, மங்கள நூலகம்), இளைஞன் கனவு, (1939), புதுவழி (1947) எனும் தலைப்புகளில் நேதாஜி சுபாஷ் சந்திர போஸின் கட்டுரைகள் ஆகியன சென்னை அல்லயன்ஸ் நிறுவனத்தாரால் வெளியிடப் பட்டுள்ளன. இவை யாவும் தநா.குமாரசுவாமியின் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன.

இவை மட்டுமல்லாமல் காந்திஜியின் உரையமுதம் (மகாத்மாகாந்தி கட்டுரைகள்) பாபுஜியின் நினைவுக்கோவை (கட்டுரைகள் - குஜராத்தி மூலம்), காந்தி நூல்திரட்டு (2வது பகுதி) 'அஹிம்சை', வாழ்க்கை இந்து மத நோக்கு (ஆங்கில மூலம் - டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன், கோதம புத்தர் (ஆங்கில மூலம் - ஆனந்த குமாரசாமி), கிழக்கோடும் நதி (சீன நவீனம் - ஆங்கிலத் திலிருந்து - மூல ஆசிரியர்கள் நாங்குங்போ), துர்லக் (செக்கோஸ் லோவாக்கிய கதை, ஆங்கில மூலம்), காதலர் (பர்மியக் கதை - சென்னை ஜோதி நிலையம், 1945). ஜடாதரன் முதலிய கதைகள் (ஆங்கில மூலம் கே.எஸ். வெங்கடரமணி) இவை யாவும் வங்க மொழி அல்லாத பிற மொழிப் படைப்புகளாகும்.

> ஆனந்த குமாரசாமியின் நூலினை ஆங்கிலத்திலிருந்து மொழியாக்கம் செய்வதற்கு முன் சமஸ்கிருத மொழியின் தங்கை என்று மொழி இயல் வல்லுனர்கள் கருதிய பாலி மொழியை ஓராண்டுக் காலத்தில் கற்று, பௌத்தம் தொடர்பான மேற்கோள்களைப் பாலி மொழியிலிருந்தே மொழியாக்கம் செய்யும் பொருட்டு ஆழ்ந்து படித்தார். மொழிபெயர்ப்பில் எந்த வகையிலும் கருத்துப் பிழை ஏற்படக் கூடாது என்ற முன் எச்சரிக்கையுடன், மேலோட்டமாக நுனிப்புல் மேய்வது போல் இல்லாமல், ஆழ்ந்தே மொழிபெயர்ப்பில் ஈடுபட்டார்[13]

இவ்வாறு இவர் மொழிபெயர்த்து அளித்த நூல்கள் மொத்தம் 62 நூல்களாகும். 14 நூல்கள் இவருடைய சொந்தப் படைப்புகளாகும். த.நா. குமாரசுவாமியின் புதல்வரான த.கு. அஸ்வின்குமார் இவற்றைப் பட்டியலிட்டு வழங்கியுள்ளார்.

த.நா. குமாரசுவாமி நேரடியாக வங்க மொழியிலிருந்து தமிழுக்கு மொழிபெயர்த்ததால் இதற்கு நல்ல வரவேற்பு இருந்தது. 1930களில் அலையன்ஸ், கலைமகள் காரியாலயம் இவ்விரு பதிப்பகங்களும் நூல் வடிவிலும், பத்திரிகைத் தொடராகவும், பங்கிமின் விஷவிருக்ஷம், கபாலகுண்டலா, ஆனந்த மடம் போன்ற நவீனங்களை வெளியிட்டன. சரத்சந்திரரின் நவீனங்களை மொழி பெயர்த்த அகி. ஜெயராமன் அவர்கள் தநாகுவின் மொழிபெயர்ப்புகளைப் பற்றிக் கூறும்பொழுது,

> என்னுடைய ஊரான குமார மங்கலத்திலிருந்து, ஆனந்த மடம் மொழிபெயர்ப்புத் தொடரை வாங்கு வதற்காக அருகில் உள்ள ரயில்வே ஜங்ஷனுக்குச் செல்வேன்....... அக்காலத்தில் நானும் என்னுடைய நண்பர்களும் ஊர் குளத்தங்கரை அருகில் உள்ள மர நிழலில் அமர்ந்து ஒருவர் உரக்கப் படிக்க, மற்றவர்கள் அதை ஆர்வத்துடன் கேட்போம். அவருடைய மொழிபெயர்ப்பு, ஒரு நல்ல தமிழ்க் கதையைப் படிப்பது போல், அவ்வளவு இயற்கையாக இருக்கும். கதாபாத்திரங்களின் வங்காளிப் பெயர்கள்தான் அது ஒரு மொழிபெயர்ப்பு என்பதை நினைவூட்டும். இலக்கிய ஆர்வலர்கள், அலையன்ஸ் பதிப்பகத்தார் அலுவலகத்துக்கு முன் கியூ வரிசையில் நின்று த.நா.கு.வின் மொழிபெயர்ப்புகளை வாங்கிச் செல்வர் அக்காலத்தில்.....[14]

எனும் அ.கி. ஜெயராமனின் இக்கூற்றின் மூலம் தநா. குமாரசுவாமியின் மொழிபெயர்ப்புகளுக்கு எவ்வளவு வரவேற்பு அக்காலத்தில் கிடைத்துள்ளது என்பதை அறியமுடிகிறது.

பங்கிம் சந்திரரின் 15 நாவல்களில் 11 நாவல்கள் தமிழில் வந்துள்ளன. இதில் ஆனந்தமடம் நான்கு முறையும், 'துர்கேசநந்தினி' இருமுறையும், 'கபாலகுண்டலா' இருமுறையும், 'மிர்ணாளினி' இருமுறையும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. கடந்த 50 ஆண்டுகளாகப் பங்கிம் சந்திரரின் படைப்புகளைத் தமிழில் வழங்கும் பணிகள் மொழிபெயர்ப்பு ஆர்வலர்களால் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## தாகூரைத் தமிழில் தந்த த.நா. குமாரசுவாமி

இரவீந்திரநாத் தாகூர் (1861-1940) தலைசிறந்த கவிஞர் என்பதுடன் நாவலாசிரியர், சிறுகதை ஆசிரியர், நாடகாசிரியர், கட்டுரையாளர், சொற்பொழிவாளர், இசைக்கலைஞர், ஓவியர் எனப் பல்வேறு துறைகளிலும் சிறந்து விளங்கியவர். 1910-ஆம் ஆண்டு வங்கமொழியில் எழுதப்பட்ட கீதாஞ்சலி 1915-ஆம் ஆண்டு ஆங்கில மொழிபெயர்ப்பின் மூலம் நோபல் பரிசு பெற்றது.

> கீதாஞ்சலி முதன் முதல் ஆங்கில மொழிபெயர்ப்பில் வந்தபோது, போரால் அலுத்துக் கசந்து போன உலகினுக்கு அமைதியின் மந்திரத்தை ஏந்தி வரும் திவ்விய கானமாகவே மேலை நாடுகள் அதை வரவேற்றன. எவரும் எளிதில் புரிந்து கொள்ளும் உவமைகளும், தெள்ளிய நடையும், சீரிய பொருளும் இக்கவிதைகளுக்குத் தனி மதிப்பைத் தந்தன. ஏதோ ஒரு புதிய உலகைக் கண்டது போன்ற உவகையையும் வியப்பினையும் உண்டு பண்ணின இவை. ஆனால் மூல வங்க மொழியில் படித்த வாசகர்களுக்கு, இள வயதில் டாகுர் தொடங்கிய ஒரு காவிய சாதனை பரிபக்குவ திசைக்கு வந்திருப்பதைத்தான் இவை உணர்த்தின. மனிதன், இயற்கை இவர்கள்பால் அவருக்கு வளர்ந்த அன்புணர்ச்சியானது படிப் படியாகத் தன்னையும் அறியாமலே இறைவனிடம் பற்றுதலாக மாறியது. வாழ்வில் அவருக்கு ஏற்பட்ட ஆழ்ந்த அநுபவங்களால் அவருடைய கவிதைப் பொருள்களுக்கும் உருவகங்களுக்கும் கனிந்ததொரு செவ்வி தோன்றியது.[5]

'கவி காஹினி' (Kavi Kahini, 1878) என்ற கவிதை தாகூரின் முதல் வெளியீடாக உள்ளது.

> உலகக் கவிகளிடையே அவருக்கோர் அழியாத இடமளித்து அவருடைய தனிச்சிறப்பைத் தலைதூக்கி நிற்கச் செய்த எல்லா நூல்களையும் அவர் 1915-ஆம் வருடத்திற்கு முன்பே எழுதி முடித்து விட்டார். . . இவ்வளவும் 1915-ஆம் வருடத்திற்கு முன், குடத்தில் வைத்த விளக்குபோல் இருந்தன. அந்த ஒளி வெளியில் வீசவே இல்லை. திடீரென்று கீதாஞ்சலி வெளிவந்து, ஆங்கில இரசிகர்களின் மனத்தைக் கொள்ளை கொண்டது. கிழக்கே உதயமா யிருந்த இந்த ரவியின் ஒளிக்கிரணங்களை அவர்கள்தான் முதன்முதலில் கண்டார்கள். உடனே நோபல்பரிசு அளித்தார்கள். அவ்வளவுதான் ஒரே நாளில் ரவீந்திரர் உலகப் பிரசித்திப் பெற்றார்[16]

வங்க மொழிப் படைப்பாளராகத் திகழ்ந்த கவி இரவீந்திரநாத் தாகூரை உலகினர் அறியவும் நோபல் பரிசு பெறவும் வழிவகுத்தது இம்மொழிபெயர்ப்பு. இச்சிறப்பைப் பெற்ற இரவீந்திரநாத் தாகூரின் படைப்புகளைத் தமிழில் கொண்டு வரவேண்டும் என்று முனைப்புடன் த.நா. குமாரசுவாமி இப்பணியில் ஈடுபட்டார். 11 புதினங்கள், 8 சிறுகதை நூல்கள், 'டாகுர் சிறுகதைகள்' எனும் தலைப்பில் 2 தொகுதிகள், 3 நாடகங்கள், 1 கவிதைத் தொகுதி, 1 கட்டுரைத் தொகுதி, 2 பயணக் கட்டுரைகள் என மொத்ததம் 26 நூல்கள் த.நா. குமாரசுவாமியின் மொழிபெயர்ப்பில் தாகூரின் நூல்கள் தமிழில் வெளிவந்துள்ளன. தமிழில் 'இரவீந்திரநாத் தாகூர்', 'இரவீந்திர தாகூர்', 'ரவீந்திரர்', 'ரவீந்திரநாத் டாகுர்' எனப் பலவாறு குறிப்பிடுவது வழக்கமாக உள்ளது.

தாகூரின் முதல் நாவலான 'கோரா'வை 1956ஆம் ஆண்டு தமிழில் மொழிபெயர்த்தார் த.நா.குமாரசுவாமி. தொடர்ந்து **புயல், சதுரங்கம், ராஜகுமாரி விபா, ராஜரிஷி, பூந்தோட்டம், இரு சகோதரிகள், லாவண்யா, சிதைந்த கூடு, மூவர், விநோதினி** ஆகிய தாகூரின் 11 புதினங்களைத் த.நா. குமாரசுவாமி தமிழில் வழங்கியுள்ளார். **காரும் கதிரும், கல்லின் வேட்கை, மானபங்கம், போஸ்ட் மாஸ்டர், பத்தினிப்பெண், நெற்றிப் பொட்டு, வெற்றி** ஆகிய சிறுகதைகளும் **'அரசியல் கைதி முதலிய வங்கச் சிறுகதைகளும்'** த.நா. குமாரசுவாமியால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. பெரும் பாலான சிறுகதைகள் **கலைமகள், ஆனந்தவிகடன்** இதழ்களில் வெளிவந்துள்ளன. **மகுடம், நகைச்சுவை நாடகங்கள், புலைச்சி** ஆகிய தாகூரின் மூன்று நாடகங்களைத் த.நா. குமாரசுவாமி தமிழில் வழங்கியுள்ளார். இவை **தாகூரின் நகைச்சுவை நாடகங்கள், ரவீந்திரர் நாடகத் திரட்டு** எனும் தலைப்பில் இரு தொகுதி களாகவும் வெளிவந்துள்ளன. இரவீந்திரரின் கட்டுரைகள் பல மொழி பெயர்க்கப்பட்டு **'ரவீந்திரர் கட்டுரைத் திரட்டு'** எனும் தலைப்பில் சாகித்திய அக்காதெமி வெளியிட்டுள்ளது. தாகூரின் **'ஜாவா யாத்திரை'** எனும் பயணக் கட்டுரைகள் (1951), **'ஜப்பான் பயணம்'** (1952) த.நா.கு.வின் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன. தாகூரின் கவிதைகளை **'ரவீந்திரர் கவிதைத் திரட்டு'** எனும் தலைப்பில் 101 கவிதைகள் த.நா.கு. மொழிபெயர்த்து, சாகித்திய அகாதெமியால் 1961-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

> தாகூரின் படைப்புகளை மிகுதியாகத் தமிழில் மொழி பெயர்த்தமையால் 'தாகூர் மொழிபெயர்ப்பாளர்' என்ற அடைமொழி அவருக்குச் சேர்ந்துவிட்டது. ரஷியாவிற்குத் தாகூர் அறிஞரென ஒரு குழுவில் சென்று வந்ததால் அந்த அடைமொழி உதற முடியாத

> அளவிற்கு அவரோடு ஒட்டிக் கொண்டு விட்டது என்றே குறிப்பிட வேண்டும்.[17]

வங்க மொழி - தமிழ் மொழிகளுக்குத் த.நா. குமாரசுவாமி ஆற்றியுள்ள தொண்டினைப் பாராட்டும் வகையில் அவருக்கு "நேதாஜி புரஸ்கார்" (நேதாஜி இலக்கிய விருது) அளிக்கப்பட்டது.

**தாகூர் எழுதிய 'விநோதினி' (நாவல்)**

த.நா. குமாரசுவாமி தமிழில் மொழிபெயர்த்த தாகூரின் 'விநோதினி' எனும் நாவல் முதலில் கலைமகள் இதழில் தொடராக இடம்பெற்றது. 1961-ஆம் ஆண்டு இந்நாவல் நூலாக சாகித்திய அகாதெமி வெளியீடாக வெளியிடப்பட்டுள்ளது.

> ரவீந்திரர் வரைந்துள்ள சிறப்பான நவீனங்களில் இது ஒன்றாகும். வங்க மொழியில் 'சோகேர் பாலி' என்ற பெயரில் 1902-இல் இது முதன் முதல் வெளியாகியது. தற்காலப் பாணியான நவீனங்களில் முதலாவதென்ற தனிப்பெருமை இதற்கு உண்டு. மற்றும் பல சுவைமிகு நவீனங்களை டாகுர் புனைந்திருப்பினும், இதில்தான் அவருக்குள்ள கதை சொல்லும் திறமை அருமையாக அமைந்திருக்கிறது. மனித உள்ளங்களில் நடக்கும் நாடகத்தை நின்று நிதானமாகக் கவனித்து வியந்து சுவை பயக்க, இதன்கண் சித்திரித்திருப்பது போன்று அவர் தம் நவீனம் வேறெதிலும் செய்யவில்லை. காதலுக்கும் காமத்துக்கும் உள்ள தொடர்பை - நசையெனும் சேற்றில் முளைத்தெழும் தூமென் காதல் தாமரையை - இதில் காண்பது போல் உளம் விட்டுப் பரிவுடன் அவர் தம் நவீனம் வேறெதிலும் வருணிக்க வில்லை. டாகுர் படைத்துள்ள பெண் குணசித்திரங் களில் விநோதினி என்ற பாத்திரமே உண்மையோடு ஒட்டியதும், தெளிவுமிக்கதும் உயிர்த்துடிப்புடையது மாய்த் திகழுகிறது[18]

என்பது இந்நாவலுக்குரிய சிறப்பாகும்.

தாகூரின் குறிப்பிடத்தக்க இந்நாவல் கலைமகள் இதழில் தொடராக வெளிவந்ததால் அக்காலத்திய தமிழ் வாசகர்களின் கவனத்திற்குரியதாக இருந்துள்ளது.

**'ரவீந்திரர் கவிதைத் திரட்டு'**

ஆயிரத்துக்கும் மேற்பட்ட கவிதைகளையும் இரண்டா யிரத்துக்கும் மேற்பட்ட இன்னிசைப்பாடல்களையும் தாகூர்

இயற்றியுள்ளார். இவை முழுவதுமாக வெளியிடப்படவில்லை யாதலால் பெரும்பாலோனோர் அவருடைய சீரிய ஆக்கங்களைத் தெரிந்து கொள்ள வாய்ப்பில்லை. சாகித்திய அகாதெமியினர் அவருடைய படைப்பாக்கங்களை ஒருங்கு திரட்டி வெளியிடுவதிலும் அவற்றை மொழிபெயர்த்து வெளியிடுவதிலும் கடின முயற்சி மேற்கொண்டனர். இந்த முயற்சியால் தேர்ந்தெடுத்த கவிதைகள், நாடகங்கள், சிறுகதைகள், கட்டுரைகள் ஆகியவற்றை வெளியிட்டுள்ளனர்.

> டாகுரினுடைய அறிவின் விரிவையும், ஆழத்தையும், சக்தியையும் எல்லா இந்திய மொழிகள் வாயிலாகவும் வாசகர்களுக்கு உணர்த்துவதே அவர்களின் முதல் நோக்கமாகும். மற்றொன்று இரண்டாம் பட்சமாக இதேபோல் வெளிநாட்டு வாசக நண்பர்களுக்கு இந்த விருந்தினை அளிப்பதாகும்[19]

என்ற நோக்குடன் சாகித்திய அகாதெமி இத்திட்டத்தைச் செயல்படுத்தி வருகிறது.

'ரவீந்திரரின் கவிதைத் திரட்டு' எனும் நூல் தாகூரின் கவிதைச் சிறப்பை அறிய இன்றும் நமக்குப் பயன்தரும் ஓர் அரிய நூலாகும்.

> நூற்றொரு கவிதைகள் அடங்கிய இத்திரட்டு திட்ட மிட்டுள்ள எட்டுத் தொகைகளில் முதலாவதாகும். வங்க மொழியில் உள்ள மூலக் கவிதைகள் தேவநாகரி எழுத்தில் அச்சேறி வெளியிடப்பட்டன. பின்னர்ப் பாரதத்தின் முக்கிய மொழிகளில் மொழிபெயர்க்கப் படுகின்றன. அதன்பிறகு உலகத்துப் பிரதான பாஷைகளில் ஆக்கப்படும். வடஇந்திய மொழி களிடையே நெருங்கிய தொடர்பு இருப்பதால் டாகுரின் தாய்மொழியான வங்காளியைப் பயிலாதவர் கூட அவருடைய கவிதைகளைப் படித்து ஓரளவு நுகர்ந்து இன்புற முடியும். மொழியோடு நிற்கவில்லை இந்த உறவு. பொதுவான சூழ்நிலை, பொதுவான விஷயங்கள், பொதுவான அனுபவங்கள் இவற்றின் அடிப்படையில் எழும் உணர்ச்சியிலும் நோக்கிலும் இந்த உறவு இந்தியரிடையே நிலவி வருகிறது. தென்மொழியை எடுத்துக் கொண்டால், மொழி வேறுபாட்டால் சிரமங்கள் பல இருப்பினும், இதே உணர்ச்சியும் ஐக்கியப் பற்றும் அம்மொழி பேசும் மக்களிடையேயும் தென்படுவதால், இது சாத்தியமே தான். இதுபோன்ற மொழிபெயர்ப்புகளின் உதவி கொண்டு தேவநாகரி எழுத்தில் தந்துள்ள டாகுரின் மூலக் கவிதைகளை ஓரளவு எல்லா வாசகர்களுமே படித்து அவற்றில் காணும் அழகினை – உவமை நயங்களை – நுகர்வர்

> என்பதில் ஐயமே இல்லை. பின்னர், இந்தக் கவிதைகளை மற்ற உலக மொழிகளில் பெயர்த்து வரும்போது இதுகாறும் வெளிவந்த அவருடைய நூல்கள் தந்துள்ளதற்கு மேலாகவே டாகுரின் ஆக்கங்களைப் பற்றித் தனிப்பட்டதும் தெளிவானதுமான அறிவு மக்களிடையே இதனால் பரவுமென்று நம்புகிறோம்[20]

என ரவீந்திரரின் கவிதைத் திரட்டு நூலின் முன்னுரையில் ஹுமாயூன்கபீர் குறிப்பிடுகிறார்.

இந்த நூலில் அமைந்துள்ள 17 பக்க முன்னுரை 'ரவீந்திரரின் கவிதைகள்' எனும் தலைப்பில் கவி இரவீந்திரரின் சிறப்பையும் கவிதைகளின் சிறப்பையும் வாசகர்கள் அறியும் வகையில் தெளிவாக வழங்கப்பட்டுள்ளது. இதைத் த.நா. குமாரசுவாமி எளிமையான நடையில் மொழிபெயர்த்துள்ளார்.

'அருவியின் கனவு கலைந்தது' எனும் கவிதை இந்நூலின் முதல் கவிதையாக இடம் பெற்றுள்ளது.

> இன்று இப்புலரும் பொழுதில் கதிரவன் ஒளி
> என் உள்ளமதில் புகுவது ஈதென்ன!
> இருட்குகையுள் வைகைறைப் புள்ளின்
> இன்னிசை பாய்வதும் ஈதென்ன!
>
> இத்தனை நாட்களுக்குப் பின்னர் எனதுள்ளம்
> விழித்தெழுந்தது; ஏனோ ஈதறியேன்
> என் உயிர் தளிர்த்தெழுகிறது;
> நீர்ப்பெருக்கெனச் சுழன்று எழுகிறதடா!
> இவ்உயிர்த்துடிப்பும், உணர்வின் வேகமும்
> என் கட்டுக்குள் அடங்கவில்லை காண்![21]

என இக்கவிதை தொடங்குகிறது. இத்தொகுப்பில் உள்ள சில பாடல்களின் தனித்துவத்தைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

> நிர்ஜரேர் ஸ்வப்நபங்க' (அருவியின் கனவு கலைந்தது) என்ற கவிதையுடன் தொடங்குகிறது இத்திரட்டு. தம் கவிதா சக்தி விழிப்புற்றதை இக்கவிதை விளக்கு கிறதென டாகுர் கருதுகிறார். இதில் தொனிக்கும் ஒரு கவிதைப் பண்பே டாகுரின் நீண்ட இலக்கிய வாழ்வில் தொடர்ந்து வந்தது. சில சமயம் 'ஸோனார்தரீ' (பொன்ஓடம்), 'நிருத்தேச யாத்ரா' (குறிப்பிலாப் பயணம்) போன்ற கவிதைகளில் இந்தப் பண்புடன் ஆழ்ந்த அத்யாத்மிக வேட்கையும் தோய்வதைக் காணலாம். 'ஜேதே நாஹி திபோ' (போக விடேன்), 'வஸுந்தரா' (மாநிலத் தாய்), 'பாரத (புண்ணிய தீர்த்த) என்ற கவிதைகளில் இந்தக் காவிய உணர்வு மனிதத்

*தசைகளுடன் கலக்கின்றது. ஊர்வசி, சபி (ஓவியம்), சஞ்சலா (சலனப் பிரபஞ்சம்) போன்ற பாக்கள். அறிவின் அமைதியும் ஐம்பொறி நுகர்வும் நிறைவாக இணைந்து இன்சுவை மிளிரும் இலட்சியக் கவிதையாகத் திகழும் 'ப்ரஹர சேஷேர் ஆலோய் ராஙர்' (பொழுதின் கடையொளியில் வண்ணம் சேர்) என்ற பாட்டு ஆகியவை இத்தகைய இலட்சியக் கவிதைக்கு ஓர் எடுத்துக்காட்டு எனலாம்.*[22]

மனிதர்களைப் பற்றியும், மனிதப் பண்புகளைப் பற்றியும் இடம்பெறுகின்ற சில கவிதைகளின் தனித்தன்மையும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. மனிதனின் மகத்தான சாதனைகளையும், வேதனைகளையும், உறவுகள் குறித்தும் தாகூரின் எண்ண ஓட்டத்தைக் காட்டுவதாக இக்கவிதைகள் உள்ளன.

*'பிதாய் அபிசாப' (விடைபெறுகையிலே சாபம்) என்பதில் தேவயானி இட்ட சாபத்திற்கு மாறாக அவளுக்கு ஆசி கூறும் கசன், உண்மையில் சிறந்த மனிதப் பண்புடையவனாகிறான். 'ப்ராஹ்மண' (அந்தணன்) என்ற கவிதையில் மனிதனுக்குரிய மாண்பெல்லாம் அவனது பிறவியினால் ஏற்படவில்லை, சற்றும் மனக் கசப்பின்றி உள்ளதை உள்ளபடி ஏற்பதில்தான் என்பதை ஆசாரியன் உணர்கிறான். "ஜேதே நாஹி திபோ' (போக விடேன்) என்பதில் எல்லாம் அறிந்தவ ரெனத் தம்மை நினைத்துக் கொள்ளும் நரநாரியர் காணாத மனித இயல்பின் உண்மைக் கருத்தை ஒரு சிறுமி வெளிப்படுத்திவிடுகிறாள். 'காந்தாரீர் ஆவேதந' (காந்தாரியின் முறையீடு) 'கர்ணகுந்தீ ஸம்வாத' (கர்ணனும் குந்தியும்) இவ்விரண்டும், பாசம், நகை, அச்சம் யாவையும் வென்று நிற்கும் மனிதத்தன்மையின் உயர்வைத்தான் அழுத்திச் செல்கின்றன. சிறு கவிதை யான 'திதி' (அக்காள்) என்பதிலும், 'ஜத்மகதா' (பிறந்த கதை) என்பதுடன் தொடங்கும். பிள்ளைக் கவிதை யிலும் மனித உறவில் உள்ள உருக்கமும் அழகும் அப்படியே பிரதிபலிக்கின்றன.*[23]

கவி தாகூரின் கவிதைகள் குறித்து அறிந்துகொள்ளத் தமிழில் இம்மொழிபெயர்ப்பு நூல் வெளியிடப்பட்டது. படிப்போர் இதன் பயனை உணர்வர். த.நா. குமாரசுவாமி எழுதிய 'ஞாயிறும் திங்களும்' என்ற கட்டுரை மகாகவி இரவீந்திரநாத் தாகூரையும் கதைச்சிற்பி சரத்சந்திரரையும் ஒப்பிட்டு இருவரும் வாழ்க்கையை நோக்கிய விதம், ஒருவரிடம் மற்றவர் எவ்வளவு மதிப்பு வைத்திருந்தனர் என்பவற்றை விளக்குகிறது. வங்கமொழிப் படைப்பாளிகளின் தனிச்சிறப்பைச் சுவைபடச் சித்திரித்துள்ளார். இதனால் இப்படைப்பாளிகளின் பிற

பரிமாணங்களையும் அவ்வப்போது எழுதி வாசகர்களுக்கு அவர்களின் உள்ளங்களைத் திறந்து காட்டியுள்ளார் த.நா. குமாரசுவாமி.

> இரு சுடர்கள் ஒன்று ஞாயிற்றுக்கு ஒப்பானது. மற்றது திங்களுக்கு நிகரானது – வங்க இலக்கியவானில், சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து இந்த நூற்றாண்டின் முற்பகுதி வரை ஒளிபரப்பின

எனத் தொடங்கும் இக்கட்டுரையில் த.நா. குமாரசுவாமி இவ்விரு படைப்பாளிகளையும் எவ்வளவு நேசித்திருக்கிறார் என்பது புலப்படும். இவ்விரு படைப்பாளிகளைப் பற்றியும் தமிழுலகினர் அறிந்துகொள்ளத் த.நா. குமாரசுவாமி எழுதியுள்ள இக்கட்டுரை மிகவும் பயனுடையதாகும். இக்கட்டுரையில் சரத் சந்திரரின் மறைவின் போது தாகூர் வடித்த 'ஒரு சாதாரணப் பெண்' எனும் கவிதை குறிப்பிடத்தக்கது. 1938 ஜனவரி 18ஆம் நாள் சரத்சந்திரர் மறைந்தபோது முதுபெருங்கிழவரான மகாகவி, அவரது மறைவைக் குறித்து உள்ளம் நெகிழ ஒரு சிறு செய்யுள் வாயிலாகத் தம் துயரை வெளியிட்டார்.

> அன்பிலே வீற்று எவர் சாவா நிலையை எய்தினாரோ
> மரணத்தின் ஆட்சியினால் அவரை நாம் இழந்தது
> இழப்பே யன்று;
> நாட்டின் மண்ணிலே அவர் மறைந்தாலும்
> நம் உள்ளத்தில் அவர் என்றுமே உள்ளார்

மேலும் இரவீந்திரர் இந்த நாவரசை மறக்காமல் தம் கவிதைத் தொகுதி ஒன்றில் வரும் 'ஒரு சாதாரணப் பெண்' என்ற கவிதையில் சரத்சந்திரர் பெண்களைப் பற்றிக் கதைகளைப் புனைந்தவராதலால் ஏமாற்றம் அடைந்த ஓர் அப்பாவிப் பெண், காலன் மீது தன் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ளத் தன் மனத்தைத் திறந்து, அதற்கான வழியெல்லாம் சொல்லிச் சரத்சந்திரரை உதவிக்கு அழைப்பதை வர்ணிக்கிறார்.

"என் கதையை ஏன் நீங்கள் எழுதவில்லை?..... எழுதுங்கள் சரத்பாபு" என்கிறாள். இதிலிருந்து சரத் சந்திரருக்கு இருந்த எழுத்து வன்மையை எவ்வளவு தெளிவாக இரவீந்திரர் புரிந்து கொண்டிருந்தா ரென்பது நன்கு விளங்கும் என இக்கட்டுரையில் த.நா. குமாரசுவாமி குறிப்பிட்டுள்ளார். கவி இரவீந்திரநாத் தாகூர், கதைச்சிற்பி சரத் சந்திரர் இருவரும் ஞாயிறும் திங்களும் போல வாழ்ந்ததை விளக்கிய இக்கட்டுரை முக்கியத்துவமுடையதாகும். தமிழரசு (16-5-77) இதழில் வெளியான இக்கட்டுரை மஞ்சரி (ஆகஸ்ட் 1977) இதழில் மீண்டும் வெளிவந்துள்ளது. சரத் சந்திரரரைப் பற்றி வங்கமொழியில் வெளி

வந்த கட்டுரைகளை ஆதாரமாகக் கொண்டு சுருக்கித் தமிழில் த.நா. குமாரசுவாமி 'சரத் சந்திரர்' எனத் தலைப்பிட்டு 12 பக்கங்களில் மஞ்சரி இதழில் (ஏப். 1974) எழுதியுள்ள கட்டுரையும் குறிப்பிடத் தக்கது.

**'ரவீந்திரரின் தேர்ந்தெடுத்த கட்டுரைகள்'**

சிறந்த கவிதைகளையும், சிறுகதைகளையும், நாவல்களையும், நாடகங்களையும் வழங்கிய தாகூர் கருத்துச் செறிவுள்ள கட்டுரை களையும் வழங்கியுள்ளார். இவை இரண்டு தொகுதிகளாகத் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன. இரண்டு தொகுதிகளையும் ஒரே நூலாகச் சாகித்திய அகாதெமி 1992 ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளது. இந்நூல் த.நா. குமாரசுவாமி, த.நா. சேனாபதி ஆகிய இருவரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இந்திரா பார்த்தசாரதி இக்கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்துத் தொகுத்து வழங்கியுள்ளார். இதில் 1. மகாத்மா காந்தி, 2. பாரத நாட்டின் சரித்திரப்போக்கு, 3. விஞ்ஞானமும் மெய்ஞ் ஞானமும் இணைந்த கல்வி முறை, 4. சர்வகலாசாலை எப்படி இருக்க வேண்டும்?, 5. பெண், 6. உண்மை அழைக்கிறது, 7. ரவீந்திரரின் அரசியல் கருத்து, 8. நாகரிகத்தின் விளைவு ஆகியன முதல் தொகுதியாகவும், 9. என்னைப் பற்றி, 10. பல்வகைக் கடிதங்கள், 11. ஜப்பான் பயணம், 12. இலக்கியம், 13. இலக்கியத்தின் உருவம், 14. பண்டைய இலக்கியம், 15. தற்கால இலக்கியம், 16. ஐம்பெரும் பூதம் ஆகியன இரண்டாம் தொகுதியாகவும் அமைந்துள்ளன.

கவிதை, சிறுகதை, நாவல், நாடகம் ஆகியவற்றுடன் இக்கட்டுரைகளை ஒப்பிடும் பொழுது, இதில் கற்பனை என்பது இடம்பெறவில்லை. தாகூர் இத்தலைப்புகள் ஒவ்வொன்றைப் பற்றியும் தன்னுடைய அனுபவத்தைக் கொண்டு, தம் காலத்தில் நடக்கும் நிகழ்வுகளைக் கண்டு, அதன் போக்குகளை உணர்ந்து எழுதியுள்ளார். (எ.டு) 'பெண்' எனும் கட்டுரையை ஒரு சிறு சான்றாகக் காட்டலாம்.

> 'மனிதப் பிறவியில் பெண் பழமையானவள். மக்கள் சமூகத்தில் அவளை ஆதிசக்தி என்று அழைப்பதற்குக் காரணம் அவள்தான் உயிரைச் சுமந்து அதற்கு உரமும் ஊட்டுபவள்'

எனத் தொடங்கும் இக்கட்டுரையில் பெண்கள் இவ்உலக வாழ்வில் எவ்வளவு முக்கியத்துவம் உடையவர்கள் என்பதுடன் ஆண்களுக்கும், பெண்களுக்குமுள்ள வாழ்வியல் வேறுபாடுகள் எவ்வளவு என்பதையும் விளக்குகிறார் தாகூர்.

> எனக்கென்னவோ உலகில் புதிய யுகம் தோன்றிவிட்ட தாகத்தான் படுகிறது. நெடுங்காலமாக மனித நாகரிகத்தை வளர்க்கும் பொறுப்பு ஆண்களின்

கையிலேதான் இருந்து வருகிறது. இந்த நாகரிக உலகின் அரசியல், பொருளாதார நீதி, சமுதாயக் கட்டுத்திட்டம் எல்லாவற்றையும் இதுவரை ஆண்களே உருவாக்கி வந்திருக்கிறார்கள். அவர்களுக்குப் பின்னால் எங்கோ மறைவில் இருந்தபடி பெண்கள் குடும்ப அலுவல்களில் மட்டுமே ஈடுபட்டு வந்திருக் கிறார்கள். இதனால் நம் பண்பாடுகளெல்லாம் அரைகுறையாகத் தான் உருவாகியிருக்கின்றன. அவற்றில் ஒரு நிறைவைக் காண முடியவில்லை. பெண் உள்ளம் என்னும் பொற் களஞ்சியம் ஆணின் முயற்சிகளில் பயன்படாதிருந்ததே இந்தக் குறைபாட்டிற்குக் காரணம். இப்போது அந்தக் களஞ்சியம் திறக்க வழி பிறந்துவிட்டது[24]

என்று இக்கட்டுரையில் குறிப்பிடுகிறார். பெண்கள் முன்னேற வேண்டும். காலங்காலமாக ஆண்களினால் அவர்களுடைய ஆற்றல் தடைபட்டுவிட்டது என்பதை இக்கட்டுரையில் (1936) வலியுறுத்தி யுள்ளார் தாகூர். இதுபோன்றே இத்தலைப்புகளுக்குரிய பொருண்மை அந்தந்தக் கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இதன் மூலம் தாகூரின் சிந்தனைகளை, அவருடைய அனுபவங்களை இந்தத் தொகுப்பின் மூலம் அறியலாம்.

த.நா. குமாரசுவாமி, த.நா. சேனாபதி இருவரின் மொழி நடையும் தமிழில் தாகூர் எழுதியது போல அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

### 'ரவீந்திரர் கதைத்திரட்டு'

ரவீந்திரர் கதைத்திரட்டு த.நா. குமாரசுவாமியின் மொழி பெயர்ப்பில் இரு தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளது. முதல் தொகுதியில் இருபது கதைகள் இடம்பெற்றுள்ளன. இது மகாகவியின் பிறந்த நூற்றாண்டு நிகழ்ச்சியின் போது 1961ஆம் ஆண்டு சாகித்திய அகாதெமியினரால் தமிழில் கொண்டு வரப்பட்டது. இரண்டாம் தொகுதியில் 15 கதைகள் இடம்பெற்றுள்ளன. இந்நூல் 1968ஆம் ஆண்டு சாகித்திய அகாதெமியால் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலின் முன்னுரையில் த.நா. குமாரசுவாமி ரவீந்திரரின் சிறுகதைகள் பற்றி எழுதியுள்ளார்.

ரவீந்திரரின் சிறுகதைகளைப் பற்றி அறியாதவர்களே இருக்க மாட்டார்கள். அவர் விட்டுச் சென்ற அழியா இலக்கியச் செல்வங்கள் இவை. பல்வேறு சுருதிகளில் பேசுவன; விவிதச் சுவை பயப்பன. குருதேவர் தம் சிறுகதைகளைப் பற்றித் தாமே கூறியுள்ளவற்றை அவருடைய பக்தை ராணீ சந்த அம்மையார் தமது 'ஆலாபசாரீ ரவீந்திரநாத்' எனும் வங்க நூலில் குறித்துள்ளார். அதை இங்குத் தருவது சாலப்பொருத்தமானது.

> நான் இத்தனை நாட்களுக்குப் பிறகு பெரு மகிழ்ச்சி யடைந்தேன். 'பரிசய' என்ற பத்திரிகை (Accurate) ஒரு மதிப்புரையை என் சிறுகதைகளுக்கு வழங்கியது. ஆனால், அவற்றிற்கு ஒரு இலக்கியச் சிறப்பு (Literary Value) இருப்பதாக என் நாட்டவர் ஒப்புக் கொள்ளாம லேயே இருந்தனர். எட்வர்டு தாம்ஸன் (Edward Thompson) என்னிடம் ஒரு சமயம், 'உயர்ந்த சிறுகதை களுக்குரிய உண்மைச் சுவை தங்கள் கதைகளில் ஊடுருவியுள்ளது, என்று மொழிந்துள்ளார்.

இத்துடன் தாகூர் தன் சிறுகதைகள் குறித்துக் கூறியதைத் த.நா. குமாரசுவாமி இம்முன்னுரையில் வழங்கியுள்ளார்.

> பூரண நோக்குடன் இவைபோன்று நான் படைத்த இலக்கியங்கள் மிகச் சிலவே. வங்க மண்ணிற்கும், நீருக்கும் வானத்திற்கும் தனிப்பட்ட மகிமையொன்று உண்டு. எனக்கு முன்னே எழுத்தாளர் எவருமே இக்கண் கொண்டு வாழ்வினை நோக்கவில்லை. நான் ஏழை எளிய நாட்டுப்புறத்தவரின் எழுச்சி வீழ்ச்சி, இன்பதுன்பம் இவற்றை உணராதவனெனப் பலர் என்னைப் பற்றி எடைபோட்டிருந்தனர். அதை யெல்லாம் நான் பொறுத்துக் கொண்டேன். ஆனால் இப்போது 'பரிசய' பத்திரிகையில் வெளியான என் கதைகளைப் பற்றிய விமரிசனம் நான் போற்றும் உயரிய சன்மானமாகும்........ வங்க நாட்டுப்புறங்களில் வசித்து, அங்குக் கண்ட காட்சிகள், அவ்வெளிய மக்களின் வாழ்க்கைச் சித்திரங்கள் என்னுள் கதைகளில் ஊடுபாவாக இழைந்து விளங்குவன.[25]

இத்தொகுப்பில் 1. பொன்மான் (ஸ்வர்ண ம்ருக) 2. ஒரு குட்டிப் பழங்கதை (ஏகடி க்ஷுத்ர புராதந கல்ப) 3. பாலேடு (யக்ஞேச்வரேர் யக்ஞ) 4. சொத்துக்குரியவன் (ஸம்பத்தி ஸமர்ப்பண) 5. கழுவாய் (ப்ராயச்சித்த) 6. கொடைபரிமாற்றம் (தாந ப்ரதிதாந) 7. அக்காள் (திதி) 8. படித்துறையின் கதை (காடேர் கதா) 9. இடைவெளி (வ்யவதாந) 10. மறுவஞ்சம் (ப்ரதிஹிம்ஸா) 11. கொடுக்கல் வாங்கல் (தேநா பாவ்நா) 12. தாராபிரசன்னரின் புகழ் (தாராப்ரஸந்நேர் கீர்த்தி) 13. அணிகலமிழந்தாள் (மணிஹாரா) 14. பிள்ளை வேள்வி (புத்ரயக்ஞ) 15. தாகூரின் நிகழாத கதை (அஸம்பவ கதா) ஆகிய சிறுகதைகள் இரண்டாம் தொகுதியில் இடம்பெற்றுள்ளன. தாகூரின் சிறுகதைகளை தமிழில் த.நா. குமாரசுவாமி ஒரு படைப்பாளியாக மொழி பெயர்த்துள்ளார். அவருடைய படைப்பாக்க அனுபவம் இத்தகைய் சிறுகதைகளை மொழிபெயர்க்கப் பெரிதும் துணையாக அமைந்துள்ளது.

தாராசங்கர் பந்த்யோபாத்யாய் எழுதிய 'கவி' எனும் நாவல் த.நா. குமாரசுவாமி மொழிபெயர்ப்பில் நேஷனல் புக்டிரஸ்ட்டின் மூலம் (செப். 1972) வெளியிடப்பட்டது. பிற்போக்கான சமுதாயத்தின் அடித்தட்டில் ஒதுக்கப்பட்ட இனத்தைச் சேர்ந்த ஒருவனே இக்கதையின் நாயகன். டோம் என்ற இனத்தைச் சேர்ந்த மயானத்தில் சவங்களை எரிக்கும் தொழிலைச் செய்பவன்.

> டோம்கள் என்றால் ஒருவகைக் கொடிய மக்கள் இனத்தவர். ஜமீன்தார்களின் பாதுகாவலர் களான சிலம்பம் பயின்ற முரடர்கள் என்றே பொருள்படும். இவர்கள் பின்பு கொள்ளை, கொலை போன்ற கொடுமைகளைப் புரிவோராயினர். இக்காலத்தில் இவர்கள் உடல் வருந்தி வேலை செய்யும் பாட்டாளி மக்களாவர். இத்தகைய மறக்குடியில் தோன்றிய நிதாயி, ஒரு கவிஞன். நிதாயின் மாமன் ஒரு பயங்கர வழிப்பறிக்காரன். நிதாயி இத் தொழிலை மேற் கொள்ள வேண்டியிருந்தது. ஆனால் சிறு பிராயத் திலேயே அவன் மனம் நேரிய பாதையிலேயே திரும்பியது. கற்பனையில் விருப்புடையவன். கள்ளனாகப் போக வேண்டிய அவன் கவிஞனாக மாறி, இனிய பாடல்களைப் புனையலானான். இந்த நவீனத்தின் தொடக்கத்திலிருந்து இத்தகைய எழுத்திலே வல்லவனை, ஒவ்வொரு படியாக உயர்ந்த இலட்சியத்திற்கு ஆசிரியர் இட்டுச் செல்வதை உணரலாம். தாராசங்கர் இந்த இலட்சியத்தைக் கருத்தில் கொண்டவர். இதுவே வாழ்க்கையின் தருமமாகும், சமூகத்தின் ஆதர்சமாகும்[26]

என இந்நாவலின் சிறப்பைக் குறிப்பிட்டுள்ளனர்.

கவிஞன் கூறும் கவிதைகளைத் த.நா. குமாரசுவாமி வங்கமொழி உச்சரிப்பை அவ்வாறே எழுதி அடிக்குறிப்பில் அதன் பொருளைத் தமிழில் வழங்கியுள்ளார் (எ-கா.)

> கர் ஜ்வலிலோ – மன ஹாராலோ சட்டாய் ஸுரே கோ!
> ஸுகேர் ஏகி ஆகுல ஆதாந்தர்!
> வீடு எரிந்து போயிற்று. என் மனம் பாட்டிலே
> தொலைந்து போயிற்று
> இன்பத்திடையே இதென்ன அவலம்...... ஆகுலம்?[27]

என இதன் மொழிபெயர்ப்பை வழங்கியுள்ளார் த.நா. குமாரசுவாமி. இந்நாவல் முழுமையும் ஒரு கவிஞனைச் சுற்றியே இருப்பதால் இடையே இடையே கவிதை வரிகள் இடம் பெறுகின்றன. இவை வேறு சில பாடல்களையும் நமக்கு நினைவூட்டுகின்றன.

> தோமார் சோக்கே ஜல தேக்கிலே
> ஸாரா புவன் ஆந்தார் தேக்கி

*தும் ஆமார் ப்ராணேர் அதிக ஜேநேஓ*
*தாஹா ஜாநோ நாகி?*[28]

**உன் கண்ணில் நீர் வருவதைப் பார்த்தால் இந்த உலகமே எனக்கு இருண்டு விடுகிறது! நீ என் உயிரினும் மேலானவள் என்பதை நீ அறியாயோ!**

இங்குத் தமிழில் 'உன் கண்ணில் நீர் வழிந்தால்' எனும் திரைப்படப் பாடல் நினைவுக்கு வராமல் போகாது. இதுபோல் பல சிறப்புகளை இந்நாவல் பெற்றுள்ளது.

### த.நா. குமாரசுவாமியின் மொழிபெயர்ப்பு அனுபவங்கள்

த.நா. குமாரசுவாமி மொழிபெயர்ப்பில் பழுத்த அனுபவம் வாய்ந்தவர் என்பதை இலக்கிய வாசகர்கள் நன்கு அறிவர். இத்துறையில் உள்ள நெளிவு சுளிவுகளை, நுணுக்கங்களை இவர் நன்கு அறிந்திருந்தார். ஒரு படைப்பாளராகவும் மொழிபெயர்ப்பாளராகவும் ஒருசேர விளங்கிய த.நா. குமாரசுவாமி இரண்டிற்கும் உள்ள வேறுபாடுகளை, சிக்கல்களைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது,

**சொந்தக் கதைகளை நான் உருவாக்கியபோது சொற்களைத் தேடித் திரிய வேண்டிய அவசியமே ஏற்படவில்லை எனக்கு. பருந்தும் அதன் நிழலும் போல அவை சிந்தனையின் அடிச்சுவடிலேயே வந்தன. ஆனால் நான் மொழிபெயர்க்கும் போது இந்தச் சொற்கள் அடங்கிப் போகவில்லை. இங்கே விருப்பம் போல் சொல்லாட்சி செய்ய இயலாது. மூலநூலின் அடியொற்றித்தான் செல்ல வேண்டும். மூல ஆசிரியனையும், மொழிபெயர்ப்பாளனையும் ஓட்டப் பந்தய வீரர்களுக்கு ஒப்பிடலாம். மூலஆசிரியன் தளையில்லாமல் அழகாக ஓடமுடிகிறது. மொழி பெயர்ப்பாளனுக்குக் காலில் தளை உண்டு. அந்தத் தளை இருப்பினும் அது தெரியாமலும் தடுக்கி விழாமலும், மூல ஆசிரியன் போல், லாகவமாக ஓட வேண்டி யுள்ளது. அப்பொழுதுதான் அவன் வெற்றி யாளனாகக் கருதப்படுவான்**[29]

என்று கூறியுள்ளார் த.நா. குமாரசுவாமி.

தாகூர் நூல்களின் மொழிபெயர்ப்பைப் பற்றியும் அந்தந்த நூல்களின் முன்னுரைகளிலும் சில கருத்துகளைக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். 'எழுதுவது எப்படி' (1969) என்ற நூலில் இடம் பெற்ற மொழிபெயர்ப்புக் கட்டுரையில் த.நா. குமாரசுவாமி விரிவாகவே இதை எழுதியுள்ளார். பொதுவாகக் கவிதையை மொழிபெயர்க்கும்போது

ஏற்படும் அனுபவம் வேறுபட்டது என்பதை மொழிபெயர்ப்பாளர்கள் அறிவர். இந்த அனுபவத்தைப் பற்றி இவர் கூறுவது என்னவெனில்,

> சிறுகதை, கட்டுரை புதினம், நாடகம் இவற்றை மூல நூலுக்கு ஏற்ப, சிறிதும் வழுவாமல் நம் மொழியில் கொணர முடியும். ஆனால் கவிதைக்கு வரும்போது தான் பெரும் பிரச்சினை குறுக்கிடுகிறது. முதலில் யாப்பு நடையுடன் மொழிபெயர்ப்பது எளிதன்று. அவ்வாறு அமையினும் வேறேதோபோல் ஒலிக்கும். இத்துறையில் வெற்றி கண்டதாகக் கூறுவது வெறும் அகம்பாவமேயாகும். மூல ஆசிரியரின் உவமைகளை, சொல் மரபுகளைக் கூடிய மட்டும் உள்ளவாறே அமைத்தல் நல்லது. ஏற்ற தமிழ் மரபு அல்லது சொல் தொடர் இருந்தால் எடுத்துக்கொள்ளவும்...... என்னைப் பொறுத்தவரை கவிதைகளை நல்ல உரைநடை யிலேயே தந்தால் அது கவிஞனின் கருத்துகளை நன்கு தெளிவுபடுத்தும்.[30]

மூலத்தில் உள்ள பொருளைத் தமிழ் இலக்கியத்துக்கு உரிய நடையுடன் ரவீந்திரர் கவிதைத் திரட்டு மொழிபெயர்ப்பை வழங்கியுள்ளார் த.நா. குமாரசுவாமி.

(எ.டு) **கதிரவன் மறைந்தான்**<br>
**கானகத்துள் பரவியது இருள்**<br>
**வானிடைத் தயங்கியது ஒளி**<br>
**அந்தியெனும் பசலை மெய்யாட்டி**<br>
**கண்ணிதழ் தாழ்த்திப்**<br>
**பகலின் பின்னே மெல்ல அணுகினள்**<br>
**பிரிவின் துயரம் துடிக்க மாலைத் தென்றல்**<br>
**உலவியதோ இல்லையோ**<br>
**ஆராக் கண்பசியுடன்**<br>
**அவள் மைவிழி நோக்கி வினவினேன்**[31] (வீண் ஆசை)

மூலநூலாசிரியரின் கவிதை நயத்தைப் பழந்தமிழ்ச் சொல் லாட்சியில் (பசலை, ஆராக் கண்பசி) அமைத்துள்ளதைக் காணலாம்.

> ஒரு மொழிபெயர்ப்பாளனுக்கு மிகவும் தேவை பிறமொழி – தன்மொழி இவற்றில் சிறந்த பயிற்சி, இரு மொழி நுணுக்கங்கள், மொழி சார்ந்த மக்களின் பண்பாடு – இவற்றில் ஆழ்ந்த அறிவு அவசியம். மூல ஆசிரியரின் எழுத்தில், நடையில், உள்ளத்தில் நுழைந்து வரக்கூடிய திறமை நிரம்ப இருந்தால்தான் மொழி பெயர்ப்பில் ஓரளவுக்கு வெற்றி அடைய இயலும். வெறும் அகராதி, இலக்கணம் இவற்றின் துணைக் கொண்டு மொழிபெயர்த்துவிட முடியாது[32]

என மொழிபெயர்ப்பு முயற்சியாளர்களுக்கு ஆலோசனையும் எச்சரிக்கையையும் அளிக்கிறார். மூல ஆசிரியர் பயன்படுத்திய சொல்லைச் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்தால் வரும் அவலத்தை நகைச்சுவையோடு விளக்குகிறார்.

> **'ஜலகாபார்' என்றால் வங்காள மொழியில் 'சிற்றுண்டி' என்று அர்த்தம். இதை அறியாது சொல்லுக்குச் சொல்லாக ஜல, காபார் – தண்ணீரும், உணவும் என்று எப்படி மொழிபெயர்க்க முடியும்[33]**

என்று குறிப்பிடுகிறார் த.நா.கு.

மூலமொழியான வங்கமொழியுடன் த.நா. குமாரசுவாமியின் தமிழாக்கத்தை ஒப்பிட்டு நோக்கினால் மொழிபெயர்ப்பின் சிறப்புகளையோ அல்லது சில இடர்ப்பாடுகளையோ குறிப்பிட்டுக் காட்டமுடியும். ஆனால் பொதுவாகத் தாகூரின் படைப்புகளின் உயிர்ப்பு மொழிபெயர்ப்புகளில் வெளிவரவில்லை என்பது சிசிர்குமார்கோஸ் (Sisirkumar Ghose) என்ற திறனாய்வாளரின் கருத்தாக உள்ளது. உண்மையான தாகூர் எந்த மொழிபெயர்ப்பிலும் இல்லை என்று உறுதிப்படுத்துகிறார் இவர். ஆங்கில மொழிபெயர்ப்பு சரியாக இல்லாததால் தாகூர் உண்மையில் மாபெரும் கவிஞரா (Was Tagore indeed a great poet?) என்றும் அவருடைய படைப்புகள் பற்றியும் கேள்விக் கணைகள் தொடுக்கப்பட்டன. கட்டுக்கதைகளும் கிளம்பி யுள்ளன என்று குறிப்பிடுகிறார். மேலும், இரவீந்திரநாத் தாகூர் இந்தியக் கவி மட்டுமல்ல அவர் உலகக் கவி என்பதை வங்காளிகள் உணர்ந்த அளவிற்குப் பிறமொழியினர் உணராமல் போனதற்குக் காரணம் மொழிபெயர்ப்புகள்தான். புதிய மொழிபெயர்ப்புகள் தேவை என்று சிசிர்குமார் கோஸ் கூறுகிறார். இக்கருத்து தமிழ் மொழிபெயர்ப்புக்குப் பொருந்துமா? என்ற வினாவிற்கு விடையளிக்க முடியாவிட்டாலும் தாகூரைத் தமிழில் தரமுயன்ற அறிஞர்களின் பணியைக் குறைத்து மதிப்பிட முடியாது. ஆகையால் த.நா. குமாரசுவாமி ஆற்றியுள்ள மொழிபெயர்ப்புப் பணி மதிப்பிற்குரியது, போற்றுதற்குரியதாகும்.

> *1962–இல் எழுத்தாளர் பரிவர்த்தனை திட்டப்படி தமிழ் எழுத்தாளர் – மொழிபெயர்ப்பாளர் என்ற தகுதியில் வங்க எழுத்தாளர் நிகார் ரஞ்சன்ரே, மற்றும் அஸ்ஸாமிய எழுத்தாளர் ஹேம்காந்த் பருவா ஆகியோருடன் இரண்டு மாதம் சோவியத் நாடு களுக்குப் பயணம் மேற்கொண்டார். அங்குப் பல ருஷிய எழுத்தாளர்களையும் மொழிபெயர்ப்பாளர்களையும் சந்தித்தார். லெவ் டால்ஸ்டாய், மாக்ஸிம் கார்க்கி, செக்காவ் போன்ற எழுத்தாளர்களிடமிருந்த பற்று, ருஷியப் பயணத்துக்குப் பின் மேலும் வலுப்பெற்று*

> ருஷ்ய மொழியைப் பயிலத் தொடங்கி ஓரளவு தேர்ச்சியும் பெற்றார். சர்க்கரை நோயினால் உடல் பாதிக்கப்படவே ருஷிய மொழிப் பயிற்சி வேகம் தடைப்பட்டது. எழுத்தையே தன் முழு மூச்சாகக் கொண்டு, எந்த அலுவலகத்திலும் பணியில் ஈடுபடாத த.நா.கு. காந்திஜியின் கொள்கை மீதுள்ள பற்றினால், காந்திஜி நினைவு அமைப்பு ஆசிரியர் குழுவில் சேர்ந்து கொண்டார். காந்தி நூல்களைத் தமிழில் கொண்டு வரவேண்டும் என்ற ஆர்வத்தினால் குஜராத்தி மொழியையும் கற்றார். ஆனால் அங்கு அவரால் நிலைத்து நிற்க இயலாத சூழ்நிலை.[34]

சிறுகதைகள், நாவல்கள் மொழிபெயர்ப்பு ஆகியவற்றோடு கலை சார்ந்த பிறதுறைகளிலும் அவருக்கு ஈடுபாடு இருந்துள்ளது. 1940-ஆம் ஆண்டு குமரி மலர் ஏ.கே. செட்டியார் தயாரித்த 'மகாத்மா காந்தி' என்ற திரைப்படத்திற்குத் தமிழில் த.நா. குமாரசுவாமி உரையாடல் எழுதியுள்ளார். இத்துறையில் ஏற்பட்ட ஆர்வத்தினால் 1950-1951ஆம் ஆண்டுகளில் வங்க நடிக நடிகையரை வைத்துத் தமிழில் டப்பிங் செய்யும் முறையில் சில காலம் ஈடுபட்டார். இதைத் தொடர்ந்து 1960-களில் புகழ் பெற்ற வங்கப் படங்களின் வசனங்களின் ஒலிநாடாக்களைக் கேட்டுத் தமிழாக்கம் செய்து வழங்கினார்.

இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டது போல் இசையிலும் ஈடுபாடு உள்ளவராக இருந்துள்ளார். நாதஸ்வர, கோட்டு வாத்தியமும் வாசிக்கக் கற்றுக் கொண்ட ஒரு மொழிபெயர்ப்பாளர் த.நா. குமாரசுவாமியாகத்தான் இருக்கும். அவருடைய இந்த ஈடுபாட்டை (த.நா.கு. டைரிக் குறிப்பு மூலம்) அவருடைய புதல்வர் த.கு. அஸ்வின் குமார் தமது தந்தையார் பற்றி எழுதியுள்ள 'த.நா. குமாரஸ்வாமி' எனும் நூலின் மூலம் அறியலாம்.

இலக்கிய ஆர்வத்துடன் இசை ஆர்வமும் சேர்ந்து கொண்டது. நாதசுவர மேதை ராஜரத்தினம் பிள்ளையின் வாசிப்பில் இளமையில் மனதைப் பறிகொடுத்தது, நாதசுவரம் கற்க த.நா.குவைத் தூண்டியது.

> கிராமபோன் இசைத் தட்டுகளிலிருந்து நாதஸ்வர மேதைகளின் வாசிப்பின் நுணுக்கங்களை அறிந்து கொண்டு, இளங்காலைப் பொழுதில், மகிழமரத் தடியில் பனிதோய்ந்து ஈரம் படிந்த கடப்பைகல் திண்ணையில் அமர்ந்து நாதஸ்வர சாதகம் செய்வேன். வங்கமொழியைக் கற்றதுபோல், நாதஸ்வரம் வாசிப்பும் நானே கற்றுக் கொண்டதுதான். என்னுடைய கிராமத்துச் சிவன் கோயிலில்தான் என் முதல்

> வாசிப்பு.... எவ்வளவு நேரம் வாசித்திருப்பேனோ தெரியாது...... கோயில் கதவுகளை மூடும் ஒலி வரும்போதுதான் என் இசைத் தியானம் கலைந்தது. பிறகு கோட்டு வாத்தியமும் பயின்றேன்..... என்னுடைய எட்டு வயது மகன் நிமாயி, இறக்கும் தறுவாயில் அவனுடைய உடல் வேதனையை மறப்பதற்காக 'நகுமோமோ' வாசிக்க என்னை வேண்டினான். நான் மனவேதனையுடன் மிகவும் சிரமப்பட்டு வாசித்தேன். இசையைக் கேட்டுக் கொண்டே மெல்லக் கண்களை மூடினான். அவனுடைய கடைசி வேண்டுகோளை நிறைவேற்றிய பிறகு வாத்தியத்தின் கம்பியும் அறுந்தது. அதன்பின் நான் வாத்தியத்தைத் தொடவே இல்லை[35]

என்று எழுதியுள்ளார்.

பலவிதமான பரிமாணங்களைத் த.நா.கு.வின் வாழ்க்கை எடுத்துக்காட்டுகிறது. முழுக்க முழுக்க ஒரு இலக்கியவாதியாக மட்டும் தன்னை நிலைநிறுத்திக் கொள்ளாமல் பத்திரிகையாளராக, நாட்டுப் பற்று உள்ளவராக, தாழ்த்தப்பட்ட மக்களின் மீது அன்பு கொண்ட வராக, கருத்துச்சுதந்திரத்துக்கும், சுயமரியாதைக்கும் முக்கியத்துவம் அளிப்பவராக, எழுத்துலகில் பிறரை ஊக்குவிப் பவராக, ஒரு சிறந்த மனிதநேயம் மிக்கவராக உலா வந்திருக்கிறார்.

பாடி கிராமத்தில் தனக்குச் சொந்தமான நிலத்திலிருந்து ஒரு ஏக்கரை ஜாதிக் கலவரத்தால் வீடுகளை இழந்த ஆதி திராவிட மக்களுக்கு இலவசமாக வழங்கி, அவர்களுக்குக் காந்திஜியின் கொள்கைகளை விளக்கி அகிம்சை முறையில் தங்களுடைய உரிமைகளை நிலைநாட்டத் தூண்டினார். ஊர்மக்கள் த.நா.குவை "காந்தி ஐயர்" என்று அழைத்தனர்.

> சிவன் கோயில் பல்லக்கில் காந்திஜியின் படத்தை வைத்து ஊர்வலமாக ஊர் வீதிகளில் வலம் வந்த பிறகு, சேரிப்பகுதிகளுக்கும் செல்ல வேண்டும் என்று வற்புறுத்தியபோது, ஜாதிக்கட்டுப்பாட்டை மீறி நாங்கள் வரமுடியாது என்று மேட்டுக்குடியினர் மறுத்தனர். நானும் என்னுடைய இரு சகோதரர்களும் மற்றும் ஒரு உறவினரும் பல்லக்கினைத் தூக்கி, ஆதி திராவிடர் வசித்த தெருவில் கொண்டு நிறுத்தினோம். அப்போது அந்த மக்களின் உள்ளத்தில் ஏற்பட்ட மட்டற்ற மகிழ்ச்சியை என்னால் உணர முடிந்தது
>
> (த.நா.கு. டைரிக் குறிப்புகள்)[36]

என்று எழுதியுள்ளார்.

அக்கால எழுத்தாளர்களுள் தனக்கென ஒரு தனிப்பாதையை வகுத்துக்கொண்டு, அதன்படி வாழ்ந்து சுமார் அய்ம்பது ஆண்டுகள் இலக்கியப் பணியாற்றிய இப்பெருமகனார் தனது இல்லத்தில் படி இடறிக் கீழே விழுந்ததால் காலில் எலும்பு முறிவு ஏற்பட்டு இரண்டு மாதங்கள் கடும் துன்பத்துக்கு உள்ளானார். அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு தனது 75ஆவது வயதில் 1982 செப்டம்பர் 17ம் நாள் இயற்கை யெய்தினார். அவர் மறைந்தாலும் அவருடைய படைப்புகளும், மொழிபெயர்ப்புகளும் என்றும் அவர் புகழை நிலைக்கச் செய்யும்.

## குறிப்புகள்

1. ஜீவானந்ததாஸ், சிதானந்த தாஸ் குப்தா (தமி.) க.தா. திருநாவுக்கரசு, சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி. 1981, ப.4.
2. த.நா. குமாரசுவாமி, த.கு. அஸ்வின்குமார், இந்திய இலக்கியச் சிற்பிகள், சாகித்திய அகாதெமி, பதி. 1998, ப.3.
3. முதலில் மலர்ந்தது, கன்யாகுமரி, கலைமகள், மார்ச் 1976, ப.239.
4. த.நா. குமாரசுவாமி, த.கு. அஸ்வின்குமார், இந்திய இலக்கியச் சிற்பிகள், சாகித்திய அகாதெமி, பதி. 1998, ப.13.
5. மேற்படி, ப.13.
6. மேற்படி.
7. தினமணி (கட்.) த.நா. குமாரசுவாமி சில குறிப்புகள், சா. கந்தசாமி, சன.12, 1991, ப.3.
8. த.நா. குமாரசுவாமி, த.கு. அஸ்வின்குமார், இந்திய இலக்கியச் சிற்பிகள், சாகித்திய அகாதெமி, பதி. 1998, ப.13.
9. மேற்படி, ப.4.
10. மேற்படி, ப.5.
11. மேற்படி, ப.5.
12. மேற்படி, ப.76.
13. மேற்படி, ப.82.
14. மேற்படி, ப.76.
15. இரவீந்திரர் கவிதைத் திரட்டு (தமி.) த.நா. குமாரசுவாமி, சாகித்திய அகாதெமி, பதி. 1961, முன். ப.XVI.
16. சக்தி (கட்.), பிரு இரவீந்திரநாதர், விக்கிரம - ஆவணி, மலர் 3, இதழ்-2, ப.53.
17. தினமணி (கட்.), த.நா. குமாரசுவாமி - சில குறிப்புகள், சா. கந்தசாமி, சன.12, 1991, ப.3.

18. விநோதினி, இரவீந்திரநாத டாகுர் (தமி.) த.நா. குமாரஸ்வாமி, சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி. 1961, முன்.
19. இரவீந்திரர் கவிதைத் திரட்டு (தமி.), த.நா. குமாரஸ்வாமி, சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி.1961, ப.XIX.
20. மேற்படி, முன். XIX.
21. மேற்படி, ப.1.
22. மேற்படி, ப79.
23. மேற்படி, ப73.
24. இரவீந்திரரின் தேர்ந்தெடுத்த கட்டுரைகள் (தமி.), த.நா. குமார சுவாமி, த.நா. சேனாபதி, சாகித்திய அகாதெமி, பதி.1992, ப.113-114.
25. இரவீந்திரர் கதைத் திரட்டு (தமி.), த.நா. குமாரஸ்வாமி, சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி.1968, முன். (ஒரு சில வார்த்தை)
26. கவி. தாராசங்கர் பந்த்யோபாத்யாய் (தமி.), த.நா. குமாரஸ்வாமி, நேஷனல் புக் டிரஸ்ட், பதி. செப். 1972, முன், ப.XI.
27. மேற்படி, ப.83.
28. மேற்படி, ப.185.
29. த.நா. குமாரசுவாமி, த.கு. அஸ்வின்குமார், இந்திய இலக்கியச் சிற்பிகள், சாகித்திய அகாதெமி, பதி. 1998, ப.81.
30. மேற்படி, ப79.
31. இரவீந்திரர் கவிதைத்திரட்டு, (தமி.) த.நா. குமாரசுவாமி, சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி.1961, ப.3
32. எழுதுவது எப்படி, மொழிபெயர்ப்பு, த.நா. குமாரசுவாமி, பதி.1969.
33. மேற்படி.
34. த.நா. குமாரசுவாமி, த.கு. அஸ்வின்குமார், இந்திய இலக்கியச் சிற்பிகள், மு.ப. 1998, சாகித்திய அகாதெமி, ப.10.
35. மேற்படி, ப.87.
36. மேற்படி, ப.88.

# அ.கி. ஜெயராமன்

> கி.பி. 10ஆம் நூற்றாண்டுக்கு முன் 'வங்க இலக்கியம்' என்று ஒன்று இருந்ததாகக் கூற இயலாது. பிறகுதான் அது தோன்றியது. 10 ஆம் நூற்றாண்டுக்கும் 12 ஆம் நூற்றாண்டுக்கும் இடையில் சகஜிய பௌத்த தாந்திரிகர்களின் பாடல்களாகச் சர்யா பதங்கள் இயற்றப் பெற்றன. அது முதல் இடைவிடாமல் தொடர்ந்து எழுதப்பெற்ற நூல்கள் உள்ளன. ஆயிரம் ஆண்டுகளாக இந்த இலக்கியங்கள் நம்மிடையே இருப்பதாகக் கூறலாம்'

எனக் குறிப்பிடுகிறார் வங்க மொழி எழுத்தாளர் சரோஜ் பந்த்யோபாத்யாயா.

பல நூற்றாண்டுக் கால இலக்கிய வளர்ச்சியில், வங்க மக்களின் வளர்ச்சியும் அடங்கியுள்ளதாக மதிப்பீடு செய்யப் பட்டுள்ளது. காலந்தோறும் வங்கமொழியில் ஏற்பட்ட இலக்கிய வளர்ச்சியைக் காட்டிலும் 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஏற்பட்ட வெளிநாட்டு ஆதிக்கத்தின் விளைவாக ஏற்பட்ட மாறுதல்கள் மிகப் பெரும் திருப்பத்தை உருவாக்கியுள்ளன.

> 19ஆம் நூற்றாண்டு, வாழ்வில் ஒரு புதுக்கருத்தை நமக்கு உணர்த்திக் காட்டியது. முதல் முதலாக இந்தியாவின் வரலாற்றில் இளந்தலைமுறையினர் தலைதூக்கித் தாம் சமுதாயத்தில் முக்கிய இடம் பெற்றுள்ளனர் என்பதை அறிவுறுத்தினார்கள். சில சமயம் பழந்தலைமுறை யினரிடம் அவர்கள் கடுமையாகவும் கொடுமை யாகவும் நடந்து கொண்டார்கள். ஆனால் இத்தகைய வலிய போக்கு ஏற்கெனவே புதுமை இயக்கத்துக்குத் தேவை தானே? முறையான இலக்கியத் துறையில் ஒரு பெரும் மாறுதல் ஏற்பட்டது. உள்ளதை உள்ளபடி உரைத்தல் என்பது பலவிதச் சிக்கல் கொண்டிருந்தது. எனவே சொல்லாட்சியிலும் ஒரு மேனாமினுக்குத் தன்மை தோன்றியது. சமூகத்தில் தோன்றிய மாறுதல் காரணமாக உணர்ச்சி நிலைகளிலும் சொல்லாட்சி யிலும் மாறுதல் ஏற்பட்டது[2]

ஆங்கிலேயக் கல்வி முறையில் பல மேலைநாட்டு இலக்கியங்கள் வங்க மொழி இலக்கியத்தில் மிகப் பெரும்

மாறுதல்களை உருவாக்கின. வழிவழியாய் வந்த சிந்தனைகள் நிலை குலைந்தன. மனிதநேயம் என்னும் உணர்வு புதிய கண்ணோட்டத்தை அளித்தது. கார்ல் மார்க்ஸின் சமுதாயத் தத்துவம் மனிதனைப் பற்றிப் புதிய விளக்கத்தை அளித்தன. இதனால் இலக்கியப் படைப்பாளிகள் புதிய அணுகுமுறைகளை மேற்கொண்டனர்.

> 1930 வாக்கில் வங்கக் கதைகளுக்கு நல்ல மவுசு. வங்கச் சிறுகதைகளின் சிருஷ்டி கர்த்தரான ரவீந்திரநாதர் இந்தத் துறையை வெற்றிகரமாக வளம்பெறச் செய்தார். இதனால் நாம் கூட அவருடைய கதைகளை ருஷ்யக் கதாசிரியர் செகாவின் (Chekov) கதைகளுடன் ஒப்பிட்டுப் பெருமைப்பட்டுக் கொண்டோம். இந்தத் தற்புகழ்ச்சி அப்படி ஒன்றும் தவறானது என்பதற் குமில்லை. 1930 வாக்கிலும் 1940 வாக்கிலும் இப்படிச் சிறந்து விளங்கிய பல கதாசிரியர்கள் தோன்றி யுள்ளனர். ப்ரேமேந்திர மித்ரர், தாரா சங்கர் பானர்ஜி, வனஃபுல் அசீந்திய குமார் ஸேன்குப்தர், பிரபோத் ஸான்யால், சுபோத்கோஷ், இவர்கள்தாம். மாணிக் பானர்ஜி, விபூதி பூஷண் பானர்ஜி, தாராசங்கர் இவர்களின் கதைகளில் சில, ஐரோப்பாவில் எழுதப் பெற்று வெளியாகியிருந்தால் எப்படியெல்லாம் பிரமாதமாக விமர்சித்திருப்பார்கள் தெரியுமா? அதை ஆவலுடன் எதிர்பார்த்து மகிழ்ந்திருப்போம். இப்படி வங்கச் சிறுகதைகள் அந்தத் துறையின் பாரம் பரியத்தை வளம் உடையதாக்கியிருக்கும் அளவைப் பார்த்தால் இது தெரியும். இப்போது சாமானியமான ஓர் எழுத்தாளன் கூடக் குறைந்த பட்சம் ஒன்றிரண்டு நல்ல கதைகளையேனும் எழுதாமற் போகவில்லை[3]

இந்த அளவிற்குச் சிறுகதையில் வளர்ச்சி நிலையை எட்டி யிருக்கிறது என்பதற்கு இது ஒரு சான்றாகும். இந்நிலை சிறுகதையில் மட்டுமல்ல; இலக்கியம், கலை, சமூகவியலில் நல்ல மாறுதல்கள் உருவாகியுள்ளன. இந்திய விடுதலைப் போராட்டத்தின் மையமாக விளங்கிய வங்கம் பிற மாநிலங்களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளப் பல வாய்ப்புகள் உருவாகின.

அரசியல் கருத்துகள் பரவியது ஒரு புறம் எனில் மறுபுறம் இலக்கியத்தின் வாயிலாகச் சமுதாய விடுதலைக் கருத்துகள் வங்க மொழியிலிருந்து பிற மொழியாளர்களுக்குப் பரவின. மொழி பெயர்ப்பாளர்கள் இதன் கதவைத் திறந்துவிட்டனர். சமகாலத்தில் இவர்கள் படைப்பாளிகளாகவும் விளங்கியதால் தாய்மொழிப் படைப்புகளும் புதிய நோக்கில் உருவாயின. அவ்வாறு வெளிவந்த படைப்புகள் மக்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்றன.

இருபதாம் நூற்றாண்டின் வங்கமொழி இலக்கிய வரலாற்றில் பங்கிம் சந்திர சட்டர்ஜி, இரவீந்திரநாத் தாகூர், சரத்சந்திரர் ஆகியோர் புகழ்பெற்ற படைப்பாளிகளாகத் திகழ்ந்தனர். சிறப்பு மிக்க வங்க மொழிப் படைப்புகள் பல பிறமொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டன. வங்கமொழிப் படைப்புகளைத் தமிழில் மொழிபெயர்க்கும் பணியை மேற்கொண்டவர்களில் குறிப்பிடத்தக்கவர் அ.கி. ஜெயராமன். இவர் வங்க மொழியில் மிகச் சிறந்த படைப்பாளியான சரத் சந்திரரின் நூல்களை முழுவதும் தமிழில் மொழிபெயர்த்து வழங்கி, அரிய பணியாற்றியுள்ளார்.

பிறமொழியினர் சரத்சந்திரரின் படைப்புகள் வரவேற்புப் பெற்றதைப் போலவே தமிழிலும் பெரும் வரவேற்பைப் பெற்றன. அ.கி. ஜெயராமன், ஆர். சண்முகசுந்தரம், த.நா. குமாரஸ்வாமி, த.நா. சேனாபதி, எஸ். குருஸ்வாமி, சௌரிராஜன், கேபிராசகோபாலன், தினகரன், வி.எஸ். வெங்கடேசன், எம்.வி. வெங்கட்ராமன் ஆகியோர் சரத்சந்திரரின் படைப்புகளைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர். ஆனால் இவர்களுள் சரத்சந்திரரின் நாவல்கள், சிறுகதைகள், முழுவதையும் தமிழ் மொழிபெயர்ப்பில் வழங்கியவர் என்ற சிறப்பினைப் பெற்றவர் அ.கி. ஜெயராமன்.

### பிறப்பும் கல்வியும்

அ.கி. ஜெயராமன் மேலக் குமாரமங்கலத்தில் 1911 ஆம் ஆண்டு பிறந்தார். சிதம்பரம், குற்றாலம், பள்ளிகளில் இன்டர் மீடியட் வரை படித்தார். அவருடைய தந்தை இறந்த பிறகு வேலை தேடும் முயற்சியில் ஈடுபட்டார். இறுதியில் 1936 ஆம் ஆண்டு முதல் எழுத்தையே முழுநேரத் தொழிலாகக் கொள்வதென முடிவு செய்து இத்துறையிலேயே தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். இதற்கு முன் அனுபவமாக 1934 ஆம் ஆண்டு பாரததேவி பத்திரிகையில் அச்சுப்படி திருத்தும் பணியில் சேர்ந்த நாள் முதல், மொழிபெயர்க்கும் பணியிலும் தனது விருப்பத்தினால் ஈடுபட்டார்.

### வங்கமொழி கற்றல்

'மணிக்கொடி' இதழ் தொடங்கிய போது அதன் எழுத்தாளர் குழுவுடன் அ.கி. ஜெயராமனுக்குத் தொடர்பு ஏற்பட்டது. புதுமைப் பித்தன், பி.எஸ். ராமையா, க.நா.சுப்ரமண்யம், சிதம்பர சுப்ரமண்யம், கு.ப. ரா. ஆகிய எல்லோருடைய நட்பும் இவருக்குக் கிடைத்தது. இதில் கு.ப.ராஜகோபாலன் வங்க மொழி அறிந்தவர். அவரிடமிருந்து இவர் ஆரம்பப் பாடங்களைக் கற்றுக் கொண்டார். திருச்சி நேசனல் கல்லூரியில் பேராசிரியராக இருந்த ராமைய்யர் என்பவரும் அ.கி. ஜெயராமன் வங்க மொழியில் தேர்ச்சி பெற உதவினார். ஆங்கிலம், சமசுகிருதம், இந்தி, ஆகிய மொழிகளையும் நன்கு அறிந்திருந்தார். இந்தியில் வித்வான் பயிற்சியில் தேர்ச்சி பெற்றிருந்தார்.

1942 ஆம் ஆண்டில் அ.கி. ஜெயராமனும் அவருடைய சகோதரர் அ.கி. கோபாலன் ஆகிய இருவரும் இணைந்து உலக இலக்கியங்களைத் தமிழில் கொண்டு வர முனைந்தனர். 'சர்வதேசக் கதைகள்' எனும் தலைப்பில் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு நாட்டின் புகழ்பெற்ற கதைகள் அல்லது நோபல் பரிசு பெற்ற நாவல்கள் ஆகிய வற்றைத் தமிழில் மொழிபெயர்த்து ஜோதி நிலைய வெளியீடாக வெளியிட்டு வந்தனர். இத்தாலி, ஜெர்மன், பிரிட்டன், நார்வே, ஸ்வீடன், உருஷ்யக் கதைகள் பல தமிழில் வெளிவந்த பொழுது இலக்கிய ஆர்வலர்களும், சாதாரண வாசகர்களும் பெரிதும் வரவேற்றனர். க.நா. சுப்ரமண்யம், கு.ப. ராஜகோபாலன், வரா., போன்ற இலக்கியப் படைப்பாளர்கள் பலரும் ஒன்றுபட்டு உழைத்து, சுமார் 35 தொகுதிகள் வெளியிட்டுள்ளனர். இவ்வாறு வெளிவந்த அயல்மொழிச் சிறுகதைகளின் கருத்தும், வடிவமும், உத்தியும், தமிழில் சிறந்த சிறுகதைகள் படைக்கப் பெரிதும் துணைபுரிந்தன.

அ.கி. ஜெயராமன் 'பாரததேவி', 'தினமணி', 'நவயுகம்', 'சோஷலிஸ்ட்' ஆகிய செய்தி இதழ்களின் உதவி ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். 'காதம்பரி', 'சினிமா' என்ற செய்தி இதழ்களின் ஆசிரியாகவும் பணியாற்றியவர். டாக்டர் பட்டாபி சீதா ராமையா எழுதிய **'இந்தியத் தேசியக் காங்கிரஸ் வரலாறு'** (History of the Indian National Congress) என்ற நூலையும் ஜெயப்பிரகாஷ் நாராயணன் எழுதிய **'காந்தியின் சோஷலிசம்'**, (Gandhian Socialism) என்ற நூலையும் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். ரமேஷ் சந்திர தத்தாவின் **'மகாராஷ்டிர ஜீவனயுதயம்'**, **'ராஜபுத்திர ஆதிக்கத்தின் அஸ்தமனம்'**, பங்கிம்சந்திரரின் **'ஆனந்த மடம்'** ஆகியனவும் அ.கி. ஜெயராமனின் மொழிபெயர்ப்பில் வெளிவந்தன வாகும். இவ்வாறு மொழிபெயர்ப்புப்பணியைப் பல நோக்கில் செய்து வந்த போதிலும் சரத்சந்திரரின் படைப்புகளை மொழிபெயர்த்தது தமக்கு மனநிறைவளிப்பதாகக் கூறுகிறார் அ.கி. ஜெயராமன்.

### சரத்சந்திரரும் அவருடைய படைப்புகளின் முக்கியத்துவமும்

சரத்சந்திரர் வங்கத்தில் ஹுக்ளி மாவட்டத்திலுள்ள தேவனாந்தபூர் என்ற சிறிய கிராமத்தில் 1876 ஆம் ஆண்டு செப்டம்பர் 15ஆம் நாளன்று பிறந்தார். இளமையில் வறுமையையும் திறமையையும் ஒரு சேரப் பெற்றவர். மக்களுக்கு நெருக்கமான மனிதனாக வாழ்ந்தார். மக்களிடையே நாடோடியாக அலைந்து திரிந்தார். மோசமான வறுமையை, கொடுமையான சமூக அநீதிகளை, பெண்களின் அடிமை வாழ்க்கையை, இறுகிப் போன மத சம்பிரதாயங்களை, சாதி மதங்களை, மனிதர்களின் அடிமனப் போராட்டங்களை, பொருளாதார வளமைக்கும், வறுமைக்கும் இடையே உள்ள மிகப்

பெரிய இடைவெளியைச் சரத்சந்திரர் தமது நாவல்களில், சிறுகதைகளில் எடுத்துரைத்தார்.

சரத்சந்திரர் தனது பதினெட்டாவது வயதில் எழுதத் தொடங்கினார்.

> **எழுதியவர் யாரென்று குறிப்பிடப்படாமலே சரத்சந்திரரின் 'பரதீதி' என்ற கதை பாரதி எனும் பத்திரிகையில் தொடராக வெளியிடப்பட்டபோது (1907) அதை எழுதுபவர் இரவீந்திரநாத் தாகூராகத்தான் இருக்க வேண்டும் என்று வாசகர்கள் கருதினர். இந்த விதமாகத்தான் வங்க இலக்கிய உலகில் சரத்சந்திரர் நுழைந்தார்.[4]**

முப்பது ஆண்டுகளுக்குள் புகழின் உச்சத்தை அடைந்தார். அவருடைய படைப்புகள் பலமுறை மறுபதிப்பு செய்யப்பட்டன.

### சரத்சந்திரரின் படைப்புகள்

22 நாவல்கள், 7 சிறுகதைத் தொகுதிகள், ஒரு கட்டுரைத் தொகுதி, ஒரு நாடகம் ஆகியன சரத்சந்திரரின் படைப்புகளாகத் திகழ்கின்றன. பரதீதி (1913), விராஜ் பௌ (1914), பரீணிதா (1914), பண்டிட் மாஷாய் (1915), பள்ளி ஸமாஜ் (1916), சந்திரநாத் (1916), பைகுந்தர் வில் (1916), அரக்ஷணீய (1916), ஸ்ரீகண்டா I (1917), ஸ்ரீகண்டா II (1918), ஸ்ரீகண்டா III (1927), ஸ்ரீகண்டா IV (1933), தேவதாஸ் (1917), நிஷ்கிருதி (1917), சரித்ரஹீன் (1917), தத்தா (1918), கிருஹதாஹா (1920), பாமுனேர் மேயி (1920), தேன பாவ்னா (1923), நபபிதான் (1924), பதர்தபி (1926), ஷேஷ்பிரஷ்னா பிப்ரதாஸ் (1933), ஸீபதா (1938), ஷேஷேர் பரிச்சயா (1939), ஆகியன சரத்சந்திரரின் தலைசிறந்த நாவல்களாகும். இவையல்லாமல் பிந்தூர் செல்லே (1914), மேஜ்தீதி (1915), காஷிநாத் (1917), ஸ்வாமி (1918), ச்சாபி (1920), ஹரிலஷ்மி (1926), அனுராதா ஸதி ஓ பாரேஷ் (1934), ஆகிய 7 சிறுகதைத் தொகுதிகளும், நாரீர் முல்ய (1923) என்ற கட்டுரைத் தொகுதியும், ஷோடாஷி (1927) என்ற நாடகமும் சரத்சந்திரருக்குப் பெரும்புகழ் சேர்த்த அரும் படைப்புகளாக விளங்குகின்றன.

### சரத்சந்திரரின் படைப்புகளின் முக்கியத்துவமும் வரவேற்பும்

மக்களின் நம்பிக்கை, அச்சம், இன்பம், துன்பம் ஆகியவற்றைச் சரத்சந்திரர் தமது படைப்புகளின் வழியே அதற்கு முன்னர் எப்போதுமே காணப்படாத முறையில், மிகவும் நெருக்கமான பரிவுணர்வுடன், நுணுக்கமாகப் படம்பிடித்து எழுதினார் என்பதுதான் சரச்சந்திரரின் தனித்தன்மையாகும். சான்றாக:

> அபாகிர் ஸ்வர்க்கா, 'மகேஷ்' இவை சமுதாயச் சூழலை உருவாக்கிக் காட்டும் முறையில் அற்புதமானவை.

> தீண்டத்தகாதவள் என்று கருதப்படும் ஒரு இந்துப் பெண் அல்லது ஏழை முஸ்லீம் விவசாயி வாழும் சூழ்நிலைகளைப் பற்றிய பதிவைப் படிப்போர் மனதில் உண்டாக்கிவிடுகின்றன. அபாகியும், கபூரும் சமுதாயத் திலிருந்து ஒதுக்கி வைக்கப்படுவதையும், பொருளாதார அநீதிகளையும், அவற்றின் துயர் நிரம்பிய பின்னணியையும் அவர்கள் எதிர்த்து நிற்பதையும் நிழலுருவங்களாகக் காட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளன. தீண்டத்தகாதவனான முஸ்லீம் விவசாயிக்கும் அவனைச் சுரண்டிக் கொடுமைப்படுத்துகிற பிராமண ஜமீன்தார், சாஸ்திரி இவர்களுக்கும், மென்மையான உள்ளமுடைய 'காயஸ்தர்' குடும்பத்து மாணிக்கோஷ் என்பவருக்கும் இடையேயுள்ள முரண்பாடுகளை விளக்குவதன் மூலமும் கிராமப்புறங்களில் நிலவும் சமுதாய வாழ்க்கையின் அவலம் நிறைந்த பகுதியை ஈடு இணையற்ற நுட்பத் திறனுடனும் விறுவிறுப்புடனும் எடுத்துக்காட்டுகிறார்.[5]

சமுதாயம் பழித்தொதுக்கியவற்றைச் சரத்சந்திரர் தமது படைப்புகளின் மையக் கருத்தாக்கிக் கொண்டார். இலக்கியம் ஒரே நேரத்தில் வெற்றிகரமான கலைப்படைப்பாகவும், ஆற்றல்மிக்க பிரச்சாரக் கருவியாகவும் விளங்கமுடியும் என்பதை நிறுவிக் காட்டுவதில் சரத்சந்திரரின் படைப்புகள் ஒவ்வொன்றும் முக்கியத்துவம் பெற்றனவாகும். ஆகையால் பிறமொழியினரும் சரத்சந்திரரின் வங்கமொழிப் படைப்புகளைத் தத்தம் மொழிகளில் மொழிபெயர்த்து, புதிய சிந்தனைகளை உருவாக்கப் பயன்படுத்தினர்.

விலங்குகளும் வேதனையும் இருக்கிற இடத்தில் சரத்சந்திரர்

> உலகில் கொடுத்துக் கொண்டேயிருந்தவர்கள். ஆனால் பதிலாக எதுவும் பெறாதவர்கள், ஏமாற்றப் பட்டவர்கள், பலங்குறைந்தவர்கள், கொடுமைக் குள்ளானவர்கள், இவர்களும் மனிதர்கள்தாம். ஆயினும் இவர்களுடைய கண்ணீரை மற்ற மனிதர்கள் பொருட்படுத்தவில்லை. இவர்களுடைய வேதனைதான் என்னைப் பேசச் செய்துவிட்டது.[6]

இப்படி ஒரு மனித நேயராகச் சரத்சந்திரர் இருந்ததற்குக் காரணம் இளமையில் வறுமையில் வாடியதுதான். சரத்சந்திரர் கட்டுக்கடங்காத குறும்புத்தனத்தினாலும் வறுமை காரணமாகவும் அடிக்கடி வீட்டை விட்டு ஓடிப்போய்விடுவார். வறுமைக்கு எதிராகவும், அநீதிகளை எதிர்த்தும், ஆச்சாரத்தை எதிர்த்தும் அவர் போராட வேண்டியிருந்தது. கடல் கடந்து பிரயாணம் செய்வது

ஆச்சாரத்திற்கு விரோதமானது என்று நினைத்த காலம் அது. ஆனால் பசித்தவனிடம் ஆச்சாரம் செல்லாக்காசு. சரத்சந்திரர் அதையெல்லாம் தூக்கி எறிந்து விட்டு நாடோடியாக அலைந்து திரிந்தார். அவர் இறுதி வரை நிரந்தரப் பணி ஏதும் கிடைக்காமல் சிங்கப்பூர், பர்மா, இரங்கூன், ஜாவா, கல்கத்தா என்று அங்குமிங்குமாக அலைந்து கிடைத்த வேலையைச் செய்து கொண்டு காலம் கழித்தார்.

பசி, பட்டினி என எத்தனையோ நாட்கள் கழிந்தன. பிற்காலத்தில் சரத்சந்திரர் இந்த அனுபவத்தைப் பற்றித் தம் இரசிகை ஒருவருக்கு,

> **நான் எவ்வளவோ நாட்கள் கடவுளை வேண்டிக் கொண்டிருக்கிறேன். எனக்குக் கொஞ்ச நாளைக்குக் காய்ச்சலைக் கொடு. . . . காய்ச்சல் வந்தால் இரண்டு வேளைச் சாப்பாட்டுக்குக் கவலைப்பட வேண்டாம். பட்டினி கிடந்தே பொழுதைக் கழிக்கலாம்[7]**

என்று எழுதியிருக்கிறார். நாடோடியான இவருக்கு மனம் ஓரிடத்தில் நிலைக்கவில்லை. அவருடைய நாடோடி வாழ்க்கையில் சமூகம் அவருக்கு நிறையக் கற்றுக் கொடுத்தது. இந்தச் சமூகத்து மனிதர்களைத் தமது நாவல்களிலும், சிறுகதைகளிலும் படைத்துக் காட்டினார்.

பசி, பட்டினியால் வாழும் ஏழை மனிதர்களும், ஆச்சாரம் அனுஷ்டானம் என்று சடங்கு முறைகளில் அவதியுறும் சுதந்திரமற்ற நடுத்தர வர்க்கத்துப் பெண்களும் ஆண்களும் சமூகம் ஒதுக்கித் தள்ளும் குடிகாரனும், விபசாரியும், பஞ்சைப்பராரியாய் வேலை தேடி அலையும் இளைஞனும், பாதை மாறிச் செல்லும் மனிதனும், பாடுபட்டும் பலனறியாத பாட்டாளிகளும் இப்படி எத்தனையோ மனிதர்கள் சரத்சந்திரர் உன்னதமான படைப்புகளில் கதை மாந்தர் தகுதி பெற்றனர்.

> **நான் பார்க்காத, நான் அனுபவிக்காத எதையும் என் படைப்புகளில் சித்திரிக்கவில்லை[8]**

என்று பிற்காலத்தில் தனது படைப்பைப் பற்றிச் சரத்சந்திரர் குறிப்பிடுகிறார்.

ரவீந்திரநாத் தாகூர் ஒரு முறை சரத்சந்திரரிடம் "சரத், நான் மேற்குடியில் பிறந்து விட்டதால் கீழ்மட்டத்து மக்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பை இழந்து விட்டேன், அந்த அரிய வாய்ப்பு உனக்குக் கிடைத்திருக்கிறது'' என்றாராம். தாகூர் சரத்சந்திரர் பற்றி ஒரு கவிதையிலும்

> அடே கதைச்சிற்பி, வாழ்க்கைக் கடலைக் கடைந்து அதில் எழுந்த விஷத்தை உண்டு அமுதத்தை நாட்டுக்கு அளித்த மகானடா நீ[9]

என்று பாராட்டியிருக்கிறார். இலக்கியவாதியாக மட்டுமல்லாமல் சரத்சந்திரர் நடைமுறையில் தொழிலாளர்களின் நண்பனாக வாழ்ந்தார். புரட்சியாளர்களுடனும் தொழிலாளர்களுடனும் சரத்சந்திரருக்கு ஏற்பட்ட அனுபவம் 'பத்தேர்தாபி' என்ற அரசியல் நாவலை எழுத வைத்தது. தமிழில் இந்நாவல் 'பாரதி' எனும் பெயரில் அ.கி. ஜெயராமனால் மொழிபெயர்க்கப்பட்டது. இந்த நூல் புரட்சிக்காரர்களின் வேதமாயிற்று. சரத்சந்திரர் தம் சமகாலத்துப் புரட்சி வீரர்கள் பலரின் வெவ்வேறு குணச் சிறப்புகளை இந்தப் பாத்திரத்தில் பொருத்தி ஸவ்யஸாசி எனும் ஓர் இலட்சிய நாயகனைப் படைத்தார். புரட்சிக்காரர்கள் ஸவ்ஸாசியைத் தங்கள் இலட்சிய நாயகனாகக் கொண்டனர். போராளிகள் சரத்சந்திரரைப் போற்றி அவரைச் சந்தித்தனர். சரத்சந்திரரின் நெருங்கிய நண்பரான நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் அவர்களுக்கு இது ஒரு வழிகாட்டி நூலாகவே அமைந்தது.

> நாங்க எந்தப் புரட்சிக்காரனைப் பிடிச்சாலும் அவன் கிட்டே ஒரு பகவத்கீதையும் ஒரு பத்தேர்தாபியும் இருக்கும் என்று சரத்சந்திரரிடம் கல்கத்தா காவல்துறை அதிகாரி கூறியிருக்கிறார்.[10]

புரட்சியாளர்களுடன் சரத்சந்திரருக்கு ஏற்பட்ட தொடர்பு அவரை மேலும் செயலில் ஈடுபடவைத்தது. நாட்டில் சோஷலிஸ்ட் இயக்கம் உருவாகக் காரணமாயிருந்தவர்களில் சரத்சந்திரரும் ஒருவர்.

கற்பை அளவு கோலாகக் கொண்டு பெண்களை இழிவு படுத்தும் சமூகத்தில் சரத்சந்திரரின் படைப்புகள் மாபெரும் புரட்சிக் கருத்துகளைத் தாங்கி வெளிவந்தன. இதற்காகத் 'தேசத்துரோகி' என்றும் சரத்சந்திரரைக் குற்றம் சாட்டினர்.

> சிந்திக்காமல் பெண்ணினத்தைப் பற்றி இழிவாகப் பிரச்சாரம் செய்வதையே 'ரியலிசம்' என்று நினைப்பவர்களிடம் ரியலிசமும் இல்லை, ஐடியலிசமும் இல்லை. அவர்களிடம் அறியாமையின் அகங்காரமுந் தான் இருக்கிறது. பெண்களுக்கெதிராகத் தகராறு செய்யும் தன்மையிலிருந்து இலக்கியம் பிறக்காது[11]

என்று எழுதினார். அதனால் வங்கப் பெண்மணிகளிடையே சரத்சந்திரருக்குப் பெரும் வரவேற்பு கிடைத்தது. இதற்குக் காரணம் சரத்சந்திரர் தனது முதல் படைப்பான 'பெரிய அக்கா' (பரதீதி) முதல் தனது கடைசிப் படைப்பான 'கமலாவின் கணவன்' (ஷேஷபிரஷ்னா)

வரை பெண்கள் வாழ்வில் சந்திக்கின்ற சிக்கல்களையும், கொடுமைகளையும் திறம்படச் சித்திரித்து வந்ததே.

> **அடிமைப்பட்ட வங்காளத்தின் சீரழிந்த சமூகத்தில் கதியற்ற பெண்களின் ஊமையுணர்ச்சிகளுக்கு மொழியில் உருவங் கொடுத்தாய் நீ.... பெண் மனத்தின் ஆழ்ந்த இரகசியத்தை உணர்ந்தவனே உனக்கு வணக்கம். பெண்மையின் மதிப்புக்குரிய நண்பனே உனக்கு வணக்கம்[12]**

என்று சரத்சந்திரரின் 57வது பிறந்த நாள் விழாவில் வங்கப் பெண்மணிகள் பாராட்டிதழ் வழங்கியுள்ளனர்.

### பிறமொழிகளில் சரத்சந்திரரின் படைப்புகள்

சரத்சந்திரரின் வங்கமொழிப் படைப்புகள் இந்தி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், குஜராத்தி, பஞ்சாபி, மராட்டி, அசாமி, ஒரியா, உருது, ஸிந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுப் பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளன. ஒவ்வொரு நாவலும் குறைந்தது 8 மொழிகளில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. 'சரித்ரஹீன்' என்ற நாவல் 12 மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. 'சரித்ரஹீன்' என்றால் 'ஒழுக்க மற்றவன்' என்பது பொருளாகும். இந்தத் தலைப்பே ஒரு அறை கூவலாக இருந்தது.

தமிழில் இந்நாவல் 'சாவித்திரி' என்றும் ஆங்கிலத்தில் 'சரித்ரஹீன்' என்றும் குஜராத்தில் பிரண்யபாக், சரித்ரஹீன் என்ற இரண்டு பெயர்களிலும், இந்தியில் 'சரித்ரஹீன்' என்றும் கன்னடத்தில் 'சரித்ரஹீனா' என்றும் மராத்தியில் 'சரித்ரஹீன்' என்றும் மலையாளத்தில் 'சதீஷ்சந்திரா', சரித்ரஹீனா' என்றும் தெலுங்கில் 'சரித்ரஹீனுலு' என்றும் உருதுவில் 'அவாரா' என்றும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இந்நாவலைப் போன்றே பரதீதி, பரணீதா, தேவதாஸ், விராஜ்பௌ, கிருஹதாஹா ஆகிய நாவல்களும் 12 மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. எல்லா மொழிகளைக் காட்டிலும் .... சரத்சந்திரரின் நாவல்கள் இந்தியில் மீண்டும் மீண்டும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. சான்றாக, பரணீதா என்ற நாவல் கிருஷ்ணசுக்லா (1954), ருப்நாராயணன் பாண்டேயா (1957), கமலா பிரசாத்ராய் (1958), தான்யகுமார் ஜெயின் (1965) ஆகியோரின் இந்தி மொழிபெயர்ப்புகளிலும் வாரணாசி இந்திப் பிரச்சார வெளியீடாகவும் வெளிவந்துள்ளது.

சரத்சந்திரரின் படைப்புகளுக்குக் கிடைத்த வரவேற்பையும், முக்கியத்துவத்தையும் அ.கி. ஜெயராமன் நன்கு அறிந்திருந்தார். சரத்சந்திரரின் 'கிருஹதாகம்' என்ற நாவல் 1942ஆம் ஆண்டு

அ.கி. ஜெயராமன் மொழிபெயர்ப்பில் வெளிவந்தது. அப்பொழுது மொழிபெயர்ப்பாளர் த.நா. குமாரசுவாமி சரத்சந்திரரின் படைப்புகள் முழுவதையும் தமிழில் மொழிபெயர்க்குமாறு அவரைக் கேட்டுக் கொண்டார். த.நா. குமாரசுவாமி அளித்த ஊக்கத்தினால் அ.கி. ஜெயராமன் மேலும் சரத்சந்திரரின் நூல்களை உற்சாகத்துடன் மொழிபெயர்க்கத் தொடங்கினார்.

> வங்க இலக்கியத்திலும், வங்க மொழியிலும் எனக்கு ஆர்வம் ஏற்படக் காரணமானவரும், வங்க இலக்கியங்களைத் தமிழில் முதலில் அறிமுகப்படுத்தியவரும் என்னுடைய அன்புக்கும் மதிப்புக்கும் உரிய நண்பரான த.நா. குமாரஸ்வாமி அவர்களுக்கு இந்நூலைக் காணிக்கையாக்குகிறேன்[13]

எனக் கிருஹதாகம் என்ற நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார் அ.கி. ஜெயராமன்.

## அ.கி. ஜெயராமனின் அனுபவம்

> சரத்சந்திரரின் 'மதனி' என்ற நாவலைத்தான் நான் முதன்முதலில் மொழிபெயர்த்தேன். அப்போது எனக்குப் பெங்காலி தெரியாது. ஹிந்தியில் இருந்துதான் சரத்சந்திரரின் நூலை மொழிமாற்றம் செய்தேன். 'மணிக்கொடி' பத்திரிகைக்காகச் சரத்சந்திரர் நாவல் கேட்டிருந்தார்கள். ஆனால் நான் மொழிபெயர்த்தது பிரசுரமாவதற்குள் 'மணிக்கொடி' நின்று விட்டது. பின்னர் மணிக்கொடிக்காரர்களே 'மதனி' நாவலைப் புத்தகமாக வெளியிட்டார்கள். மணிக்கொடிப் பத்திரிகை ஸைஸிலேயே அந்த நாவல் வெளியிடப் பட்டது. 'மதனி'க்கு அப்புறம் நான் மொழிபெயர்த்த சரத்சந்திரர் நாவல் 'தேவதாஸ்'. சரத்சந்திரரின் 22 நாவல்களையும் மற்றும் சிறுகதைகள் அனைத்தையும் நான் மொழிபெயர்த்திருக்கிறேன். சரத்சந்திரரின் நூல்கள், சிறுகதைகள் அனைத்தும் என் மொழி பெயர்ப்பில் 42 நூல்களாக வெளிவந்திருக்கின்றன.[14]

என்று குறிப்பிடுகிறார் மொழிபெயர்ப்பு அறிஞர் அ.கி. ஜெயராமன்.

நெஞ்சிலே பட்ட வடு (பரதீதி), உடைந்த உள்ளம் (விராஜ் பௌ), மணமானவள் (பரீணிதா), உபாத்தியாயர் மனைவி (பண்டிட் மாஷாய்), கிராம ஸமாஜம் (பள்ளி ஸமாஜ்), சந்திரநாதன் (சந்திரநாத்), அண்ணன் தம்பி (பைகுந்தர் வில்), ஞானதா (அரக்ஷணிய), கனவு முடியவில்லை (ஸ்ரீகண்டா, I, II, III & IV), தேவதாஸ் (தேவதாஸ்), சைலஜா (நிஷ்கிருதி), சாவித்திரி (சரித்ரஹீன்), விஜயா (தத்தா), கிருஹதாகம் (கிருஹதாஹா), பிராமணப் பெண்

(பாமுனேர்மேயி), காளியின் கண்கள் (தேன பாவ்னா), உஷா (நபபிதான்), பாரதி (பதேர் தாயி), கமலாவின் கணவன் (ஷேஷ் பரிச்சய) என்ற தலைப்புகளில் சரத்சந்திரரின் 22 நாவல்களை அ.கி. ஜெயராமன் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். சரத்சந்திரரின் சிறுகதைகள் முழுவதும் அ.கி. ஜெயராமன் மொழிபெயர்ப்பில் 'ஏழையின் சொர்க்கம்' என்ற தலைப்பில் வெளிவந்துள்ளன. இச்சிறுகதைகள் தனித்தனி நூல்களாகப் 'பிந்துவின் செல்வன்' (பிந்தூர் சேலே), ஹேமாங்கினி (மேஜ்தீதி), காசிநாதன் (காஷிநாத்), அனுராதா (அனுராதா ஸதி ஓ பாரேஷ்), அனுபமா (குலோ ஓ சாயா), ஒரு காதற் கதை (அனுப்மார் ப்ரேம்), கோவில் (மந்திர்), மதனி (ராமேர் சுமதி), கர்வ பங்கம் (தர்ப்ப சூர்ண), வாழ்க்கை வழி (பத நிர்தேஷ்) ஆகிய தலைப்புகளில் வெளிவந்துள்ளன. சரத்சந்திரரின், நாவல்கள், சிறுகதைகள் யாவும் அ.கி. ஜெயராமன் மொழிபெயர்ப்பில் 42 நூல்களாக வெளி வந்துள்ளன என்பது அவருடைய அயராத உழைப்பையும், முயற்சியையும் காட்டுகின்றன.

**சரத்சந்திரரின் படைப்புகளைத் தேர்ந்தெடுக்கக் காரணம்**

சரத்சந்திரரின் படைப்புகள் அனைத்தையும் தமிழில் மொழிபெயர்க்க முக்கியக் காரணம்,

> வங்கமொழியின் இலக்கியச் சிற்பியாகக் கருதப்படும் சரத்சந்திரரைத் தமிழ்நாட்டினர் அறிந்து கொள்ள வேண்டும். அத்துடன் பெண்ணை மிக உயர்வாக சித்திரித்த இலக்கியவாதி அவரைத் தவிர வேறு எவருமில்லை என்ற கருத்தில் நான் அவரைத் தேர்ந்தெடுத்தேன்[15]

'நாரீர் மூல்ய' - அதாவது 'பெண்மையின் மகத்துவம்' என்று ஒரு தனிப் புத்தகமே எழுதியிருக்கிறார் சரத்சந்திரர்.

> பொதுவாக அவர் நாவலில் வரும் பெண்கள் அனைவருமே உயர்ந்த பாத்திரங்கள். 'சேஷ பிரச்ன' நாவலின் கதாநாயகி கமலா, 'விப்ரதாஸில்' வந்தனா, 'தேவதாஸி'ல் பார்வதி, சந்திரமுகி, 'நபபிதானி'ல் உஷா, 'சரித்ரஹீனி'ல் ரமா–'பரதீதி'யில் மாதவி – 'ஸ்ரீகண்டனில்' ராஜலட்சுமி , அபயா, அன்னதா – 'ஸ்வாமி'யில் சௌதாமினி 'கிருஹதாக'த்தில் அசலா – 'பாமுனேர் மேயி' நாவலில் சந்தியா போன்ற பெண்பாத்திரங்கள் மிக உயர்ந்த சிருஷ்டிகள். இத்தகைய பெண்களைப் படைத்து உலவ விட்ட சரத் 'சரித்ரஹீனி'ல் ஏன் ஒரு கெட்டுப் போன பெண்ணைப் பற்றி எழுதினார் என்று அவரது நாவலையே கொளுத்தினார்கள்[16]

என்று குறிப்பிட்டிருக்கிறார் அ.கி. ஜெயராமன். இத்தகைய உயர்ந்த படைப்பாளியைத் தமிழர்களுக்கு அறிமுகம் செய்ய வேண்டும், இப்படைப்புகளின் மேன்மையை அறிய வேண்டும் என்ற நோக்கமே இவர் சரத்சந்திரரை மொழிபெயர்க்கத் தூண்டுகோலாக அமைந்திருக்கிறது.

## அ.கி. ஜெயராமனின் மொழிபெயர்ப்பு நோக்கம்

1. சரத்சந்திரரின் படைப்புகள் வங்க இலக்கியப் போக்கில் அற்புத மாற்றத்தை உருவாக்கியமை போல் தமிழ் இலக்கியப் போக்கிலும் மாபெரும் மாற்றத்தை உருவாக்க வேண்டும்.
2. சரத்சந்திரரால் படைக்கப்பட்ட புதுமைப்பெண்கள் தமிழிலும் உருவாக வேண்டும். அன்றைய இந்தியாவின் தேவை எது? என்பதை அறிந்து தனது படைப்புகளை உருவாக்கியவர் சரத்சந்திரர். தமிழிலும் அந்நோக்கம் முழுமையாக உணரப்பட வேண்டும்.
3. அற்புதமான சரத்சந்திரரின் புதுமையான கதாபாத்திரங்களை, சித்திரிப்புகளைத் தமிழில் அறிமுகப்படுத்த வேண்டும்.
4. சரத்சந்திரரின் ஒவ்வொரு நாவலும், சிறுகதையும், சமூக முக்கியத்துவம் பெற்றதாகும். சான்றாக,

> சரித்ஹீன் என்ற நாவல் வெளிவந்த போது இலக்கிய வானில் பெரும் புயல் வீசியது. விமர்சகர்களின் தாக்குதல்கள் ஒரு பக்கம். வாசகர்களின் மாபெரும் வரவேற்பு ஒரு பக்கம். மாணவர் கூட்டம் ஒன்று இதன் பிரதி ஒன்றைச் சரத்பாபுவின் முன்னிலையில் கொளுத்தியது. ஆனால் 'சரித்ரஹீன்' கைப்பிரதி ரங்கூனில் ஒருமுறை முழுதும் தீக்கிரையாகி, பிறகு சரத்பாபு மீண்டும் இதை எழுதி முடித்து கல்கத்தாவுக்கு எடுத்து வந்தார். புஸ்தகமாக இரண்டாம் முறை அக்னியில் புடம் போட்டுப் புனிதமடைந்த பெருமை இந்நாவலுக்கு உண்டு.... இவ்வாறு எத்தனையோ வாத விவாதங்களுக்கு ஆளாகிய இந்த நாவல் வங்கமொழியில் மட்டுமல்ல இந்திய மொழிகளில் ஆயிரக்கணக்கான பிரதிகள் விற்பனையாகியுள்ளது. சரத்பாபுவின் சிறந்த நாவலான இதை இப்போது அவருடைய நூற்றாண்டு விழாவின் போது மீண்டும் மொழிபெயர்த்தேன். இதை எனது நண்பர் 'ராணி' வார ஏட்டில் தொடர் கதையாக வெளியிட விரும்பினார். பிரதி வாரமும் மூன்றரை லட்சம் பேர் படித்தார்கள்.[7]

இத்தகைய புகழ்மிக்க படைப்புகளைத் தமிழில் தருவதுதான் தன்னுடைய மொழிபெயர்ப்பின் நோக்கம் எனக் குறிப்பிடுகிறார்.

> இதனால் சரத்சந்திரரைத் தவிர வேறு எவரையும் முழுமையாக மொழிபெயர்க்க விரும்பவில்லை[18]

என்றும் கூறுகிறார் அ.கி.ஜெயராமன். சரத்சந்திரரின் படைப்புகள் வங்க இலக்கியத்தை வளப்படுத்தியது போலவே தமிழ் இலக்கியத்தையும் வளப்படுத்தப் பயன்பட வேண்டுமென்பதே இவருடைய மொழி பெயர்ப்பின் நோக்கம் எனலாம்.

### சிறையில் மொழிபெயர்ப்பு

அ.கி. ஜெயராமன் சென்னை மத்திய சிறைச்சாலையில் அடைக்கப்பட்டபோதுகூட, சரத்சந்திரரின் நூலை மொழிபெயர்த்துக் கொண்டிருந்தார். இந்த நிகழ்ச்சியைப் பற்றி அவர் கூறும்பொழுது

> 1941 ல் நான் தனிநபர் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டுக் கைதாகி சென்னையில் சிறையில் அடைக்கப்பட்டேன். மாணிக்கவாசகம், திருச்சி அருணாசலம் போன்றவர்கள் என்னோடு சிறையில் இருந்தார்கள். கம்யூனிஸ்டுகளும் கைதாகி இருந்தனர். மோகன் குமாரமங்கலம், பி. ராமமூர்த்தி ஆகியோர் என்னுடன் இருந்தனர். சிறையில் கூட நான் சரத்தின் நாவலை மொழி பெயர்த்துக் கொண்டுதான் இருந்தேன். சென்னை சென்ட்ரல் ஜெயில்தான், அப்போது அதற்குப் 'பெனிடன்ட்ஷரி' ஜெயில் என்று பெயர்— சரத்சந்திரரின் 'பதேர்தாபி' என்று ஒரு நாவல். புரட்சிக் காரர்களைப் பற்றி எழுதியிருக்கிறார். பல இந்தியப் புரட்சிக்காரர் களைப் பெயர் மாற்றம் செய்து கதாபாத்திரங்களாக வைத்திருக்கிறார். அன்றைய பெங்காலி அரசாங்கத்தால் இரண்டு முறை தடை செய்யப்பட்ட நாவல். வ.உ.வே.சு. ஐயரை, கிருஷ்ணய்யர் என்ற கதாபாத்திரமாக்கி இந்த நாவலில் வைத்திருக்கிறார் சரத். இதைத்தான் நான் ஜெயிலில் இருந்த போது மொழிபெயர்த்தேன். சரத்சந்திரர் சிறந்த தேச பக்தர். சி.ஆர். தாஸுக்கு வலது கையாக இருந்தவர்.[18]

என்று தன் நினைவுகளைப் பகிர்ந்து கொண்டார் மொழிபெயர்ப்பாளர் அ.கி. ஜெயராமன்.

### த.நா. குமாரசுவாமியின் பாராட்டு

உலகின் மிகச் சிறந்த நாவல்களையும், சிறுகதைகளையும் தமிழில் மொழிபெயர்த்து அறிமுகம் செய்துவந்த சிறந்த மொழி பெயர்ப்பாளரான த.நா. குமாரசுவாமி அ.கி.ஜெயராமனின் மொழி பெயர்ப்புத் திறனை அறிந்து

> 'என்னை விடச் சரத்தின் எழுத்துக்களை நீங்களே நன்றாக மொழிபெயர்க்கிறீர்கள், இனி நீங்களே அந்தப் பணியைச் செய்யுங்கள்' என்றார். த.நா.குமாரசுவாமி என்னைப் பாராட்டியது எனக்கு மிகுந்த சிலிர்ப்பை ஏற்படுத்தியது. சரத்சந்திரரின் 'கிருஹதாகம்' என்ற நூலை நான் மொழிபெயர்த்து வெளியிட்ட போது அதைத் த.நா. குமாரஸ்வாமிக்குச் சமர்ப்பணம் செய்திருந்தேன். சரத்சந்திரரின் 'கிராம சமாஜம்' என்ற நாடகமும் மிகவும் பிரசித்தமானது. இது சரத்சந்திரர் இருக்கும்போதே 108 நாட்கள் தொடர்ச்சியாக மேடையேற்றப்பட்டது"[19]

என்று அ.கி. ஜெயராமன், த.நா. குமாரசுவாமியின் பாராட்டை பெரிதும் போற்றி மகிழ்கிறார்.

## மொழிபெயர்ப்பின் தன்மை

அ.கி. ஜெயராமனின் மொழிபெயர்ப்பில் சரத்சந்திரரைப் படிக்கும்பொழுது நான்கு நிலைகளில் அவரின் மொழிபெயர்ப்பு அமைகின்றது என்பதை உணரலாம். மொழி நிலையில் எளிய தமிழ் நடையில் அமைந்த மொழிபெயர்ப்பு, வடசொற்கள் கலப்பில் அமைந்த மொழிபெயர்ப்பு, சூழல் நிலையில் தமிழகச் சூழலுக்கு ஏற்றாற் போல் அமைந்த மொழிபெயர்ப்பு, வங்கச் சூழலை அப்படியே எடுத்துக்காட்டுகிற மொழிபெயர்ப்பு எனவும் அமைந்துள்ளன.

இதனால் நாவலுக்கு நாவல் மொழிபெயர்ப்பு வேறுபடுவதை உணரமுடிகிறது. சில நாவல்களை இரண்டு முறை மொழி பெயர்த்துள்ளார்.

> சில நாவல்களை இரண்டு தடவை மொழிபெயர்த்ததின் காரணம் முதலில் அவைகளை ஹிந்தியிலிருந்து மொழிபெயர்த்தேன். பிறகு மீண்டும் வங்க மொழியிலிருந்து மொழிபெயர்த்தேன். ஆனால் இரண்டுக்கும் அதிக வித்தியாசம் இருக்காது. சில ஆரம்பக்கால மொழிபெயர்ப்புகள் பிரதிகள் கிடைக்காதபோது சரத்சந்திரர் நூற்றாண்டு விழாவின்போது மீண்டும் சிலவற்றை மொழிபெயர்க்க நேர்ந்தது.[20]

என்று கூறுகிறார் அ.கி. ஜெயராமன்.

1940களில் வெளிவந்த இவருடைய மொழிபெயர்ப்பில் பிறமொழிச் சொற்கள் மிகுதியாகக் கலந்து வருவதைக் காணலாம். (எ.டு)

> இவ்வளவு பெரிய கொண்டாட்டத்திற்குக் காரணம் ஒரு பதினாறு வயதுப் பையனின் கல்யாணம்தான்.

> சாகர்பூரின் ஜமீந்தாரான ஸ்ரீமான் ஹரதவ மித்ராவின் ஏக புதல்வனுடைய விவாகோற்சவத்திற்காகத்தான் இத்தனை ஏற்பாடுகளும். ஹரதேவர் ரொம்பப் பெரிய மனிதர். ஏறக்குறைய இருபத்தைந்து இருபத் தாறாயிரம் வருஷ வருமானம் வருகிறது. பையன் பெயர் சத்தியேந்தரகுமார் முத்ரா. ஹேயர் துரை பள்ளிக் கூடத்தில் என்டரன்ஸில் வாசித்துக் கொண்டிருக் கின்றான். தனது புதல்வனின் கல்யாணத்தை ஜல்தியாகப் பார்க்க வேண்டுமென்ற தாயாரின் ஆவலினால்தான் இவ்வளவு சிறிய வயதிலேயே கல்யாணம் நடக்கிறது.[21]

1940, 50களில் இத்தகைய மொழிநடையே நாவல்களில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். ஆகையால் அக்கால வாசகர்களின் இரசனைக்கு ஏற்றவாறு செய்திக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளார்.

சில மொழிபெயர்ப்புகளை அ.கி. ஜெயராமன் தாமாகவே மீண்டும் இந்நாவலை மொழிபெயர்க்க வேண்டும் என்று முயற்சித்து எளிய மொழிநடையில் மொழிபெயர்த்துள்ளார். தேவதாஸ், சாவித்திரி, ஆகியவற்றை இதற்குச் சான்றாகக் கொள்ளலாம்.

சாதித்தீ மூட்டும் வர்ணாசிரமத்தின் பிடிக்குள் சிக்கித் தவிக்கும் தாழ்த்தப்பட்ட மக்களின் கதியை விளக்கப் 'பிராமணப் பெண்' என்ற கதையைப் படைத்துக் காட்டினார் சரத்சந்திரர். இதைத் தமிழில் மூலநூலைப் போலவே அ.கி. ஜெயராமன் மொழிபெயர்த் துள்ளதை இக்கதையின் ஒரு சிறு பகுதியிலிருந்து காணலாம். அக்கிரகாரத்துப் பெண்மணியான ராஸமணி என்ற பெண் நடந்து செல்லும் பாதையோரம் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த தூலேயச் சிறு பெண் ஒருத்தி ஆட்டைக் கட்டி வைத்திருக்கிறாள். தன் 12 வயது பேத்தி அந்தக் கயிற்றைத் தாண்டிச் செல்லும்போது தீட்டு ஆகிவிட்டதே என்று கொதித்துப் போகிறாள்.

> சின்ன சாதி நாய். மூஞ்சியிலே கொள்ளியை வைக்க! உம்! நீங்கள் இந்தப் பிராமணத் தெருவில் வந்து குடி இருக்கப் போகிறீர்களா? நல்ல கொழுப்படி உங்களுக்கு! உன் அம்மாவை அழைத்துக் கொண்டு வந்தது யார்? ராமதனுவின் மருமகன்தானே! அவனாகத்தான் இருக்கும். இல்லாவிட்டால் வேறு யாருக்குத் தெரியும் இந்த வித்தையெல்லாம்! பெரிய வீட்டு மாப்பிள்ளையாக இருந்தால் அந்தக் கெளரவத்தோடு இருக்க வேண்டும். மாமனாரின் சொத்து கிடைத்து விட்டால் தெருவில் பறையன், சக்கிலியனைக் கூட அழைத்துக் கொண்டு வந்து வைத்துக் கொள்ள முடியுமா என்ன?

> உன் தகப்பன் இவர்களைப் பறைச் சேரியிலிருந்து அழைத்துக் கொண்டு வந்து வைத்துக் கொள்ளட்டும். ஆனால் ஆடுமாடுகளைச் சற்றுப் பார்த்துக் கட்டச் சொல். சின்னசாதி மக்களுக்கு ஆசாரங்களைப் பற்றி என்ன தெரியும்? சட்டர்ஜி எவ்வளவு வயதானவர். இந்த வழியாக அடிக்கடி வருகிறார். வீணாக அவருடைய கோபத்திற்கு ஆளாக வேண்டாம்! என்று இதைத்தான் சொன்னேன் அம்மா! இதற்காக உன் பெண் கை தீண்டி அடிக்கவில்லை அவ்வளவுதான். பாக்கியெல்லாம் ஆகிவிட்டது. போ, போ, சட்டர்ஜி அண்ணாவைக் கூப்பிட்டுக் கொண்டு வா! அவரைப் போன்ற பெரிய மனிதர்கள் எத்தனையோ பேரை நான் பார்த்திருக்கிறேன். அவர் அப்பன் வீட்டு இடத்திலா நாங்கள் பறையரைக் கொண்டு வந்து வைத்திருக்கிறோம். அவர் வந்து என்னைக் கேட்க? என்று கேட்டாள். நீயே சொல் அம்மா! ஒரு பெண் பேசக்கூடிய பேச்சா இது?[22]

என்றாள். இம்மொழிபெயர்ப்பு தமிழ்ச் சூழலோடு பொருந்தி அமைந்திருப்பதைக் காணலாம். தீண்டாமைப் போக்கும், தீண்டாமையை எதிர்க்கும் போக்கும் இந்தச் சூழல் தெளிவுபடுத்தி விடுகிறது.

வங்க நாவல் என்ற அடையாளத்தை வெளிப்படையாகத் தெரிவிப்பன பெயர்கள், இடங்கள், சில சூழல்கள் ஆகியனவாகும்.

> பவானி புரத்தைச் சேர்ந்த சட்டர்ஜியின் குடும்பம் ஒன்றாக இருந்தது. இரண்டு சகோதரர்கள் மூத்தவன் கிரீசன். இளையவன் ஹரீசன். இவர்களின் ஒன்று விட்ட சகோதரன், வயதில் இளையவனான ரமேசன். அவர்களுக்குப் பூர்வீகமான ஊர் ஹௌரா ஜில்லாவில் ரூப நாராயண நதிக்கரையிலுள்ள விஷ்ணுபுரம் கிராமம். அப்பொழுது கிரீசனின் தந்தை பவானி சட்டர்ஜியின் நிலைமை சௌகரியமாக இருந்தது. ஆனால் திடீரென்ற ரூபநாராயண நதிக்கு ஏற்பட்ட அகோர பசிக்கு அவருடைய சொத்துகள் பலியாயின. ஐந்தாறு வருஷங்களுக்குள் ஆற்று வெள்ளம் அவருடைய பூமிகளை விழுங்கி ஏப்பமிட்டு அவரை ஆண்டியாக்கி முடிவில் ஏழெட்டு தலைமுறையாக இருந்த வீடு வாசல்களையும் விழுங்கிவிட்டுத் தன் எல்லையை விட்டுத் துரத்தி விட்டது. பவானி சட்டர்ஜி தன் குடும்பத்துடன் பவானி புரத்திற்கு வந்து சேர்ந்தார்.[23]

இப்பகுதி வங்கச் சூழலை வாசகர்களின் பார்வைக்குக் கொண்டு வந்துவிடுகிறது. பெரும்பாலும் இத்தகைய சூழல்கள்

'மொழிபெயர்ப்பு' என்ற நிலையை வாசகர்களுக்கு உருவாக்கி விடுகின்றன.

சரத்சந்திரரின் நூல் தலைப்புகள் பலவற்றைத் தமிழுக்கு ஏற்றாற்போல் மாற்றி அமைத்துள்ளார், அ.கி. ஜெயராமன். சான்றாக, 'படேதீதி' என்ற தலைப்பு 'பெரிய அக்கா' (அ) 'மூத்த சகோதரி' என்பதைக் குறிப்பதாகும். ஆங்கிலத்தில் 'தி எல்டஸ்ட் ஸிஸ்டர் அண்ட் அதர் ஸ்டோரிஸ்' என்றும் குஜராத்தி, இந்தி மொழிகளில் 'படீதீதி' என்றும் மொழிபெயர்த்துள்ளனர். தமிழில் அ.கி. ஜெயராமன் இதனை 'நெஞ்சிலே பட்ட வடு' என்று மொழிபெயர்த்துள்ளார். இதே கதைக்கு ஆர். சண்முகசுந்தரம், 'பழிக்குப் பழி' என்ற தலைப்பைத் தந்திருப்பதும் குறிப்பிடத்தக்கது. இக்கதையில் விதவைக் கதாநாயகி மாதவி, எல்லோராலும் அக்கா (தீதி) என்று அழைக்கப்படுபவள். சுரேந்திரநாதன் என்ற ஆசிரியரை மாதவி மனதில் நினைத்த போதிலும், இருவரும் வாழ்வில் ஒன்று சேர முடியாமல் பிரிந்து, சுரேந்திரநாதன் மரணத்தறுவாயில் மாதவியைச் சந்திப்பதான இக்கதைக்கு 'நெஞ்சிலே பட்ட வடு' என்ற தலைப்பை மிகப் பொருத்தமாக அ.கி. ஜெயராமன் வழங்கியுள்ளார். இவ்வாறு பல கதைகளின் தலைப்பை அப்படியே மொழிபெயர்க்காமல் கதைக்கு ஏற்றாற் போலப் புதிய தலைப்புகளை வழங்கியுள்ளார். மொழி பெயர்ப்பாளரின் உரிமை என்ற நிலையில் இவ்வாறு செய்வது பெரிய தவறொன்றுமில்லை என்பது இவர் கருத்து.

1977ஆம் ஆண்டு சரத்சந்திரரின் நூற்றாண்டு விழாவை யொட்டி, சரத்சந்திரரின் நூல்கள் நூற்றாண்டு விழாப் பதிப்பாகப் பாரிநிலையம் வெளியிட்டுள்ளது. இந்தப் பதிப்பின் முன்னுரையில் மொழிபெயர்ப்பாளர் சரத்சந்திரரை இரவீந்திரநாத் தாகூர் எந்த அளவிற்கு அவரைப் பாராட்டியுள்ளார் என்பதைக் குறிப்பிட்டுள்ளார் அ.கி. ஜெயராமன். சரத்சந்திரரின் மேன்மையை வாசகர்கள் அறிந்து கொள்ள இப்பகுதி மிகவும் பயன்படும்.

> *அப்போது வங்க இலக்கியத்தில் சரத்பாபுவின் புகழ் பரவிவிட்டது. கவியரசர் அப்போது வெளியான சரத்பாபுவின் உபாத்யாயர் மனைவி (பண்டித் மாஷாய்) என்ற இந்த நாவலைப் படித்து விட்டு அஸித்குமார் ஹால்தாரிடம் சொன்னார். இப்போது வரும் வங்க நூல்களைப் படிக்கவே வருத்தமாக இருக்கிறது. நான் எதையும் படிப்பதில்லை. சரத் பாபுவின் புஸ்தகம் ஏதாவது வந்தால் படிப்பேன். நேற்று இந்தப் 'பண்டித்மாஷாய்' என்ற நாவலைப் படித்தேன். பாலைவனத்தில் நடுவே, நீரூற்றுப் போல் இருந்தது என்று கூறி விட்டுச் சரத்பாபுவைத் தான் சந்திக்க*

விரும்புவதாகக் கூறினார். அவர்களுடைய அந்தச் சந்திப்பு வங்க இலக்கியச் சரித்திரத்தில் பொன் எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளது. பிறகு ஒரு சமயம் சரத்சந்திரர் லாகூரில் ஓர் இலக்கிய மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க ஒப்புக் கொண்ட போது ரவிபாபு சொன்னார்! 'சரத்பாபு! நீங்கள் மகாநாட்டுக்குச் சொற்பொழிவு எதுவும் எழுதிக் கொண்டு போகாதீர்கள். ஒரு கதையை எழுதிக்கொண்டு போய்ப் படியுங்கள் என்றார்.

இதன் கருத்து மற்றவர்களுக்குச் சட்டென்று விளங்க வில்லை! பிறகு ரவிபாபுவே சொன்னார்! ஆயிரம் சொற்பொழிவுகள் செய்யும் நற்பணியைச் சரத்பாபுவின் ஒரு கதை செய்து விடும் என்றார்.

அந்த வார்த்தைக்கு விளக்கம் கூறுவது போல் அமைந்துள்ளது இந்த 'உபாத்தியாயர் மனைவி' என்ற நாவல். கல்வியின்றி அறியாமையில் மூழ்கிக் கிடக்கும் கிராம மக்களுக்குக் கல்வியறிவு ஊட்டுவது எவ்வளவு அவசியம் என்பதை ஆயிரம் ஆயிரம் சொற்பொழி வாளர்கள் எடுத்துக்கூறுவதை விடப் படிப்போர் மனத்தில் பசுமரத்தாணி போல் பதியுமாறு செய்துள்ளார் சரத்பாபு.

கவி ரவீந்திரரால் போற்றப்பட்ட இந்த நாவலை முப்பத்தெட்டு வருஷங்களுக்கு முன் மொழிபெயர்த்தேன். அது 'கலைமகளி'ல் தொடர்கதையாக வந்தது. இப்போது உங்கள் கையிலிருப்பது புதிய மொழி பெயர்ப்பு. அப்போது இதைத் தொடர்கதையாக வெளியிட்ட 'கலைமகள்' ஆசிரியரும், எனது பெரு மதிப்பிற்குரிய நண்பருமான வாகீச கலாநிதி வித்வான் கி.வா. ஜகந்நாதன் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்[24]

என்று உபாத்தியாயர் மனைவி' எனும் நாவலின் முன்னுரையில் அ.கி. ஜெயராமன் நினைவுகூர்ந்துள்ளார்.

சரத்சந்திரரின் எழுத்தில் ஒரு சொல்லைக் கூட நான் எடுக்கவில்லை. அப்படியே மொழிபெயர்த்திருக் கிறேன். அவரது எழுத்து மிகவும் வன்மை வாய்ந்தது. ஒரு சொல்லை எடுத்தால் கூட ரசக் குறைவு ஏற்பட்டு விடும்[25]

என்று கருதுகிறார்.

மொழிபெயர்ப்புச் சிக்கல் பற்றிக் கூறும்பொழுது,

> **மொழிபெயர்ப்பில் சிக்கல் என்று பெரிய அளவிற்கு சொல்லும்படியாக எனக்கு எதுவும் ஏற்படவில்லை. அப்படி மொழிபெயர்ப்பதில் ஏதாவது இடர்ப்பாடு தோன்றினால் அதை இரண்டு மூன்று நாட்களுக்கு அப்படியே போட்டு வைத்துவிடுவேன். பிறகு மீண்டும் தொடரும் பொழுது மிக எளிதாக எழுதிக் கொண்டு போய்விடுவேன். சிறிய நாவல்களை ஒரு வாரம், அல்லது இரு வாரங்களில் மொழிபெயர்த்து விடுவேன். பெரிய நாவல்கள் மொழிபெயர்க்க இரண்டு மாதங்கள் வரை ஆகும்[26]**

எனக் குறிப்பிடுகிறார்.

சரத்சந்திரர் 'மனிதப்பண்பும் கலைத்திறனும்' எனும் நூலில் அதன் ஆசிரியர் எஸ்.ஸி. ஸெங்குப்தா 'சரத்சந்திரரின் நடையழகை எந்த மொழிபெயர்ப்பிலும் பின்பற்ற முடியாது' எனச் சரத்சந்திரரின் மொழிநடைச் சிறப்பைப் பற்றி வியந்து குறிப்பிடுகிறார். ஆனால் எந்த மொழியினரும் அதைப் பற்றிக் கருத்தில் கொள்ளாமல் சரத்சந்திரரின் கருத்து அந்தந்த மொழிகளில் கொண்டு செல்ல வேண்டும் என்ற நோக்குடன் மொழிபெயர்த்துக் கொண்டுள்ளனர்.

சரத்சந்திரரின் நூற்றாண்டு விழாவின்போது அ.கி. ஜெய ராமன் சிறப்பிக்கப்பட்டார். சரித்ரஹீன் நாவலை அ.கி. ஜெயராமன் மொழிபெயர்த்த பொழுது ராணி இதழ் ஆசிரியர் அ.மா. சாமி அதை அவ்விதழில் 42 வாரங்கள் வெளியிட்டார். சாண்டில்யன் 'சுதேசமித்திரன்' ஆசிரியராக இருந்த போது சரத்சந்திரர் நாவல்களை வெளியிட்டு வந்தார். இதனால் வெகு ஜன மக்களிடை யேயும் இந்நாவல்கள் சென்று சேர்ந்தன. தேவதாஸ், மாலையிட்ட மங்கை, எங்கள் வீட்டு மஹாலக்ஷ்மி போன்ற தமிழ்த் திரைப்படங்கள் சரத்சந்திரரின் படைப்புகளை வைத்து எடுக்கப்பட்டவை. வங்க மொழியில் சரத்சந்திரரின் படைப்புகள் அனைத்தும் திரைப் படங்களாக வெளிவந்துள்ளன.

### சரத்சந்திரரின் 'தேவதாஸ்'

இலக்கியப் படைப்பாளிகள் பல கதைகளில் தங்களையே ஒரு கதாபாத்திரமாக்கிக் கொ:ண்ட அனுபவங்களைக் குறிப்பிடுவதுண்டு. சரத்சந்திரரும் அத்தகைய ஒரு படைப்பாளி எனலாம். 'மலரில் மணம் நிறைந்து கிடப்பதைப்போல என் கதைகளில் நான் மறைந்து கிடக்கிறேன்' என்று தன் நண்பர் ஒருவருக்குக் கடிதம் எழுதியுள்ளார். இதற்கு முழுமையான எடுத்துக்காட்டாக அமைவது 'தேவதாஸ்' எனும் இவர் எழுதிய நாவலாகும்.

'தேவதாஸ் கதையில் வரும் பாத்திரங்களின் மூலம் நாம் மறக்க முடியாதவர்கள் தேவதாஸ் - பார்வதி - சந்திரமுகி. தன் வாழ்க்கையில் பங்கு கொண்ட தீரு என்ற பெண்ணையும், காளிதாஸி என்ற பொதுமகளையுமே இதில் பார்வதியாகவும் சந்திரமுகியாகவும் சித்திரித்துத் தானே தேவதாஸாக மாறி மலரில் மணமாக மறைந்து நிற்கிறார் சரத்பாபு.

சரத்சந்திரரின் பிள்ளைப் பிராயம் தேவானந்தபூரில் கழிந்தது. அங்குள்ள பள்ளியில் அவர் படிக்கும்போது, அதே பள்ளியில் தீரு என்ற ஒரு சிறுமியும் படித்தாள். இருவரும் இணைபிரியா நண்பர் களானார்கள். தேவதாஸ் கதையில் வரும் பார்வதி இவளேதான். அந்தப் பள்ளிக் கூட வாழ்க்கையை அப்படியே சித்திரித்துள்ளார். சட்டாம்பிள்ளை போலுவைச் சுண்ணாம்பில் தள்ளியது, உபாத்தியாயருடைய ஹுக்காவில் புகையிலையைக் கொட்டிவிட்டுச் செங்கல்தூளைப் போட்டு வைத்தது. அதற்காக வீட்டில் அடி வாங்கியது யாவும் அவருடைய பால்யகால வாழ்க்கையில் நிகழ்ந்தவையே. அந்தத் தீரு என்ற பெண் மலர்மாலை கட்டிச் சரத்தின் கழுத்தில் போடுவாள். ஆனால் பிறகு அவள் வேறு ஒருவனுக்குச் சொந்தமாகி விட்டாள். ஆனால் சரத்தின் மனத்தை விட்டு அவள் அகலவே இல்லை.

இந்தத் தீரு, தேவதாஸில் பார்வதியாகவும், கிராம சமாஜத்தில் ரமாவாகவும், ஸ்ரீகாந்தனில் ராஜலக்ஷ்மியாகவும் பாத்திரமாக்கப்பட்டு நாவல் இலக்கியத்தில் அழியாத அமரத்துவம் பெற்று விட்டாள். தேவதாஸில் வரும் தர்மதாஸ் அவருடைய மாமா வீட்டின் ஊழியனான முஷாரி என்பவன்.

தேவதாஸில் வரும் சந்திரமுகியை நாம் மறக்கவே முடியாது. 'அந்தகாரத்தில் வெளிச்சம்' (பிஜ்லி) என்ற கதையிலும் இவள் பிஜ்லி பாத்திரமேற்கிறாள் ஆனால் இவள் யார்? இவளும் சரத்பாபுவின் வாழ்க்கையில் பங்கு கொண்ட ஒருத்தியே.

> ..... அப்போது காளிதாசி என்ற ஒரு நாட்டியக்காரி மயூர்கஞ்சில் இருந்தாள். அவளுடைய குரல் மிகமிக இனிமையாக இருக்கும். அவளுடைய பாடல்களைக் கேட்பதில் சரத்பாபுவுக்கும், அவருடைய நண்பர் களுக்கும் மிகுந்த ஆர்வம் உண்டு. சரத்பாபுக்கு இனிய சாரீரம் உண்டு. நன்றாகப் பாடுவார். காளிதாஸிக்கும் இவர்களிடம் மிகுந்த பிரியம் உண்டு. தன்னுடைய பத்தொன்பதாவது வயதில் இந்தக் காளிதாஸிடன் அவருக்கு நட்பு ஏற்பட்டதா இல்லையா என்பதைக் கூறமுடியாது. ஆனால் அவளுடைய பாட்டிலும், இனிய பேச்சிலும் மயங்கி அவளையே சுற்றிக்

> கொண்டிருந்தார் என்பது உண்மை. அந்தக் காளிதாஸியைத்தான் சந்திரமுகியாகப் படைத்து இந்த நாவலில் உலவவிட்டார். அவர் வாழ்க்கையில் காளிதாஸி பெற்ற இடத்தைத் தன் 'தேவதாஸ்' நாவலில் உலகமே கண்டு வியக்கும் ஓர் ஒப்பற்ற பாத்திரமாகப் படைத்து விட்டார் சரத்சந்திரர். விலைமகள் என்று சமூகத்தால் வெறுத்தொதுக்கப்பட்ட சந்திரமுகி, தேவதாஸின் வாழ்க்கையில் அழியாத காவியமானாள்.
>
> ரோமியோ ஜூலியட், லைலாமஜ்னு, அம்பிகாபதி அமராவதி போன்ற சாகாவரம் பெற்ற காதல் கதைகள் வரிசையில் தேவதாஸின் கதையும் இடம்பெற்று இன்றளவும் மக்களிடையே மதிப்புடன் போற்றப் படுகிறது. இந்திய மொழிகள் ஒவ்வொன்றிலும் மொழிபெயர்க்கப்பட்ட சிறப்பினைப் பெற்றது. அதைப்போலவே திரைப்படமாகவும் மக்களிடம் அழியாத புகழ் பெற்றது. சிலமொழிகளில் இரண்டு மூன்றுமுறைகூடப் படமாக்கப்பட்டதாகக் குறிப்பிட்டுள்ளனர். தமிழில் இன்றும் காவியமாகப் போற்றப் படும் திரைக்கதைகளில் குறிப்பிடத்தக்கது. ஆனால் இது வங்கமொழி நாவல், அல்லது சரத்சந்திரரின் நாவல் என அறியாதோர் பலர். உலகின் சிறந்த காதல் நாடகங்களில் இந்தத் தேவதாஸ் ஒன்றாக வைத்து எண்ணப்பட வேண்டும் என்பது சிறந்த விமர்சகர்களின் கருத்து.[27]

இந்தக் கருத்தைத் தழுவி வெளிவந்துள்ள கதைகள், நாடகங்கள், திரைப்படங்கள் எண்ணிலடங்கா. இந்த மிகச் சிறந்த நாவலைத் தமிழில் தந்த பெருமை அ.கி. ஜெயராமன் அவர்களைச் சாரும்.

சரத்சந்திரரின் பல நாவல்கள் திரைப்படங்களாக்கப்பட்டு அவை மக்களிடையே பெரும் பாராட்டைப் பெற்றுள்ளன. தேவதாஸ், மதனி, நெஞ்சிலே பட்டவடு (கானல் நீர்), சந்திரநாதன், அண்ணன் தம்பி ஆகிய நாவல்கள் தமிழில் திரைப்படங்களாகியுள்ளன. அண்ணன் தம்பி எனும் கதையை இது சரத்சந்திரரின் கதை எனக் குறிப்பிடாததைக் குறித்து அ.கி. ஜெயராமன்,

> துரதிர்ஷ்டவசமாகத் தமிழ்ப்படம் தயாரித்தவர்கள் இது சரத்பாபுவின் கதை என்று குறிப்பிடாமல், டைரக்டரின் சொந்தக் கதை என்று பெயர் போட்டுக் கொண்டார். மற்ற மொழிகளில் ஹிந்தி உட்பட – இக்கதை படமாக்கப்பட்டு, சரத்பாபுவின் பெயருடன் அமோக வெற்றி பெற்றது. ஆனால் தமிழ்நாட்டின் சிறந்த நடிகர் கதாநாயகனாக நடித்தும் தமிழில்

> இப்படம் தோல்வியடைந்ததற்குக் காரணம், டைரக்டர் சரத்பாபுவைப் புரிந்து கொள்ளாததுதான் என்று துணிந்து கூறலாம்[28]

எனக் குறிப்பிடுகிறார்.

### அ.கி. கோபாலன்

அ.கி. ஜெயராமனின் உடன்பிறந்த சகோதரரான அ.கி.கோபாலன் நோபல் பரிசு பெற்ற புகழ்பெற்ற படைப்புகளைத் தமிழில் வெளியிடுவதற்கென்று ஒரு பதிப்பகத்தைத் தொடங்கி நடத்திய சிறப்புக்குரியவர். 1942 ஆம் ஆண்டு சென்னைத் திருவல்லிக்கேணியில் 'ஜோதி புக் ஸ்டால்' என்ற புத்தகக் கடை தொடங்கி நடத்தி வந்தார். செய்தி இதழ்களும் விற்பனையாகின. பல எழுத்தாளர்கள் புத்தகக் கடைக்கு வந்து போனதினால் பலருடைய அறிமுகம் இவருக்குக் கிடைத்தது. எஸ்.எஸ். மாரிசாமி, புதுமைப்பித்தன், பெ.நா. அப்புசுவாமி, கி.வா. ஜகந்நாதன், ரா.பி.சேதுப்பிள்ளை, ம.பொ.சி., பி.எஸ். ராமையா, கு.ப.ரா., சிதம்பர சுப்ரமண்யம், வ.ரா., காசிவிஸ்வநாதன், க.நா.சு., ஏ.என்.சிவராமன், பி.ஸ்ரீ., என். ராமரத்தினம் முதலியோரின் எழுத்தும், பேச்சும் இவருக்கு அறிமுகமாயின. இதனால் தானே ஒரு பதிப்பகம் தொடங்கி அதன் மூலம் இவர்களுடைய படைப்புகளை, மொழிபெயர்ப்புகளை வெளியிட முனைந்தார்.

> நாமே ஒரு பதிப்பகம் ஆரம்பித்தால் என்ன என்ற எண்ணம் ஏற்பட்டது. ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் தேதி 1947 நள்ளிரவு 12 மணிக்கு நம் தேசம் சுதந்திரமடைந்தபோது, என் பதிப்பகம் ஆரம்பிக்கப் பட்டது. பதிப்பகத்தின் பெயர் தமிழ்ச்சுடர் நிலையம். புத்தகங்கள் பதிப்பிக்கும் போது கடன் வாங்கித்தான் பப்ளிஷ் செய்தேன். பேப்பர் வாங்குமிடத்தில் கடன். அச்சடிக்கும் அச்சகத்தில் கடன். அப்போது நம்பிக் கடன் கொடுப்பார்கள். பிராட்வேயில் இருக்கும் தாம்ஸன் பிரஸ்ஸில்தான் என் புத்தகங்கள் அச்சடிக்கப்பட்டன. மொழிபெயர்ப்பு நாவல்கள் நிறையப் போட்டேன். குறிப்பாக நோபல் பரிசு பெற்ற நாவல்கள். இதற்கெல்லாம் காரணமானவர் க.நா.சு. சிறந்த வெளிநாட்டு இலக்கியங்கள் பற்றி எனக்கு எடுத்துச் சொன்னவர் அவர்தான். இருவருமாகச் சேர்ந்து ஹிக்கின்பாதம்ஸ் செல்வோம். வருஷத்திற்கு மூன்று முறைதான் அங்கு நோபல் பரிசு நாவல்கள் பார்சலில் வரும். எங்களுக்கு வேண்டிய புத்தகங்களை வாங்கிக் கொண்டு வருவோம்[29]

என்று தாம் பதிப்பகம் ஆரம்பித்து நோபல் பரிசு பெற்ற நாவல்கள் வெளியிட்ட முயற்சியைக் குறித்துக் கூறியுள்ளார் அ.கி. கோபாலன். இவருடைய முயற்சியால் மொழிபெயர்த்து வெளியிடப்பட்ட நாவல்களுக்குப் பிறமொழி இலக்கியத்தின் மீது நாட்டமுடைய வாசகர்களிடையே, அறிஞர்களிடையே நல்ல வரவேற்பு கிடைத்தது. பிறமொழி இலக்கியவாதிகள் தமிழர்களுக்கு அறிமுகமாயினர். தமிழ் இலக்கியப் படைப்பாளிகளுக்கும் இந்நாவல்கள் புதிய கண்ணோட்டத்தைப் புதிய அணுகுமுறையை வழங்கின. மொழி பெயர்ப்புப் பணியும் பரவலாக நடைபெற்றுக் கொண்டேயிருந்தது.

> **ஒரு பக்கம் மொழிபெயர்த்துக் கொடுத்தால் ஒரு ரூபாய் என்று என்னிடம் பேசிக்கொண்டு க.நா.சு. மொழிபெயர்த்துக் கொடுத்தார். தினமணியில் வேலை பார்த்த வெ. சந்தானம், நா.ராமரத்தினம் ஆகியோரும் மற்றும் த.நா. குமாரசாமி, த.நா. சேனாபதி...... இவர்களும் எனக்கு மொழிபெயர்ப்புகள் எழுதிக் கொடுத்தார்கள். நார்வே நாட்டு நாவலான 'நிலவளம்', அன்பு வழி (ஸ்வீடிஷ்), தபால்காரன், தாசியும், தபசியும் (பிரஞ்சு), அன்னாகரீனா, புத்துயிர், ரோம் நகரப் பெண் (இத்தாலி), அன்னை (ருஷ்யா), சித்தார்த்தன் (ஜெர்மன்), கடலும் கிழவனும், திமிங்கில வேட்டை, அவமானச் சின்னம் (அமெரிக்கா)... போன்ற மொழிபெயர்ப்பு நாவல்களை நான் வெளியிட்டேன். 'இறவாத புகழுடைய நூல்களும், நோபல் பரிசு நாவல்களும்' என்று விளம்பரம் செய்வேன்..... பெரிய பெரிய வால்யூம்களாகப் புத்தகம் இருக்கும். ஆனால் தூக்கிப் பார்த்தால் வெயிட் இருக்காது. 'ஆன்டிக்' பேப்பர் அல்லது ஃபெதர் வெயிட் பேப்பர் என்று சொல்வார்கள். அந்த மெல்லிய தாளில் அச்சிட்டேன்[30]**

இவ்வாறு வெளியிடப்பட்ட மொழிபெயர்ப்பு நாவல்கள் இறவாத புகழுடைய நூல்களாக இன்று அறிஞர்களால் போற்றப் படுகின்றன. மொழிபெயர்ப்பு நூல்களை வெளியிடுவதற்கென்றே பதிப்பகம் தொடங்கிய பெருமை பெற்றவர் அ.கி. கோபாலன். இவை மீண்டும், மீண்டும் பல பதிப்பகத்தாரால் இன்றும் வெளியிடப்படுகின்ற மதிப்பிற்குரியனவாக விளங்குகின்றன.

> **நான் வெளியிட்ட நூல்களில் டாக்டர் பட்டாபி சீதாராமையா எழுதிய 'காங்கிரஸ் மஹாசபை சரித்திரம் மிக முக்கியமானதாகும். மூன்று பகுதிகள் கொண்ட நூல் அது. மூன்று வால்யூம்களாக வெளியிட்டேன். நல்ல வரவேற்பு இருந்தது. 'அன்னா கரீனா' 800 பக்கங்கள். விலை ஏழு ரூபாய், எட்டணா. பரிசுப்**

> பதிப்பு இரண்டு தனி வால்யூம்கள் ரூ.12. டால்ஸ்டாய் நூல்களில் அன்னா கரீனா, புத்துயிர், போரும் அமைதியும் வெளியிட்டிருக்கிறேன்[31]

என்று தன்னுடைய வெளியீடுகள் குறித்துக் கூறியுள்ளார் அ.கி. கோபாலன். உலகப் புகழ்பெற்ற நாவல்களைத் தமிழில் வெளியிட வேண்டுமென்பது தமிழ்ச் சுடர் நிலையத்தின் அதிபரான அ.கி. கோபாலன், எவ்வாறு துடிப்புடன் செயல்பட்டார் என்பதைச் சிறந்த மொழிபெயர்ப்பாளரான வெ. சந்தானம் தனது 'அன்னா கரீனா' என்ற மொழிபெயர்ப்பு நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளதாவது:

> ஞானி டால்ஸ்டாயின் 'அன்னா கரீனா' வெறும் நாவல் மட்டும் அல்ல; பெரிய காவியம், தன்னுள்ளே முத்துக்களை வைத்திருக்கும் மகா சமுத்திரம். இதில் வரும் கதாபாத்திரங்களை முற்றிலும் கற்பனை ஜீவன்கள் எனக் கூற முடியாது; அவர் ஏட்டிலே தீட்டியுள்ள அன்னாவையும், ஆப்ளான்ஸ்கியையும், கரீனையும், வீரான்ஸ்கியையும், சிட்டியையும், டாலியையும், லெவினையும் ரஷ்யாவில் மட்டுமின்றி இந்தத் தேசத்திலே, இந்த உலகத்திலே எங்கும் காணலாம். அத்தனை பேரும் இன்றும் என்றும் காணப்படக்கூடிய உயிர்ச் சித்திரங்கள். மனித சமுதாயத்துக்கு 'அன்னா கரீனா' ஒரு வரப்பிரசாதம்.
>
> மனோரஞ்சித மலருக்கு ஒரு விசேஷ குணம் உண்டென்று சொல்வார்கள். அந்த மலரை முகரும் போது எந்தப் புஷ்பத்தின் வாசனையை நினைத்துக் கொண்டு முகருகிறோமோ அந்த வாசனையைத் தருமாம் மனோரஞ்சிதம். அதுபோலத் தான் 'அன்னா கரீனா' என்ற இந்தச் சிருஷ்டியும்.
>
> இந்த நாவலைத் தமிழில் வெளியிட வேண்டுமென்று தமிழ்ச்சுடர் நிலையத்தின் அதிபர் ஸ்ரீ. அ.கி. கோபாலன் அவர்கள் துடியாய்த் துடித்தார். அவருடைய மகத்தான உற்சாகமும் பேரறிஞர் டால்ஸ்டாயின் காவியப் போக்குந்தான் நானே திடுக்கிடும்படியான அளவு வேகத்தில் மிகக் குறுகிய காலத்தில் இதை மொழிபெயர்த்து முடிக்க என்னை ஊக்கி ஓட்டியனை. அந்த வேகத்தின் காரணமாகக் குற்றங்குறைகள் என்னை அறியாது ஏற்பட்டிருக்கலாம். 'இப்படி அவசரமாக எழுதுவானேன்? குற்றங்குறைகளை மன்னித்துக் கொள்ளுங்கள்' என்று சம்பிரதாயமான பல்லவியைப் பாடுவானேன்? என்று அன்பர்கள் கோபித்துக்

கொள்ளக்கூடாது. நண்பர் கோபாலன் அவர்களின் ஆசையும், அன்பும், ஊக்கமும், தமிழன்னைக்கும் சேவை செய்ய வேண்டுமென்ற ஆர்வமும் என்னை அபாயமறியாத வேகத்தில் இந்தப் பணியைச் செய்யத் தூண்டிவிட்டன. ஆகவே 'அன்னா கரீனா' தமிழ் மேடையில் ஏறிய பெருமை முற்றிலும் நண்பர் அ.கி. கோபாலன் அவர்களையே சாரும்.

டால்ஸ்டாயின் நாவல்களும், சிறுகதைகளும் அன்றைய தமிழ் இலக்கியவாதிகளை, அறிஞர்களைப் பெரிதும் சிந்திக்க வைத்தன. தமிழில் புதிய முயற்சிகளுக்கு வழி வகுத்தன. தமிழில் புதிய இலக்கியத் தேடல்களுக்கும், படைப்புகளுக்கும் பெரிதும் வழி வகுத்தவை மொழிபெயர்ப்பு நூல்கள்.

**உணவகப் பணியாளராக இரு சகோதரர்கள்**

உணவகப் பணியாளராக இருந்து பிறகு மொழிபெயர்ப்புத் துறைக்குப் பெரும் பங்களிப்பைச் செய்ய முன் வந்தவர்கள் அ.கி. கோபாலன், அ.கி. ஜெயராமன் ஆகிய இரு சகோதரர்கள்.

அ.கி. ஜெயராமன் முதலில் சென்னைக்கு வந்து உணவகம் ஒன்றில் பணியாளராகச் (சர்வர்) சேர்ந்து, பின் 'நவயுகம்' பத்திரிகை நடத்திக் கொண்டிருந்த டி.எஸ். சொக்கலிங்கத்திடம் உதவியாளராகச் சேர்ந்து, நிறைய நூல்களையும், இதழ்களையும் படிக்கும் வாய்ப்பைப் பெற்றார். இவருடன் இவருடைய சகோதரரான அ.கி. கோபாலனும் இவருடன் உணவகம் ஒன்றில் பணியாற்றிய பிறகு நவயுகப் பிரசுராலாயத்தின் புத்தகங்களை விற்பனை செய்யும் பணியில் ஈடுபட்டார். 1942ஆம் ஆண்டின் இறுதியில் சென்னைத் திருவல்லிக்கேணியில் 'ஜோதி புக் ஸ்டால்' தொடங்கிப் பல நூல்களும், இதழ்களும் விற்பனையாவதின் மூலம் பல எழுத்தாளர்களும், அறிஞர்களும் இவருக்கு அறிமுகமாயினர். இந்த அறிமுகமே பின்னாளில் அவர் பதிப்பகம் தொடங்கி நடத்தி, குறிப்பாகப் பல நாடுகளில் புகழ் பெற்ற எழுத்தாளர்களின் இலக்கியங்களைத் தமிழில் அறிமுகப்படுத்தும் ஓர் உயர்ந்த இலட்சியமும் உருவானது. அ.கி. ஜெயராமன், அ.கி. கோபாலன் ஆகிய இருவரும் பல சிறந்த மொழிபெயர்ப்பு நூல்கள் வெளிவரக் காரணமானவர்கள் என்பது மறுக்க முடியாத உண்மை. இதுதான் நமது தமிழ்ப்பணி என்று மொழிபெயர்ப்பின் மூலம் பலமொழிகளின் சிறந்த உலகப் புகழ் பெற்ற படைப்பாளிகளை, படைப்புகளைத் தமிழில் கொண்டு வந்து சேர்த்துப் பாரதியின் கருத்துக்கேற்பத் தங்கள் வாழ்வை அர்ப்பணித்த சான்றோர்களாவர்.

## குறிப்புகள்

1. சுடர், இந்திய இலக்கிய மலர் (கட்.) வங்க இலக்கியம் ஒரு கண்ணோட்டம், சரோஜ் பந்த்யோபாத்யாயா, (தமி.) த.நா.சேனாபதி, பதி. 1974, ப.237.
2. மேற்படி, ப.243.
3. மேற்படி, ப.247.
4. சரத்சந்திரர் – மனிதப்பண்பும் கலைத்திறனும், எஸ்.ஸி.ஸென்குப்தா (தமி.) நா. பார்த்தசாரதி, சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி.1983, ப. 1.
5. மேற்படி, ப.4.
6. மேற்படி, ப.12.
7. மேற்படி, ப.10.
8. மேற்படி.
9. மேற்படி, ப.11.
10. மேற்படி, ப.62.
11. மேற்படி, ப.50.
12. மேற்படி, ப.52.
13. கிருஹதாகம், சரத்சந்திரர் (தமி.) அ.கி.ஜெயராமன், ஜோதி நிலையம் வெளியீடு, பதி. 1977, ப. 1.
14. புதிய பார்வை, இரு சகோதரர்கள், நேர்காணல், எஸ். குரு, ப. 20.
15. இந்நூலாசிரியர் (மு. வளர்மதி). நேர்காணல் – அ.கி. ஜெயராமன், நாள்:30.7.94.
16. சாவித்திரி, சரத்சந்திரர் (தமி.), அ.கி. ஜெயராமன், ஜோதி நிலையம், சென்னை, பதி. 1977, முன்னுரையில்.
17. மேற்படி, ப.8.
18. புதியபார்வை, இரு சகோதரர்கள், நேர்காணல், எஸ்.குரு, ப.20.
19. மேற்படி, ப. 21.
20. மேற்படி.
21. புதுமணப்பெண், சரத்சந்திரர் (தமி.), அ.கி. ஜெயராமன், இன்ப நிலையம், சென்னை, இ.ப. 1963, ப.5.
22. பிராமணப் பெண் (பாமனேர் மேயே) சரத்சந்திரர் (தமி.) அ.கி. ஜெயராமன், பாரி நிலையம், சரத்சந்திரர் நூற்றாண்டு விழாப் பதிப்பு, 1977, ப.4.

23. உஷா, சரத்சந்திரர் (தமி.) அ.கி. ஜெயராமன், ஜோதி நிலையம், சென்னை, பதி. 1977, ப.1.

24. உபாத்தியாயர் மனைவி, சரத்சந்திரர் (தமி.) அ.கி. ஜெயராமன், பாரிநிலையம், நூற்றாண்டு விழாப் பதிப்பு, 19787, முன். VI - VII.

25. புதிய பார்வை, இரு சகோதரர்கள், நேர்காணல், எஸ். குரு, 15.1.1995, ப.21.

26. இந்நூலாசிரியர் (மு. வளர்மதி) நேர்காணல், அ.கி.ஜெயராமன், நாள். 30.7.94.

27. தேவதாஸ், சரத்சந்திரர் (தமி.) அ.கி. ஜெயராமன், பாரிநிலையம், நூற்றாண்டு விழாப் பதிப்பு, 1977, முன். ப.1.

28. அண்ணன் தம்பி, சரத்சந்திரர் (தமி.) அ.கி. ஜெயராமன், நூற்றாண்டு விழாப் பதிப்பு, 1977, முன். ப.1.

29. புதிய பார்வை, இரு சகோதரர்கள், நேர்காணல், எஸ். குரு, 15.1.1995, ப.17.

30. மேற்படி.

31. மேற்படி.

# க.நா. சுப்பிரமணியம்

ஒரு படைப்பாளராகவும் மொழிபெயர்ப்பாளராகவும் விளங்கியவர் அறிஞர் க.நா. சுப்பிரமணியம். ஆங்கில இலக்கிய விமர்சனத்திற்கு இணையாகத் தமிழிலும் விமரிசனக் கட்டுரைகளை எழுத முடியும் என்பதை நிறுவிக் காட்டியவர். தமிழிலக்கியத்தைப் பிற இந்திய இலக்கியங்களோடும், உலக மொழி இலக்கியங்களோடும் ஒப்பிட்டுப் பார்க்கும் நோக்குடையவர்.

இருபதுக்கும் மேற்பட்ட நாவல்கள், நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகள், நாடகங்கள், கவிதைகள், கவிதை நாடகம், கட்டுரைகள், கட்டுரை நூல்கள், விமரிசன நூல்கள் என எழுதிக்குவித்தவர். 'இலக்கியத்துக்கு ஓர் இயக்கம்' என்னும் இவருடைய திறனாய்வு நூல் சாகித்திய அகாதெமிப் பரிசு பெற்றது. 'பொய்த்தேவு' எனும் இவருடைய நாவல் தமிழில் புதிய முயற்சிகளின் வரவாக அமைந்தது. நோபல் பரிசு பெற்ற நாவல்கள் மற்றும் ஐரோப்பியச் சிறுகதைகளை தமிழில் மொழிபெயர்த்தளித்த சிறப்புக்குரியவர் க.நா. சுப்பிரமணியம்.

> ***40 நாவல்கள், 10 சிறுகதைத் தொகுதிகள், 80-90 மொழிபெயர்ப்பு நூல்கள், 10 தத்துவ விசாரங்கள், 'இலக்கிய விசாரம்' என்ற கேள்வி பதில் நூல் ஒன்று, உலகத்துச் சிறந்த நாவல்கள் பத்து, உலகத்துச் சிறந்த நாவலாசிரியர்கள், உலகத்துச் சிறந்த சிந்தனை யாளர்கள் மூன்று தொகுதிகள், படித்திருக்கிறீர்களா? என்ற அறிமுகத்துடன் தொகுக்கப்பட்ட 48 நூல்களின் தொகுப்பு, இலக்கிய விமரிசன நூல் ஒன்று, 'முதல் ஐந்து தமிழ் நாவல்கள்' என்ற அறிமுகங்கள் இரண்டு, ஆங்கிலத்தில் தமிழ் பற்றிய அறிமுக நூல்கள் 10, உரை நூல்கள் விரிவுரை நூல்கள் என 10 என்று தனது 86 வயதிற்குள் அவர் எழுதிக் குவித்தவை பல்லாயிரக் கணக்கான பக்கங்கள்.***[1]

கந்தாடை நாராயணசாமி ஐயர் என்பவரின் புதல்வனாகக் க.நா. சுப்பிரமணியம் சுவாமிமலையில் 31-1-1912ஆம் நாளன்று பிறந்தார்.

> ***சுவாமிமலை கோயிலருகே தொடக்கப் பள்ளியிலும், பின்னர் அங்கிருந்து ஆறுகளையும், வாய்க்கால் களையும் கடந்து கும்பகோணத்திலும், நேட்டிவ் உயர்நிலைப் பள்ளியிலும் தனது ஆரம்பக் கல்வியைத்***

> தொடங்கினார். க.நா. சுப்ரமண்யத்தின் தந்தையார் நாராயணசாமி ஐயர் சிறு வயதிலேயே அவர் தந்தையாரால் முழுமையான கட்டுத்திட்டங்களோடு வளர்க்கப் பட்டார். எப்படியாகிலும் ஒரு நல்ல சம்பாத்யமுள்ள அரசு ஊழியராய்ச் சேர்த்து விட வேண்டும் என்பதற்காக அந்தக் காலத்திலேயே மிகவும் சிரமப்பட்டு அவரை ஆங்கிலக்கல்வி முறைக்கு மாற்றிப் படிக்க வைத்தார்.[2]

கும்பகோணம் அரசுக் கல்லூரியிலும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் கல்லூரிக் கல்வி பயின்றார். அவர் அவ்வாறு படிக்கும் காலத்திலேயே கதைகள் எழுதி ஐரோப்பியப் பத்திரிகை களுக்கு அனுப்பி வைத்தார்.

> ஐரோப்பியப் பத்திரிகைகள் சில க.நா.சு.வின் அசகாய சூரத்தனமான, முரட்டுக் கதைகளை வெளியிட்டுக் கௌரவித்தன என்பதை நினைவில் கொள்ள வேண்டும். தனது விரிந்த இலக்கிய ஞானத்தை மென் மேலும் ஆழப்படுத்துவற்கென்றே அன்றைய தமிழர்கள் யாரும் எட்டித் தொடமுடியாத முயற்சிகளில் க.நா.சு. இறங்கினார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இருக்கின்ற காலத்திலேயே கடுமையாக அப்பியாசித்துப் பிரெஞ்சு மொழியையும் ஜெர்மன் மொழியையும் கற்றார். தானாகவே சுயபோதினி நூல்களை வைத்துக் கொண்டு எழுதிக் கற்றார். ஸ்காண்டிநேவிய–ஸ்வீடிஷ் பாஷைகளையும் மெல்ல மெல்லப் பயின்றார். நாராயணசாமி ஐயரோ பையன் குட்டிச் சுவராகிக் கொண்டிருக்கிறான் என்று கவலைப்பட ஆரம்பித்தார். அந்தக் காலத்தில் உலக இலக்கியம் என்றால் அது ஆங்கில இலக்கியம் தான், ஐரோப்பிய இலக்கியம் என்று அது பொருள்படாது. க.நா.சு.வுக்கோ வரை யறைகளை உடைத்துக் கொண்டு பாய்வதிலேயே பேரார்வம் இருந்தது. இதற்கிடையில் நாராயணசாமி ஐயர் க.நா.சு.க்குத் திருமண ஏற்பாடு செய்ய முயன்றார். இதே காலகட்டத்தில்தான் க.நா.சு.வின் இலக்கியக் கட்டுரைகளும் ஆங்கிலத்தில் வெளிவந்தன. West Wind Argosy Bloomed Horn போன்ற ஆங்கில இலக்கியப் பத்திரிகைகள் கட்டுரைகளைக் கேட்டு வாங்கிப் பிரசுரித்தன. உலக இலக்கியத்தரம் என்று ஒன்றுண்டு என்பதை இந்திய இலக்கியத்தில் முதலில் சொன்னவர் க.நா.சு. தான்.[3]

என்று க.நா.சு.வின் விரிந்த ஆங்கில அறிவையும், தமிழில் அவர் தொடங்கிய புதிய முயற்சியையும் குறித்துத் தஞ்சைப் பிரகாஷ்

குறிப்பிட்டுள்ளார். ஆங்கிலந்தான் உலகை ஆளும், ஆங்கில இலக்கியம் தான் உலக இலக்கியம் என்ற கருத்தைக் கொண்டிருந்த க.நா.சு.வின் தந்தைக்கு, க.நா.சு.வின் முயற்சியும், தமிழின் மீது அவர் கொண்டிருந்த பற்றும் பெரிய முரண்களாகத் தெரிந்தன. ஏனெனில் தொடக்கத்தில் அவர் ஆங்கிலத்தில் எழுதினார். கல்லூரியில் படிக்கும் பொழுது அவர் தமிழில் எழுதுவது பற்றிச் சிந்தித்தது கூடக் கிடையாது. கல்லூரிப் பாடமாக இல்லாவிட்டாலும் தானே விரும்பித் தமிழ் படித்தார். ஆனால், தன்னால் தமிழில் எழுத முடியுமா என்று எண்ணிப் பார்த்ததில்லை.

> ***அவருடைய முதல் ஆங்கிலக் கட்டுரை 1928 வரையில் 'எதற்காக எழுதுகிறேன்' என்கிற சிந்தனையே இல்லாமல் ஆங்கிலத்தில் பல கட்டுரைகள், கதைகள் எழுதினார். அனைத்தும் இந்தியப் பத்திரிகைகள் பலவற்றிலும் வெளிநாட்டுப் பத்திரிகைகள் சிலவற்றிலும் வெளிவந்தன...... 1935இல் டி.எஸ். சொக்கலிங்கம் நடத்திக் கொண்டிருந்த 'காந்தி' என்ற பத்திரிகையில் வெளிவந்த வத்தலக்குண்டு எஸ். ராமய்யா என்பவரின் 'வார்ப்படம்' என்கிற கதைகள் முதன் முதலில் அவரைத் தமிழில் எழுத வேண்டும் - அது மாதிரி எழுத வேண்டும் என்கிற எண்ணத்தை உண்டு பண்ணியது. சில நாட்களில் 'மணிக்கொடி' அவர் முழுமனத்தையும் கவர்ந்தது. தமிழில் எழுதத் தொடங்கினார். பல நூல்களைப் படிக்கும் பழக்கமும் தொடர்ந்தது.[4]***

அவருடைய இந்தப் படிப்பனுபவம் புதிய சிந்தனைகளுக்கு, புதிய முயற்சிகளுக்கு வழிவகுத்தது.

## க.நா.சு.வின் ஆழ்ந்தகன்ற பிறமொழி நூல்களின் வாசிப்பு

க.நா. சுப்பிரமணியத்தின் மொழிபெயர்ப்பைப் பற்றிக் குறிப்பிடும் எவரும், அவருடைய பரந்த வாசிப்பு அனுபவத்தைக் குறிப்பிடாமல் இருப்பதில்லை. ஓர் இலக்கியப் படைப்பாளிக்குப் பல நூல்கள் சிந்தனையைத் தூண்டக்கூடியனவாக, புதியவை கற்றுத் தரக்கூடியனவாக, மனதைத் தொடக்கூடியனவாகத் தொடர்ந்து ஒரு படைப்பாளியைப் பின்பற்றக் கூடியனவாக அமைந்துவிடுவது அனுபவ உண்மையாகும். க.நா.சு.வையும் இப்படி தாக்கம் பெறச் செய்த நூல்கள், படைப்பாளியாக மாற்ற உற்சாகமளித்த நூல்கள் எனப் பலவற்றைப் பற்றி 'என்னைப் பாதித்த சில நூல்கள்' எனும் தலைப்பில் எழுதிய கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். அவர் எவ்வளவு படித்திருக்கிறார்? எப்படி படித்திருக்கிறார் என்பதைக் காட்டும் வகையில் இக்கட்டுரை அமைந்துள்ளது.

மற்றவர்களைப்போல அல்லாமல் நான் மூலநூல் களைப் படிப்பதில் மறுபடியும் படிப்பதில் ஆனந்தம் கொள்பவன், ஷேக்ஸ்பியரின் **The Tempest, Macbeth, Measure for Measure** மூன்று நாடகங்களையும் **Sonnets** தொகுதியையும் குறைந்தபட்சம் ஐம்பது அறுபது தடவைகளாவது படித்திருப்பேன். **Selma Lagerlav** என்கிற ஸ்வீடிஷ் ஆசிரியையின் **Gosta Berlings Sags** என்கிற நாவலை ஆங்கில மொழிபெயர்ப்பில் இருபது தடவையாவது படித்திருப்பேன். **Tolstoy**யின் **War and Peace** என்கிற நாவலைப் பெரிதாக இருக்கிறதே படிக்க முடியவில்லையே என்று கவலைப் படுகிறவர்கள் இருக்கலாம்.

ஆனால் நான் ஒரு தடவையல்ல. இரண்டு தடவை யல்ல. மூன்று தடவைகள் அக்ஷரம் விடாமல் படித்திருக்கிறேன். இப்படியே பல நூல்களைப் பற்றிச் சொல்லிக்கொண்டு போக முடியும் என்னால். **Joseph and His Brothers** என்கிற **Thomas Mann** நாவல், **Tolstoy** யின் **War and Peace** அளவுக்குச் சற்றும் குறையாதது. அதையும் மூன்று தரம் படித்திருக்கிறேன். ஒருதரம் மூலத்தில் ஜெர்மன் மொழியில் படித்திருக்கிறேன். இரண்டாவது தடவையும் புஸ்தகம் கிடைத்தால் படித்து விடுவேன் என்றுதான் எண்ணுகிறேன்.[5]

எனத் தான் விரும்பி, மீண்டும், மீண்டும் படித்த நூல்கள் - அந்த அனுபவத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். 10, 13 வயதிலேயே Herry Fielding எழுதிய Tom Jones, Victor Hugoவின் Les Miserables, Thackerayயின் Vanity Fair, Dickensஸின் David Copper Field ஆகிய வற்றைப் படித்துப் பழகிய அவருடைய அனுபவம் தொடர்கிறது. பள்ளி விடுமுறை நாட்களில் R.L. Stevensonனின் Complete Works of Jonathan Swift, Thomas Nashe ஆகியோருடைய நூல்களைப் படித்த அனுபவம், கோவைக் கல்லூரி நூலகத்தில் Thackeray, Dickens, Trolope, Jane Austen, Lord Lytton, Edgar Wallace, E. Philips oppenheim, James Storer Clonsion போன்றோரின் நூல்களை ஒரு நாளைக்கு மூன்று, நான்கு புத்தகங்களாகப் படித்த அனுபவம், Dante யின் படைப்புகளைப் படிப்பதற்காக இத்தாலிய மொழியைக் கற்றுக் கொண்டது, Cervantes எழுதிய Don Quixote என்கிற நாவலைப் படிப்பதற்காக ஸ்பானிஷ் மொழியைக் கற்றுக் கொண்டது ஆகியவை அவர் சாதாரணமாக மற்றவர்களைப் போல அல்லாமல் படிப்பதிலும் வேறுபட்டு நிற்பதைக் காட்டுகிறது. உலகின் சிறந்த படைப்புகளை அதன் மூலமொழியிலேயே படிக்கும் அவருடைய செயல் பெரிதும் வியப்பிற்குரியதாகத் தோன்றுகிறது.

தனக்கு மிகவும் பிடித்த நூல் என்று Lawrence Sterne என்பவர் எழுதிய Tristram Shandy, Rupyard Kipling எழுதிய Kim, Ezra Poundன் விமரிசனங்கள் ஆகியவற்றைக் குறிப்பிட்டுச் சொல்கிறார். பிறகு படித்த T.S. Elliot, James Joyce, Wyndham Lewis, W.B. Yeats, Nietzsche, Whitman, போன்றோரின் படைப்புகளின் தனித்துவத்தை அறிந்து படித்து ஆழ்ந்து அதிலேயே தோய்ந்துவிட்டிருக்கிறார். இவையல்லாமல் Freudஇன் The Interpretations of Dreams, Martein Edenனின் Jack London நாவலாசிரியர்களில் Thomas Mann, Romain Rolland, Anatole Francis, Selma Lagerlop, Vemer Von Heivenstan, Knut Hamsun, Franz Khafka, William Saroyan, Maxim Gorki, Dostavaski, Lady Murasaki ஆகியோரின் படைப்புகளையும் படித்திருக்கிறார். Paul Velery Rainer, Maris Rilka, Lorca போன்ற கவிஞர்கள், Benevente Ibsen, Priendello போன்ற நாடகாசிரியர்கள் போன்றோரைத் தாம் படித்து அறிந்ததாக 'என்னைப் பாதித்த சில நூல்கள்' எனும் இக்கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

இந்தப் பரந்த படிப்பின் மூலம் தான் அறிந்தவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து உலக இலக்கியங்கள் பற்றிய அறிவைத் தமிழர்களும் பெறச் செய்ய வேண்டும் எனும் நோக்கில் பல நூல்களை மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். ஒரே துறை சார்ந்த நூல்கள் என்றில்லாமல் பலதரப்பட்ட இலக்கிய வகைகளை அறிய இடை விடாமல் படித்திருக்கிறார் க.நா. சுப்பிரமணியம். இது போன்ற இலக்கிய இரசனை கொண்டு படிப்பவர்களைக் காணுதல் அரிது.

க.நா.சுப்பிரமணியம் தான் எடுத்துக் கொண்ட தமிழிலக்கியப் பணியை மேற்கொள்ளச் சென்னை வந்தார். தன் எழுத்துகளுடன் க.நா.சு. தினமணி அலுவலகம் வந்தபோது, அங்குப் பணியாற்றிய எழுத்தாளர் வ.ரா. அவர்கள்

> 'வெடுக்கென்று கையெழுத்துப் பிரதியை அவரே பிடுங்கிப் பார்த்து விட்டு என்னய்யா கே.என். சுப்ரமண்யம் என்று போட்டு இருக்கிறீர்? உம்ம பெயர் கே.என். சுப்ரமண்யனா? உம்முடைய கட்டுரையை எங்கோ படித்திருக்கிறேனே? நீர் என்ன ஆங்கிலேயனுக்குப் பிறந்தவரா? கே.என். சுப்ரமண்யம் என்று எழுத' என்றார் வ.ரா. பக்கத்தில் இருந்த குமாஸ்தா வ.ரா. என்று அறிமுகம் செய்தார். 'கே.என். சுப்ரமண்யம் என்றெல்லாம் எழுதாதீர். கந்தாடை நாராயணசாமி ஐயர் மகன் சுப்ரமண்யம் அல்லவா நீர். க.நா.சு. அல்லது க.நா. சுப்ரமண்யம் என்று எழுதும். இதுதான் உமது பெயர்' என்று ஓங்கி அடித்தார் வ.ரா. வ.ரா.வின் தீட்சண்யமான கண்களும், அவரது சத்தியாவேசமும் அவரது தைரியமும் க.நா.சு.வை ஆட்கொண்டன. அன்றே தமிழ் இலக்கிய உலகத்தின்

> ஈடு இணையற்ற கலைஞன் க.நா. சுப்ரமண்யம் பிறந்தார். ஆங்கிலத்தில் எழுதும்போது கூட **Ka. Na. Su.** என்றே தனக்குத் தானே நாம கரணமிட்டுத் தமிழகத்தின் தனிச்சுடராய் விளங்கினார்.[6]

எழுத்து தமது வாழ்வு என்பதைத் தீர்மானித்துக் கொண்ட க.நா.சு. தமிழில் தமது தனிச்சுவடுகளைப் பதிக்கத் தொடங்கினார்.

ஒரு நாளைக்குக் குறைந்தது 10 பக்கங்களாவது தமிழில் சுயமாக எழுதுவது, 15 பக்கங்களாவது ஏதாவது ஒரு மொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்ப்பது, 10 பக்கங்களாவது ஆங்கிலத்தில் புதியதாகப் படைப்பது, இவை தவிர மதிப்புரைகள், விமரிசனங்கள் எழுதுவது எனத் தமது எழுத்துப் பணியை திட்டமிட்டு வரையறை செய்து கொண்டு எழுதி வந்திருக்கிறார் க.நா.சு. மிக உயர்ந்த இலக்கியங்களைச் சாதாரணத் தமிழ் மக்கள் அறிந்து கொள்ளும் வகையில் 'தழுவல்' எனும் இலக்கிய உத்தியைக் கையாண்டு அக்காலத்து விகடன், சுதேசமித்திரன், இமயம், சக்தி, ஜோதி போன்ற இதழ்களில் எழுதி வந்துள்ளார். அத்துடன் நின்றுவிடாமல் 'சூறாவளி' எனும் தீவிர இலக்கிய ஏட்டைத் துவக்கினார். அதற்குப் பிறகு ராமபாணம், சந்திரோதயம் எனும் பத்திரிகைகளைத் துவக்கினார். ஒன்றரை ஆண்டுக்குப் பிறகு தொடர முடியாமல் ரூ. 35, 000 நட்டத்துடன் இவ்விதழ் நின்று விட்டது. க.நா.சு.வின் பிற்கால இலக்கியப் பத்திரிகைகளாக 'இலக்கிய வட்டம்', 'ஞானரதம்' வெளிவந்தன. இறுதியாக 'முன்றில்' இதழ் வெளிவந்தது.

க.நா.சு. தம்முடைய மொழிபெயர்ப்புகளை வெளியிடுவதில் மிகுந்த முனைப்புடன் ஈடுபட்டார்.

> அயலக எழுத்தாளர் பலரின் மொழிபெயர்ப்புகளுடன் ஒவ்வொரு புத்தக நிலையமாக, பதிப்புக்காகத் தேடித் திரிந்தார். சென்னையில் அப்போது மொழிபெயர்ப்பு அலை வீச ஆரம்பித்த நேரம். பதிப்பகங்கள் ஒவ்வொன்றிலும் சில மொழிபெயர்ப்பு நூல்களாவது வெளிவந்தாக வேண்டும் என்ற நம்பிக்கை பிறந்தது. எழுத்தாளர்கள் பலரும் தாங்கள் சில மொழி பெயர்ப்புகளையாவது செய்ய வேண்டும் என்ற 'மேனியா' தோன்றி இருந்த நேரம். க.நா.சுப்ரமண்யம் தனக்குத் தெரிந்த பதிப்பாளர்களிடம் முயன்று நூல்கள் வெளியிட முயன்றபோது அதுவும் அத்தனை சுலபமாக இருக்கவில்லை, என்பதை உணர்ந்தார். அப்போதுதான் ஏ.கே. கோபாலன், அ.கி. ஜெயராமன் சகோதரர்கள் மொழிபெயர்ப்புக்காகவே பதிப்பகங்கள் தொடங்கினார்கள். மிக அபாரமான நூல்களை

**அ.கி. கோபாலன் பப்ளிஷர், உலக இலக்கியங்களின் நோபல் பரிசு பெற்ற நாவல்களையும் படைப்புகளையும் க.நா.சு.வின் மூலம் மொழிபெயர்த்து வெளியிட்டார்..... நட்ஹம்ஸன், வில்லியம் ஸரோயன், அனடோல் பிரான்ஸ், லியோ டால்ஸ்டாய், ஸ்டின்பெர்க், பேர்ல்ஸ் பெக், செல்மாலாகர்லெவ், ரவீந்திரநாத் தாகூர் போன்ற உலகப் புகழ்பெற்ற படைப்பாளிகளின் படைப்புகளை இன்றும் தமிழில் தேடி அடைவது அரிதிலும் அரிதாக உள்ளது. ஆனால் ஏ.கே. கோபாலன், அ.கி. ஜெயராமன், க.நா.சுப்ரமண்யம் ஆகியோரின் கூட்டு முயற்சியால் பல்லாயிரக்கணக்கான பக்கங்கள் உலக இலக்கியங்கள் நேரடியாகத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு மிகக்குறைந்த விலைகளில் வெளியிடப்பட்டன.[7]**

இதைத் தொடர்ந்து கல்கி, சுதேசமித்திரன், சரஸ்வதி, சமரன், எழுத்து, கலாமோஹினி, எழுத்தாளன், கிராம ஊழியன், சிவாஜி, கலைமகள், அமுதசுரபி ஆகிய தமிழ் இதழ்களிலும், இல்லஸ்ட்ரேட் வீக்லி ஆஃப் இண்டியா, டெபோனிர், பிளிட்ஸ், இண்டியன் லிட்டரேச்சர் ஆகிய ஆங்கில இதழ்களிலும் க.நா.சு.வின் படைப்புகளும், மொழிபெயர்ப்புகளும், கட்டுரைகளும் வெளிவந்தன.

மணிக்கொடி, சூறாவளி, சந்திரோதயம், தேனீ, சரஸ்வதி, இலக்கிய வட்டம் முதலான இதழ்களில் சிறுகதைகளையும் கட்டுரைகளையும் எழுதி வந்தார். நாவல், சிறுகதை, நாடகம், கவிதை, கட்டுரை, மொழிபெயர்ப்பு, திறனாய்வு எனப் பல துறைகளிலும் மிகுந்த முனைப்புடன் செயல்பட்டு ஆற்றல் மிக்க சாதனையாளராகத் திகழ்ந்தார். 15,000 கட்டுரைகள் எழுதினார் என்பது அவருடைய சாதனைகளில் குறிப்பிடத்தக்கது. 'கலை கலைக்காகவே' என்ற கோட்பாடு உடையவராக இவர் இருந்ததால் முற்போக்கு இலக்கிய வாதிகளின் விமர்சனத்திற்கு உள்ளானார். புதிதாக உருவான 'முற்போக்கு இலக்கியம்' எனும் இலக்கிய மரபை க.நா.சு. மிகக் கடுமையாக எதிர்த்தார்.க.நா.சு.வின் முதல் நாவல் 'சர்மாவின் உயில்', கடைசி நாவல் 'தாமஸ் வந்தார்'. சிறந்த நாவலாசிரியராகத் தமிழ்ப் படைப்புலகில் வலம் வந்தார். பல சிறுகதைத் தொகுதிகளை வெளியிட்டுப் புதுக்கவிதை எனும் புதிய பாதையைத் தொடங்கிப் புதுமை படைத்தவர் க.நா.சு.

திறனாய்வுச் சிந்தனையை இலக்கிய உலகில் பரவச் செய்து சிறந்த இலக்கியத் திறனாய்வாளராக விளங்கினார். இலக்கிய விசாரம், இந்தியாவின் சிறந்த பத்து நாவல்கள், புகழ் பெற்ற நாவல்கள், படித்திருக்கிறீர்களா?, நாவல்கலை, விமரிசனக்கலை, கலைநுட்பம், இலக்கிய இயக்கம் முதலிய அவருடைய திறனாய்வு நூல்கள் அனைத்தும் ஆய்வுலகில் போற்றுதற்குரியனவாகத் திகழ்கின்றன.

நோபல் பரிசு பெற்ற பல நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து வழங்குவதில் சாதனையாளராகத் திகழ்ந்தார் க.நா.சு. அதைப் போல் நோபல் பரிசு பெற்ற எழுத்தாளர்களின் உலகப் புகழ் பெற்ற படைப்புகளை வழங்கி அவற்றின் சிறப்பைத் தமிழுலகிற்கு உணர்த்தினார். (எ-டு.)

> உலகப் புகழ் பெற்ற நாவலாசிரியர்கள் பலர். அவருள் ஆழ்கடல் முத்தெனவும், அரும்பெறல் மணியெனவும், ஒளிவிடும் விண்மீன் எனவும் திகழ்ந்தவர் நட்ஹாம்சன். அவர் நார்வே நாட்டைச் சேர்ந்தவர். தத்துவ ஞானி நீட்சேயின் சீடர். பெரும்புரட்சியாளர். அவர் படைத்த ஒவ்வொரு நாவலும் ஒவ்வொரு வகையில் தனிச்சிறப்பு வாய்ந்தவை.
>
> மாமேதை லெனின் அவர்களின் மனதைக் கவர்ந்த நாவல்கள் இரண்டு. ஒன்று நட்ஹாம்சன் எழுதிய 'பசி' என்னும் நாவல். மற்றொன்று பிரேஞ்சு நாட்டின் இலக்கிய மேதை பால்சாக் படைத்த 'கிராமப்புற டாக்டர்' என்னும் நாவல். 'பசி' என்னும் நாவலை லெனின் அவர்கள் வெகுவாகப் பாராட்டியுள்ளார்.
>
> நட்ஹாம்சன் எழுதிய 'பசி' என்னும் நாவல் உலகப் புகழ் வாய்ந்தது. உலகில் உள்ள எல்லா மொழி களிலும் இந்நாவல் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. நட்ஹாம்சன் என்னும் மேதையை உலகுக்கு அறிமுகப் படுத்திய நாவல் பசி.[8]

இத்தகைய சிறந்த இலக்கியங்களைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கி தமிழ் மொழிபெயர்ப்புலகில் தனக்கென ஒரு தனியிடத்தைப் பெற்றவர் க.நா.சு. பிறமொழி இலக்கியங்களைத் தமிழுலகம் அறிந்துகொள்ள வேண்டும் என்ற நோக்குடன் மொழிபெயர்ப்புப் பணியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார்.

நிலவளம் - நட்ஹாம்ஸன் (நார்வேஜிய மொழி நாவல்), குடியானவர்கள் (போலந்து நாவல்), மதகுரு (ஸ்வீடிஷ் நாவல்) தாசியும் தபசியும் (பிரெஞ்சு நாவல்), பரபாஸ் எனும் அன்பு வழி (ஸ்வீடிஷ் நாவல்), பேர்லாகர் க்விஸ்ட் எழுதியது, விரோதி (பிலிப்பைன்ஸ் எரிக்ஸ்) நாவல் எழுதியது விருந்தாளி (பிரெஞ்சு) ஆல்பெர்ட் காம்யு எழுதியது, குள்ளன் (பிரெஞ்சு) ஆந்த்ரே ழீடு எழுதியது, மனுஷ்ய நாடகம் (ஆர்மியா) வில்லியம் ஸரோயன் எழுதியது, அடிமை (ஜெர்மனி) கெய்ஸர் எழுதியது, திமிங்கல வேட்டை (ஹெர்மன் மெல்வின்), டான்-க்விக்ஸ்-ஷாட் (ஸ்வீடிஷ்), மாறிய தலைகள் (ஜெர்மன்) தாமஸ்மன் எழுதியது ஆகிய நோபல் பரிசு பெற்ற நாவல்களைக் க.நா.சு. மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார்.

> மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற அடிப்படையில் பார்த்தால் அ.கி. ஜெயராமன், அ.கி. கோபாலன் போன்ற 10 பதிப்பாளர்களால் வெளியிடப்பட்ட பெரிய பெரிய நாவல்கள் உலக மொழிகள் பலவற்றி லிருந்தும் மொழிபெயர்க்கப்பட்டு வெளிவந்தவை ஏறத்தாழ 60 புத்தகங்கள் என்று நினைக்கும் போது ஆச்சரியமாக இருக்கிறது. இவை போக, க.நா.சு. மொழிபெயர்த்த 'உலகத்துச் சிறந்த 7 நாடகங்கள்' என்ற அருமையான புத்தகங்கள் இப்போது கிடைப்ப தில்லை. தமிழில் முதன் முதல் ஸ்காண்டிநேவிய நாடகாசிரியர் உலகப் புகழ்பெற்ற ஹென்றிக் இப்ஸன் அவர்களின் 'டால்ஸ் ஹவுஸ்' (பொம்மையா? மனைவியா?) என்ற உலகப் புகழ்பெற்ற அற்புத நாடகத்தை முதன் முதலில் க.நா.சு.தான் அச்சிட்டு அமுத நிலையம் ஸ்ரீகண்டன் வெளியிட்டார். நவீன நாடக மொழிபெயர்ப்பு எப்படி இருக்க வேண்டும்? என்பதற்கு இது ஒரு மைல் கல்லாகவே இன்றும் இருந்து வருகிறது.[9]

'1984' எனும் ஜார்ஜ் ஆர்வெல்லின் ஆங்கில நாவலின் தமிழ்மொழிபெயர்ப்பு, விலங்குப் பண்ணை (Animal Farm - ஜார்ஜ் ஆர்டுவெல்) எனும் ஆங்கில நாவலின் மொழிபெயர்ப்பு, வேற்று மொழிகளிலிருந்து தமிழுக்கு மொழிபெயர்க்கப்பட்ட 10 நாவல்கள், உலகச் சிந்தனை வளம் (மூன்று பாகங்கள்), 38 உலகத் தத்துவச் சிந்தனையாளர்களின் வரலாறும் விமர்சனமும், உலகத்துச் சிறந்த நாவலாசிரியர்கள் அறிமுகமும் விமர்சனமும், உலகத்துச் சிறந்த நாவல்கள் (10 நூல்கள் பற்றிய அறிமுகம்), உலகத்துச் சிறந்த நாவல்கள் (48 நூலின் சுருக்கங்கள் விமர்சனத்துடன்), உலகத்துச் சிறந்த சிறுகதைகள் தொகுப்பு அறிமுகம், உலக இலக்கியம் (10 அறிமுகம்) ஆகிய க.நா.சு.வின் மொழிபெயர்ப்புகளும், மொழிபெயர்ப்பு சார்ந்த நூல்களும் ஆகும். அவருடைய ஆழ்ந்தகன்ற அறிவு, உலக இலக்கியங்கள் பற்றிய பரந்த சிந்தனை, விரிந்த பார்வையை இந்நூல்கள் வெளிப்படுத்துவனவாக அமைகின்றன.

## தமிழிலிருந்து பிறமொழிகளுக்கு மொழிபெயர்ப்பு

க.நா.சு. பிறமொழிகளிலிருந்து தமிழுக்கு மொழிபெயர்த்து அளித்ததுடன் தமிழிலிருந்து பிறமொழிகளில் மொழிபெயர்த்து அளிப்பதிலும் மிகுந்த அக்கறை செலுத்தியுள்ளார். தமிழின் முக்கியத்துவத்தை அதன் சிறப்பை உலகிற்கு உணர்த்த வேண்டிய தேவையை உணர்ந்ததால் அதற்குரிய பணிகளில் ஈடுபட்டார்.

*பல பிறமொழிக் கலைஞர்களுடன் தொடர்ந்து விவாதித்துத் தமிழின் முக்கியத்துவத்தை அங்கே நிறுவி வந்தார். விடாமல் ஆங்கில ஏடுகளில் க.நா.சு.வின் குரல் ஒலித்துக் கொண்டே இருந்தது பல தமிழர்களுக்குப் புரியாது. திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அதன் தனித்துவத்தோடு வடநாட்டில் வெளியிட்டார். இது ஒரு புதுமையான வெளியீடு. சிலப்பதிகாரம் என்கின்ற தமிழுக்கே உரித்தான மேதமை நிறைந்த இதிகாச நாடகக் காவியத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து டெல்லியிலிருந்து வெளியிட்டார்.*[10]

தமிழ் நாவலாசிரியர்கள் 10 பேரை ஆங்கிலத்தில் அறிமுகம் செய்துள்ளார். புதுமைப்பித்தன் வாழ்ந்த நாளிலும் அவர் மறைந்த பிறகும் அவரைப் பற்றிச் சோர்வு இல்லாமல் மற்ற மாநிலத்தவர்க்கு எடுத்துச் சொன்னவர் க.நா.சு. தமிழ் இலக்கியங்களில் சங்கப் பாடல்களில் அகம், புறப்பாடல்கள் பற்றி முதன் முதலாக உலகுக்கு அறிமுகப்படுத்தியவர்களில் க.நா.சு.வும் ஒருவர். மற்றும் கமலாம்பாள் சரித்திரம் நாவல் குறித்தும் பிற மொழியினருக்கு எடுத்துக் காட்டியவர் என்று குறிப்பிடுகிறார் எழுத்தாளர் அசோகமித்திரன்.

*அவருடைய ஆங்கில மொழிபெயர்ப்பில் 'சிலப்பதிகாரம்' ஒன்றுதான் நூலுருவம் பெற முடிந்தது. சங்கப் பாடல்கள் பலவற்றுக்கு அவர் ஒன்றுக்கு மேற்பட்ட மொழிபெயர்ப்புகள் செய்திருக்கிறார். அவை எல்லாம் பத்திரிகைக் கட்டுரைகளிலே ஒடுங்கிவிட்டன. காரைக்கால் அம்மையாரின் படைப்புகள் விசேஷ இலக்கியச் சிகரங்கள் எனக் கூறியதில் ஒரு சிறப்பிடம் க.நா.சு.வுக்கு உண்டு. தமிழின் இலக்கியப் பெருமைக்கு அயல் மொழியினரிடையே இவ்வளவு விரிவான தளம் அமைக்கப் பாடுபட்ட க.நா.சு. புதுமைப்பித்தன் ஓர் உலக எழுத்தாளர் என்று திரும்பத் திரும்ப வலியுறுத்தி வந்தார். க.நா.சு.வுக்கு ஆங்கிலத்தில் தொகுக்கக் கிடைத்த ஒவ்வொரு சிறுகதைத் தொகுப்பிலும் புதுமைப்பித்தனின் வெவ்வேறு கதைகளை இடம் பெற வைத்தார். புதுமைப்பித்தனின் மிகச்சிறந்த கதைகள் என அறியப்படும் கதைகள் அனைத்தும் க.நா.சு. மொழிபெயர்ப்பில் சுமார் இருபது ஆண்டு காலத்துக்கு முன்னர்க் கிடைத்தன.*[11]

'உலக இலக்கியங்கள்' எனும் தலைப்பில் க.நா.சு.வின் மொழிபெயர்ப்பு மீண்டும் மறுபதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது. இதில் மனுஷ்ய நாடகம், அவள், கயிறு, அவன், திருட்டு, அந்தமரம், பாட்டியின் பரிதவிப்பு, குருதிப்பூ, உடைந்த கண்ணாடி, பங்களா,

விருந்தாளி, காதற்கதை, காளி, கடல்முத்து, தேவமலர், அதிசயம், அடிமைப்பெண், சுவர்க்கத்தில் காரி ஆஸென் ஆகிய பல நாட்டுக் கதைகள் இடம்பெற்றுள்ளன.

நாவல் மட்டுமல்லாமல் பலமொழிகளின் சிறுகதைகளையும் க.நா.சு. தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். ஸ்டீபன் கிரேன் எழுதிய அமெரிக்கச் சிறுகதைகளைத் தமிழில் மொழிபெயர்த்துத் 'திறந்த படகு' எனும் தலைப்பில் வெளியிட்டுள்ளார். ஐரோப்பிய நாடுகளைச் சார்ந்த 12 வெவ்வேறு ஆசிரியர்களின் சிறுகதைகளை மொழிபெயர்த்து 'ஐரோப்பியச் சிறுகதைகள்' எனும் தலைப்பில் வெளியிட்டுள்ளார். இதே போன்று 15 ஜெர்மனி எழுத்தாளர்களின் சிறுகதைகளை மொழிபெயர்த்து ஜெர்மானியச் சிறுகதைகள் எனும் தலைப்பில் வெளியிட்டுள்ளார். ஜான் ஸ்டீபன்பெர்க் எழுதிய சிறுகதைகள், ஜாக் லண்டன் எழுதிய சிறுகதைகளையும் க.நா.சு. தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இவர் மொழிபெயர்த்த சிறுகதைகளின் மூலம் பிறமொழிகளில் வெளியாகும் சிறுகதைகளின் உள்ளடக்கம், கருத்து, தன்மை, ஆகியவற்றை அறிந்து கொள்ளவும், குறிப்பாக அந்தந்த நாடுகளில் நிலவும் பண்பாட்டுப் பின்னணி, மனித நடவடிக்கைகள், சிந்தனைகளை அறிந்து கொள்ளவும் ஏதுவாகும்.

க.நா.சு. சிறந்த படைப்பாளியாகத் திகழ்ந்தார். அவருடைய முதல் நாவலான 'சர்மாவின் உயில்' 1940ஆம் ஆண்டில் வெளிவந்தது. தொடர்ந்து சமூகச் சித்திரம், ஏழுபேர், நளினி, பெரியமனிதன், வாழ்ந்தவர் கெட்டால், அவரவர் பாடு, பட்டணத்துப் பேச்சு, மாதவி (தழுவல்) ஒருநாள், அசுரகணம், ஆட்கொல்லி, தந்தையும் மகளும், பொய்த்தேவு, கோதை சிரித்தாள், தாமஸ் வந்தார், அவதூதர், பித்தப்பூ ஆகிய நாவல்களை எழுதி வெளியிட்டுள்ளார். அழகி, தெய்வ ஜனனம், ஆடரங்கு, கருகாத மொட்டு, மணிக்கூண்டு க.நா.சு.வின் சிறுகதைத் தொகுப்புகள் I, II, III ஆகிய க.நா.சு.வின் சிறுகதைத் தொகுப்புகள் வெளிவந்துள்ளன. நால்வர், ஊதாரி, ஆகிய நாடகங்களும், மயன் கவிதைகள், க.நா.சு.வின் கவிதைகள் ஆகிய இரு கவிதைத் தொகுப்புகளும், பேரன்பு எனும் கவிதை நாடகமும், உலக இலக்கியம் எனும் புதுவைப் பல்கலைக் கழக வெளியீடாக வந்துள்ள கட்டுரை நூல் மற்றும் பாரதியின் காட்சிகள், கலைநுட்பங்கள் ஆகியன க.நா.சு.வின் படைப்புகளாகும். மேலும் அச்சில் வராத நாவல்களும், சிறுகதைகளும், கவிதைகளும், விமரிசனக் கட்டுரைகளும் உள்ளன. இவை வெளியிடப்பட்டால் க.நா.சு.வின் தமிழ்ப்பணியை முழுவதுமாக அறிய முடியும். நாவலாசிரியர், கதையாசிரியர், கவிஞர், நாடகாசிரியர், கட்டுரையாளர், மொழிபெயர்ப்பாளர், திறனாய்வாளர் எனப் பல்வேறு இலக்கியத் துறைகளிலும் சாதனை புரிந்தவர். க.நா.சு. புதுக்கவிதை எழுதுவதிலும் ஈடுபாடு கொண்டிருந்தார். 1939ஆம்

ஆண்டு 'மயன்' என்ற பெயரில் புதுக்கவிதை எழுதத் தொடங்கினார். மயன் என்ற பெயரில் அவர் எழுதிய புதுக்கவிதைத் தொகுதிக்கு மகாகவி குமரன் ஆசான் பரிசு வழங்கப்பெற்றது.

இலக்கிய விசாரம், இந்தியாவின் சிறந்த பத்து நாவல்கள், புகழ்பெற்ற நாவல்கள், படித்திருக்கிறீர்களா, நாவல் கலை, விமரிசனக் கலை, கலைநுட்பம், இலக்கிய இயக்கம் ஆகியவை க.நா.சு.வின் திறனாய்வுத் திறத்தைக் காட்டும் நூல்களாகும்.

**மொழிபெயர்ப்பைப் பற்றிக் க.நா.சு.**

மொழிபெயர்ப்புகள் மொழிபெயர்ப்புகளாக இனம் தெரிகிறமாதிரி இருப்பதுதான் நல்லது என்று க.நா.சு. கருதினார். பிறமொழிச் சேர்க்கையினால் பிற பண்பாட்டுப் பழக்கவழக்கக் கூட்டுறவினால் தமிழ்ச் சிந்தனைகள் விரிவடைய வழி ஏற்படுகிறது. அதனால் மொழிபெயர்ப்புகள் போல இருப்பது தேவையானது என்று கருதினார்.

> **ஆரம்பக் காலத்தில் மறுமலர்ச்சி அலை ஏற்பட்ட காலத்தில் பலர் ஆங்கிலம் மற்றும் வேறு பல மொழி நூல்களைத் தமிழேயாக்கித் தமிழுக்கு அளித்தார்கள். இடைக்காலத்தில் மொழிபெயர்ப்புகள் உருவாயின. இப்படி உருவாகிய நூல்களில் மகாத்மா காந்தியினுடைய சுயசரிதம் மற்றும் பல அஹிம்சை மதிப்பீட்டுக் கட்டுரைகள் மிகவும் முக்கியமானவை. இவை இந்தியர்களின் மனங்களை, சிந்தனைகளை பண்படுத்தின.**
>
> **இதைத் தவிரத் தமிழில் வெ. சாமிநாதசர்மா போன்ற அறிஞர்கள் நீட்ஸே, பிளேட்டோ, கார்ல்மார்க்ஸ் என்றும் அரசியல் என்றும் நேரடியாகச் சில நூல்கள் எழுதினார்கள். இவை மொழிபெயர்ப்புகள் சார்ந்த நூல்கள். இவையும் தமிழனின் அரசியல் அறிவை விரிவாக்க மிகவும் உபயோகப்பட்டன. இந்த அளவில் பல நினைவு நூல்களும் சுயசரிதங்களும் தமிழில் வெளிவந்துள்ளன.**

என அக்கால மொழிபெயர்ப்பு நூல்களின் வெளியீடுகள் குறித்து 'இலக்கியக் கண்ணோட்டம்' (மொழிபெயர்ப்பு) என்னும் தலைப்பில் தினமணி நாளிதழில் (டிச. 2, 1987) க.நா.சு. எழுதியுள்ளார்.

உலக இலக்கியங்கள் பலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து அறிமுகம் செய்த க.நா.சு. 'மொழிபெயர்ப்பு' எனும் தலைப்பில் ஒரு கட்டுரை வழங்கியுள்ளார். இக்கட்டுரை விமரிசனக் கலை எனும் நூலில் இடம் பெற்றுள்ளது. இதில் ஒரு மொழிபெயர்ப்பு எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழாக்கி என்று சொல்வதிலே ஒரு விஷயம் அடங்கி யிருக்கிறது. தமிழிலே வெளிவருகிற மொழிபெயர்ப்புகள் தமிழாகத்தான் இருக்க வேண்டுமா என்று என்னை யாராவது கேட்டால், வேண்டாம் இருக்கக்கூடாது என்றே நான் பதில் சொல்லுவேன். எந்த மொழி பெயர்ப்புமே முதல் நூல் போலாகிவிடக் கூடாது. முழுதும் தமிழாகிவிடக்கூடாது...... மொழிபெயர்ப்பு நூல் மொழிபெயர்ப்பாகவேதான் இருக்க வேண்டும் என்கிறேன் நான். ஜெர்மன் வசன நாவலை நாம் தமிழில் மொழிபெயர்த்தால், ஜெர்மன் மொழியி லிருந்து மொழிபெயர்த்ததாக அது தமிழிலும் இருக்க வேண்டும். ஜெர்மன் மொழியில் வசனத்தின் நெளிவு- சுளுவுகள், சில வார்த்தைச் சேர்க்கைகள், சில வாக்கிய சந்தங்கள், சில பதப்பிரயோகங்கள் எல்லாம் தமிழுக்கு வரவேண்டும். அப்போதுதான் அம்மொழிபெயர்ப்பால் தமிழ் இலக்கியத்துக்கு இலாபம் இருக்கும். தமிழ் வசன வளம் ஜெர்மன் வசனச் சேர்க்கையால் விரிவடைய வேண்டும். இதே போலத்தான் ஸ்வீடிஷ், நார்வேஜிய, ஆங்கில மொழிகளினின்றும், வருகிற மொழிபெயர்ப்புகள் தமிழுக்கு வளம் கொணர்ந்து தருபவையாக இருக்க வேண்டும்.[12]

என்று க.நா.சு. குறிப்பிடுகிறார்.

மொழிபெயர்ப்புகளால் தமிழுக்குப் புதிய கருத்துகளும், புதிய வளங்களும் கிடைக்கும் என்பதைப் பலரும் உணர்ந்தாலும், அப்பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொள்பவர் மிகச் சிலரே. மொழிபெயர்ப்பின் பயனை நன்கு உணர்ந்ததினால் அதில் ஈடுபட்ட க.நா.சு. தன்னுடைய அனுபவத்தின் மூலம் இதன் பயனைப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

நாவல் சிறுகதை, நாடகம், கட்டுரை முதலிய இலக்கிய வசன உருவங்களில் அந்தந்த மொழிகளில் அவர்கள் எப்படி எப்படி என்னென்ன செய்திருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்வதானால் நமது தமிழ் நாவலும், சிறுகதையும், நாடகமும் வளரும் என்பதில் சந்தேகமில்லை. மொழிபெயர்ப்பினுடைய முதல் உபயோகம் இதுதான். இரண்டாவது உபயோகம் தமிழை வளப்படுத்துவது - பிறமொழிச் சேர்க்கை யால், வார்த்தை, வாக்கிய அமைப்பு முதலியவற்றை விஸ்தாரமாக்குவது. மூன்றாம் உபயோகம் இலக்கியத்தில் சாதனைகள் நடத்துவதற்கு இலக்கியாசிரியனுக்குத் தெம்பு தருவது இம்மொழிபெயர்ப்புகள் தான். உதாரணத்தால் மட்டுமல்ல - செய்யக்கூடியதை, சொல்லக்கூடியதை அதிகப்படுத்தி இன்னும்

சொல்லலாம். இன்னமும் சொல்லலாம் என்ற சோதனைக்காரர்களுக்கு இலக்கியத்தில் தெம்பு தரக்கூடியது மொழிபெயர்ப்புகளைப் போன்றது வேறு எதுவும் இல்லை. நாலாவது ஒரு உபயோகமும் உண்டு. ஆனால் இது அவ்வளவாக முக்கியமானதல்ல. இலக்கிய விமரிசகனுக்கு அளவு கோல்கள் ஓரளவுக்கு உருவாவதற்கும், உபயோகப்படுவதற்கும் மொழி பெயர்ப்புகள் பயன்படுகின்றன.[13]

என்று க.நா.சு. குறிப்பிடுகிறார்.

ஒரு மொழிபெயர்ப்பு எப்படி இருக்க வேண்டும் என்ற வரையறையை வகுத்துக் கொண்ட க.நா.சு. அதன்படியே தமது மொழிபெயர்ப்புகளை வழங்கியுள்ளார். தமிழ் வாசகர்களை மறந்து விடாமலும் அதே வேளையில் மூலமொழியின் பொருள், அதன் அமைப்பு விடுபடாமலும் மொழிபெயர்த்திருக்கிறார். (எ.டு.)

அவள் (மேரியா கன்ஸெப்ஸியாள்) வெண்மையான புழுதிபடிந்த பாதை நடுவே ஜாக்கிரதையாக நடந்து சென்றாள். அங்கு ஓரத்திலிருந்த முட்செடிகளும், கண்ணுக்குத் தெரியாமல் வளைந்த கூரான சப்பாத்திக் கள்ளிகளும் அதிகமாகப் படரவில்லை. ஓரத்திலுள்ள இருண்ட மர நிழலில் சற்று இளைப்பாற அவளுக்கு இஷ்டமே, எனினும் காலில் தைக்கும் கள்ளி முட்களைப் பிடுங்கி எறிய நேரமாகும். அப் புதைந்த நகரத்து ஈரமான பதுக்கங்களில் ஜீவானும் அவன் தலைவனும் உனக்காகக் காத்திருப்பார்.[14]

இம்மொழிபெயர்ப்பைப் படிக்கும் வாசகர்கள் க.நா.சு. குறிப்பிடும் அயல்நாட்டு மண்ணின் மணத்தையும் அச்சூழலையும் கதையின் தொடக்கம் அறிவித்துவிடுகின்றது. க.நா.சு. வழக்கமாக அயல் நாட்டு எழுத்தாளர்களை, படைப்பாளிகளைப் பற்றி அக்கதைகளுக்கு முன்பாகக் குறிப்பிடுவது வாசகர்களுக்குக் கூடுதலான புரிதலையும், தகவல்களையும் தருகிறது. யாரால், எந்தப் பின்னணியில் இக்கதை உருவாகியுள்ளது என்பதையும் அறிந்து கொள்ள ஏதுவாகிறது.

காதரின் ஆன் போர்ட்டர் எழுதிய நூல்களின் பட்டியலை மட்டும் பார்த்தால் அவளுடைய மேதாவிலாசம் தெளிவாகத் தெரியாது. வாழ்நாள் முழுவதும் இலக்கியத்துக்கு அவள் அளித்துள்ளது மிகச் சில நூல்களே. பூரணமாகத் திறனும் அசையாத கலை உணர்ச்சியும் உடையவள். அமெரிக்க ஆசிரியர் களிலே பாஷை நடை, கருத்து நலம் இரண்டினும் அவளே முதன்மையானவள் என்பர். ஏராளமாக எழுதப் பயிற்சியிருப்பினும், திருப்தி தருவதைத் தவிர

> வேறு எதையும் பிரசுரிக்க மாட்டாள்........ flowering Judas (குருதிப்பூ) என்கிற தலைப்பில் அவற்றில் சில ஒரு சிறு பிரத்தியேகப் பதிப்பாக 1930 இல் வெளிவந்தன. பிரசித்தி பெற்ற காதரின் ஆன் போர்ட்டருக்கு ஒரு கக்கன்ஹீம் இலக்கியப் பெல்லொஷிப் கிடைத்தது. 1935 இல் குருதிப்பூ வியாபாரப் பதிப்பாக வெளிவந்தது. 1939 இல் பேல்ஹார்ஸ், பேல்ரைடன் என்ற மூன்று நீளக் கதைகள் ஒரு புஸ்தகமாக வெளிவந்தன. காப்டன் மெதர் பற்றி ஒரு ஜீவிய சரிதம் எழுதுவதில் பல வருஷங்கள் ஈடுபட்டிருந்தாள் அவள்[15]

எனக் 'குருதிப்பூ' நாவலாசிரியரைப் பற்றிய ஒரு குறிப்பினை வழங்கியுள்ளார் க.நா.சு.

1959ஆம் ஆண்டு சில நாவல்களைச் சுருக்கி மொழி பெயர்ப்பாக வழங்கியிருக்கிறார் க.நா.சு. 'உலகத்துச் சிறந்த நாவல்கள்' இந்த வரிசையில் அடங்கும். இது அவருக்கு உடன்பாடான ஒன்றல்ல என்ற போதிலும் நீண்ட நாவல்களாக மூலமொழியில் உள்ளதை அவ்வாறே மொழிபெயர்ப்பதைக் காட்டிலும் இது வாசகனுக்கு எளிதாக இருக்கும் என்ற அடிப்படையில் இதைப் பின்பற்றியிருக்கிறார்.

சார்லஸ் டிக்கன்ஸின் நாவலை 'நல்லவர்கள்' எனும் நாவலின் முன்னுரையில் இதைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

> எனக்குச் சாதாரணமாகச் சுருக்கி மொழிபெயர்ப்பதில் நம்பிக்கை கிடையாது. ஆசிரியரின் உத்தேசத்தில் பெரும்பகுதியும் சுருங்கங்களில் எவ்வளவு சிறப்பாகச் செய்து காட்டினாலும் – மறைந்துவிடும் என்று நான் நம்புவன். ஆனால் இம்மாதிரிச் சுருங்கங்களால் ஒரு உபயோகம் உண்டு. நாக்ஸையும், சீயரிபீல் சகோதரர் களையும் சரிவர அறிந்து கொள்ள இச்சுருக்கத்தைப் படிக்கும் வாசகர்களில் சிலராவது தூண்டப்படலாம். அதுவே இந்தச் சுருக்கத்தின் உபயோகமாகும். டிக்கன்ஸ் சற்று மிகையாகவே எழுதினார் என்பதும் தொடர்கதையாகவே தன் நாவல்களை எழுதினார் என்பதும் உண்மைதான். ஆகவே சுருக்கத்தில் கதை வீணாகிவிடவில்லை. குணச்சித்திரங்கள் அளவு மீறிப் போய்விடாமல் பார்த்துக் கொள்ளலாம். நிகோலஸ் நிகிள்பியில் சில விஷயங்களுக்கு மட்டும் முக்கியம் தந்து கதை அம்சம் கெடாமல், சுருக்கித் தந்த மொழி பெயர்ப்பு இது. டிக்கன்ஸ் மனம்போல வார்த்தைகளைக் கொட்டி எழுதியவர். அவர் எழுதியதில் பத்தில் ஒரு பகுதியே இங்கு இடம்பெறுகிறது.[16]

என்கிறார் க.நா.சு.

நேருக்கு நேர் மொழிபெயர்ப்பு, மொழியாக்கம், தழுவல், என்ற Translation, Transcreation, Adoption மூன்று முறைகளையும் மொழிபெயர்ப்பாளர்கள் கையாண்டு வருகின்றனர். க.நா.சுவின் மேற்குறிப்பிட்ட சுருக்க மொழிபெயர்ப்பு என்பது மொழியாக்கம் என்பதிலேயே அடங்கிவிடுகிறது. ஒரு மொழிபெயர்ப்பாளர் மூலத்தில் உள்ள பொருளை உள்வாங்கிக் கொண்டு எழுதுதல், தமிழிலேயே எழுதுவது போன்ற நடையைக் கையாளுதல், சுருக்கி வழங்குதல் போன்ற உத்திகள் யாவும் இந்த மொழியாக்கத்தில் இடம் பெறுகின்றன. பொதுவாக நாவல் மொழிபெயர்ப்பில் இந்த முறை பெரிதும் பின்பற்றப்படுகிறது.

> உலகில் தோன்றியுள்ள எல்லா வெற்றிகரமான நாவல் களுக்கும் அவற்றிற்கே உரித்தான ஒரு கட்டுக்கோப்பு, ஒரு வேகம், நாவலுக்குள்ளேயே அடங்கியிருக்கிறது. இந்தக் கட்டுக்கோப்பும் வேகமும் குலைந்து விடாமல் மொழிபெயர்ப்புச் செய்வதால் மொழிபெயர்ப்பின் தரம் உயரும். இந்தக் கட்டுக்கோப்பையும் வேகத் தையும் எப்படி அறிவது என்கிற பிரச்சினைக்குப் பதில்தான் அந்த நாவலை விரும்பி முழு ஈடுபாட்டுடன் ஆர்வத்துடன் பல தடவைகளாவது படித்திருக்க வேண்டும் என்பது. இந்த மாதிரி ஈடுபாடும் இருந்து ஆர்வமும் ஏற்படுகிற இடத்தில் தான் நல்ல மொழிபெயர்ப்புகள் தோன்ற முடியும்.[17]

என்கிறார் க.நா.சு.

'க.நா.சு. நட்பும் மதிப்பும்' எனும் தலைப்பில் சுந்தரராமசாமி ஒரு நினைவுக்குறிப்புரை வழங்கியுள்ளார். இதில் க.நா.சு.வின் ஆழ்ந்த படிப்பறிவையும், தமிழில் அவர் ஏற்படுத்திய புதிய விமர்சனக் கண்ணோட்டம், புதிய தடங்கள் குறித்துக் குறிப்பிட்டுள்ளார். இதில் க.நா.சு.வின் மொழிபெயர்ப்புக் கண்ணோட்டத்தைக் குறித்தும் குறிப்பிட்டுள்ளார்.

> மொழிபெயர்ப்புகள் சம்பந்தமாகக் க.நா.சு. கொண்டிருந்த பிரக்ஞை மிகவும் அபூர்வமானது. இந்த அம்சத்தில் இவருடன் ஒப்பிடத் தகுந்த வேறு எவரும் தமிழில் இல்லை. அவருடைய தேர்வுகளை ஊன்றிக் கவனித்தால் இவ்வுண்மை துலங்கும். க.நா.சு. ஆங்கிலேய ஆட்சிக் காலத்தில் உயர் கல்வி கற்றவர். அன்று கல்வித் துறைகள் பிரிட்டிஷ் இலக்கியத்தை மட்டுமே கற்பித்துக் கொண்டிருந்தன. ஆங்கிலம் கற்ற உயர் ஜாதியினிடத்தில் உன்னத இலக்கியத்தின் குறியீடாகத் திகழ்ந்தது பிரிட்டிஷ் இலக்கியம். ஆங்கில மொழியில் இவர்கள் கொண்டிருந்த பரிச்சயம் அமெரிக்க

இலக்கியத்தைக்கூடக் கவனிக்க ஒரு தூண்டுகோலாக அமையவில்லை. அமெரிக்க இலக்கியம் இந்தியக் கல்வித்துறைகளில் 1950க்குப் பின்னரே பரவிற்று. ஆங்கில ஆசிரியர்கள் தங்கள் இலக்கிய அனுபவங்களின் எல்லைகளை விரித்துக் கொண்டதன் விளைவாக இது நிகழவில்லை. அமெரிக்கக் கலாச்சார நிறுவனங்களின் திட்டமிட்ட செயல்பாடுகளினால் அமெரிக்க இலக்கியம் இந்தியக் கல்வித்துறைகளில் பரவிற்று. இந்தப் பின்னணியில், சூழலின் பாதிப்பை மட்டுமே பெறக் கூடியவராகக் க.நா.சு. இருந்திருந்தால், அவர் ஆங்கில இலக்கியத்தைச் சார்ந்த படைப்புகளையும், அதிக பட்சம் அமெரிக்க இலக்கியத்தைச் சார்ந்த படைப்பு களையுமே நமக்கு மொழிபெயர்த்துத் தந்திருக்க வேண்டும். ஆனால் நிகழ்ந்தது வேறு. ஜார்ஜ் ஆர்வெல் (இங்கிலாந்து, 1984, விலங்குப் பண்ணை), வில்லியம் சரோயன் (அமெரிக்கா, மனுஷ்ய நாடகம்), காதரின் அன்போர்டர் (அமெரிக்கா, 'குருதிப்பூக்கள்'), ஸ்டீபன் க்செயின் (அமெரிக்கா, 'திறந்த படகு') ஆகிய நூல்களை அவர் மொழிபெயர்த்திருக்கிறார் என்பது உண்மைதான். தன் மொழிபெயர்ப்புகளுக்கு அவர் எழுதியுள்ள முன்னுரைக் குறிப்புகளையும், உலக இலக்கியங்களைப் பற்றி அவர் கூறியுள்ள கருத்துக் களையும் கணக்கில் எடுத்துக் கொண்டு பார்க்கும் போது பிரிட்டிஷ் இலக்கியத்திற்கோ அமெரிக்க இலக்கியத்திற்கோ அல்ல, ஐரோப்பிய இலக்கியத் திற்கே அவர் அதிக அழுத்தம் தந்து மொழிபெயர்த் திருக்கிறார் என்பதைத் திட்டவட்டமாக உணர முடியும். இவர் தேர்வு செய்த ஐரோப்பிய ஆசிரியர்களின் முக்கியமானவர்கள் என்று ஸெல்மா லாகர் லேவ் (ஸ்வீடன், 'மதகுரு'), பேர் லாகர் க்வீஸ்ட் (ஸ்வீடன் 'அன்பு வழி'), மார்டின் து காட் (பிரெஞ்சு, தபால்காரன்), நட்ஹாம்சன் (நார்வே, 'நிலவளம்') ஆகிய படைப்பு களைக் கூறலாம். மிகுந்த பிரக்ஞையுடனேயே இந்நாவல்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார் க.நா.சு. இவ்வாசிரியர்கள் உருவாக்கியிருக்கும் உலகம் தமிழ் வாசகன் தன் வாழ்வு சார்ந்தும் தன் மரபுகள் சார்ந்தும் உற்று உணரக் கூடியதாக இருக்கிறது. பிரிட்டிஷ் அல்லது அமெரிக்க நாவல்களில் தமிழ் வாசகன் உணரக்கூடிய 'அந்நியத்தன்மை' இந்நாவல்களுக்கு இல்லை. ஆக இந்நாவல்கள் தமிழ் இலக்கியப் பிரக்ஞையைத் தீவிரமாகப் பாதிக்கும் என்ற க.நா.சு.வின் கணிப்பு அவருடைய பார்வையையும் அவர் கொண்டுள்ள அக்கறைகளையும் நமக்கு உணர்த்துக்கின்றது. துரதிருஷ்டவசமாக இம்மொழிபெயர்ப்புகள் சீரான

அச்சேற்றத்தையோ விரிந்த வினியோகத்தையோ பெறவில்லை. மிகத் தீவிரமான வாசகர்களின் கவனத்திற்கு மட்டுமே இன்று வரையிலும் இவை வந்திருக்கின்றன. அந்த அளவில் க.நா.சு.வின் இலட்சியம் நிறைவேறாத ஒன்றாக நிற்கிறது.[18]

க.நா.சு.வின் மறைவுக்குப்பின் 'காலச்சுவடு' இதழில் சுந்தர ராமசாமி எழுதிய கட்டுரையின் சுருக்கம் 'விருந்தாளி' நூலில் இடம்பெற்றுள்ளது. க.நா.சு.வின் மொழிபெயர்ப்புகள் குறித்தும், அவருடைய இச்சிந்தனை குறித்தும் வழங்கப்பட்ட ஒரு மதிப்பீடாக இக்குறிப்பு அமைந்துள்ளது.

க.நா.சு.வின் பல மொழிபெயர்ப்புகள் வெளியிடப்படாமல் தங்கிவிட்டன என்கிறார் எழுத்தாளர் அசோகமித்திரன்.

இன்றைய உலகில் எந்த மொழிப் படைப்பாளி யானாலும் அப்படைப்பாளி உலகமெங்கும் அறியப்படு வதற்கு நான்கைந்து சர்வதேச மொழிகளில் ஏதாவது ஒன்றில் அப்படைப்பாளி மொழிபெயர்க்கப்பட வேண்டியது அவசியமாகிறது. அந்த மொழிகள், ஆங்கிலம், ஸ்பானிஷ், ஃபிரெஞ்சு, ஜெர்மன், இதில் நாம் ஆங்கில மொழியைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதற்கு எந்தச் சிக்கலும் இல்லை. ஆனால் இன்றைய பதிப்புத் துறையில் மொழிபெயர்க்க வரும் அனைவருக்கும் அங்கீகாரம் கிடைப்பதில்லை. க.நாசு. காலத்திலேயே அவர் மொழிபெயர்த்த ஒரு படைப்பு பிரசுரமாயிருந்தால் பத்து நிராகரிக்கப்பட்டிருக்கின்றன. க.நா.சு.விடம் நானறிந்து பல முழுநாவல்கள் மொழி பெயர்க்கப்பட்டு அப்படியே கையெழுத்துப் பிரதி களாகவே தங்கிவிட்டன[19]

என்று நினைவுகூர்கிறார் எழுத்தாளர் அசோகமித்திரன்.

## தமிழில் மொழிபெயர்ப்பு முயற்சிகள் குறித்து க.நா.சு.

தமிழில் உள்ள மொழிபெயர்ப்புகள் குறித்தும், மொழிபெயர்ப்பு முயற்சிகள் குறித்தும், மொழிபெயர்ப்பு முறைகள் குறித்தும் க.நா.சு. சில கட்டுரைகளில் தமது கருத்தை வழங்கியுள்ளார்.

1935க்குப் பிறகு 1950 வரையில் சரசரவெனப் பல உலக இலக்கிய நூல்கள் தமிழில் மொழிபெயர்க்கப் பெற்று ஓரளவுக்கு வாசகர்களிடையே ஓர் ஆர்வத்தையும் தூண்டின. அப்போதுங்கூட இலக்கிய வேகத்தை உண்டாக்கித் தாங்கக்கூடிய அளவுக்கு மொழி பெயர்ப்புகள் வந்ததாகச் சொல்வதற்கில்லை. அந்தக் காலக்கட்டத்தில் மொழிபெயர்ப்புகள் செய்து

> *வெளியிட முன்வந்தவர்கள் ஓரளவுக்குத் தங்கள் இரசனையினால் தூண்டப்பெற்றவர்களாக, இந்த நூல் தமிழில் இருந்தால் நன்றாக இருக்குமே என்று எண்ணி, அதனால் தங்களுக்கு இலாபம் என்ன கிடைக்கும் என்கிற எண்ணத்தைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு மொழிபெயர்ப்பதில் ஈடுபட்டனர். அந்த அளவுக்குச் சுதந்திரத்திற்குப் பின் ஓர் உந்துதல், ஈடுபாடு இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.*[20]

என்று க.நா.சு. தெரிவித்துள்ளார். உலக அளவில் மொழிபெயர்ப்பு முயற்சிகளையும், அதன் பயனையும் நன்கு உணர்ந்ததால் அவற்றோடு ஒப்பிடும் பொழுது அடிப்படைத் தேவையைப்பூர்த்தி செய்கிற அளவுக்குக் கூட மொழிபெயர்ப்புகள் வெளியாகவில்லை என்ற அவருடைய கருத்து உண்மை எனத் தோன்றும். 'மணிக்கொடி' இதழில் மொழிபெயர்ப்புக்கு முக்கியத்துவம் அளித்துள்ளதைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

> *"மணிக்கொடி" பத்திரிகையிலேயே ஓரளவுற்கு இந்தியக் கதைகளும், இலக்கியப்பூர்வமான பல மேலை நாட்டுச் சிறுகதைகளும் வெளிவந்தன. இவற்றில் முக்கியமாக, செக்காவ், ஆம்ரோஸ் பியர்ஸ், ஜேம்ஸ் ஜாய்ஸ், மற்றும் வெர்ஃபல் முதலிய கதைகளைச் சொல்லலாம். பிரேம்சந்த், சதுரசேன சாஸ்திரி, ஜெய் சங்கர பிரசாத் போன்ற இந்தி ஆசிரியர்களின் கதைகளும் 'மணிக்கொடி'யில் வெளிவந்தன.... மணிக்கொடி காலத்து மொழிபெயர்ப்புகளாக ஃபிரெஞ்சு, வெர்ஃபல், ஜேம்ஸ் ஜாய்ஸ் முதலியவர்கள் க.நா.சு. மூலமும், உலகத்துச் சிறந்த கதைகள் (இருபதுக்கு மேல்) புதுமைப்பித்தன் மொழிபெயர்ப்பாகவும் வந்தன. இராமையா சில ஜப்பானிய ஓரங்க நாடகங்களை மொழிபெயர்த்தார். நாவல்களிலும் தேய்ந்த கனவு (டிக்கன்ஸ் – கி.ரா), ஃபிராங்கன்ஸ்டின்– பிரேத மனிதன் (மேரி ஷெல்லி, புதுமைப்பித்தன்), இரட்டை மனிதன் (ஆர்.எல். ஸ்டீவன்சன்; கு.ப.ரா) இவை வெளிவந்தன. க.நா.சு. இப்ஸனின் பொம்மையா மனைவியா நாடகம் 1939 இல் வெளிவந்தது. இந்த மொழிபெயர்ப்புகளால் தழுவல்களால் ஏற்பட்ட ஒரு தாக்கம் தமிழில் சொந்த நாவல்களையும் சிறுகதை களையும் எழுத ஒரு காரணமாக இருந்துள்ளது என்பது உண்மை. இலக்கியத் துறைகளிலும் மொழிச் செல்வத்திலும் பிற சேர்க்கையினால்தான் வளம் சாத்தியமாகிறது என்பது இலக்கிய மொழி ஆராய்ச்சியாளர்களும், விமர்சகர்களும் கண்டுள்ள உண்மை.*[21]

மணிக்கொடி இதழின் மூலம், பல உலக இலக்கியங்களை அறிமுகம் செய்யும் முயற்சி நடைபெற்றது என்பதை இப்பகுதியில் க.நா.சு. சுட்டிக்காட்டியுள்ளார்.

மொழிபெயர்ப்பு வேகம் மிகுதியாக இருக்கும் காலக்கட்டத்தில் இலக்கிய வேகம் மிகுதியாக இருப்பதைக் கடந்த கால வரலாறு காட்டும். மொழிபெயர்ப்பு என்பது ஒரு மொழியை உயிர்ப்புடன் வைத்திருக்கும் ஒரு தொடர் பணி. ஒரு மொழியின் இலக்கியவாதிகள் மொழிபெயர்க்கப்படும்பொழுது அந்த நூல்கள் வழியாக மற்றொரு மொழி இலக்கியவாதிகளுடன் ஒட்டுறவு ஏற்படுகிறது. இத்தகைய பகிர்வு அனுபவம் புதிய உயிர்ப்புள்ள படைப்புகள் தோன்ற வழிவகுக்கும். இந்த அனுபவத்தைப் பெற்றவர் அறிஞர் க.நா. சுப்பிரமணியம்.

> பிளேட்டோ, ரூஸ்ஸோ, டால்ஸ்டாய் மற்றும் பங்கிம் சந்திரர், ரவீந்தரநாத தாகூர், பிரேம்சந்த், சரத்சந்திர சட்டர்ஜி, வி.எஸ். காண்டேகர் முதலியவர்களுடைய நூல்கள் மளமளவென்ற இலாபத்தைக் கருதாமல் மொழிபெயர்க்கப் பெற்றுத் தமிழ் இலக்கியத்துக்கு வலிமை தந்தன. 1950லும் அதற்குப் பின்னரும் சோவியத் அரசாங்க ஸ்தாபனமும், அமெரிக்க அரசாங்க ஸ்தாபனமும் ஏற்பட்டு, போட்டி போட்டுக் கொண்டு அதன் விளைவாக மொழிபெயர்ப்பாளரின் இரசனையின்படி தேர்ந்தெடுக்கப் பட்ட நூல்களுக்குப் பதிலாகப் பணம் தரக்கூடிய நூல்களை மொழி பெயர்ப்பதில் ஈடுபட்டனர். இதுவே நல்ல தரமான இயக்கம் என்று சொல்லும்படியான அளவுக்கு 1956க்குப்பின் சாகித்திய அகாதெமி இந்திய அரசாங்கத்தின் சார்பில் ஏற்பட்டு, மொழிபெயர்ப்பில் செயல்படத் தொடங்கியது. அதுவரை இலக்கியத் துறையில் மொழிபெயர்ப்பு என்பதிலேயே நம்பிக்கையே வைக்காத பலரும், மொழிபெயர்ப்பாளரானார்கள்.[22]

என்று க.நா.சு. அக்காலக்கட்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

1940களில் பல நாடுகளின் கதைகளைத் தமிழில் மாதந் தோறும் வெளியிட வேண்டும் என்ற முயற்சி அ.கி. கோபாலன், அ.கி. ஜெயராமன், க.நா.சு. ஆகியோரால் மேற்கொள்ளப்பட்டது. அவ்வாறு மொழிபெயர்த்து வெளியிடும் பொழுது 'சர்வதேசக் கதை மலர்' என்ற பெயரில் ஜோதி நிலைய வெளியீடாக இக்கதைகள் வெளிவந்தன. இம்முயற்சியில் பல எழுத்தாளர்கள் பங்கெடுத்துக்கொண்டனர். க.நா.சு. இதைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது

**ஜோதி மொழிபெயர்ப்பாளர்கள் நானும் உள்பட மொழிபெயர்ப்பில் உள்ள சிரமங்களை நன்கு உணர்ந்து சிரத்தையுடன் பொறுப்பை ஏற்று நன்றாகவே செய்து வருகிறேம். அன்னிய நாட்டுப் பெயர்களை மட்டும் ஒதுக்கிவிட்டுப்படித்தால் இவற்றைத் தமிழ்க் கதைகளைப் போலவே படித்து இரஸிக்க முடிகிறது[23]**

எனக் குறிப்பிட்டுள்ளார்.

காதற்கதை (இத்தாலியக் கதை), வெற்றி (பிரெஞ்சுக் கதை), காளி (ஜெர்மன் கதை), காதற்கீதம் (ரஷ்யக் கதை), பெண்மனம் (ஸ்பானியக் கதை), போலி (ஆங்கிலக்கதை) தேவமலர் (ஸ்வீடிஷ் கதை) 3 கதைகள் (ஹங்கேரியக் கதை), துர்லக் (செகோஸ்லாவெகியக் கதை) இசைச் செல்வன் (போலிஷ் கதை) உயிர் ஆசை (அமெரிக்கக் கதை) இன்னும் பல தேசத்துக்கதைகள் பிரதி மாதமும் வெளி வருகின்றன என்ற அறிவிப்பு வெளியாகியுள்ளது.

**பத்தொன்பதாம் நூற்றாண்டில் சிறுகதை என்கிற கொடி மூன்று தேசங்களில் மூன்று விதமாகப் படர்ந்தது. ரஷ்யாவில் செக்காவ், பிரான்சில் மொப்பாஸான், அமெரிக்காவில் ஓ ஹென்றி, இவர்கள் மூவரும்தான் இன்றைய சிறுகதையின் வழிகாட்டிகள். ஆனால் இலக்கிய வளர்ச்சி அவர் களுடன் நின்றுவிடவில்லை. இலக்கிய உணர்ச்சியைத் தடைப்படுத்தும் ஆசிரியர் மேதையாக மாட்டான். செக்காவுக்குப் பின் ரஷ்யாவில் ஒரு கோர்க்கியும், ஒரு டால்ஸ்டாயும் தோன்றினார்கள். (இந்த டால்ஸ்டாய் காந்திடால்ஸ்டாயின் பேரன்மார்களில் ஒருவன்) மொப்பாஸானுக்குப் பிறகு பிரான்ஸில் ஒரு பிரான்சும், அமெரிக்காவில் ஓ ஹென்றிக்குப் பின் ஒரு தாமஸ் உல்வும், ஒரு ஸரோயனும் தோன்றினார்கள்.[24]**

என்று வாசகனுக்கு உலகின் சிறந்த இலக்கியவாதிகளை அறிமுகம் செய்கிறார், க.நா.சு. சர்வதேசக் கதை மலர் வரிசையில் முதல் கதையாக இடம் பெற்ற காதற்கதை நூலாசிரியர் கிரேஸியா டெல்டாவையும், அவளின் சிறந்த படைப்புகள் குறித்தும் தமிழ் வாசகனுக்கு அறிமுகம் செய்கிறார் க.நா.சு.

### செய்யவேண்டிய முயற்சிகள்

பிறமொழி இலக்கியங்களைப் பயின்ற அனுபவத்தின் வாயிலாகத் தமிழில் நாம் செய்ய வேண்டிய முயற்சிகள் குறித்துக் குறிப்பிட்டிருக்கிறார்.

மூல (original) எழுத்துப் போல இலக்கியத்தில் மொழி பெயர்ப்பும் ஓர் அவசியமான துறை மொழிபெயர்ப்பு வேகம் அதிகமாக இருக்கும் காலக்கட்டத்தில்தான் இலக்கிய வேகமும் ஒரு மொழியில் சுத்தமாக இருக்கும் என்பதற்கு உதாரணமாக உலக இலக்கியச் சரித்திரத்தில் பல பகுதிகளைச் சொல்லலாம். குறிப்பாக ஆங்கில இலக்கியத்தின் ஷேக்ஸ்பியர் காலத்தையும் சொல்லலாம். 1945இல் தமிழ் இலக்கியம் ஓரளவுக்குத் தேக்கம் பெற்றது. அதன் விளைவாக 1950 முதல் 1965 வரையில் மொழிபெயர்ப்பும் தேக்கமுற்றது. இந்தப் பதினைந்து ஆண்டுகளில் பிறநாட்டு அரசியல் ஸ்தாபனங்களும், இந்திய மத்திய அரசாங்க, மாகாண அரசாங்க ஸ்தாபனமும் மொழிபெயர்ப்புகளின் தரத்தைக் குறைக்கவே உபயோகப்பட்டன. இந்தக் கால அளவில் வெளிவந்துள்ள தமிழ் மொழிபெயர்ப்பு நூல்களில் எஸ். மகராஜன் செய்த ஷேக்ஸ்பியர் ஹாம்லெட் நாடகத்தையும், சித்தலிங்கய்யாவின் கரந்த் நாவல் மொழிபெயர்ப்பும் தவிர, வேறு ஒரு மொழி பெயர்ப்பு நூல்கூடத் தமிழில் இலக்கியத்தரமானதாக வெளிவரவில்லை என்றே சொல்ல வேண்டும்.

ஒரு ஆண்டில் பத்திருபது நூல்களாவது உலக இலக்கிய வரிசையிலிருந்தும் ஒரு பத்திருபது நூல்கள் இந்தியப் பிறமொழிகளிலிருந்தும் மொழிபெயர்க்கப் பட வேண்டியிருக்கின்றன. அப்படி ஓர் ஆண்டில் முப்பது நாற்பது இலக்கிய நூல்கள் பிறமொழிகளிலிருந்தும் வந்துகொண்டேயிருந்தால்தான், அதன் பாதிப்பினாலும் விளைவாலும் தமிழிலும் ஒரு பத்துப் பன்னிரண்டு நூல்கள் வெளிவர முடியும்.[24]

மொழிபெயர்ப்புத் துறையில் 50 ஆண்டுகளுக்கு மேல் ஈடுபட்டுப் பணியாற்றித் தமிழுக்குப் புதியனவற்றை அறிமுகம் செய்து, புதிதாக வளமூட்டிய க.நா.சுப்பிரமணியத்தின் பணி என்றும் போற்றத்தக்கது.

ஆங்கிலத்தில் எழுதினால் அவருக்கு நிறையப் பணம் வந்தது. ஆனாலும் அதே போன்ற தரமானவற்றைத் தமிழில் பணம் பெறாமலும் எழுத அவர் ஆர்வமாக இருந்தார். குங்குமம், தினமணி (செய்தி), முத்தாரம் ஆகியவற்றில் அவர் எழுத்துகள் சமீப காலத்தில் நிறையவே வெளியிடப்பட்டன. அவை முன்பைவிடப் பல வாசகர்களைச் சென்று அடைந்தன. அப்பொழுதுதான், அவரின் தமிழ்ப்பற்றும், தமிழ்

**இலக்கிய வளர்ச்சிக்கு ஆர்வம் நிறைந்த பணியும் காலதாமதாகத்தான் தெரியவந்தது.[26]**

மொழிபெயர்ப்புத் துறையிலும் திறனாய்வுத் துறையிலும் க.நா.சு.வின் இடம் தனித்துவம் வாய்ந்தது என்பதை அவருடைய வெளியீடுகள் காட்டுகின்றன. கலாச்சார சுதந்திரத்திற்கான காங்கிரஸ் என்ற அமைப்பின் இந்திய உறுப்பினராக இருந்து பணியாற்றியுள்ளார். இந்த அமைப்பின் **Quest** என்ற இதழுக்கு அவர் ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். ஆசான் நினைவு விருது, கேரளம், தமிழக அரசின் பரிசுகள், பெற்றவர். சாகித்திய அகாதெமி, விருது பெற்ற சிறப்புக்குரியவர். இந்தியாவின் பல பகுதிகளுக்கும், பல நாடுகளுக்கும் சென்ற அனுபவம் வாய்ந்தவர். தஞ்சாவூர், சிதம்பரம், சென்னை, கல்கத்தா, பெங்களூர், மைசூர், திருவனந்தபுரம், புதுச்சேரி என்று பல நகரங்களில் வாழவேண்டிய சூழல் அவருக்கு ஏற்பட்டது. இறுதியில் புதுடில்லியில் தனது மகளின் இல்லத்தில் க.நா.சுப்பிரமணியம் 1988ஆம் ஆண்டு டிசம்பர் 16ஆம் நாள் காலமானார்.

## குறிப்புகள்

1. க.நா. சுப்ரமண்யம், தஞ்சை பிரகாஷ், இந்திய இலக்கியச் சிற்பிகள், சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி. 2001, ப. 55.
2. மேற்படி, ப. 8.
3. மேற்படி, ப. 12.
4. மேற்படி, பக். 41-43.
5. க.நா.சு. 90 (தொகு.), சா. கந்தசாமி, காவ்யா வெளியீடு, சென்னை, பதி. பிப். 2003, ப. 34.
6. க.நா. சுப்ரமண்யம், தஞ்சை பிரகாஷ், இந்திய இலக்கியச் சிற்பிகள், சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி. 2001, ப. 34.
7. மேற்படி, ப. 21.
8. பசி, நட்ஹாம்சன், (தமி.) க.நா.சு., (பதி.) கோ. தேவராசன், பூங்குழல் பதிப்பகம், சென்னை-40, ப. 3, பதி. 2004)
9. க.நா. சுப்ரமண்யம், தஞ்சை பிரகாஷ், இந்திய இலக்கியச் சிற்பிகள், சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி. 2001, ப. 47.
10. மேற்படி, ப. 49.
11. மாமழை போற்றுதும், புதுமைப்பித்தன் நினைவரங்க உரைகள் (தொகு.), சங்கர நாராயணன், மதிநிலையம், சென்னை, பதி. ஏப். 1999, ப. 48.

12. விமரிசனக்கலை, க.நா. சுப்பிரமண்யம், நர்மதா வெளியீடு, பதி. 1984, ப. 68.

13. மேற்படி, ப. 70.

14. குருதிப்பூ, காதரின் ஆன்போர்ட்டர், (மொ.பெ.) க.நா. சுப்ரமண்யம், பெர்ல் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட், பம்பாய், மு.ப. 1959.

15. மேற்படி, முன்.

16. நல்லவர்கள், சார்லஸ் டிக்கன்ஸ், (மொ.பெ., க.நா. சுப்ரமண்யம், வானதி பதிப்பகம், சென்னை 7, அக். 1964, முன். ப. 3.

17. நாவல் கலை, க.நா. சுப்ரமண்யம், கலைஞன் பதிப்பகம், சென்னை 17, முதற்பதிப்பு டிச. 1985, ப. 145.

18. விருந்தாளி, ஆல்பெர் காம்யு (தமி.), க.நா. சுப்ரமண்யம், ஞானச்சேரி வெளியீடு, பதி. 1989, ப. 4.

19. மாமழை போற்றுதும், புதுமைப்பித்தன் நினைவரங்க உரைகள் (தொகு.), சங்கர நாராயணன், மதிநிலையம், சென்னை, பதி. ஏப். 1999, ப. 50.

20. சுடர், தில்லித் தமிழ்ச் சங்கம், 1972, மலர் 21 (கட்.), சுதந்திரத்திற்குப் பிறகு மொழிபெயர்ப்புகள், ப. 41.

21. நாவல் கலை, க.நா. சுப்ரமண்யம், கலைஞன் பதிப்பகம், சென்னை 17, முதற்பதிப்பு, டிச. 1985, ப. 133.

22. சுடர், தில்லித் தமிழ்ச் சங்கம், 1972, மலர் 21 (கட்.), சுதந்திரத்திற்குப் பிறகு மொழிபெயர்ப்புகள், ப. 42.

23. இத்தாலியக்கதை (சர்வதேசக் கதை மலர், 1), கிரேஸியா டெலடா (மொழி.), க.நா. சுப்ரமண்யம், ஜோதி நிலையம், சென்னை, பதி. 1944, ப. 2.

24. மேற்படி, முன்.

25. சுடர், தில்லித் தமிழ்ச் சங்கம், 1972, மலர் 21 (கட்.), சுதந்திரத்திற்குப் பிறகு மொழிபெயர்ப்புகள், ப. 41

26. தமிழரசு, 16-1-1989, பக். 41-43.

# கா.ஸ்ரீ.ஸ்ரீ.

தமிழுலகில் பலநூறு மொழிபெயர்ப்பாளர்கள் வலம் வந்துள்ளனர். கா.ஸ்ரீ.ஸ்ரீ. எனும் மூன்றெழுத்தைப் பெயராக்கிக் கொண்ட அந்த மாமனிதரின் பெயரை, நாம் சொன்னாலும் அல்லது பிறர் சொல்லக் கேட்டாலும், மனதில் 'காண்டேகர்' என்ற பெயரும் சேர்ந்து ஒலிப்பது போல் தோன்றும். உயிரும் உடலும் போல அந்த இரண்டு கதைச் சிற்பிகள், மராட்டிய இலக்கிய உலகிலும், தமிழ் இலக்கிய உலகிலும் புதிய இலக்கிய மணத்தைப் பரப்பியவர்கள்.

காலந்தோறும் இலக்கியப் படைப்புகள் நாடு, மொழி, இன வேறுபாடின்றித் தோன்றி வளர்ச்சிப் பெற்று வருகின்றன. இதற்கு அடிப்படையாக அமைவது மக்கள் சமுதாயமும், சமுதாய உணர்ச்சியு மாகும். இச்சமுதாய உணர்வினால் சமுதாயத்தில் நிலவும் முரண் பாடுகளைக் களைய காண்டேகரைப் போன்ற படைப்பாளிகள் தங்கள் படைப்புகளின் வழியாக முயலுகின்றனர்.

> ***தன்னை அறிந்து கொள்ள மனிதனுக்கு உதவுதல், தன் மீதான நம்பிக்கையை வலுப்படுத்த உதவுதல், உண்மையை நாடும் முயற்சியில் அவனுக்கு உதவுதல், மக்களிடம் உள்ள சிறந்த பண்புகளைக் கண்டுபிடிக்கவும் கயமைப் பண்புகளை ஒழிக்கவும் உதவுதல், வெட்கம், சினம், வீரம் ஆகியவற்றை மனித நெஞ்சங்களில் தூண்டிவிடுதல், குறிக்கோள்களுக்காகத் தம்மையே அளிக்கும் வலிமையைப் பெற உதவுதல், அழகு என்னும் தூய உணர்வால் மக்களின் வாழ்க்கையைப் புனிதப்படுத்துதல் ஆகியன ஓர் உயரிய இலக்கியத்தின் நோக்கமாக அமைதல் வேண்டும்***[1]

என ஒரு சமூக அக்கறை கொண்ட உயரிய இலக்கியத்திற்குரிய வரையறையை வழங்கியுள்ளார் மார்க்சிம் கோர்க்கி.

ஒரு மொழியில் இத்தகைய சமுதாய அக்கறையைக் காட்டும் இலக்கியப் படைப்பு பிறமொழிகளில் மொழிபெயர்க்கப்படும் பொழுது இந்தச் சமுதாய அக்கறையும் இடம் பெயருகின்றது அல்லது இடம் பெயரவேண்டும் என்பது ஒரு மொழிபெயர்ப் பாளரின் நோக்கமாக அமைகிறது. ஒரு மொழியில் ஒரு புதிய காலக்கட்டத்தை உருவாக்கும் இலக்கியப் படைப்புகள் பெறுகின்ற வெற்றி அப்படைப்புகள் வேறுமொழிகளில் மொழிபெயர்க்கப்படும் பொழுது அவற்றைப் போலவே ஒரு புதிய காலக்கட்டத்தைப்

பெயர்ப்பு மொழியில் உருவாக்க முடியுமா என்பது அந்த மொழியினரின் சிந்தனை வளத்தைப் பொறுத்தே அமைகிறது. இந்த அணுகுமுறைக்கு ஒரு எடுத்துக்காட்டாக அமைந்தது புகழ் பெற்ற மராத்திய எழுத்தாளரான வி.ஸ. காண்டேகரின் நூல்களும், அவருடைய படைப்புகளைக் கா.ஸ்ரீ.ஸ்ரீ. எனும் கா.ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசாரியார் வழங்கிய தமிழ் மொழிபெயர்ப்புகளுமாகும்.

## கா.ஸ்ரீ.ஸ்ரீ. – இளமைப்பருவம்

'கா.ஸ்ரீ.ஸ்ரீ.' என்ற மூன்றெழுத்துக்களில் புகழ்பெற்ற கா.ஸ்ரீ.ஸ்ரீ நிவாஸாசாரியார் உத்திரப் பிரதேசத்தில் வடமதுரைக்கு அருகிலுள்ள பிருந்தாவனம் என்ற ஊரில் 15-12-1913 இல் பிறந்தார். இவருடைய தாயும் தந்தையும் காஞ்சிபுரத்துக்கு அருகிலுள்ள கிராமங்களைச் சார்ந்தவர்கள். தந்தை - ஸ்ரீரங்காச்சாரியார், தாய் - ருக்மணி அம்மாள். இவர்கள் பழமையான ஆசார முறைகளைப் பின்பற்றி வாழ்ந்தவர்கள். கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் தந்தை ஸ்ரீரங்காச்சாரியர் சமசுகிருதச் சாத்திரங் களிலும், ஆகமங்களிலும் வல்லவர். இந்தி, தெலுங்கு, வங்கமொழி ஆகியவற்றைக் கற்றறிந்தவர். இத்தகைய பெருமகனாருக்கு மகனாகப் பிறந்த கா.ஸ்ரீ.ஸ்ரீ. வடமொழிப் புலமை பெற்றவராகத் திகழ்ந்தார். சிறுவயதிலேயே தன் தந்தையிடம் வடமொழிக் காவியங்களையும், நாடகங்களையும் வைணவ நூல்களையும் பயின்று வந்தார். தந்தை மிகவும் கண்டிப்பானவர். இந்த அனுபவத்தைப் பற்றிக் கூறும்பொழுது,

> **எனக்கு 10–12 வயது இருக்கும். எனக்குத் தந்தை யாரிடம் தினமும் ஸ்லோகம் ஒப்பிக்க வேண்டும். ஒரு நாள் 'உனக்குச் சரியாகச் சொல்ல வரலை. குளத்தில் விழுந்து சாவு' என்றார். நானும் குளத்திற்குச் சென்று தண்ணீரில் மூழ்கி மூச்சு முட்டும்பொழுது ஒருவர் என்னைக் காப்பாற்றிவிட்டார்.**[2]

என்றார் (தினமணி, 04-06-95). பம்பாய்க்கு அருகில் 'கல்யாண்' என்ற இடத்திலிருந்த லக்ஷ்மி வேங்கடேஸ்வர அச்சகத்தில் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் தந்தையார் பணியாற்றுகின்ற சூழல் ஏற்பட்டது. அப்போது கல்யாணில் தமிழ் கற்கும் பள்ளி இல்லாமையால் கா.ஸ்ரீ.ஸ்ரீ. வீட்டிலேயே தமிழ் படிக்கவும் எழுதவும் கற்றார். மராட்டியப் பள்ளியில் சேர்ந்து மராட்டியும் ஆங்கிலமும் பயின்றார். மராட்டியில் நன்றாகப் பேசவும் எழுதவும் பழகினார்.

மராட்டியில் ஏழாம் வகுப்பு படிக்கும் பொழுது இவரது வாழ்வில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. இவரது வலது காதில் கடுமையான வலியுடன் சீழ்கட்டத் தொடங்கியது. மருத்துவம் செய்தும் குணமாகவில்லை. எனவே இவரது பெற்றோர் இவரைச் சென்னைக்கு அழைத்துவந்து, அறுவை சிகிச்சை செய்தனர். உடல்

நலிவுற்ற கா.ஸ்ரீ.ஸ்ரீ. பின்பு தாயின் ஆதரவில் காஞ்சிபுரத்திற்கு வந்து, பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து, படிப்பைத் தொடர்ந்தார்.

காஞ்சிபுரத்தில் வேதபண்டிதர் ஒருவரிடம் இவர் வேதக் கல்விப் பயின்றார். ஏற்கெனவே இருந்த இந்தி மொழி அறிவை வளர்த்து அதில் புலமை பெற்றார். 1930இல் நிகழ்ந்த பள்ளியிறுதிப் பொதுத் தேர்வில் சென்னை, காஞ்சிபுரம், சிதம்பரம் ஆகிய மூன்று இடங்களிலுமுள்ள பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளிகளில், ஆங்கிலம், சமசுகிருதம், தமிழ் ஆகிய மொழிப் பாடங்களில் முதல் மாணவராக வெற்றி பெற்று, கா.ஸ்ரீ.ஸ்ரீ. தங்கப்பதக்கம் பெற்றார். இவர் பள்ளிப் படிப்பை முடித்ததும் அந்தக் கால வழக்கப்படி இலட்சுமி அம்மாள் என்ற பெண்ணை 1930 ஆம் ஆண்டு மணம் செய்து கொண்டார்.

எழுதுவதில் ஈடுபாடு கொண்ட கா.ஸ்ரீ.ஸ்ரீ. 1934ஆம்ஆண்டு தொடக்கத்தில் சென்னையிலேயே வேலை தேட முயன்றார். கா.ஸ்ரீ.ஸ்ரீ. இந்திப் பிரச்சார சபை அச்சகத்தில் மாதம் முப்பது ரூபாய் ஊதியத்தில் பணியாற்றினார். தவிர இரண்டு, மூன்று மாதங்களில் தெலுங்கு, கன்னட, மலையாள மொழிகளை அவற்றின் லிபியுடன் ஓரளவு கற்க வேண்டும் என்று இந்திப் பிரச்சார சபையினரின் நிபந்தனையை ஏற்றுக்கொண்டு அதன்படியே சில மாதங்களில் இவர் அந்த மொழிகளை ஓரளவு கற்றார். அச்சுக் கூடத்தில் காலை எட்டரை மணி முதல் மாலை அய்ந்தரைமணி வரை அச்சுப்படி பிழைதிருத்தம் செய்யும் கடுமையான வேலை. மாலையில் அச்சுக்கூட வேலை முடிந்ததுமே, பெரம்பூருக்குச் சென்று இந்தி வகுப்பு நடத்துவார். இவர் நடத்திய அந்த வகுப்பில் பெரும்பாலும் இரயில்வே பணியாளர்கள் இருந்தனர்.

பிறகு இவர் நுங்கம்பாக்கத்தில் அரிசனக் குடியிருப்பில் முதன் முதல் இந்தி வகுப்பைத் தொடங்கியபோது, ஜே.சிவசண்முகப் பிள்ளையும், வழக்கறிஞர் பாஷ்யமும் தலைமை தாங்கிய நிகழ்ச்சி குறிப்பிடத்தக்கது. அறுபது ஆண்டுகளுக்கு முன்பு, தாழ்த்தப்பட்ட சாதியினரைத் தீண்டத்தகாதவராக உயர்சாதியினர் கருதி நடத்தி வந்த காலத்தில், உயர்சாதி வைதிக வகுப்பைச் சேர்ந்த கா.ஸ்ரீ.ஸ்ரீ. அரிசனக் குடியிருப்பில் இத்தகைய முயற்சியைத் தொடங்கினார் என்பது பெரிதும் போற்றுதற்குரியது. மிகப் பெரும் சாதனையாகவும் கருதக்கூடியதாகும்.

1937ஆம் ஆண்டு மார்ச் மாதம் மகாத்மா காந்தி சென்னை வந்தார். அப்போது உ.வே.சாமிநாத ஐயரவர்கள் எழுதிய தமிழ் வரவேற்புரையை இந்தி மொழியாக்கம் செய்யும் வாய்ப்பு கா.ஸ்ரீ.ஸ்ரீ.க்கு கிடைத்தது. இதையொட்டி, கி.வா.ஜ.வின் அறிமுகம் கிடைத்தது. தொடர்ந்து கலைமகளில் பணியாற்றும் வாய்ப்பும் கிட்டியது.

கா.ஸ்ரீ.ஸ்ரீ. என்னும் அறிஞரை அடையாளம் காட்டிய பெருமை கலைமகள், மஞ்சரி இதழ் நிறுவனத்தாரையும், அல்லயன்ஸ் நிறுவனத்தாரையும் சென்று சேரும். அல்லயன்ஸ் வெளியீட்டாளரின் மூன்ற தலைமுறைகளின் தொடர்புகளைப் பெற்றவர் கா.ஸ்ரீ.ஸ்ரீ. 1940களில் கா.ஸ்ரீ.ஸ்ரீ. தொடங்கிய காண்டேகரின் இலக்கியப் பணியை இன்று வரை அல்லயன்ஸ் நிறுவனத்தார் தொடர்ந்து செய்து வருகின்றனர். காஸ்ரீ.ஸ்ரீ. மொழிபெயர்த்த காண்டேகரின் 13 நாவல்கள், 150 சிறுகதைகளை 1942 முதல் 1990 வரை கலைமகள் அல்லது அல்லயன்ஸ் வெளியீடுகளாக, பல பதிப்புகள் வெளியிட்டு, தமக்கெனத் தனித்த முத்திரைகளைப் பதித்துள்ளன.

> **வி.ஸ. காண்டேகர் தமிழ்நாட்டில் வாசக உலகத்தில் ஒரு காலத்தில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த ஒரு மராட்டி எழுத்தாளரின் பெயர். 1940–50 களில் சுமார் பதினைந்து வருஷ காலம் இங்குக் காண்டேகர் சீசன் நிலைபெற்றிருந்தது.[3]**

என்று குறிப்பிடுகிறார் எழுத்தாளர் வல்லிக்கண்ணன்.

> **காண்டேகர் எழுத்துகள் ஏற்படுத்திய தாக்கம் காரணமாகச் சில தமிழ் எழுத்தாளர்கள் காண்டேகர் பாணியில் நாவல்கள் எழுத முற்பட்டார்கள் அந்நாள்களில்[4]**

இவ்வாறு எழுத முற்பட்டவர்களில் டாக்டர் மு. வரதராசனார் குறிப்பிடத் தகுந்தவர். காண்டேகர் படைப்புகளுக்குத் தமிழில் அப்படி ஒரு செல்வாக்கு ஏற்படக் காரணம் புதிய சமூகப்பார்வையை, ஒரு புதிய அணுகுமுறையாகக் காண்டேகர் தனது புதினங்களில், சிறுகதை களில், திரைப்படக்கதைகளில், நாடகங்களில், திறனாய்வுகளில் பயன்படுத்தியமையாகும். இந்தப் பின்புலத்தை நன்கு உணர்ந்தவர் அறிஞர் கா.ஸ்ரீ.ஸ்ரீ.

> குறிக்கோள் இல்லாத, இலட்சியமற்ற இலக்கியம் சிறந்த இலக்கியமாகாது. கணவனும் மனைவியும் பேசுவதுபோல மக்களிடம் இலக்கியம் பேச வேண்டும். படைப்பாளி தன்னுடைய படிப்பு, அனுபவம், வல்லமை, கற்பனைத்திறன், உயர்ந்த நோக்கம் ஆகியவற்றை ஒருங்கிணைத்து வாசகர்களுக்குக் கொடுக்கிற பொழுது சிறந்த இலக்கியம் உருவாகும். இத்தகைய சிறப்புகளையெல்லாம் உணர்ந்து தன்னுடைய படைப்பை வழங்கியவர் மராட்டிய இலக்கியச் சிற்பி காண்டேகர். இத்தகைய சிறந்த படைப்பாளியின் எழுத்துக்களைத் தமிழில் மொழிபெயர்க்கும்பொழுது, அந்த இலக்கியத்தின் புதிய மணம், புதிய நோக்கங்கள்,

> இலக்கியச் சுவை, வண்ணக் கோலங்கள் ஆகியவற்றைப் பெறமுடியும் என்ற தன்னம்பிக்கை ஏற்பட்டது. மொழிபெயர்ப்பு என்பது ஒரு நுண்கலை. மின்சாரம் ரயில் வண்டியை இழுத்துச் செல்வது போல மொழிபெயர்ப்பு அமைய வேண்டும். வாசகனைத் தன் வயப்படுத்தும் வகையில் எளிமையான நடையில் மொழிபெயர்ப்பைக் கொண்டு வரவேண்டும். மூல நூலாசிரியரை விட மொழிபெயர்ப்பாளருக்குப் பொறுப்பு அதிகம்.[5]

என்று குறிப்பிடுகிறார் கா.ஸ்ரீ.ஸ்ரீ.

வி.ஸ. காண்டேகர் நவீன மராத்திய இலக்கிய வரலாற்றில் 1919 ஆம் ஆண்டு முதல் 1976 வரை சுமார் அரை நூற்றாண்டுக் காலம் எழுத்துப்பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவர். இரண்டு தலைமுறை வாசகர்களிடையே அவரது எழுத்தின் தாக்கம் நிலவி வந்துள்ளது.

காண்டேகர் 'இலக்கியம்' என்பதைச் சமூக மாற்றத்தை உருவாக்க வல்ல ஆற்றல்மிக்க கருவியாகக் கண்டார். அதற்குரிய பண்பு நலன்களுடன் தனது எழுத்துகளை வழங்கினார். காண்டேகரின் படைப்புகள் வெறும் கதைகளாக அமையாமல் சமூகச் சிந்தனைகளும் கருத்துகளும் நிரம்பியனவாக விளங்குகின்றன.

ஒரு முறை 'மகாராஷ்டிரா டைம்ஸ்' என்னும் இதழுக்காக மாபெரும் மராட்டிய எழுத்தாளராக விளங்கிய ஜயவந்த் தள்வி என்பவர் காண்டேகரை நேர்காணல் நிகழ்ச்சிக்காகப் பல வினாக்களைக் கேட்டார். அதில் ஒன்று:

> கேள்வி: வாசகன் எதற்காகப் படிக்கிறான்? பொழுது போக்குவதற்காகவா, கலையறிவுக்காகவா?
>
> பதில் : மேல் எழுந்தவாரியாகப் பார்க்கும் பொழுது பொழுதுபோக்கு கட்டாயம் தேவை. ஆனால் ஒரு நாவல் கலைப்படைப்பாகவும் இருந்தால் பொழுதுபோக்கு ஆழ்ந்த சிந்தனையாக மாறுகிறது. ஆனால் வாசகன் நாவலை முதலில் எடுத்துக் கொள்வது பொழுது போக்குக்காகத்தான்; மனமகிழ்வுக்குமாகத் தான். அந்த நாவல் கலைப் படைப்பாக இருந்தால் கலையையும் அவன் நுகர்கிறான். கலையை நுகர்வதற்காக எவனும் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொள்வதில்லை. ஆர்டர் கொடுத்துச் செய்யும் பண்டம் இல்லை அது; கலை அனுபவம் தானாக விளைவது; ஆனால்

> வாசகர்களில் பலர் இதை அறிந்து கொள்வதில்லை.[6]

என்று பதிலளித்துள்ளார். வி.ஸ. காண்டேகர் வாசகர்களின் மனநிலையை உணர்ந்த எழுத்தாளராகத் திகழ்ந்தார்.

**காண்டேகரின் படைப்புகள்**

காண்டேகரின் படைப்புகள் யாவும் மனிதநேயம், பரிவு, பாசம், அன்பு, காதல் ஆகிய மனித உளவியல் போக்கினை எடுத்துக்கூறும் பாங்குடையனவாகும். மனிதநேயமே அனைத்திலும் உயர்ந்தது என்பதில் உறுதியான நம்பிக்கை கொண்டவராகக் காண்டேகர் திகழ்ந்தார்.

பதினைந்து புதினங்கள், ஏறத்தாழ முந்நூறு சிறுகதைகள், பதினெட்டு திரைக்கதைகள், பதினெட்டு கட்டுரைத் தொகுதிகள், ஆறு நீதிக்கதைத் தொகுதிகள், ஐந்து இலக்கியத் திறனாய்வுகள், ஒன்பது ஆராய்ச்சிக் கட்டுரைகள், மூன்று சொற்பொழிவுத் தொகுப்புகள், இரண்டு சுயசரிதை நூல்கள் ஆகியன காண்டேகரின் படைப்புகளாக மிளிர்கின்றன.

வி.ஸ. காண்டேகர் மராட்டிய இலக்கியப் போக்கில் புதுமை செய்தார். சமூக நிகழ்வுகளில், சமூகக் கட்டுப்பாடுகளில் பாதிக்கப் பெற்ற தனிமனிதர்கள் கதைமாந்தர்களாயினர். பெண்களின் உள்ளக் குமுறல்களை, எண்ணப்போக்குகளை, சிக்கல்களைச் சித்திரிப்பதில் வல்லவராகத் திகழ்ந்தார்.

ஹ்ருதயாசீ ஹாக (இதயக்குரல்) காண்டேகரின் முதல் நாவலாக 1930-ஆம் ஆண்டு வெளிவந்தது. காஞ்சன் ம்ருக (தங்கமான்), உல்கா (எரிநட்சத்திரம்), தோன் த்ருவ (இருதுருவங்கள்), ஹிர்வா சாப்பா (மனோரஞ்சிதம்), பாண்டரேடக (வெண்முகில்), தோன்மனே (இருமனம்), ரிகாமா தேவ்ஹாரா (வெறுங்கோயில்), ஸீகாசாசோதள (சுகம் எங்கே), பஹிலே ப்ரேம (முதற் காதல்), ஜளலேலா மோஹர் (கருகியமொட்டு), க்ரௌஞ்சவத (கிரௌஞ்சவதம்), அஷ்ரு (கண்ணீர்), யயாதி (யயாதி), அம்ருத்வேல் (அமுதக்கொடி) ஆகிய பதினைந்து நாவல்கள் காண்டேகரின் சிறந்த படைப்புகளாகும்.

காந்தீயத்தில் ஈடுபட்டுப் படிப்படியாக மார்க்சியத்தை நோக்கிச் செல்லும் சிந்தனைப் போக்கினை இவருடைய படைப்புகளில் காணமுடிகிறது. பொதுவாக 1920 முதல் 1930 வரையில் மராட்டி மொழியில் படைக்கப்பட்ட சிறுகதைகள், நாடகங்கள், நாவல்கள் ஆகியன அரசியல் விழிப்புணர்வின், சமூக விழிப்புணர்வின் தேவையை உணர்த்துவதாக அமைந்தன. அரசியல் நிலையில், அந்நிய ஆதிக்க எதிர்ப்புணர்வு, ஒத்துழையாமை இயக்கம், உப்பு யாத்திரை,

உழவர்களின் போராட்டம், காந்தியக் கோட்பாடு, மார்க்சியக் கோட்பாடு ஆகியவற்றின் பிரச்சாரமாக இவை அமைந்து வந்துள்ளன. சமூக நிலையில் சனாதன எதிர்ப்பு, சமூக அநீதி, பொருளாதார ஏற்றத் தாழ்வு, பெண் அடிமைத்தனம், மரபுகளின் பிற்போக்குத்தனம், கொள்கை நிலை இழப்பு ஆகியவற்றின் பிரச்சாரமாக மராட்டிய இலக்கியங்கள் படைக்கப்பட்டுள்ளன. இதற்கு அடிப்படைக் காரணம்,

> மராத்தியப் புதினங்கள் எப்படி இருக்க வேண்டுமென்று தரம் ஹரிநாராயண் ஆப்தே (Hari Narayan Apte)வால் இடப்பட்டது. வரலாற்றுப் புதினங்களோடு சமூக நாவல்களையும் ஒழுங்குபடுத்தி அவற்றில் ஒரு புதிய அழகியல் சுவையைச் சேர்த்தார். தத்துவ வாதியான் பேராசிரியர் வி.எம் ஜோஷி (Prof. V.M. Joshi) மற்றும் முதல் மராத்திக் கலைக்களஞ்சிய ஆசிரியரும் சமூக நோக்கு உள்ளவருமான எஸ்.வி. கேட்கர் ஆகியோர் மராத்தியப் புதினங்களுக்கு ஒரு தத்துவ மற்றும் சமூக நிலைகளைக் கொடுத்தனர். டாக்டர் எஸ்.வி. கேட்கர் துணிவாக யாரும் எழுத முற்படாத சமூக நிலைகளைத் தன் புதினங்களில் கையாண்டார். குறிப்பாக விபச்சாரிகளின் சந்ததி (The future of the progeny of prostitutes) குறித்து அவர் மேற்கொண்ட விதம் குறிப்பிடத்தக்கதாகும்[7]

இவ்வாறு ஹரி நாராயண் ஆப்தே, பேராசிரியர் வி.எம். ஜோஷி, டாக்டர் எஸ்.வி. கேட்கர், கோல்ஹாட்கர் (Kolhatkar) போன்றோரின் உயிரோட்டம் மிக்க பகுத்தறிவுப் படைப்புகள் மராட்டிய இலக்கிய நிலத்தைப் பண்படுத்தியிருக்கின்றன என்பதை உணரமுடிகிறது. இந்தப் பின்புலத்தில் உருவான காண்டேகரின் படைப்புகள் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றன.

இளம் தலைமுறையினருக்கு இன்றைய சமூகத் தேவைகளைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது மிகக் கவனமாகக் கதை மாந்தர்களின் வழியே எடுத்துக் காட்டுகிறார் காண்டேகர்.

> புரட்சி செய்வதற்கும், போரும் சச்சரவும் நிகழ்த்தி அதில் வெற்றி பெறுவதற்கும் வேண்டிய தைரியம் இவர்களிடம் (ஏழைகளிடம்) ஏது? தம் வேலைக்காரர்கள் பயங்கொள்ளிகளாக இருப்பதற்கு வேண்டிய முயற்சிகளையே எஜமானர்கள் எப்பொழுதும் செய்து வருகிறார்கள். தாம் சொந்தமாகக் கஷ்டப்பட்டு வாழும் இந்த மனிதர்களுக்கு எழுதப்படிக்கத் தெரிவதில்லை. மனிதனின் விதி அவனுடைய தலையெழுத்தில் இல்லை.

அவனுடைய மனோ பலத்தில்தான் இருக்கிறது என்ற விஷயம் இவர்களுக்குப் புரிவதில்லை. 'ஆண்டவனுக்கு எப்போதாவது நம்மீது இரக்கம் பிறக்கும்' என்ற பைத்தியக்கார ஆசையும் இவர்களை விட்டு விலகுவதில்லை. அப்படி இருக்க, 'எந்தச் சமூகத்துக்காக நாம் செத்துச் சுண்ணாம்பு ஆகிறோமோ, அந்தச் சமூகம் நாம் உயிர் வாழ் வதற்குரிய சாதாரணமான சுகங்களைக் கூட நமக்கு அளிப்பதில்லை என்பதைப் பற்றிக் கிளர்ச்சி செய்யும் அறிவு இவர்களுக்கு எங்கிருந்து வரும்! மிதிபட்ட ஜனங்களை விழிக்கச் செய்வது, மனிதர்கள் என்ற முறையில் அவர்கள் தமக்கு உரிமையானவற்றைப் பெறுவதற்காகச் சச்சரவும், நெருக்கடியும், போரும், விளைவிக்க சந்தர்ப்பங்களுக்குத் தகுந்தாற் போல் அந்தப் போர்களிலே தங்கள் உடல்களைக் காப்பாற்றிக் கொள்ளவும் அவர்களைத் தயார் செய்வது எவ்வளவு பெரிய வேலைகள் நம் தலைமுறைக்கு இருக்கின்றன. இவ்வளவு நாளும் வாழ்க்கை என்பது ஒரு மனிதனின் போராட்டம் என்று நான் கருதியிருந்தேன். அது முழுச் சமூகத்தின் போராட்டம் என்பதை இன்றுதான் அறிந்தேன்.[8]

இவ்வாறு ஆனந்தன் (சுகம் எங்கே?) என்ற கதாபாத்திரத்தின் வழியே காண்டேகரின் கொள்கைகள் ஆணித்தரமாக வெளிப்படுகின்றன.

கீதையிலுள்ள ஒரு சுலோகத்துக்கு நூற்றுக்கணக்கான அர்த்தங்கள் கண்டுபிடிக்கத் தலைமுறை தலைமுறையாக முயன்று வருகிற நம்முடைய புத்திசாலித்தனத்துக்குச் சமூகத்திலுள்ள தாழ்ந்த வகுப்பினர் நூற்றாண்டுக்கணக்காக எப்படி வாழ்ந்து வந்திருக்கிறார்கள் என்பதை ஆராய வேண்டுமென்ற அவசியம் தோன்றவில்லை[9]

(கருகிய மொட்டு) என்று தனது நூல் முன்னுரையில் சமூகத்தில் உள்ள குறைபாடுகளைச் சுட்டிக்காட்டுகிறார். தனது இலட்சியப் பிடிப்பு, கற்பனை, சொல்லழகு, ஏழைகளின்பால் அன்பு, இயற்கையின் மீது நேசம் என்று பல்வேறு கோணங்களில் இவருடைய கதைமாந்தர்கள் படைக்கப்பட்டுள்ளனர்.

காண்டேகரின் 'கிரௌஞ்சவதம்' சிறந்த புதினமாகப் போற்றப்பட்டது. 'யயாதி' என்ற புதினத்திற்குப் பாரதீய ஞானபீடப் பரிசு கிட்டியது. 'பத்மபூஷன்' விருதும் மேலும் பல இலக்கியச் சிறப்பு விருதுகளையும் பெற்றுள்ளார்.

> ஏறத்தாழ நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ள காண்டேகர் பிறமொழிகளிலும் அறிந்த முதல் மராத்திய எழுத்தாளர் என்றால் மிகையாகாது. அவரது நூல்கள் குஜராத்தி, தமிழ், இந்தி, சிந்தி, கன்னடம், மலையாளம் மற்றும் வங்கம் ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.[10]

சமூக நிகழ்வுகளில், சமூகக் கட்டுப்பாடுகளில் பாதிக்கப் பட்ட தனிமனிதர்கள் காண்டேகரின் கதைமாந்தர்களானார்கள். எரி நட்சத்திரம், புயலும் படகும் ஆகிய புதினங்களில் கதைமாந்தர்கள் தாங்களே கதை கூறுவது போலவும், சுகம் எங்கே, வெறுங்கோயில், யயாதி ஆகியவற்றில் கதைமாந்தர்கள் மாறி மாறிக் கதை கூறுவது போலவும், கருகியமொட்டு, கிரௌஞ்சவதம் ஆகியவற்றில் கதை மாந்தரோடு ஆசிரியர் கதை கூறுவதாகவும் மனோரஞ்சிதம், இருமனம், இருதுருவங்கள் ஆகியன படர்க்கைக் கூற்றில் கதை கூறுவதாகவும் அமைத்துள்ளார். கடிதங்களையும் நாட்குறிப்பையும் பயன்படுத்திக் கதை நிகழ்ச்சியைக் கூறிச் செல்வதும் காண்டேகர் பயன்படுத்திய ஒரு சிறந்த உத்தியாகும். காண்டேகர் கதைப் பின்னலில் கையாண்ட உத்திகளுள் தம்மையே கதைமாந்தருள் ஒருவராகப் படைப்பதும் ஒன்று. கருகிய மொட்டில் காண்டேகரின் உண்மையான அனுபவங்கள் பேசப்படுகின்றன.

> இயல்பாகவே இந்த நாவலில் என்னைப் பற்றியும் என் குடும்பத்தைப் பற்றியும், என் நண்பர்கள், என் நடவடிக்கைகள் முதலிய விஷயங்களைப் பற்றியும் அடிக்கடி குறிப்பிடுவது இன்றியமையாததாயிற்று[11]

என்று இக்கதையின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

வாசகர்கள் தங்களுடைய அனுபவங்களை அந்தரங்கக் கடிதங்கள் மூலமாகக் காண்டேகருடன் பகிர்ந்து கொண்டுள்ளனர். இதனால் தனது கதைமாந்தர்களின் உரையாடல்களையும், நிகழ்ச்சிகளையும் வெகு இயல்பாகவே அமைத்து வழங்கியுள்ளார்.

> மனிதர்களின் உணர்வு அவர்களின் நிலையை நிர்ணயிக்கவில்லை. அவர்களுடைய சமுதாய நிலைமையே அவர்களின் உணர்வுகளை நிர்ணயிக்கிறது[12]

இந்த உணர்வுநிலை ஏதாவது ஒரு நிலையில் அடிமைத்தனத்தில் முடங்கிப் போவதாகவோ அல்லது அடிமைப்படுத்துதலையும், அடிமைப்படுவதையும் எதிர்ப்பதாகவோ அமைந்து வருவதைக் கடந்தகால மானுட வாழ்வியல் வரலாறு உணர்த்துகின்றது. அந்நிய ஆதிக்கத்திற்கு உட்பட்ட இந்தியாவில் சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகிய இடங்களில் இருந்த அந்நிய நிர்வாக அமைப்புத்

தலைநகரங்கள் வழியாக இலக்கியப் பரிமாற்றங்களும் நடந்து வந்திருக்கின்றன. பொது உடைமைப் புரட்சிகர சிந்தனைகளுக்கு இடமளித்த கல்கத்தா (மேற்கு வங்காளம்), பம்பாய் (மகாராட்டிரம்) மாநிலங்களில் தோன்றிய இலக்கியவாதிகளின் படைப்புகளுக்கு மொழிபெயர்ப்புகளின் மூலம் ஆதரவு இருந்து வந்துள்ளது. பங்கிம்சந்திரசட்டர்ஜி, பிரேம்சந்த் சரத்சந்திரர் ஆகியோரின் படைப்புகள் திரைப்படங்களாக வந்து வெற்றி பெற்றதும் இதற்கு ஒரு சான்றாகும்.

சமூகத்திற்கு தேவையான இத்தகைய இலக்கியங்கள் எங்கிருந்தாலும் தேடிப்பிடித்து மொழிபெயர்த்து வழங்க வேண்டும் எனும் நோக்கில்தான் கா.ஸ்ரீ.ஸ்ரீ. காண்டேகரைத் தேடிப் பிடித்துத் தமிழில் அறிமுகப்படுத்தினார்.

> ***சென்னைக்கு வந்த பிறகு மராட்டிய இலக்கிய உலகில் சிறந்து விளங்கும் 400, 500 நூல்களை மராட்டிய மொழியில் படித்தேன். மராட்டிய இலக்கியம் எவ்வளவு ஆழ்ந்தது என்பதைப் பல புத்தகங்களின் வழியாக அறிந்தேன். தமிழ், குஜராத்தி, இந்தி, வங்கம் ஆகிய மொழிகளில் காண்டேகரின் நாவல்கள் மிகுதியாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. எனினும், தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட அளவுக்கு மற்ற மொழிகளில் இல்லை. மூலநூலாசிரியரே மொழிபெயர்ப்பாளரைப் பாராட்டுகின்றது சிறப்பு எனக்குக் கிடைத்தது. காண்டேகரைப் போல், தமிழில் மட்டுமல்ல, வேறு எந்த இந்திய மொழியிலும் எந்த ஆசிரியரும் இல்லை. பரந்த படிப்பு, அனுபவம், ஆழ்ந்த புலமை, உயர்ந்த மணிமொழிகள், புதிய உத்திகள், பழமொழிகளைத் தொகுத்துக் கொடுத்தல் ஆகியவை காண்டேகரின் தனிச்சிறப்பு***[13]

என்று கூறினார்.

தனக்குக் கிடைத்த ஞானபீடப் பரிசான ரூபாய் இலட்சத்தையும் நல்லதொரு முயற்சிக்காக அளித்த ஒப்பற்ற மராட்டிய எழுத்தாளரான காண்டேகரைச் சாகித்திய அக்காதெமி பரிசு பெற்ற கட்டுரையாளர், ரணஜித் தேஸாய் எனும் புகழ்பெற்ற எழுத்தாளர் 'எங்கள் அண்ணன்' எனும் தலைப்பில் எழுதியுள்ள கட்டுரையில் குறிப்பிட்டுள்ளதாவது:

> ***அண்ணனின் பார்வை மங்கினாலும், அவருடைய மனசில் எந்தவித மாற்றத்தையும் உண்டாக்க வில்லை. முடிந்தவரைக்கும் பிறர் உதவியில்லாமல் தம் வேலைகளை வழக்கம்போல் செய்கிறார். புதிய***

> நாவல்களையும் செய்தித்தாள்களையும் பிறரைப் படிக்கச் செய்து கேட்கிறார்.
>
> நான் ஏதோ வேலை காரணமாக அவரது வீட்டிற்குச் சென்றிருந்தபோது, இரண்டாம் மாடிக்குப் போகக் கிளம்பினார். அண்ணன் கீழே இறங்கும்போது நான் அவருடைய கையைப் பிடிக்கப்போனேன். வேண்டா மென்று தடுத்துவிட்டு அவர் சொன்னார். 'வேண்டாம் ரணஜித்! நான் யாருடைய துணையும் இல்லாமல் போவேன்' என்று அண்ணன் காலைக் கீழே வைத்தார். திரும்ப வேண்டிய இடத்தில் திரும்பினார். மாடிப்படி வந்தது. மாடிப்படிச் சுவர்க் கைப்பிடியைச் சரியாகப் பிடித்துக்கொண்டு ஏறினார். நடுவில் சற்று நின்றார். அவர் பேசிக் கொண்டிருந்தார்.
>
> வீட்டில் இருந்துக்கொண்டே வீட்டை அறியாமல் இருந்தேன். இப்பொழுது சுவர்கள், மாடிப்படிகள் எல்லாவற்றுக்கும் உயிர் வந்திருக்கிறது. வீட்டைத் தொடுவதால் வீடு பேசுகிறது. தூண்கூட எனக்கு உதவுகிறது. ஜடத்தைக்கூட உயிரூட்டும் இந்தக் குருட்டுத்தனம் எவ்வளவு அழகாக இருக்கிறது தெரியுமா? என்றார். (மஞ்சரி, சன. 1976, ப. 20)

காண்டேகரின் இந்த அனுபவ உணர்ச்சியைக் காணும் பொழுது இந்த மாபெரும் மனிதனை, படைப்பாளியை விரும்பாதவர் உண்டோ. 1940களில் தமிழகத்தில் சுயமரியாதை இயக்கத்தினரின் கொள்கைகள் பரவிய காலக்கட்டத்தில் காண்டேகரின் இலக்கியம் தமிழகத்தில் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. தமிழகத்தின் தலைவர்கள் முதல் படிப்பார்வம் மிக்க தொண்டர்கள் வரை காண்டேகரின் படைப்புகள் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் மொழிபெயர்ப்பில் படித்து மகிழ்ந்தனர். இத்தகைய மாபெரும் இலக்கியவாதியைத் தமிழுலகுக்கு அடையாளங்காட்டிய பெருமை கா.ஸ்ரீ.ஸ்ரீயைச் சாரும்.

### தமிழகக் காண்டேகர் கா.ஸ்ரீ.ஸ்ரீ.

கா.ஸ்ரீ.ஸ்ரீ. பல்வேறு நூல்களை மொழிபெயர்த்து வழங்கிய போதிலும் மராட்டிய எழுத்தாளர் வி.ஸ. காண்டேகரை மொழி பெயர்த்து வழங்குவதைத் தனது ஆயுட்காலச் சிறப்புப் பணியாகவும், கடமையாகவும் கொண்டு பணியாற்றியுள்ளார். இதனால் 'தமிழகக் காண்டேகர்' என்ற பாராட்டைப் பெற்றார். காண்டேகர் எழுதிய பதினைந்து புதினங்களில் பன்னிரெண்டு புதினங்கள் கா.ஸ்ரீ.ஸ்ரீ. அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அவை **இருதுருவங்கள், இரு மனம், எரிநட்சத்திரம், வெண்முகில், மனோரஞ்சிதம், கிரௌஞ்சவதம், வெறுங்கோயில், புயலும் படகும்,**

சுகம் எங்கே? கருகிய மொட்டு, அமுதக்கொடி, யயாதி என்பனவாகும். காண்டேகர் எழுதிய 300 சிறுகதைகளில் சுமார் 100 கதைகள் 11 கதைத் தொகுதிகளாக, தமிழில் கா.ஸ்ரீ.ஸ்ரீ. மொழிபெயர்த்துள்ளார். இவை முதல் நாள், வாயு கன்னிகை, கண்ணாடி அரண்மனை, ஜமீன்தார் மாப்பிள்ளை, ஜூன் 20, கறுப்பு ரோசா, கவியும் கனியும், கூட்டுக்கு வெளியே, அரும்பு, ஆஸ்திகன், மலர்க்கொடி ஆகிய தொகுதிகளில் வெளிவந்துள்ளன. பல கதைகள் கலைமகள் இதழில் தொடராகவும், தனிக்கதைகளாகவும் வெளிவந்துள்ளன.

1942 ஆம் ஆண்டு முதன் முதலாக வி.ஸ. காண்டேகரின் 'சகோதரமும் சாதகமும்' என்ற உருவகக் கதை கி.வா.ஜ. வாயிலாகத் தினமணி மலரில் இடம் பெற்றது. பிறகு கலைமகள் இதழில் காண்டேகரின் புதினங்கள் தொடர்ச்சியாகத் தமிழில் வெளிவந்தன. மஞ்சரி இதழிலும் பிறமொழிக் கதைகளை மொழிபெயர்த்து வெளியிடுவதில் ஈடுபட்டார் கா.ஸ்ரீ.ஸ்ரீ.

> மொழிபெயர்ப்பு என்பது முட்பாதை, நெருஞ்சி முள்ளும், நாகதாளியும் நிறைந்தது. இதில் நடந்து இலட்சியத்தை எட்டுவது மிகவும் சிரமம். தவிரவும் மூலநூலாசிரியருக்குக் கிடைக்கும் மதிப்பு மொழி பெயர்ப்பாளருக்குக் கிடைப்பதில்லை. ஆனால் விதிவிலக்காகத் தமிழகத்தில் மூல ஆசிரியரான காண்டேகருக்குக் கிடைத்த மேன்மை எனக்கும் கிடைத்தது. தமிழ் வாசகர்கள் என்னிடம் மிக்க அன்பும் பரிவும் கொண்டிருந்தார்கள்[14]

எனக் கா.ஸ்ரீ.ஸ்ரீ. குறிப்பிடுகிறார்.

### மொழிபெயர்ப்பைப் பற்றிக் கா.ஸ்ரீ.ஸ்ரீ.

> காண்டேகரின் இலக்கியத்தைத் தமிழில் கொண்டு வர நான் பெரிதும் பாடுபட்டிருக்கிறேன்[15]

என்ற அவருடைய சொற்களைவிட அவருடைய மொழிபெயர்ப்புகள் மிகுதியாக, கா.ஸ்ரீ.ஸ்ரீயின் உழைப்பை எடுத்துரைக்கின்றன.

மொழிபெயர்ப்பு, மொழிபெயர்ப்பாசிரியர் என்ற இரு கோணங்களும் மறைந்து மூல நூலாசிரியரான காண்டேகர் தமிழில் வழங்குவதுபோல மொழிபெயர்ப்பை வழங்கியுள்ளார் கா.ஸ்ரீ.ஸ்ரீயிடம் அவருடைய மொழிபெயர்ப்பு அனுபவம் பற்றிக் கேட்டபொழுது,

> மொழிபெயர்ப்பு என்பது ஓர் நுண்கலை **(Fine Art)**. பாட்டில் பிசிறுதட்டினால் இசை நிற்காது. நாட்டியத்தில் ஓர் உணர்ச்சிக்குப் பதிலாக வேறோர் உணர்ச்சியை அபிநயத்தால் நாட்டியம் சிறக்காது. அதுபோலவே மொழிபெயர்ப்பில் ஒவ்வொரு

> சொல்லும் அங்கங்கே பொருத்தமாக அமைய வேண்டும். மூல ஆசிரியர் சமைப்பதற்கு வேண்டிய பண்டங்களைக் கொடுக்கிறார். அந்தப் பண்டங் களைக் கொண்டு மொழிபெயர்ப்பைச் சுவைபட அமைப்பது மொழிபெயர்ப்பாளனின் திறமை. சமையலில் உப்போ, புளிப்போ, காரமோ சிறிது குறைந்தாலும் அதிகமானாலும் உணவை யாரும் சீந்தமாட்டார்கள். மொழிபெயர்ப்பைப் படிக்கையில் எங்கும் தங்குதடையின்றி வாசகம் வேகமாகச் செல்ல வேண்டும். இல்லையென்றால் தடை வந்ததுமே வாசகன் புத்தகத்தை மூடி வைத்து விடுவான். மொழி பெயர்ப்பு என்பது ஒரு நூலை ஆழ்ந்து படிப்பதாகும். **Translation is a deep study.** மொழியாக்கத்துக்குத் தேவையான கருவிகளை மொழிபெயர்ப்பாளன் முன்னமே சேமித்து வைத்துக் கொள்ள வேண்டும். மொழிபெயர்ப்பு என்பது எளிதான செயல் என்று பலரும் நினைக்கிறார்கள். ஆனால் அது ஓர் கடுந்தவம். என் தமிழாக்கங்களில் மூல ஆசிரியர் தமிழில் எழுதினால் எப்படி சொற்களை அமைப்பாரோ அதுபோலவே மிகவும் ஆழ்ந்து சிந்தித்தே சொற்களைப் பயின்றிருக்கிறேன். **My readers find a rich Tamil diction in my translations.** அங்கங்கே விளக்கம் கொடுக்க வேண்டிய இடங்களில் அடிக்குறிப்பில் விளக்கம் தந்திருக்கிறேன்[16]

என்று தமது அனுபவத்தைக் கூறியுள்ளார் கா.ஸ்ரீ.ஸ்ரீ.

## காண்டேகர் நாவல்களின் வெற்றிக்குக் காரணம்

கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் தமிழாக்கம் அவை மராட்டியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை என்று தோன்றாத விதத்தில் தமிழிலேயே எழுதியவை போல அமைந்திருந்ததே காண்டேகர் நாவல்களின் வெற்றிக்கு முக்கியக் காரணம் ஆகும். சில இடங்களில் சில மாறுதல்கள் செய்துள்ளேன் என்று கூறுகிறார் கா.ஸ்ரீ.ஸ்ரீ. சான்றாக

> 'இருதுருவங்கள்' என்ற நாவலில், 'ஸாவ்ளா என்ற பாத்திரம் வருகிறது. 'ஸாவ்ளா' என்றால் 'கறுப்பன்' என்று பொருள். 'ஸாவ்ளா' என்றே எழுதினால் வாசகருக்குப் படிக்கும்பொழுது அலுப்புத் தட்டும். எனவே கறுப்பன் என்றே குறித்திருக்கிறேன்[17]

என்கிறார்.

> சுகம் எங்கே என்ற நாவலில் ஓர் இடத்தில் பாபூகெனு என்பவனைப் பற்றிய குறிப்பு வருகிறது. ஆனால் பாபூகெனு என்பவன் யார் என்பது இன்று

> மராட்டியருக்கே தெரியாது. 1932 ஆம் ஆண்டு சத்தியாக்கிரகத்தில் பிரிட்டிஷ் ராணுவத்தினர் லாரியால் நசுக்கிக் கொன்ற தொழிலாளச் சிறுவன் அவன். அவனது தியாகம் விடுதலைப் போரில் மிகவும் சிறந்ததாகக் கருதப்பெற்றது. இப்படி அங்கங்கே விளக்கம் தந்திருக்கிறேன்[18]

என்று கூறும் கா.ஸ்ரீ.ஸ்ரீ. எந்த நூலைத் தமிழாக்கத்துக்கு எடுத்துக் கொண்டாலும் அதைப்பற்றிய முழுத்தகவலையும் சேகரித்துக் கொள்கிறார். காண்டேகரின் நாவல்களில் ஆங்காங்குக் கவிதைகள் இடம் பெற்றுள்ளன. இவை பெரும்பாலும் மராட்டிய மொழியில் இருப்பதற்கு இணையாகத் தமிழில் வழங்கியுள்ளார்.

> மராட்டிய பக்தர்களின் வாசகங்கள் வருமிடத்தில் தக்கபடி ஆழ்வார்களின் பாசுரங்களை அமைத்திருக் கிறேன். சில இடங்களில் நேர்த் தமிழாக்கமும் செய்துள்ளேன். உதாரணமாக, துகாராமின் ஒரு பாடலை, 'எங்கே நான் சென்றாலும் நீ என் தோழன். கைப்பிடித்தே என்னை வழிநடத்திச் செல்வாய் என்று தமிழாக்கியிருக்கிறேன்[19]

என்று குறிப்பிடுகிறார். மராட்டிய இன மக்களின் வாழ்வும், சிந்தனையும் தமிழர்களின் வாழ்வுடனும், சிந்தனையுடனும் ஒருங்கே அமைந்திருப்பதாலும் அந்நியத்தனம் அமையாவண்ணம் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் மொழிபெயர்ப்பு அமைந்துள்ளது. (எ.டு.)

> நடந்து கொண்டே நான் ஒரு கிராமத்தில் பள்ளிக் கூடத்தினருகே வந்தேன். சற்று இளைப்பாறக் கருதி அங்கே மர நிழலில் உட்கார்ந்தேன். உள்ளே ஆசிரியர் மாணவர்களுக்கு 'கடவுள் இரக்கமுள்ளவர்' என்ற கதையைச் சொல்லிக் கொண்டிருந்தார்.
>
> நான் 'விர்'ரென்று எழுந்து நடக்கலானேன். சிறுவயதில் இதே கதையை நான் பள்ளியில் படித்திருந்தேன். 'கடவுள் இரக்கமுள்ளவர்' என்னும் வார்த்தையில் நம்பிக்கை வைத்துத்தான் நான் இவ்வளவு நாளும் எல்லாத் துன்பங்களையும் பொறுத்திருந்தேன். ஆனால் நேற்றிரவு நடந்த அந்தச் சம்பவம்
>
> கடவுள் இரக்கமுள்ளவரானால், ,அவர் உஷாவின் ஏழாவது வயதில் அவளுடைய தாய்தந்தையரை ஜுரத்தில் கொன்றிருக்கமாட்டார். அவளுடைய சிற்றன்னையை இவ்வளவு இரக்கமற்றவளாகச் செய்திருக்க மாட்டார். அவளுடைய பதினான்காவது வயதில் அவளுக்கு மணம் புரிவித்து, மணமான ஆறு

மாதத்துக்கெல்லாம் அவள் குங்குமத்தை அழித்திருக்க மாட்டார்[20]

'சுகம் எங்கே?' எனும் இந்நாவலில் உஷா என்ற விதவைப் பெண்ணின் மனத்தவிப்புடன் வாசகர்கள் அந்தப் பாத்திரப் படைப்பை உணர்ந்து ஒன்றிச் செல்லுமாறு மொழிபெயர்ப்பை வெகு இயல்பாகக் கையாண்டுள்ளார் கா.ஶ்ரீ.ஶ்ரீ. கதை, கருத்து, நடை, உவமை, சொல்நயம் எல்லாவற்றையும் தமிழில் கா.ஶ்ரீ.ஶ்ரீ.யால் கையாள முடிந்ததால்தான் காண்டேகரைத் தமிழ் எழுத்தாளர்கள் பலரும் பின்தொடர வாய்ப்பாக அமைந்துள்ளது.

## கா.ஶ்ரீ.ஶ்ரீ.யின் மொழிபெயர்ப்பில் தமிழ் வாசகர்களைக் கவர்ந்த காண்டேகரின் கதைகளும் கதை மாந்தர்களும்

காண்டேகரின் பல நாவல்கள் பல புகழ் பெற்ற எழுத்தாளர்கள் முதல் சாதாரண வாசகர்கள் வரை தங்கள் மனதில் பசுமையாகப் படர்ந்திருப்பதை நினைவுகூர்வதைக் காணலாம். தனிமனித வாழ்வியல் சிக்கல்களையும், சமூகச் சிக்கல்களையும் இணைத்துக் காணும் மனப்போக்கு இதற்கு அடிப்படைக் காரணமாகும். இதில் தன்னுடைய அனுபவங்களையும் தனது வாசக அன்பர்களின் அனுபவங்களையும் தனது கதாபாத்திரங்களின் வழியே பொருத்திக் காட்டுவதைத் தனிக்கலையாகக் கையாண்டார். இந்த அனுபவங்கள் தமிழில் இடம் பெறும் பொழுது எந்தவித வேறுபாடும் தெரியாமல் கா.ஶ்ரீ.ஶ்ரீ. மொழிபெயர்த்தார். சிலவற்றை இங்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

காண்டேகர் கிராமத்தையும் அங்கு வாழும் ஏழை எளிய மக்களையும் ஆசிரியர் தொழிலையும் நேசித்து அதன்படி வாழ்ந்து வந்த அனுபவத்தை 'ஹிருதயச்சீ ஹாக' (இதயக்குரல்) கதையின் கதாநாயகனான சுதாகரனிடம் காணலாம். இந்தக் கதையின் கதாநாயகன் சுதாகரன் கிராமத்தைச் செழிப்பாக்க வேண்டும், கிராம மக்களுக்குப் புத்துணர்ச்சி ஊட்ட வேண்டும் என்ற எண்ணத்துடன் ஒரு கிராமத்திற்கு ஆசிரியராகச் செல்கிறான். அங்கே சுதா என்ற விதவையைக் காதலிக்கிறான். அதற்காகப் பல துன்பங்களையும் சமூகத்தின் எதிர்ப்புகளையும் துணிவாக எதிர்கொள்கிறான். தொன்று தொட்டு வரும் பண்டை மரபு, பழக்க வழக்கம், நம்பிக்கைகள் என்ற போக்கினைக் கண்மூடிக் கொண்டு பின்பற்றிச் செல்லாமல், மனித மனங்களிடையே விரிசல்களை, சிக்கல்களை உருவாக்கும் எதனையும் களைய முற்பட வேண்டும் என்ற முற்போக்குச் சிந்தனையுடன் தமது முதல் நாவலைக் காண்டேகர் வெளிக்கொணர்ந்துள்ளார். 1930ஆம் ஆண்டு மராட்டி மொழியில் வெளிவந்து இறுகிக் கிடந்த பழமை மரபுச் சமுதாயத்தில் ஒரு புதிய விழிப்புணர்வு ஊட்டுவதாக இந்நாவல் அமைந்தது. விதவை மணத்தை ஆதரிப்பது ஒரு சமுதாயக் குற்றமாகக்

கருதிய காலத்தில் இந்நாவல் வெளிவந்தது. இந்நாவல் இந்திய மொழிகள் பலவற்றில் மொழிபெயர்க்கப்பட்டுச் சமூகச் சீர்திருத்தத்தை வரவேற்கும் பலரால் பெரிதும் பாராட்டப்பட்டது.

இதைப்போன்றே 'மனோரஞ்சிதம்' என்ற நாவலில் ரஞ்சிதம் உயர் கல்வி பயின்று டாக்டராகி, பாரிஸ்டரான விஜயனுடன் பழகுகிறாள். அவள் அவனிடம் ஈடுபாடு கொள்கிறாளே தவிர மையல் கொள்ளவில்லை. இலட்சியவாதியாகவும் தியாகியாகவும் விளங்கிய ஒரு வேலைக்காரியின் மகனான ஏழை முகுந்தனை, ரஞ்சிதம் பெரிதும் விரும்பி அவனிடம் காதல் கொள்கிறாள். அவன் கல்லூரியில் பயிலும் பொழுது மனிதர்களின் வாழ்க்கையை ஊன்றிக் கவனித்தான். அதனால் கல்லூரிப் பாடப் புத்தகங்களிலிருந்து தனது கவனத்தைத் திருப்பிச் சமூகத்தில் நடக்கின்ற அநீதிகளைக் களையத் தனது சுகவாழ்வை வெறுத்தான். சமூகச் சீர்திருத்தத்துக்கும் நாட்டு விடுதலைக்கும் பாடுபடுகிறான். ரஞ்சிதமும் முகுந்தனுடன் அப்பணிகளில் பங்கேற்று அவனது வழியிலேயே செல்கிறாள் என்பது இந்நாவலின் கதையாக உள்ளது.

> **கிறிஸ்துவின் பிறப்புக்கு முந்திய காலத்துப் புத்தகங்களை ஆதாரமாக வைத்துக் கொண்டு இன்றைய பிரச்சினைகளைத் தீர்க்க முயல்வது சுத்த முட்டாள்தனம். நிகழ்காலம் என்பது ஓடுகிற ஆற்று வெள்ளத்தைபோல. சென்ற கால்மாகிய மலையிலிருந்து தான் அது உதித்தது என்றாலும் எதிர்காலமாகிய கடலை நோக்கித்தானே அது ஓட வேண்டும்[21]**

இந்த நாவலின் மூலம் சொல்ல வேண்டிய முழு கருத்தை முகுந்தன் என்ற கதாபாத்திரத்தின் வழியாக இவ்வாக்கியங்களில் பொதிந்து வைத்து விடுகிறார் வி.ஸ. காண்டேகர்.

வெறுங்கோயில் (ரிகாம தேவ்ஹாரா) என்ற நாவலை ஒரு புதுமையானதாகப் படைத்துள்ளார். இந்த நாவலில் காண்டேகருக்குப் பிடித்தமான கல்லூரி ஆசிரியர் பாத்திரமாக அசோகன் சித்திரிக்கப் படுகிறார். அத்துடன் நாத்திகக் கொள்கையைப் பின்பற்றுபவராக, சமுதாயக் குறைபாடுகளைக் களைய முற்படுபவராக, ஆசிரமங்களில் நடக்கும் சில முறைகேடுகளைக் கண்டிப்பவராக, தியாகத்தன்மை பொருந்திய ஒரு சிறந்த மனிதனாக அசோகன் பாத்திரம் இந்நாவலில் அமைகிறது. அவர் எழுதிய தேவதா (கடவுள்) என்ற திரைக்கதையை மூலமாகக் கொண்டது இந்நாவல்.

ஏராளமான வாசகர்கள் தங்களுடைய கடிதங்கள் மூலமாகக் காண்டேகருடன் பகிர்ந்து கொண்டனர். கடிதம் எழுதியவர்களில் ஒவ்வொருவரும் கடைசியில் ஒரு வாக்கியத்தை மட்டும் எழுத மறக்கவே இல்லை.

> **இந்தக் கடிதத்தைப் படித்தவுடனே கிழித்துப் போட்டு விடுங்கள்[22]**

எனக் குறிப்பிட்டிருந்தனர். அந்தக் கடிதங்கள் யாவும் ஒவ்வொருவரின் துன்பத்தை வெளிப்படுத்தின. அந்தக் கடிதங்களைக் காண்டேகர் கிழித்துப் போடும்பொழுது கடிதம் எழுதியவர்களின் துன்பத்தை விட மிகப் பெரிய துன்பத்திற்கு ஆளானார். அவருடைய படைப்புகளில் கதாபாத்திரங்களை இயல்பான உரையாடல்களுடன், நிகழ்ச்சி களுடன் அமைக்க இக்கடிதங்கள் உதவின.

'கிரௌஞ்சவத்' என்ற நாவல் 1942ஆம் ஆண்டில் வெளிவந்தது. இது 'கிரௌஞ்சவதம்' என்ற பெயரிலேயே தமிழில் வெளிவந்தது.

> **செயல்தான் மனிதனுடைய முன்னேற்றத்துக்கு உதவ முடியும். இந்த வடிவம் வாயினாலோ கண்ணாலோ – பேசாது. அது எப்போதும் கையினால் பேசும் .தன் இரத்தத்தைப் பாய்ச்சிப் பிறருடைய வாழ்க்கையை அது மலர வைக்கும், சொல், கண்ணீர், இரத்தம் மூன்றும் பிறக்கும் இடம் ஒன்றுதான். ஆனால் அவற்றின் உலகங்கள் மாறுபட்டிருக்கின்றன என்பதை விளக்குகிறது இந்த நாவல்[23]**

மராட்டிய மண்ணில் தோன்றிய வேறுபட்ட கொள்கைகளை, சிந்தனைகளைப் பிரதிபலிக்கும் வகையில் இந்நாவலில் கையாளப் பெற்றது. பிறருக்காக வாழ்பவனே மனிதன் என்ற அடிப்படைக் கருத்து இந்நாவலில் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

இந்த நாவலில் கதாபாத்திரப் படைப்புகளுள் தினகரன் என்ற பாத்திரப்படைப்பு அனைவரின் மனத்தையும் கவரும் வகையில் அமைந்துள்ளது தனிச்சிறப்பாகும். ஏறத்தாழ இந்தக் கதாபாத்திரம் போன்றே கண்ணீர் (அஷ்ரு) என்ற அடுத்து வந்த நாவலின் கதாநாயகன் சங்கரன் என்ற பாத்திரப்படைப்பையும் காண்டேகர் வழங்கியுள்ளார். பொதுவாக நடுத்தர மக்கள் பின்பற்றி வரும் பழைய மரபுகளுக்கும், அதையொட்டி வரும் பழக்க வழக்கங்களுக்கும் வளர்ந்து வரும் பொருளாதார நிலைகளுக்குமிடையே சிக்கித் தவிக்கின்ற மிகவும் முக்கியமான ஒரு சிக்கலைக் காண்டேகர் முன்வைத்துள்ளார்.

இதற்கு அடுத்து 1964ஆம் ஆண்டு 'யயாதி' என்ற ஒரு புராணத்தை நவீனக் கருத்துடன் வெளியிட்டார். இது காண்டேகரின் நாவல்களில் தனித்துவம் வாய்ந்தது. 'யயாதி' சாகித்திய அகாதெமி பரிசு பெற்ற உயர்ந்த நாவல் என்பதும் இதன் தனித்துவமாகும். காண்டேகரின் இந்நாவல் தொன்மையான கதையை மையமாகக் கொண்டதாயினும் வாழ்வில் என்றும் நிலையாக உள்ள தத்துவங்

களைக் கொண்டு புனைந்த அற்புதக் காவியமாகப் போற்றப்படுகிறது. மனிதன் மேலும் மேலும் இன்பத்தைத் தேடி அலைகிறான். அவனுடைய இன்ப நாட்டம் அளவிலாதது. எவ்வளவு இன்பத்தை நுகர்ந்தாலும் அவன் மனநிறைவு கொள்வதில்லை. மனிதனுடைய இத்தகைய வேட்கைக்கு அடையாளமாக இருப்பவன் யயாதி.

> **யயாதியின் வேட்கைக் கதை, தேவயானியின் குடும்பக் கதை, சர்மிஷ்டையின் அன்புக்கதை, கசனுடைய பக்திக் கதை ஆகிய நான்கினையும் பொற்கம்பங் களாக அமைத்து இந்த மணிமண்டபத்தைக் காண்டேகர் நிறுவியிருக்கிறார்[24]**

என்பது இந்நூலின் சிறப்பாகக் குறிப்பிடப்படுகிறது. பிற நாவல்களில் படைக்கப்பட்ட கதைநாயகர்கள் வாசகர்கள் விரும்பிப் பின்பற்ற வேண்டிய இலட்சியத்தின் இருப்பிடங்களாகத் திகழ்ந்தனர். ஆனால் இந்நாவலில் இச்சையை நாடும், யயாதியை அறிமுகப்படுத்தியுள்ளார்.

முதல் காதலின் போது மனிதன் தன் மனத்தை ஒரு கண்ணாடிப் பாத்திரமாகக் கருதுகிறான். ஆகையால் எதிர்பாராத தோல்வியினால் மனம் உடைந்துவிட்டால் தனது வாழ்க்கையே முடிந்து போய்விட்டது என்று கருதும் தேவதத்தன் கதாபாத்திரம் காண்டேகரின் அமுதக்கொடியில் இடம் பெறுகிறது. ஆனால் மனிதனுடைய மனம் கண்ணாடிப் பாத்திரமன்று, வெள்ளிப்பாத்திரம். தவறிப் போய் விழுந்தால் அது நசுங்குமே தவிர, உடைந்துபோய்ச் சுக்கலாகி விடாது என்ற கருத்தை அமுதக்கொடி என்ற இந்நாவல் எடுத்துரைக்கிறது.

இதைப் போன்றே காண்டேகரின் சிறுகதைகளில் இடம் பெறும் கதை மாந்தர்களின் சிறப்பை எடுத்துக்காட்டலாம். இவை நவீனக் காலத்தின் சமூக அமைப்பு, சூழ்நிலை, குழப்பமான எண்ணப் போக்குகளைச் சித்திரிக்கின்றன. இக்கதைகள் யாவும் படிப்பவர்களுக்குத் தாங்கள் நேரடியாக வாழ்க்கையில் சந்திக்கின்ற பிரச்சினைகளாகத் தென்பட்டன. இவை மனத்தில் ஆழமாகப் பதியும் கதாபாத்திரங்களாக உருவாக்கப்பட்டிருந்ததால் படிப்பவர் மனத்தை ஊடுருவிச் சென்றன. சிந்திக்கத் தூண்டின. மகிழ்வூட்டின. தமிழ் இலக்கிய உலகில் இம்மொழிபெயர்ப்புகள் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தின.

### காண்டேகர் தமிழ் எழுத்தாளரே!

காண்டேகர் தமிழ் எழுத்தாளரே என்று மக்கள் கருதும் அளவிற்குக் காண்டேகரின் இலக்கியம் 1940-1950களில் தமிழ்நாட்டில் வேரூன்றியது. புதுமைப்பித்தன், கு.ப.ரா. டாக்டர் மு.வ. போன்ற இலக்கியவாதிகளும், பெருந்தலைவர் காமராசர், அறிஞர் அண்ணா,

கலைஞர் மு. கருணாநிதி, மணியம்மையார், வை. கோபால்சாமி ஆகிய தலைவர்களும், இலக்கியச் சுவை மிகுந்த வாசகர்களும் காண்டேகரின் இலக்கியத்திற்கு ஆதரவளித்துப் போற்றினர். அறிஞர் அண்ணா, 'புரட்சி கரமான மாறுதலுக்கான போர் முரசு' எனக் காண்டேகரின் கதை களைப் பாராட்டியுள்ளார். பம்பாய்த் தமிழ்ச்சங்கம் காண்டேகரைப் பாராட்டி விழா எடுத்தது. தமிழறிஞர் மு. வரதராசனார் கோல்காப்பூர் சென்ற போது காண்டேகரைச் சந்தித்துத் தமது அன்பையும் பாராட்டுதலையும் தெரிவித்து மகிழ்ந்தார். மு. வரதராசனார், 'காண்டேகரைக் கண்டேன்' எனும் கட்டுரையில் 'உவமைக் களஞ்சியம்' என்றும் 'சிறந்த எழுத்தாளர் என்றும் 'உயர்ந்த கற்பனைகளையும் விழுமிய உணர்ச்சிகளையும் தம் சிறந்த நாவல்களின் வாயிலாகவும் சிறுகதைகளின் வாயிலாகவும் அளித்த வள்ளல்' என்றும் பாராட்டி யுள்ளார். இத்தகைய தாக்கத்தை ஏற்படுத்திய பெருமை கா.ஸ்ரீ.ஸ்ரீ.யைச் சாரும்.

எந்த மொழியைக் காட்டிலும், தமிழில் காண்டேகருக்கு வாசகர்கள் மிகுதி என்பதைக் காண்டேகர் பல இடங்களில் வெளி யிட்டிருக்கிறார். கா.ஸ்ரீ.ஸ்ரீ.யும் இக்கருத்தைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

> காண்டேகர் ஒரு முன்மாதிரியான இந்திய எழுத்தாளர். அவர் மராட்டியில் எழுதினாரே தவிர அவரது எழுத்தை எந்த இந்தியனும் படித்து ரசிக்க முடியும். காண்டேகர் நிறையப் படித்தவர். அவரது கதைகளிலும் நாவல்களிலும் அங்கங்கே இலக்கிய மேற்கோள்கள் இருக்கும். நிறைய உருவகங்கள் உண்டு காண்டேகர் எழுத்தை நான் மொழிபெயர்க்க, மொழிபெயர்க்க, தமிழ் நாட்டிலே அவருக்கு ரசிகர் குழாமே உருவாகத் தொடங்கிவிட்டது. மராட்டி வாசகர்களை விட அவருக்குத் தமிழ் வாசகர்கள் அதிகம் என்று வேடிக்கையாகப் பேசப்பட்டது. காண்டேகரை ஒரு தமிழ் எழுத்தாளராகவே கருதிய வாசகர்களும் உண்டு[25]

என்று கா.ஸ்ரீ.ஸ்ரீ. புதுதில்லியில் 'யயாதி' நூலைத் தமிழில் சிறந்த மொழிபெயர்ப்புக்காகத் தேர்ந்தெடுத்துச் சாகித்திய அகாதெமி பரிசு வழங்கும்போது நினைவுகூர்ந்தார்.

> மொழிபெயர்ப்பாளருக்கு மொழிபெயர்ப்புப் பணி முட்பாதை என்றாலும் வாசகர்களுக்கு அதை மலர்ப்பாதையாக மாற்றிக் கொடுக்க வேண்டியது மொழிபெயர்ப்பாளரின் பணியாகும். காண்டேகரின் படைப்புகள் தமிழில் வெளிவந்த பொழுது அக்காலத்து இளைஞர்கள் அவருடைய மணிமொழிகளை

> மனப்பாடம் செய்தனர். 'மகாராட்டிரம் என்றால் சிவாஜியை அடுத்துக் காண்டேகரையே நாம் அறிவோம் என்று புதுமைப்பித்தன் ஓரிடத்தில் எழுதி யிருக்கிறார். காண்டேகர் இலக்கியம் தமிழ்நாட்டில் வேரூன்றி, அவரது நாவல்களின் பாத்திரங்கள் தங்கள் அருகிலேயே இருப்பதாக மக்கள் உணர்ந்தார்கள்[26]

என்று கா.ஸ்ரீ.ஸ்ரீ. கூறுகிறார்.

**கா.ஸ்ரீ.ஸ்ரீ.யைப் பற்றிக் காண்டேகர்**

ஒரு படைப்பாளர், ஒரு மொழிபெயர்ப்பாளரைப் பற்றிப் பாராட்டி எழுதுதல் அரிதாகவே தென்படுகிறது. காலம், இடம், சூழல் வேறுபாடு இதற்குக் காரணமாக இருக்கலாம். காண்டேகர் கா.ஸ்ரீ.ஸ்ரீ. யைப் பற்றி யயாதி என்ற நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

> சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு என் புத்தகங்களைத் தமிழ்நாட்டுக்கு அறிமுகப்படுத்தி அங்கு ஏராளமான நண்பர்களை எனக்கு அளித்தவர் கா.ஸ்ரீ.ஸ்ரீ. அவர்களே. சிறந்த மொழிபெயர்ப்பாசிரியர் ஒரு பாலத்தைப் போன்றவர் என்று நான் எப்பொழுதும் நம்புகிறவன். கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் பணி இல்லையென்றால் அடக்கத்துடன் ஒதுங்கி வாழும் இயல்புள்ள என் வாழ்வில் இன்று கிடைத்திருக்கும் அன்புக் கடிதங்களி னாலும், நேரில் வந்து என்னைக் கண்டு பேசிய பல நண்பர் களினாலும் நான் பெற்ற இன்பம் விவரிக்க இயலாது[27]

எனக் குறிப்பிட்டுள்ளார். மேலும் கா.ஸ்ரீ.ஸ்ரீ. மராட்டியிலிருந்து சுகம் எங்கே? என்ற நாவலைத் தமிழாக்கம் செய்த பிறகு தமிழிலிருந்து மலையாளத்தில் பி.ஆர். வாரியார் மொழிபெயர்த்திருக்கிறார்.

> காண்டேகர் நாவல் பாணியில் பல புதிய நாவல்கள் தமிழில் தோன்றியிருக்கின்றன. தமிழ்நாட்டு எழுத் தாளர்களுக்கும் காண்டேகரின் நூல்கள் தூண்டு கோலாக இருக்கின்றன என்பதில் சந்தேகமே இல்லை. அறிஞர் கி.வா. ஜகந்நாதன் அவர்கள் ஒரு நாவலின் முன்னுரையில் இதைக் குறிப்பிட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது[28]

என்ற கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் குறிப்பு காண்டேகர் மராட்டியில் ஏற்படுத்திய ஓர் இலக்கியக் காலக்கட்டத்தைத் தமிழில் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யால் உருவாக்க முடிந்தது என்பதை அறிய முடிகிறது. அவர் ஆற்றிய அரும்பணிக்காக 1976ஆம் ஆண்டில் சிவாஜியின் உருவம், கொடி, கொள்கை பதித்த பட்டயம் வழங்கப்பட்டது.

## கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் பிற மொழிபெயர்ப்புகள்

கா.ஸ்ரீ.ஸ்ரீ. காண்டேகரைத் தவிர வேறு பலரின் படைப்பு களையும், தமிழில் மொழிபெயர்த்துள்ளார். தர்மானந்த கோஸம்பி எழுதிய 'பகவான்புத்தர்' என்ற நூல் குறிப்பிடத்தக்கது. சாகித்திய அகாதெமி தமிழ் மொழிபெயர்ப்பு வரிசையில் 1957ஆம் ஆண்டு வெளியிட்ட முதல்நூல் 'பகவான்புத்தர்'. தர்மானந்த கோஸம்பி எழுதிய இந்நூலுக்குக் காகாகலேல்கர் முன்னுரை வழங்கியுள்ளார்.

பிணி, மூப்பு, சாக்காடு ஆகியவற்றைக் கண்டு வியந்த அரசகுமாரரான சித்தார்த்தர் இல்லத்தைத் துறந்து மறைவாக ஓடிவிட்டார் என்னும் கருத்து வெறும் கற்பனைக் கதையாகும் என்பதற்கு இந்நூல் ஆதாரமாகும். மேலும் இந்நூல் ஆரியரின் வெற்றி, அக்கால அரசியல்நிலை, சமயநிலை, புத்தரின் தவமும் தத்துவஞானமும், சிராவகர் சங்கம், ஆன்மவாதம், கர்மயோகம், வேள்வி, சாதிப்பிரிவினை, புலால் உணவு, அன்றாட வாழ்க்கை ஆகியன பற்றித் தகுந்த சான்றுகளுடன் விளக்கும் முக்கியத்துவம் பெற்றது. இந்நூலை மராட்டிய மொழியிலிருந்து நேரடியாகத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார் அறிஞர் கா.ஸ்ரீ.ஸ்ரீ. தத்துவக் கருத்துகளை எளிமையாக, அனைவருக்கும் புரியும் வகையில், தகுந்த முறையில் இம்மொழிபெயர்ப்பை வழங்கியுள்ளார்.

இந்தி இலக்கிய உலகில் புகழ்பெற்ற பிரேம்சந்த் எழுதிய 'நிர்மலா' என்ற நாவல் கலைமகள் இதழில் 1940 ஆம் ஆண்டு தொடர்கதையாக, கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் மொழிபெயர்ப்பில் வெளி வந்துள்ளது. பின்பு 1941 ஆம் ஆண்டு கலைமகள் வெளியீடாக நூல் வடிவில் வெளிவந்தது. 'பிரேம்சந்தின் சிறந்த சிறுகதைகள்' என்ற தலைப்பில் ஈத்பண்டிகை, நாயகர் வீட்டுக் கிணறு, வைகுண்டச் சல்லா மண்டைக் கிறுக்கு, அன்னை, கடைசிச்சாக்கு, புல்லுக்காரி, இலவசப்புகழ், மார்கழி இரவு, குற்றச்சாட்டு ஆகிய சிறுகதைகள் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் மொழிபெயர்ப்பில் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. 1943 ஆம் ஆண்டு அல்லயன்ஸ் வெளியீடாகும் இந்நூல். பிரேம்சந்தின் 'இருமலர்கள்' என்ற நாவலும் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் மொழிபெயர்ப்பாகும்.

கா.ஸ்ரீ.ஸ்ரீ. கலைமகள் இதழில் துணை ஆசிரியர் பொறுப்பில் இருந்த பொழுது மஞ்சரி இதழில் அவருடைய மொழிபெயர்ப்பில் சிறுகதைகள், நாவல்கள், கட்டுரைகள் பலவும் 1947ஆம் ஆண்டு முதல் 1970ஆம் ஆண்டு வரை தொடர்ந்து இடம் பெற்று வந்துள்ளன.

போர்கர் எழுதிய **தேவதாசி**, காகாகலேல்கரின் **ஸப்தநதிகள்**, வாழ்க்கைக் கலை (கட்), பர்ல்பக் எழுதிய **பழஞ்சுவர்**, மாட்கோல்கர் எழுதிய நாககன்னிகை, **புதுக்குடித்தனம்**, பிரமத் சௌதரி எழுதிய **ஜோட்டனும் லோட்டனும்**. ரகுநாத பிரஹ்மபட் எழுதிய **அருந்ததி**, சரத்சந்திரரின் **சஞ்சீவினி**, கல்ப-ஸ்ஸார-மாலா என்ற **இந்திக்கதைகள்**,

மகாத்மா காந்தி எழுதிய என் சரிதம் (அல்லயன்ஸ் வெளியீடு, 1945, மூன்று பதிப்புகள் வந்தன). அனந்தகோபால் சேவ்டே இந்தியில் எழுதிய ஜீவாலாமுகி எனும் 1942 இயக்கத்தைப் பற்றி நாவல் (நேஷனல் புக் டிரஸ்ட் வெளியீடு, 1963) ஆகியனவும் மற்றும் பலரின் படைப்புகளையும் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார் அறிஞர் கா.ஸ்ரீ.ஸ்ரீ.

## பிறமொழிகளில் தமிழ் இலக்கிய அறிமுகம்

பாரதிய சாகித்ய பரிசத் மாநாட்டில் கலந்து கொள்ள இந்திப் பிரச்சார சபைக்கு வந்திருந்த இந்தி எழுத்தாளர்களைக் கா.ஸ்ரீ.ஸ்ரீ. சந்திக்கச் சென்றார்.

> 'இந்தியைத் தவிர வேறு இந்திய மொழியில் சிறந்த இலக்கியம் இல்லை. நாமே இலக்கியச் சக்கரவர்த்திகள் என்ற தோரணையில் அவர்கள் பேசிக் கொண்டிருந் தார்கள். இந்தியை விடச் சிறந்த கதை கட்டுரைகள் தமிழில் இருக்கின்றன என்று வாதாடினேன். என் பேச்சைக் கேட்டு அவர்கள் வியந்தனர். தமிழில் நவீனக் கதை இலக்கியம் இருப்பதையே அறியாத அறிவிலி களாகவும், கர்விகளாகவும் இருந்தனர். அன்றையிலிருந்து மிக்க ஊக்கத்துடன் நான் தமிழ்க் கதை கட்டுரைகளை இந்தியில் ஆக்கியும் தமிழ் இலக்கியம் பற்றிய அறிமுகக் கட்டுரைகளை எழுதியும், பிரசித்த இந்தி இலக்கியப் பத்திரிகைகளில் வெளியிடலானேன்[29]

என்று கா.ஸ்ரீ.ஸ்ரீ கூறுகிறார். தமிழ் இலக்கியங்களைப் பிறமொழியினர் அறியும் வண்ணம் செயல்பட வேண்டும் என்பதில் முனைந்து நின்றார். மொழிபெயர்ப்பாளர்கள் எழுத்துலகில் இரண்டாம் வகை எழுத்தாளர்களாகவே கணிக்கப்படுகிறார்கள் என அவரைக் கேட்டபொழுது,

> மொழிபெயர்ப்பு ஒரு முக்கிய இலக்கியம். மொழி பெயர்ப்பு இல்லாத அல்லது ஏற்றுக் கொள்ளாத எந்த மொழியும் சிறந்து விளங்காது. இறந்தபோன ஒரு மொழியின் நூலாசிரியருக்கு மற்றொரு மொழி பெயர்ப்பாளர் உயிரூட்டுகிறார். உமர்கய்யாம் என்றொரு கவிஞன் பாரசீகத்தில் இருந்தது யாருக்கும் தெரியாது. பிட்ஜெட்ரால்டின் ஆங்கில மொழிபெயர்ப்பு தான் உமர்கய்யாமை உலகிற்கு அடையாளம் காட்டியது.[30]

என்று மொழிபெயர்ப்பாளர் ஒரு படைப்பாளரே என்று விளக்கினார்.

தமிழ் எழுத்தாளர்களைப் பற்றி இந்தியில்

இந்தி மொழி இலக்கியவாதிகளுக்குத் தமிழ் எழுத்தாளர்களை அறிமுகம் செய்ய வேண்டும் என்று கருதி ஊக்கத்துடன் கா.ஸ்ரீ.ஸ்ரீ அந்தப் பணியில் ஈடுபட்டார். தமிழ்க்கதை, கட்டுரைகளை இந்தியில் ஆக்கியும், தமிழ் இலக்கியம் பற்றிய அறிமுகக் கட்டுரைகளை எழுதியும், புகழ் பெற்ற இந்தி இலக்கியப் பத்திரிகைகளில் வெளியிட்டுள்ளார். மாதவையா முதல் சிதம்பரசுப்பிரமணியன் வரையில் பன்னிரண்டு எழுத்தாளர்களின் சிறந்த சிறுகதைகளை இந்தியில் எழுதி, எழுத்தாளர் பற்றிய அறிமுகத்துடன் 1938 இல் வெளிவரச் செய்துள்ளார். புகழ்பெற்ற இந்தி நாவலாசிரியர் பிரேம்சந்தின் புதல்வர் ஸ்ரீபத்ராய் காசியில் இதை வெளியிட்டார். முதன் முதலில் இந்தியில் வெளிவந்த இந்தத் தமிழ்க் கதைத் தொகுதி இரண்டு பதிப்புக் கண்டது. சிவபோக சாரம், சொக்கநாத வெண்பா ஆகியவற்றை இந்தியில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார்.

'ஹம்ஸ்', 'விசாலபாரத்', 'விச்வமித்ர', 'கிசோர்' 'ஆஜ்கல்', 'நவநீத', முதலிய பத்திரிகைகளில் தமிழ் எழுத்தாளரைப் பற்றிய அறிமுகம், கதை, கட்டுரை, சொல்லோவியம் முதலியவை நிறைய வெளிவந்தன. தமிழ் இலக்கியம் பற்றி 'விசால் பாரத்'தில் 100 கட்டுரைகள் வழங்கியுள்ளார். ரிஷிகளின் வரலாறு, வேத இலக்கிய வரலாறு, திவ்வியப்பிரபந்தம் - சமுதாயப் பார்வை என்ற நூல்களையும் வழங்கியுள்ளார். பாரதியாரின் 'தராசு' இந்தி வடிவில் பாரதிப் பிரசுராலய வெளியீடாக வந்தது.

> **நாட்டுப்புறப் பாடல்களும் பழமொழிகளும் மிக்க வளம் கொண்டவை. இந்தத் துறையில் இன்னும் பரந்த ஆழ்ந்த முயற்சிகளை இளைஞர்கள் மேற்கொள்ள வேண்டும். தோண்டத் தோண்டச் சுவைக்கும் சுரங்கம் இது**[31]

என்று கூறுகிறார் அறிஞர் கா.ஸ்ரீ.ஸ்ரீ. வேதங்களைக் கற்றறிந்த கா.ஸ்ரீ.ஸ்ரீ. நாட்டுப்புறப் பாடல்களின் சிறப்பையும் போற்றிப் பாராட்டுவது அவரது பரந்த போக்கைப் புரிந்து கொள்ளப் போதுமான சான்றாகும்.

மராட்டிய மண்ணில் மலர்ந்த 'தலித்' இலக்கியங்களை நீங்கள் மொழிபெயர்க்கவில்லையே ஏன்? என்று அவரிடம் கேட்டபொழுது,

> மராட்டியில் தலித் இலக்கியவாதிகள் நிறையப் பேர் இருக்கிறார்கள். தலித் இலக்கியங்களைப் பயின்றிருக்கிறேன். தலித் இலக்கியம் அழுத்தப்பட்டவர்களின் குரல். தலித் என்றால் மராட்டியில் தாழ்த்தப்பட்டவன், ஒடுக்கப் பட்டவன் என்பது பொருள். ஒடுக்கப்பட்டவர்களின்

> இலக்கியம் என்றால் அதில் ஒரு கொந்தளிப்பு இருக்கும். ஆவேசம் இருக்கும். அந்த வாழ்க்கை அப்படியே இலக்கியப் படைப்பாக மாறும்பொழுது வசை மொழிகளையும், பலவிதமான செய்கைகளையும் அப்படியே படம்பிடித்துக் காட்டுகிறது. உள்ளது உள்ளபடி படைத்துக் காட்டுவதைவிட ஓர் உயர்ந்த இலட்சியத்திற்கு அந்த மக்களை அழைத்துச் செல்வதே சிறந்தது. அப்படி ஒரு நிறைவும், ஈடுபாடும் அதில் நான் காணமுடியவில்லை.[32]

என்றார் அவர். நடந்த சில நிகழ்வுகள் தாழ்த்தப்பட்ட மக்கள் மீது அவர் கொண்டிருந்த ஈடுபாட்டைக் காட்டுகின்றன.

### கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் படைப்புகள்

கா.ஸ்ரீ.ஸ்ரீ. மொழிபெயர்ப்பாளர் மட்டுமல்ல சிறந்த படைப்பாளியுமாவார். கலைமகளில் முதல்முதலில் 1937ஆம் ஆண்டு முதல் எழுதத் தொடங்கினார். இறுதி வரை தொடர்ந்து அந்த இதழில் எழுதிக் கொண்டே இருந்தார். இவர் எழுதிய முதல் நாவலின் பெயர் 'காந்தம்', '1945ஆம் ஆண்டு கலைமகள் வெளியீடாகக் காந்தம் வெளிவந்தது. இரண்டு பதிப்புகள் வந்தன. இராணுவத்தினர் போற்றிப் பாராட்டிய பெருமை உடையது இந்நாவல். அவர்களே நூலின் ஆயிரம் பிரதிகளை வாங்கிக் கொண்டனர். கா.ஸ்ரீ.ஸ்ரீ. இரண்டாவதாக எழுதிய நாவல் 'காற்றாடி'. முதன்முதலில் கலைமகளில் தொடர் கதையாக வந்த முதல் மூலத் தமிழ் நாவல் இது. 1949ஆம் ஆண்டு பழனியப்பா பிரதர்ஸ் இதை நூலாக வெளியிட்டுள்ளனர். மூன்று பதிப்புகள் வெளிவந்துள்ளன. கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் இரண்டு சிறுகதைத் தொகுதிகளும் வெளிவந்துள்ளன. 'நீலமாளிகை' என்ற சிறுகதைத் தொகுதி 1946ஆம் ஆண்டு பழனியப்பா பிரதர்ஸ் பதிப்பகத்தால் வெளியிடப்பட்டுள்ளது. இவருடைய 'அன்னபூரணி' என்ற சிறுகதைத் தொகுதியை 1951 ஆம் ஆண்டு அல்லயன்ஸ் கம்பெனி வெளியிட்டுள்ளது. முதல் சிறுகதைத் தொகுதிக்குப் புதுமைப் பித்தனும், இரண்டாம் சிறுகதைத் தொகுதிக்கு டாக்டர் மு.வ.வும் முகவுரை அளித்துள்ளனர்.

### கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் இறுதிக்காலம்

கா.ஸ்ரீ.ஸ்ரீ. சென்னையில் 1934 முதல் 1988 வரையில் வாழ்ந்தார். இவருக்கு மூன்று பெண்கள், ஒரு ஆண். அனைவரும் உயர் கல்வி பயின்று நல்ல நிலையில் உள்ளனர். ஒரு மகனும் ஒரு மகளும் டாக்டர் பட்டம் பெற்றவர்கள். டாக்டர் பட்டம் பெற்ற மகள் அமெரிக்காவில் அரசுப் பணியில் உள்ளார். கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் மனைவி காலமானதும் நாசிக்கில் உள்ள தனது மகனுடன் வாழ்ந்து வந்தார்.

உடல் நலம் குன்றியபோதிலும் தனது தமிழ்ப்பணியைத் தொடர்ந்து செய்து வந்தார்.

ரிக் வேதம், யஜுர் வேதம், சாமவேதம், அதர்வண வேதம் ஆகியவற்றை எளிய தமிழில் தற்கால நடையில் அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் வடமொழியிலிருந்து தமிழுக்கு மொழி பெயர்த்துக் கொண்டிருந்தார். மேலும், யோகா, வாசிஷ்ட்டம், இரண்டு பகுதிகளாகத் தமிழில் வெளியிட மொழிபெயர்க்கும் பணியைச் செய்து வந்தார். வால்மீகி இராமாயணத்தை ஆழ்ந்து ஆராய்ந்து 'ஸுதர்சனம்' என்ற வைணவ மாத இதழில் தொடராக எழுதி வந்தார். இந்நிலையில் உடல் நலிவுற்று நாசிக்கில் 28-7-1999ஆம் நாளன்று தன் மகன் இல்லத்தில் காலமானார்.

## காண்டேகரும் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யும்

கா.ஸ்ரீ.ஸ்ரீ. தன்னடக்கம் மிக்கவர். காட்சிக்கு எளியவர். பிறரை மதித்துப் போற்றும் பண்புடையவர். எந்தப் பணியையும் மிகச் சரியாக, திருத்தமாகச் செய்ய வேண்டும் என்ற நோக்குடையவர். அவரைப் போல ஒரு சிறந்த மனிதரைக் காணுதல் அரிது எனப் பலரும் அவரைப் பாராட்டியுள்ளனர்.

காண்டேகரும் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யும் சிந்தனையிலும் செயலிலும் ஒன்று போல வாழ்ந்ததைக் காணலாம். இருவரும் சீர்திருத்தச் சிந்தனை நோக்குடையவர்கள். இருவரும் தாழ்த்தப்பட்ட, ஏழை மாணவர்களுக்குக் கல்வி கற்பித்தலில் ஈடுபட்டவர்கள். இருவரும் மனவளம், கருத்துவளம், செயல் வளம் இருந்த அளவிற்கு உடல் நலமின்மையால் துன்புற்றவர்கள். இருவரும் இலக்கியப் பணியையே தங்களது வாழ்நாள் பணியாகக் கொண்டவர்கள். பத்திரிகை, திரைப்படத் துறை ஆகியவற்றில் அனுபவம் வாய்ந்தவர்கள். ஒரே நூலுக்காக (யயாதி) பரிசு பெற்றவர்கள் எனப் பலவிதங்களில் ஒன்று போல வாழ்க்கையை நடத்தியவர்கள். இத்தகைய நல்லறிஞர்களின் புகழ் என்றும் நிலைத்து நிற்கக்கூடியது.

### குறிப்புகள்

1. சோவியத் இலக்கியம், நோக்கும்போக்கும், (தமி.) செகத்ரட்சகன், புதுமைப் பதிப்பகம், பதி. மே. 1, 1984, ப.119.
2. தற்கொலை செய்யத் தெரியவில்லை - மொழிபெயர்ப்பாளர் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யுடன் மு. வளர்மதி நேர்காணல், தினமணி, 4.6.1995.
3. தினமணிச் சுடர் (கட்.) வாசகர்களைக் கிறங்க வைக்கும் காண்டேகர் கதைகள், வல்லிக்கண்ணன், செப்.8, 1990, ப. 4.
4. மேற்படி, ப. 4.

5. மொழிபெயர்ப்பாளர் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யுடன் இந்நூலாசிரியர் மு. வளர்மதி நேர்காணல், தினமணி, 4-6-95.

6. எழுபத்தைந்தில் காண்டேகர், ஜயவந்த் தன்வி (தமி.), ராஜாராம், மஞ்சரி, மார்ச், 1973, ப. 18.

7. V.S. Khandekar, M.D. Hatkanagalkar, Sahitya Akademi, Ed.1986, p.5.

8. சுகம் எங்கே? வி.ஸ. காண்டேகர் (தமி.) கா.ஸ்ரீ.ஸ்ரீ., பாரதி பதிப்பகம், பதி. மே1985, ப. 159.

9. கருகிய மொட்டு, வி.ஸ. காண்டேகர் (தமி.) கா.ஸ்ரீ.ஸ்ரீ., பாரதி பதிப்பகம், பதி. மார்ச் 1985, முன். ப. 10.

10. V.S. Khandekar, M.D. Hatkanagalkar, Sahitya Akademi, Ed.1986, Preface, p.1.

11. கருகிய மொட்டு, வி.ஸ. காண்டேகர் (தமி.) கா.ஸ்ரீ.ஸ்ரீ., பாரதி பதிப்பகம், பதி. மார்ச் 1985, முன். ப. 3.

12. மார்க்சியமும் இலக்கியமும், இ.எம்.எஸ். நம்பூதிரிபாட் (தமி.) வி.பி.சிந்தன், சென்னை புக்ஸ், நவ. 1988, ப. 78.

13. தற்கொலை செய்யத் தெரியவில்லை, மொழிபெயர்ப்பாளர் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யுடன் இந்நூலாசிரியர் மு. வளர்மதி நேர்காணல், தினமணி, ஜுன் 4, 1995.

14. கா.ஸ்ரீ.ஸ்ரீ. இந்நூலாசிரியருக்கு எழுதிய கடிதம், நாள். 30.9.1993.

15. கா.ஸ்ரீ.ஸ்ரீ. இந்நூலாசிரியருக்கு எழுதிய கடிதம், நாள் 19.7.1993.

16. மேற்படி.

17. மேற்படி.

18. மேற்படி.

19. மேற்படி.

20. சுகம் எங்கே?, வி.ஸ. காண்டேகர், (தமி.) கா.ஸ்ரீ.ஸ்ரீ., பாரதி பதிப்பகம், பதி., மார்ச் 1985, ப. 31.

21. மனோரஞ்சிதம், வி.ஸ. காண்டேகர் (தமி.) கா.ஸ்ரீ.ஸ்ரீ., அல்லயன்ஸ் வெளியீடு, சென்னை, டிச.1988, ப. 256.

22. கருகிய மொட்டு வி.ஸ. காண்டேகர் (தமி.) க.ஸ்ரீ.ஸ்ரீ., பாரதி பதிப்பகம், பதி. 1985, ப. 2.

23. கிரௌஞ்சவதம், வி.ஸ. காண்டேகர் (தமி.) கா.ஸ்ரீ.ஸ்ரீ., கலைமகள் காரியாலயம், சென்னை, பதி. 1971, ப. 1.

24. யயாதி, வி.ஸ. காண்டேகர் (தமி.) க.ஸ்ரீ.ஸ்ரீ., மங்கள நூலகம், 1968, ப. 26.

25. தினமணி சுடர் (கட்.) மொழிபெயர்ப்பா, மூலநூலா, தம்பி சீனிவாசன், 13.9.1992, ப. 23.

26. கா.ஸ்ரீ.ஸ்ரீ. இந்நூலாசிரியருக்கு எழுதிய கடிதம், 9.6.1994.

27. யயாதி, வி.ஸ. காண்டேகர் (தமி.) கா.ஸ்ரீ.ஸ்ரீ., மங்கள நூலகம், 1968, முன். ப. 4.

28. கா.ஸ்ரீ.ஸ்ரீ. இந்நூலாசிரியருக்கு எழுதிய கடிதம், 9.6.1994.

29. கலைமகள், பொன்விழா மலர் (கட்.) கலைமகளின் கோயிலிலே, கா.ஸ்ரீ.ஸ்ரீ., டிச.1981, ப. 442.

30. தற்கொலை செய்யத் தெரியவில்லை - மொழிபெயர்ப்பாளர் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யுடன் மு. வளர்மதி நேர்காணல், தினமணி, 4.6.1995, ப.4.

31. மேற்படி.

32. மேற்படி.

# த.நா. சேனாபதி

மொழிபெயர்ப்பாளர்கள் அறிவுலக இணைப்பாளர்கள். மொழிக்குப் புத்துணர்வை அளிக்கும் புதிய சக்தியாகத் திகழ்பவர்கள். 1940களில் உலகின் பல்வேறு மொழிகளிலிருந்து சிறந்த படைப்புகள் பலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்துத் தமிழ் இலக்கியப் போக்கிலும், சிந்தனையிலும் புதிய மாற்றத்தை உருவாக்கியவர்கள். இக்காலக்கட்டத்தில் இந்திய இலக்கிய வானில் அளவிடற்கரிய ஒளிவெள்ளத்தைப் பாய்ச்சிய வங்கமொழிப் படைப்புகள் பலவும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டன.

பங்கிம் சந்திர சட்டர்ஜி, இரவீந்திரநாத் தாகூர், சரத்சந்திரர், விபூதி பூஷன் பந்தோபாத்யாயா, தாராசங்கர் பந்த்யோத்பாத்யாயா, நா. தாராசங்கர் பானர்ஜி, ரமேஷ் சந்திர தத்தா, கல்யாணி முகோபாத்யாயா, பிரபாத் குமார் மகோபாத்யாயா, சௌரிந்தர மோகன் மகோபாத்யாய, மதுசூதன தத்தர், பாலாய் காமத் மகோபாத்யாயா, தருண்குமார் பாதுரி, சரண்தாஸ் கோஷ், லீலா மஜீம்தார், பிமல பிரசாத் முகோபாத்யாயா, துவிஜேந்திரலால்ராய், நாகேந்திரநாத சட்டர்ஜி ஆகிய வங்க இலக்கியப் படைப்பாளி களின் படைப்புகள் பலவும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவர்களுள் பங்கிம் சந்திர சட்டர்ஜி, இரவீந்திரநாத் தாகூர், சரத்சந்திரர் ஆகியோரின் படைப்புகள் மிகுதியாகத் தமிழில் வெளி வந்துள்ளன. இவர்களின் படைப்புகள் நூல்களாக மட்டுமன்றித் தமிழ் வார, மாத இதழ்களிலும் இடம் பெற்றுள்ளன. குறிப்பாக, தாகூரின் படைப்புகளும், சரத்சந்திரரின் படைப்புகளும் இடம் பெற்று வந்துள்ளதைக் காணலாம். இதில் மொழிபெயர்ப்பு அறிஞர் த.நா. சேனாபதி அவர்களின் பங்களிப்பைப் பற்றிக் காணலாம்.

*த.நா. சேனாபதி*

த.நா. சேனாபதி 10-2-1914ஆம் ஆண்டு பிறந்தார். இவர் தந்தை தண்டலம் நாராயண சாஸ்திரி. இப்பெயரின் சுருக்கமாகத் த.நா. அமைந்து த.நா. சேனாபதி என்று வழங்கலாயிற்று. த.நா. சேனாபதியின் தந்தை தண்டலம் நாராயண சாஸ்திரி பன்மொழி அறிவு பெற்றவராதலால் இளமையிலேயே த.நா. சேனாபதியும் மொழிகளைக் கற்றுக்கொள்ளும் ஆர்வம் மிக்கவராகத் திகழ்ந்தார். முத்தியால்பேட்டை (சென்னை) உயர்நிலைப்பள்ளியில் படித்தபின் அவராகவே தனித்துப் பயின்று பி.ஓ.எல் (B.O.L.) எம்.ஏ. (M.A.)

பட்டங்களைப் பெற்றார். 1944 ஆம் ஆண்டு முதல் 1947 ஆம் ஆண்டு வரை பெசன்ட் தியாசபிகல் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றினார். 1948 ஆம் ஆண்டு முதல் 1972 ஆம் ஆண்டுவரை 'மஞ்சரி' இதழில் துணை ஆசிரியராகவும், 1973 ஆம் ஆண்டு முதல் 1988 ஆம் ஆண்டு வரை மஞ்சரியின் ஆசிரியராகவும் பணியாற்றினார். 1932 ஆம் ஆண்டு முதல் கி.வா.ஜ.விற்குத் துணையாகக் கலைமகளிலும் தனது பணியைச் செய்து வந்தார். இவருடைய படைப்புகள், மொழி பெயர்ப்புகள் பலவும் இவ்விரு இதழ்களிலும் இடம்பெற்று வந்துள்ளன. தமிழ் மொழிபெயர்ப்புலகிற்கு இவருடைய சகோதரர் த.நா. குமார சுவாமியைப் போலவே த.நா. சேனாபதியும் பெரும் பங்காற்றியுள்ளார்.

### த.நா. சேனாபதியின் படைப்புகள்

த.நா. சேனாபதி தனது 19ஆம் வயதிலேயே சிறுகதை எழுத்தாளராக அறிமுகமாகியுள்ளார். சேனாபதி 1933ஆம் ஆண்டில் 'அகஸ்தியர் வந்தால்' என்ற முதல் கதையை எழுதினார். இக்கதையை ஆனந்தவிகடன் இதழ் வெளியிட்டது. இவர் எழுதிய 'குழந்தை மனம்', 'சத்யவாதி' என்ற இரண்டு கதைகளும் 1934ஆம் ஆண்டு வெளிவந்து, அவரைச் சிறந்த படைப்பாளியாக அடையாளங் காட்டின. 'சுரங்கவழி' என்ற சிறுகதைத் தொகுதியும் 'சகோதர பாசம்' என்ற குறுநாவலும் 'சிறுத்தை வேட்டை' எனும் சிறுவர் கதையும் அவருடைய சிறந்த படைப்பிலக்கியங்களாகத் திகழ்கின்றன. அன்றைய காலக் கட்டத்தில் மொழிபெயர்ப்புகள் வாயிலாகத் தமிழ்ச் சிறுகதைப் போக்கில் பெரும் மாற்றம் நிகழ்ந்து கொண்டிருந்தது.

> 1930க்குப் பின்பு தான் முழுக்க முழுக்கப் புதிய பாணியில் அமைந்து, தமிழ் மக்களின் இன்ப துன்பங்களை உரிய கலையம்சங்களுடன் வடித்துத் தரும் முயற்சி பயன் அளிக்கத் தொடங்கியது. இதற்கு ஊக்கமூட்டியவை இரவீந்திரர், சரத்சந்திரர், பிரேம்சந்த், காண்டேகர் போன்ற வங்காள, ஹிந்தி, மராட்டிய கதாசிரியர்களின் மொழிபெயர்ப்புகள்தாம். இப்படி மேனாட்டு, வடநாட்டுச் சிறுகதைகளின் தாக்கம் இன்றுங்கூடத் தொடர்ந்துதான் வருகிறது. அந்நாளில் தரமான தமிழ்க்கதை இலக்கிய வளர்ச்சிக்கு 'ஆனந்தவிகடன், விவேகபோதினி, கலைமகள், மணிக்கொடி, தாமரை, பொன்னி போன்ற பத்திரிகைகள் உறுதுணையாக இருந்தமையை எவரும் மறுப்பதற்கில்லை. தி.ஜ.ர, கு.ப.ரா. புதுமைப் பித்தன், த.நா. குமாரசுவாமி, பி.எஸ். ராமையா, ஜானகிராமன், செல்லப்பா ('ஆண்டாள்' என்ற புனைபெயரில்), க.நா.சு., சிதம்பர சுப்ரமணியன், அழகிரிசாமி, விந்தன், சிட்டி, சுந்தர், சோமு, இவர்களைப் போன்ற பலர் இந்தச் சிறுகதை

**மறுமலர்ச்சியில் பெரும்பங்கு கொண்டார்கள். அதே சமயத்தில்தான் எதிர்பாராத விதமாக 19ஆம் வயதிலேயே சிறுகதை எழுத்தாளன் ஆகும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது[1]**

என்று த.நா. சேனாபதி தனது எழுத்துலக நுழைவு பற்றிக் குறிப்பிட்டுள்ளார். 'அநாமதேயம், ஸேனா ஆகிய புனைபெயர்களிலும் எழுதி வந்துள்ளார். பாதகாஹரணம், குற்றமுள்ள நெஞ்சு, அண்ணாமலைக் கோபுரம், செவிலித்தாய், பிரேமதூதன், சிசுலோகம், பழிக்குப் பழி, யார் திருடன், ஏமாந்தவர் யார்?, மாயை, பஸ் சொன்ன கதை ஆகிய சிறுகதைகள் இவருடைய படைப்புத் திறனைப் பற்றிக் கூறும் சான்றுகளாகத் திகழுகின்றன. இவருடைய கதைகளைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது அவற்றை மூன்று வகையாகப் பிரித்துக் காட்டியுள்ளார்.

1. **பிறர் சொல்லக் கேட்டோ, வரலாற்றை அடிப்படையாகக் கொண்டோ, கண், மூக்கு, காதெல்லாம் வைத்து எழுதியவை.**
2. **அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட முற்றும் சொந்தமான கற்பனைகள்.**
3. **பலநாட்டுக் கதைகளைப் படித்து மொழிபெயர்த்த காரணத்தால் அவற்றிலுள்ள கருத்துகள் மனதில் ஊன்றியதன் விளைவாகப் படைத்தவை.[2]**

இவருடைய இலக்கிய வளர்ச்சியைப் பற்றி அறிய இவ் வகைப்பாடுகள் பெரிதும் துணைபுரிவனவாகும். இவர் ஒரு படைப்பாளியாக இருந்த போதிலும் மொழிபெயர்ப்பின் மீது உள்ள ஈடுபாடும், அதனுடைய ஆற்றலையும் அறிந்திருந்தபடியால் அவர் ஒரு மொழிபெயர்ப்பு எழுத்தாளராகப் பரிணமித்தார். குறிப்பாக வங்கமொழி இலக்கியங்களைத் தமிழுக்குக் கொண்டு வருவதில் ஊக்கமுடையவராகத் திகழ்ந்தார். வங்க இலக்கியப் படைப்புகளிலும் குறிப்பாகத் தாகூரைத் தமிழில் வழங்கும் முயற்சியில் ஈடுபட்டவர்களுள் த.நா. குமாரசுவாமிக்கு அடுத்தபடியாகக் குறிப்பிடத்தக்கவர் த.நா. சேனாபதி. த.நா. குமாரசுவாமியும் அவருடைய சகோதரரான த.நா. சேனாபதியும் இணைந்தும், தனித் தனியாகவும் தங்களுடைய மொழிபெயர்ப்புகளை வழங்கியுள்ளனர். பள்ளி நாட்களிலேயே தம் சகோதரர் த.நா. குமாரசுவாமியுடன் ஊக்கத்துடன் வங்கமொழி கற்று வந்தார் சேனாபதி.

**நோபல் பரிசு பெற்ற மகாகவி ரவீந்திரநாத டாகூருக்குச் சென்னை மக்கள் அன்று பாராட்டு விழா எடுத்தார்கள். அப்போது துணிச்சலாய் வங்க மொழியில் சில வார்த்தைகள் கூறி அவர் கரங்களில்**

> பூங்கொத்து ஒன்றைச் சமர்ப்பித்தார் இளம் சேனா. அன்று அவரைவிட அதிகம் வங்கமொழி கற்ற மூத்தவர் குமாரசுவாமி பேச நா எழாமல் தயங்கி நின்ற தருணம் அது.[3]

தாமாகவே சிறந்தகதை கட்டுரைகளை எழுதும் ஆற்றல் மிக்கவரான சேனாபதி தம் திறமை முழுவதையும் பிறமொழிப் படைப்புகளைத் தமிழாக்கித் தருவதற்கே அர்ப்பணித்தார். மறைந்த மோதிரம், கோகுலச் செல்வன் (பஞ்சாபகேச அய்யர்), அல்ல (தாராசங்கர் பானர்ஜி), கட்டை பிரம்மச்சாரி (சுபோத்வசு), லட்சியப் பெண் (ஸௌரீந்திர மோஹன் முகோபாத்யாய), இலட்சிய இந்து ஓட்டல், வனவாசி (விபூதி பூஷண் பந்த்யோபாத்யாய), கமலா (சரத்சந்திரர்), வேலைகிடைத்து (எல். பஸ்லுல் ஹக்) ஆகியன த.நா. சேனாபதியின் மொழிபெயர்ப்பில் வெளிவந்த நாவல்களாகும். தற்கொலைக் கழகம் (ஸ்டீவன்சன்), மனிதப் பறவை (கிரேக்க புராணக் கதைகள் - தொகுப்பு) ஆகியன ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்தவையாகும். தற்கால வங்கக்கதைகள் எனும் சிறுகதைத் தொகுதியும், நீதிபதி ஏ.எஸ்.பி. ஐயர் எனும் கதையும் இவருடைய மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளது.

சிறந்த மொழிபெயர்ப்பு அறிஞராக விளங்கிய கா.ஸ்ரீ.ஸ்ரீ. இவருடைய நெருங்கிய நண்பர். த.நா. சேனாபதியைப் பற்றி இவரிடம் கேட்டபொழுது,

> த.நா. குமாரசுவாமியின் மொழிநடை வடமொழியும், சங்க இலக்கிய நடையும் கலந்ததாக இருக்கும். சேனாபதியின் மொழிநடை எளிமையாகச் சரளமாக இருக்கும். இவருடைய மொழிபெயர்ப்புகளில் மூலத்தைப் பற்றியோ மூலத்தின் தாக்கமோ ஒன்றும் தெரிந்து கொள்ள முடியாது. சுமார் 30 நூல்களும் 200 கதைகளும் கட்டுரைகளும் எழுதியுள்ளார். தாகூரைப் போலத் தோற்றமுடையவர். எவ்வளவு எளிய மனிதரோ அவ்வளவு எளிய மொழிநடை, பணிவு, அடக்கம். கட்டுப்பாடுடன் வாழ்ந்தவர். ஒழுக்கத்தை உயர்வாகப் போற்றியவர். மனைவி உடல்நிலை சரியில்லாத நிலையில் அவருக்காகவே வாழ்ந்தவர். இரண்டு மகன், ஒரு மகள். நாள் கழித்துத் திருமணம் செய்து கொண்டார். குடும்பத்தில் மிகுந்த அன்புடன் வாழ்ந்தவர். வங்கமொழி நன்றாகப் பயின்றவர். கர்வமில்லாதவர். குழந்தை உள்ளம் படைத்தவர். அவரைப்போல ஒரு நண்பர் கிடைப்பது அரிது. நட்பிற்கு இலக்கணமாக வாழ்ந்தவர். ஏறக்குறைய என்னுடைய தம்பி என்று கூறலாம். அந்த அளவிற்கு அவருடன் நான் நெருங்கிப்

> **பழகியவன். தமிழில் வித்துவான் பரிட்சையில் தேறியவர். ஒரியா மொழியும் கற்றுக் கொண்டார்**[4]

என்று கா.ஸ்ரீ.ஸ்ரீ. நினைவு கூர்ந்தார்.

## த.நா.சே.யின் மொழிபெயர்ப்பில் தாகூரின் படைப்புகள்

தாகூரின் மீது உள்ள ஈடுபாட்டைத் த.நா. சேனாபதி தனது மொழிபெயர்ப்புகளின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார். தாகூரின் **நாலு அத்தியாயம், மகாமாயா** ஆகிய நாவல்களும், **மானபங்கம், மூவர், காரும் கதிரும், போஸ்ட் மாஸ்டர்** ஆகிய சிறுகதைத் தொகுதிகளும், **'மாலினி'** என்ற நாடகமும், **இளமைப்பருவம்** (தாகூரின் தன் வரலாறு), **மனிதனின் சமயம்** என்ற தத்துவ நூலும், **இரவீந்திரர் குழந்தை இலக்கியம், ரவீந்திரரின் தேர்ந்தெடுத்த கட்டுரைகள்** (முதல் தொகுதி) **தாகூர் கடிதங்கள், ரவீந்திரர் வாழ்வும் வாக்கும்** ஆகியன த.நா. சேனாபதியின் மொழிபெயர்ப்பில் வெளிவந்த தாகூரின் படைப்புகளாகும். **'கல்லின் வேட்கை'** எனும் நூலைத் த.நா. குமாரசாமியும், த.நா. சேனாபதியும் இணைந்து மொழிபெயர்த்துள்ளனர்.

த.நா. சேனாபதியின் தமிழாக்கங்கள் மூலப் படைப்புகளைப் போலவே முழுமையும், செழுமையும் பெற்றவை. திட்பமும் நுட்பமும் கொண்டவை. அவருடைய தமிழாக்கம், அதில் நயமும் மெருகும் சுடர் விடும். அவருடைய இப்பணி ஒப்பற்றது; அப்பழுக்கற்றது என்ற பாராட்டைப் பெற்றதாகும். சாகித்திய அகாதெமிக்காகத் தாகூரின் நூல்களைத் தமிழில் தரும் பொறுப்பை அவர் ஏற்றுப் பணி செய்து வந்தார்.

பிறமொழி இலக்கியங்களைப் போற்றும் பண்பு நமக்கு வேண்டும். அந்த ஒளி கொண்டு நம் மொழியை, இலக்கியத்தைப் புதுப்பிக்கும் ஈடுபாடு வேண்டும். தமிழ் இலக்கியத்தை வங்க மொழியிலும், வங்க இலக்கியத்தைத் தமிழிலும் பரிமாற்றம் செய்து கொள்ள வேண்டும் என்ற கொள்கைகளை உடையவர். தமது 16 வயதிலேயே காந்தியத்தில் மிகுதியான ஈடுபாடு உடையவராக விளங்கினார்.

நீண்டநாட்கள் அவர் உதவி ஆசிரியராகவும், ஆசிரியராகவும பணியாற்றிய மஞ்சரி இதழ் அவருடைய மறைவுக்குப் பிறகு அவருடைய பணிகளைப் பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது;

> **அச்சுப்படிகளைத் திருத்திச் செப்பம் செய்து பதிப்பிப்பதில் அவர் தேர்ந்தவர். ஆர்ப்பாட்டமும் ஆரவாரமுமே பேர் சொல்லும் இந்த நாளில் அமரர் சேனா போன்ற அடக்கமான, அமைதியான மேதைகளைக் காண்பது அரிது. சங்க நூல்களை – சிறப்பாகத் திருக்குறள், சிலப்பதிகாரப் பகுதிகளை**

> வங்கமொழியில் பெயர்த்ததற்காகவும் பாராட்டுப் பெற்றவர் அவர். இவ்வளவு இருந்தும் எளிமையே உருவானவர் ஸ்ரீசேனா. இறுதி ஆண்டுகளில் அவர் இன்னொரு டாகுர் போலவே தோற்றம் அளித்தார். அயரா உழைப்பாளி; எத்தனையோ இளம்எழுத்தாளர் களை இன்முகமாய் வரவேற்று வழிகாட்டி உதவியவர். அமரர் தி.ஜ.ர.வுடன் இணைந்தும் தனித்தும் சுமார் நாற்பது ஆண்டுகள் மஞ்சரியை மாதத்தின் சுவையான மலர்க் கதம்பமாகத் தொகுத்து வழங்கினார். இயற்பெயரோடும் புனைபெயரோடும், பெயரே போடாமலும் ஏராளமாக மஞ்சரியில் எழுதினார். ஒரு நல்ல பத்திரிகையாளருக்கு – பத்திரிகை ஆசிரியருக்கு வேண்டிய தகுதிகள் பற்றி ஒரு சமயம் அவர் குறிப்பிட்டார், "கொஞ்சம் டேஸ்ட், கொஞ்சம் ஜட்ஜ்மென்ட், கொஞ்சம் இமாஜினேஷன், கொஞ்சம் டாலென்ட், கொஞ்சம் ட்ரெய்னிங் .... எல்லாம் கொஞ்சம் கொஞ்சம் வேணும்" என்றார். சிறந்த இரசனை, தெளிந்த மதிப்பீடு, கற்பனை வளம், சுயமான திறமை, இவற்றோடு சரியான பயிற்சி.... கொஞ்சம் கொஞ்சம் இல்லை. பத்திரிகையாளருக்கு வேண்டி இருந்த பஞ்சசீலங்கள் நிறைய நிறையவே ஸ்ரீசேனாவிடம் அமைந்திருந்தன[5]

என்று 'நிறைகுடம்' எனும் தலைப்பில் இவ்விதழ் (மஞ்சரி மார்ச் 1994) இவரைப் பற்றிப் பாராட்டிக் குறிப்பிட்டுள்ளது.

## மஞ்சரி இதழில் த.நா. சேனாபதியின் மொழிபெயர்ப்புகள்

மஞ்சரி இதழ் ஆங்கிலத்தில் உள்ள ரீடர்ஸ் டைஜெஸ்ட் போலத் தமிழில் வெளியிடப்பட்டதால் இது தமிழ் ரீடர்ஸ் டைஜெஸ்ட் எனக் குறிப்பிடப்பட்டது. என். இராமரத்தினம் ஆசிரியர், பதிப்பாளர். தி.ஜ. ரங்கநாதன் நிர்வாக ஆசிரியர் பொறுப்பில் நவ. 1947ஆம் ஆண்டு வெளிவந்தது. பலமொழிகளிலிருந்து திரட்டப் பட்ட செய்திகள், கதைகள், கட்டுரைகள், ஆகியவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்குவதற்கான பணியைச் செய்வதற்கு ஒரு குழுவை அமைத்துக் கொண்டனர். மஞ்சரி இதழ்களின் முதல் பக்கத்தில் 'பாஷை ஆசிரியர்கள்' என்ற தலைப்பில் கி.வா. ஜகந்நாதன், கா.ஸ்ரீ.ஸ்ரீ., த.நா. குமாரஸ்வாமி, குமுதினி, வி.எச். சுப்பிரமணிய சாஸ்திரி, கி. சாவித்திரி அம்மாள், சீதாதேவி, ஆர்.வி. கௌரி அம்மாள், டிவி. பரமேசுவரன், மோஸ்ரீ.செல்லம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

இவ்விதழில் எந்தப் பகுதி, யாரால், மொழிபெயர்க்கப் பட்டது என்ற குறிப்பு இடம்பெறாததால் இதைப் பற்றி எதுவும் கூறமுடியவில்லை. பலரும் ஒன்று கூடித் தமிழில் புதியனவற்றை

அறிமுகமாக்கப் பாதை அமைத்துள்ளனர். ஆனால் அதில் தங்கள் பெயரைக் கூடக் குறிப்பிடாமல் அம் மாபெரும் பணியைச் செய்துள்ளனர். தி.ஜ.ர. அவர்கள் முதல் இதழில் 'எங்கள் நோக்கம்' எனும் தலைப்பில் சில செய்திகளைக் குறிப்பிட்டுள்ளார்.

> ***மஞ்சரி புதியது, புதுமையான முயற்சி. ஆனால் ஒரு புதிய பத்திரிகை அல்ல. பல பத்திரிகைகளின் திரட்டாகும். சகல பத்திரிகைகளிலும் வெளிவரும் மிகச் சிறந்த விஷயங்களைச் சாரமாகத் திரட்டிக் கொடுத்தால் அதைப்படிக்க யாரும் விரும்புவது இயல்பு. தமிழ்நாட்டில் அந்தப் பொறுப்பை மஞ்சரி ஏற்றுக் கொண்டிருக்கிறது. மொத்தத்தில், சுருக்கமான அறிவுக் களஞ்சியமாக மஞ்சரி விளங்க வேண்டும் என்பதே எங்கள் நோக்கம். இதற்கு உதவியாகத் தங்கள் பத்திரிகை விஷயங்களைப் பயன்படுத்திக் கொள்ள அநுமதித்த 60க்கும் மேற்பட்ட பத்திராசிரியர்களுக்கு எங்கள் நன்றி***[6]

எனும் அறிவிப்புடன் மஞ்சரி இதழ் வெளிவந்துள்ளது.

> ***ஆங்கிலமொழி இதழ்களான 'யுனிடி ஆஃப் இந்தியா'– 'ராய்ஸ் வீக்லி', 'பம்பாய் கிரானிக்கல்', 'ஸோஷல் வெல்ஃபேர்', 'காரவன்', 'ஸவுன்ட்', 'இந்தியன் ரிவ்யு', 'கரண்ட் ஸயின்ஸ்', 'ஓரியண்ட்', 'பீப்ள்ஸ் ஹெல்த்', 'ஃபோரம், 'ஃபிலிம் இண்டியா', 'மாடர்ன் ரிவ்யு' ஆகியவற்றிலிருந்து முத்தான தமிழாக்கங்கள்;***
>
> ***ஹிந்தி இதழ்களான 'ஹம்ஸ்', விசுவவாணி, மலையாள ஏடான 'ஜயகேரளம்', 'குஜராத்தி சஞ்சிகைகளான 'ஊர்டல், 'நவரசனா,' மராட்டிய மலர்களான 'மனோஹர்', 'வஸந்த் ஆகியவற்றுடன் தெலுங்கின் பங்களிப்புக்கு 'ஸ்திரீ பாரதி'யும், கன்னடப் பங்குக்குப் 'பிரஜாமத'மும் தேர்வாகி, அவற்றிலிருந்து மணி மணியான அம்சங்கள் இதழில் மணம் பரப்பியுள்ளன.***[7]

வாசகர்கள் பல மொழிகளின் இலக்கியச் சுவையை அறிய வாய்ப்பாகத் தமிழில் இவற்றை மொழிபெயர்த்து வழங்கும் பணியில் அயராமல் ஈடுபட்டிருந்தார்கள் இந்தப் 'பாஷை ஆசிரியர்கள்'. இவர்கள் பிறமொழி பத்திரிகைகளிலிருந்து சிறந்த இலக்கியப் படைப்புகளை, சிந்தனைகளைத் தேர்ந்தெடுத்து, தமிழாக்கம் செய்து அல்லது சிலவற்றை அழகாகச் சாரம் கெடாமல் சுருக்கி, சுவை நிறைந்தவனாகத் திரட்டி கொடுக்கும் பணியைச் செய்து வந்தனர். ஒவ்வோர் இதழிலும், கலை, இலக்கியம், வரலாறு, சமூகம், மருத்துவம், தத்துவம், அறிவியல், பொருளாதாரம்

போன்ற பல்துறை சார்ந்த கட்டுரைகளும், உலகப் புகழ் பெற்ற சிறுகதைகள், நாவல்கள், தன்வரலாறுகள் ஆகியவற்றை தமிழ் வாசகர்களுக்கு அறிமுகம் செய்யும் பணியை செய்துவந்தனர். 1948 முதல் 1972 ஆம் ஆண்டு வரை இதில் துணை ஆசிரியர் பொறுப்பைத் தநா. சேனாபதி நன்கு கவனித்து வந்துள்ளார். 1973 ஆம் ஆண்டிலிருந்து மஞ்சரி இதழ் முழுமையாகத் த.நா. சேனாபதி ஆசிரியர் பொறுப்புக்கு வந்த பின்னர் இதழின் நோக்கத்தைச் சிறிதும் குறைவுபடாமல் தொடர்ந்து நடத்தி வந்துள்ளார். பல வங்க மொழிக் கட்டுரைகள், கதைகளை இவ்விதழுக்கு மொழிபெயர்த்து வழங்கிய சகோதரர் களான த.நா. குமாரஸ்வாமி, த.நா. சேனாபதி தங்களுடைய பெயரைக் குறிப்பிடவில்லை. ஒரு சில இடங்களில் மட்டும் காண முடிகிறது.

த.நா. சேனாபதி 'ரவீந்திரநாத் டாகுர் எழுதிய சிறுகதைகள்' (அக் 1948); மாயாவிநோதினி (பிப். 1951); ஊர்வசி (மே 1953); மதுமஞ்சரி (சன 1954); விடுதலை (மே 1954) கண்கொடு (ஜூலை 1977) மற்றும் பிற வங்கமொழிப் படைப்பாளிகளின் படைப்பு களையும் தமிழாக்கித் தந்துள்ளார். வீரசிவாஜி, சந்திரகுப்தன், அஞ்சனக்கோட்டை போன்ற வரலாற்றுக் கதைகளும், சரத் சந்திரரின் 'பச்சாத்தாபம்', 'யார்தவறு' எனும் தாராசங்கர் பானர்ஜியின் வங்க நாவல் சுருக்கத்தையும், வழங்கியுள்ளார். த.நா. ஸேனாபதி' என்று பெயரிடப்படாமல் அவர் வழங்கிய ஏராளமான மொழிபெயர்ப்புகளைப் பற்றி இங்குக் குறிப்பிடப்பட முடியவில்லை. மஞ்சரி இதழிலும் வங்கமொழிக் கதைகள் முக்கியத் துவம் பெற்றுள்ளதைக் குறிப்பிட்டுக் கூறலாம். இம்மொழி பெயர்ப்புகளுள் ஒன்றை இங்குச் சான்றுக்குச் சுட்டிக்காட்டலாம். (சிறுகதை) நெ.1. ரவீந்திரநாத் டாகுர்.

> ஜீவனுள்ள பாத்திரங்களைச் சிருஷ்டித்து, அபூர்வமான சிறுகதைகள் எழுதிக் கீர்த்தி பெற்றவர் கவி ரவீந்திரர். பிரசுரகர்த்தர்களிடம் மொழிபெயர்ப்புக்கு அநுமதி பெற்றுள்ள த.நா. ஸேனாபதி இதைத் தமிழ்ப்படுத்தி நமக்கு உதவியிருக்கிறார்[8]

எனும் அறிவிப்புடன் இக்கதை இடம் பெற்றுள்ளது.

> எனக்குப் புஸ்தகம் படிப்பதில் ஒரு மோகம். சிறுவயதில் கையில் காசில்லாத குறையால் நூல் அட்டவணையைப் பார்த்து ஒருவாறு திருப்தி அடைந்து வந்தேன். எவ்வளவுக்கு எவ்வளவு குறைவாகப் படிக்கிறோமோ அவ்வளவு பாஷையில் தேறுவது நிச்சயம் என்று எனக்குத் தெரியாது. அதனால்தான் நான் காலேஜ் பாஷை எதிலும் தேறவில்லை. ஆனாலும் இப்போதெல்லாம் என்னைத் தேடிக் கொண்டு எத்தனையோ பி.ஏக்களும் எம்.ஏக்களும்

> வருகிறார்கள் என்றால் பாருங்களேன். அடுத்தபடி எனக்கு மிகவும் பிடித்தது வம்பு. கௌரவ பாஷையில் சொன்னால் இலக்கியச் சர்ச்சையே[9]

என்று த.நா. சேனாபதியின் மொழிபெயர்ப்பில் இச்சிறுகதை தொடங்குகிறது. பத்திரிகைகள் வாசகர்களின் இரசனையை மனதில் நிறுத்தியே மொழிநடையைக் கையாளுவது வழக்கம். மஞ்சரி இதழைப் படிப்பவர்கள் மூலத்தை அறிந்து கொண்டாலும் தமிழ்ப் படைப்பாளியின் கைவண்ணத்துடன் இடம்பெற்று வந்த மொழிபெயர்ப்புகள் பற்றி இன்றளவும் பெரிதும் பாராட்டிப் பேசப்படுகின்றன. மஞ்சரி, கலைமகள் இதழ்கள் பிறமொழிப் படைப்புகளுக்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்து வாசகர்களின் அறிவை விரிவாக்குவதில் மொழிபெயர்ப்பாளர்கள் முனைப்புடன் செயல்பட்டு வந்தனர். இவ்விதழ்களில் மட்டுமல்லாமல் சிறுகதை, நாவல்கள் ஆகியவற்றைத் தனித்தனி நூல்களாகவும் வெளியிட்டு வந்தனர். ஜோதிநிலையம், கலைமகள் காரியாலயம் அல்லயன்ஸ் வெளியீடுகள், இக்காலக்கட்டத்தில் மொழிபெயர்ப்புக்கென முன்முயற்சி எடுத்துள்ளதை இங்குக் குறிப்பிட்டுக் காட்டலாம்.

> 1946ல் தேசத்தந்தை மகாத்மா காந்தி சென்னை விஜயத்தின்போது ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கண்காட்சியில் அல்லயன்ஸ் ஸ்டாலுக்கு வந்து, நூல்களைப் பார்த்து விவரங்களைக் கேட்டறிந்து நிறுவனரை மிகவும் பாராட்டினார். காங்கிரஸ் இயக்க வரலாறு, தேசியத் தலைவர்களின் வரலாறு, காங்கிரஸ் மாநாடுகளின் வரலாறு போன்ற நூல்களை வெளியிட்டுத் தேசபக்தியை வீறு கொண்டு எழச்செய்தார் குப்புசாமி ஐயர்.
>
> தேசிய ஒற்றுமையை வளர்க்கும் வகையில் வங்க மொழியிலிருந்து பங்கிம்சந்திரர், சரத்சந்திரர், டாகுர் ஆகியோரது நூல்களையும், ஹிந்தியிலிருந்து பிரேம்சந்த் போன்ற அரிய எழுத்தாளர்களின் கதை களையும், மராட்டியிலிருந்து வி.ஸ. காண்டேகர் நூல்கள், மற்றும் மலையாளம், தெலுங்கு மொழியி லிருந்து கதைகளையும் மொழிபெயர்த்துத் தமிழில் வெளியிட்டார். அதேபோலப் பல தமிழ் நூல் களையும், தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற பிற மொழிகளில் வெளியிட்டுள்ளார்.[10]

பிறமொழி இலக்கியங்களுக்கு அளிக்கப்பட்ட முக்கியத் துவத்தைக் காட்டியதற்கு இது ஒரு சான்று. இந்த வளர்ச்சிக்கு உதவிய மொழிபெயர்ப்பாளர்களை இத்தகைய நிறுவனங்கள் இன்றும் நினைவுகூர்கின்றன. எழுத்தாளர்களும் நினைவுகூர்கின்றனர்.

நாவல் கலை பற்றி எழுதிய க.நா. சுப்ரமண்யம் 1940களில் வெளிவந்த மொழிபெயர்ப்புகள் பற்றிச் சுட்டிக்காட்டுகிறார்.

> தமிழில் 1940களில் மொழிபெயர்ப்புகள், முக்கியமாக மொழிபெயர்ப்பு நாவல்கள் வெளிவருவது துரிதப் பட்டது. அது காரணமாகத் தமிழ் நாவல்களிலும் ஒரு கணிசமான அளவில் வளர்ச்சி ஏற்பட்டது. வங்க மொழியிலிருந்து பல நாவல்களைத் த.நா. குமாரசாமி, த.ந. சேனாபதி, குமுதினி, அ.கி. ஜெயராமன் போன்றவர்கள் மொழிபெயர்த்தார்கள். கா.ஸ்ரீ. ஸ்ரீனிவாச்சாரியார் என்பவர் இந்தியிலும் மராட்டி யிலும் இருந்து பல, நாவல்களை மொழிபெயர்த்து அளித்தார். க.நா. சுப்ரமண்யம், தி. ஜானகிராமன் போன்றவர்கள் பல ஆங்கில, ஐரோப்பிய நூல்களை மொழிபெயர்த்துத் தமிழுக்கு வளமூட்டினர். ஒரு பத்து வருஷங்களில் ஒரு ஐம்பது மொழிபெயர்ப்பு நாவல்களாவது தமிழில் வெளிவந்திருக்கும். இதுவே தமிழ் நாவல் கலை வளத்தை ஓரளவிற்குச் சாத்தியமாக்கிய ஒரு தூண்டுதல் என்று நிச்சயமாகச் சொல்ல வேண்டும்.
>
> இந்த மொழிபெயர்ப்பு நாவல்களிலேயும் இரு பிரிவுகள் இருப்பதைக் காணலாம். ஜனரஞ்சகமான நாவல் என்று ஏ.கே. ஜெயராமனின் சரத்சந்திர மொழி பெயர்ப்புகள், கா.ஸ்ரீ.ஸ்ரீயின் காண்டேகர் மொழி பெயர்ப்புகள், த.நா. குமாரசாமியின் வங்க மொழி பெயர்ப்புகளை அந்த வரிசையில் சொல்லலாம். அவை சில ஆயிரக்கணக்கான வாசகர்களை உடனுக்குடன் எட்டின. இலக்கியத் தரமான சில மொழிபெயர்ப்புகள் ஒரு பதிப்புக்கு மேல் வெளி வரா விட்டாலும் நாவலாக அதிக வாசகர்களை எட்டா விட்டாலும் கணிசமான இலக்கியப் பாதிப்பை ஏற்படுத்தின.[11]

இம்மொழிபெயர்ப்பாளர்களின் பங்களிப்பைப் பற்றிய இக்கருத்து மொழிபெயர்ப்பு வரலாற்றில் அவர்களின் இடத்தையும் முக்கியத்துவத்தையும் குறிப்பதாக அமைந்துள்ளது.

## இரவீந்திரர் குழந்தை இலக்கியம்

கவி இரவீந்திரநாத் தாகூர் குழந்தைகளுக்காக எழுதிய கதைகளும் பாடல்களும் ஒரு தொகுதியாகச் சாகித்திய அகாதெமியால் 1963ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளன. இதைத் த.நா. சேனாபதி, ம.ப. பெரியசாமித்தூரன் ஆகிய இருவரும் தமிழாக்கித் தந்துள்ளனர். இதில் உள்ள 50 பாடல்கள் குழந்தை

இலக்கியப் படைப்பாளர் ம.ப. பெரியசாமித் தூரனால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன என்பதை ஊகித்தறிய முடிகிறது. 22 கதைகள் த.நா. சேனாபதி அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டிருக்க வேண்டும். அந்தந்தப் பகுதிகளில் மொழிபெயர்ப்பாளரின் பெயர் ஏதும் இடம்பெறாததால் இவ்வாறு ஒரு கணிப்பைக் கூற வேண்டியுள்ளது.

> குருதேவரின் எழுத்தோவியங்கள் எல்லாப் பருவத்தினரையும் கவரும் தன்மை வாய்ந்தவை. ஆயினும் குழந்தைச் செல்வங்களுக்கெனவே இரவீந்திரர் படைத்துள்ள இலக்கியச் செல்வம் தெவிட்டாத அமுதம் போன்றது. கருத்துமிக்கக் கவிதை, வாய் மணக்கப் பாடக்கூடிய சந்தப்பாடல்கள், அழகழகான கதைகள், பல்சுவை நாடகங்கள், காட்சிகளைச் சித்திரிக்கும் கடிதங்கள், சிந்தனைச் செறிவு மிக்க கட்டுரைகள் ஆகியவை நிறைந்த இலக்கியச் சுரங்கத்திலிருந்து தேர்ந்தெடுத்த சில மணிகள் இந்தத் திரட்டில் கோக்கப்பட்டுள்ளன[12]

என இந்நூலைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

> குழந்தைகளிடம் கவி இரவீந்திரநாத் தாகூருக்கு அளவற்ற அன்பு. அன்பு மட்டுமா! அவர்களை உள்ளூற நம்பினார்; அவர்களிடம் மதிப்பும் உண்டு அவருக்கு. அவர்களை ஏதோ அறிவில்லாதவர்கள், எதையும் கிரகித்துக் கொள்ளத் தெரியாத மூடப் பிராணிகள் என்று அவர் எண்ணியதேயில்லை. எளிமையான முறையில் விஷயத்தைச் சொன்னால் குழந்தைகள் நன்றாகப் புரிந்துகொள்வார்கள் என்பது அவருக்குத் தெரியும்[13]

தாகூரின் வாழ்வில் நடந்த பல நிகழ்ச்சிகளை நினைவு கூர்வது போல இத்தொகுப்பில் உள்ள சில கதைகளும், கட்டுரை களும் அமைந்துள்ளன. நாடக வடிவமாகவும் சில அமைந்துள்ளன.

த.நா. சேனாபதியின் மொழிபெயர்ப்பு, தமிழில் எழுதுவது போன்றே இயல்பாக அமைந்துள்ளது என்பதற்கு இந்நூலிலிருந்து ஒரு சிறு சான்று காட்டலாம்.

> ஒரு நாள் விடியற்காலை. வழியோரம் நின்றுகொண்டு இரண்டு சிறுவர்கள் ஏதோ துணிச்சலான ஒரு காரியத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். கோயிலில் அத்தை வளர்க்கிற மாதவிக் கொடியிலிருந்து பூப்பறித்துக்கொண்டு வருவதைக் குறித்துத் தான் இருவருக்கும் விவாதம். ஒரு சிறுவன்

> "நிச்சயமாக முடியும்" என்றான். மற்றவனோ 'முடியவே முடியாது' என்றான்.
>
> இது கூடவா முடியாது? என்று நமக்குத் தோன்றலாம். ஆனால் முழு விவரமும் தெரிந்தால் அது அவ்வளவு எளிய காரியமில்லை என்பது புரிந்து விடும்[14]

என 'அநுமதியின்றி உள்ளே நுழைந்த கதை' தொடங்குகிறது. கோயிலைக் கெடுபிடியாகக் கவனித்து வரும் அத்தை ஜயகாளி, மாதவிக் கொடியிலிருந்து பூப்பறிக்கச் சென்ற பையனைப் பிடித்து அடித்து, ஓர் அறையில் போட்டுப் பூட்டி விடுகிறாள். சிறிது நேரத்திற்கெல்லாம் கோயில் தோட்டத்தில் பன்றி நுழைந்து மாதவிக் கொடியினடியில் தங்கி விடுகிறது. துரத்தி வரும் தொம்பரவர் கூட்டத்தை அதட்டி அனுப்பி விடுகிறாள். அவள் புனிதமாகப் போற்றும் கோயிலில் பன்றிக்கு இடம்! என இக்கதை அமைந்துள்ளது. த.நா. குமாரசுவாமியின் மொழிபெயர்ப்புக்கும் த.நா. சேனாபதியின் மொழிபெயர்ப்பிற்கும் வேறுபாடு காண முடியவில்லை.

வங்க இலக்கிய மணம் மொழிபெயர்ப்பில் பரவி நிற்பதை வாசகர்கள் உணரும் வகையில் உள்ளது.

### இலட்சிய இந்து ஓட்டல்

உலகப் புகழ் பெற்ற திரைக்காவியமெனப் போற்றப்பட்ட இயக்குநர் சத்யஜித்ராயின் 'பதேர்பாஞ்சாலி'யின் ஆசிரியரான விபூதிபூஷன் பந்தோபாத்யாயா, தாகூருக்குப் பிறகு வங்க இலக்கியத்துக்கு உலகத் தரத்தைப் பெற்றுத் தந்துள்ள வெகு சிலரில் ஒருவராகக் குறிப்பிடப்படுகிறார். இவருடைய 'ஆதர்ச ஹிந்து ஹோட்டல்' எனும் நாவலைத் த.நா. சேனாபதி 'இலட்சிய இந்து ஓட்டல்' என மொழிபெயர்த்து நேஷனல் புக் டிரஸ்ட் வெளியீடாக 1976 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார்.

> ஆதர்ச ஹிந்து ஹோட்ட'லில் விபூதிபூஷண் 'சாமானிய மனிதனிடம் காணும் அசாமானியமான பண்பு' என்னும் தம் லட்சியத்தைத்தான் தலைசிறந்ததாக எடுத்துக் காட்டியிருக்கிறார். அவருடைய மற்ற நாவல்களில் உள்ளது போல் இதில் கவிதை நோக்கு, உலகப் போக்கில் நமக்குப் புலனாகாத ஒரு ரகசியம் பொதிந்து கிடப்பது, இயற்கையிடம் ஆழ்ந்த அன்பு முதலான அம்சங்கள் இராதிருக்கலாம். ஆனால் 'பதேர் பாஞ்சாலி', 'ஆரண்யக' (இவை இரண்டும் பல மொழிகளில் ஆக்கப் பெற்று வெளியாகியுள்ளன) என்பவற்றையொட்டி அவர் எழுதிய இந்த நூலில் நாவலாசிரியரின் அன்புள்ளத்தை எளியோரையும் தாழ்வுற்றோரையும் சிறப்பித்துப் போற்றியிருக்கும் பண்பை – நாம் பார்க்கலாம்[15]

இந்த நாவலின் பல சிறப்புகளைக் கருதித் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. இந்நாவல் முழுமையும் ஒரு கிராமவாசியின் கனவையும், அவனுடைய இயல்பையும் வடித்துக் காட்டுவதாக உள்ளது. இந்தியக் கிராமவாசிகளின் பண்புகளை இந்த நாவலின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

> 'இலட்சிய இந்து ஓட்டல்' விபூதிபூஷண் பந்தோபாத்யாயாவின் ஏறத்தாழ நாற்பது நூல்களுள், பிரபலமாக விளங்கும் சிலவற்றில் ஒன்று. தற்கால வங்க இலக்கியத்தில் இதற்கோர் சிறப்பிடம் உண்டு. என்றாவது ஒரு நாள் சொந்த ஓட்டல் வைக்க வேண்டும் என்ற ஒரு கிராமவாசியின் கனவைச் சுற்றி வேயப்பட்டுள்ள இந்நாவலில் எளிய கம்பீரமும் ஆவேசமான கபடின்மையும் இழைந்தோடுகின்றன. மனித வாழ்வில் அவ்வப்போது தென்படுகிற மேன்மையின் சாயல் இதில் இயல்பாகப் படிந்திருக்கிறது[16]

என இந்நூலின் சிறப்புப் பற்றிக் குறிப்பிடப்படுகிறது.

ஒரு மொழியில் எழுதப்படுகின்ற கதைகளில் அந்த மண்ணும் மக்களும் கலந்துள்ளதாக அமைவது இயல்பு. அவ்வகையில் 'இலட்சிய இந்து ஓட்டல்' வங்க மக்களின் பலவிதமான நடவடிக்கைகளை, அவர்களுடைய சிந்தனைகளைக் காட்டுவதாக உள்ளது. தமிழில் இவை இடம்பெறும் பொழுது அந்த மண்ணின் இயல்பு கலந்தே இடம்பெறுகிறது. (எ.டு.)

> அன்று மாலை சூர்ணி ஆற்றங்கரையில் அந்த வேப்ப மரத்தின் அடியில் தன்னந்தனியே அமர்ந்து ஹஜாரி எத்தனையோ கனவுகள் கண்டான் – எல்லாம் புத்தம் புதிய கனவுகள் – டேம்பிக்கும் வம்சீதரனின் தங்கை மகனுக்கும் திருமணம் நடக்கிறது. எந்தவிதமான தடங்களும் இல்லை! எல்லாம் ஹாஜாரியின் கிராமத்தில், அவனுடைய சொந்த வீட்டில்தான்!
>
> டேம்பியின் மென்மையான சின்னஞ்சிறு கைகளை நரேனின் உறுதியான கரங்களில் வைத்துக் கொடுத் தாயிற்று... இப்படி அவர்கள் இருவரின் கைகளையும் இணைத்தபின் ஹாஜாரி மகளையும் மருமகனையும் வாழ்த்துகிறான்! டேம்பியின் தாயினுடைய கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெறுகிறது...... எப்பேர்ப்பட்ட இலட்சணமான மருமகன்!
>
> இந்தச் சிறுபிள்ளை, பாவம், இந்த வயசில் ஓட்டலிலே ஏன் சமையற்காரனாக வேண்டும்? நமக்கென்று ஓர்

**ஓட்டல் இருந்தால் மருமகனையே மானேஜராகப் போட்டுச் சக்கத்தி ஐயாவைப் போல் நாற்காலியில் அமர்த்தி, உணவு உண்ண வருபவர்களிடமிருந்து காசு வசூலித்துக் கணக்கு வழக்குகளைக் கவனிக்கும்படிச் செய்யலாமே! - ஹாஜாரியின் மனத்தில் இப்படி எண்ணங்கள் எழுந்தன**[7]

கதையின் நிகழ்வுச் சூழல், மனிதர்கள் யாவும் தமிழர்களுக்குப் புதியவரவாக இருந்தாலும், மொழிபெயர்ப்பாளர் த.நா. சேனாபதி கதையை இயல்பான நடையில் கொண்டு செல்லும் போக்கினால் பெரிய மாறுதல்களை உணருவதில்லை. இருந்த போதிலும் கதையின் நிகழ்வுச் சூழல் இது வங்க மொழிக்கதை என்பதை வாசகனுக்கு நினைவூட்டிக் கொண்டேயிருக்கும். பல்வேறுபட்ட மனிதர்களின் அனுபவம் இதன்வழியே வாசகனை வந்து சேர்ந்துவிடுகிறது. மனிதகுலத்தின் பெருமை, சிறுமை, மகிழ்ச்சி, துன்பம் ஆகிய எல்லாம் துறை சார்ந்ததாக இருந்தாலும் அத்தகைய பேரனுபவத்தை வழங்குபவர்கள் த.நா. சேனாபதி போன்ற மொழிபெயர்ப்பாளர்கள்.

'வங்க இலக்கியம் ஒரு கண்ணோட்டம்' எனும் சரோஜ் பந்த்யோபாத்யாயா எழுதிய கட்டுரையைத் த.நா. சேனாபதி மொழிபெயர்த்துள்ளார். இதில் வங்க இலக்கியப் படைப்பாளிகள், காலந்தோறும் ஏற்பட்ட மாற்றங்கள், தற்காலப் படைப்புகள் மிகச் சுருக்கமாக அமைந்துள்ளன. 'இந்திய இலக்கிய மலர்' எனும் சுடர் இதழ் சிறப்புத் தொகுப்பிற்குத் த.நா. சேனாபதி மொழிபெயர்த்து வழங்கிய இக்கட்டுரை குறிப்பிடத்தக்கதாகும். கண்ணப்ப நாயனார் வரலாற்றை இவர் வங்கமொழியில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளது குறிப்பிடத்தக்க ஒரு பணியாகும்.

அமைதியாகவும், அடக்கத்துடனும், ஆரவாரமில்லாமல் மொழிபெயர்ப்பையே மிக முக்கியமான தமது இலக்கியப் பணியாக மேற்கொண்டு தமது பெரும் பங்களிப்பை வழங்கியுள்ளார் த.நா. சேனாபதி.

## குறிப்புகள்

1. த.நா. சேனாபதி சிறுகதைகள், த.நா. சேனாபதி, அல்லயன்ஸ் வெளியீடு, சென்னை, பதி. டிச. 1989, ப. 7.
2. மேற்படி.
3. மஞ்சரி (கட்.) சிரத்தாஞ்சலி - நிறைகுடம், மார்ச் 1974, ப. 64.
4. 18.5.95 ஆம் நாளன்று கட்டுரையாளர் கா.ஸ்ரீ.ஸ்ரீ. அவருடைய மகள் ஹேமாசந்தானம் வீட்டில் சந்தித்தபோது குறிப்பிட்டவை.
5. மஞ்சரி (கட்.) சிரத்தாஞ்சலி - நிறைகுடம், மார்ச் 1994, ப. 64.
6. மஞ்சரி, நவ. 1947. அட்டையின் கடைசி உள்பக்கத்தில் இடம் பெற்றுள்ளது.
7. மஞ்சரி, ஜூன் 1997 (கட்.) நவம்பர் 47, மஞ்சரி முதல் இதழ் இலங்கை மானா, ப. 10.
8. மேற்படி.
9. மேற்படி.
10. மஞ்சரி, மே 2003, (கட்.) நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம், ப. 62-63.
11. நாவல் கலை, க.நா. சுப்ரமண்யம், ப. 138.
12. இரவீந்திரர் குழந்தை இலக்கியம் (தமி.) த.நா. சேனாபதி, ம.ப.பெரியசாமித்தூரன், சாகித்திய அகாதெமி, புதுதில்லி, பதி.1963, நூலின் மேலட்டையில் உள்ள குறிப்பு.
13. மேற்படி, ப. 15.
14. மேற்படி.
15. இலட்சிய இந்து ஓட்டல், விபூதி பூஷன் பந்தோபாத்யாயா, (தமி.), த.நா.சேனாபதி, நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா புதுதில்லி, பதி. 1976, முன். ப. XII.
16. மேற்படி நூலின் அட்டைப் பகுதியில் உள்ள குறிப்பு.
17. மேற்படி, ப. 79.

# மாஜினி (ரா. ரங்கசாமி)

இத்தாலிய நாட்டு எழுத்துலகிலும், சிந்தனையாளர் உலகிலும் சிற்பியாகத் திகழ்ந்த 'மாஜினி'யைத் தனது புனைபெயராகக் கொண்டு தமிழ்ப் பத்திரிகை உலகில், புரட்சியாளராக, புதுமையாளராகச் சுமார் 60 ஆண்டுக் காலம் வலம்வந்தவர் ரா. ரங்கசாமி. தேசிய உணர்வாளராக உருவாகி, பொதுவுடைமைச் சிந்தனையாளராக வளர்ந்து, முழுமையான ஒரு கம்யூனிசவாதியாகத் திகழ்ந்தவர். இடதுசாரி இயக்கத்திற்கும் பொதுவுடைமைத் தத்துவத்திற்கும் இவருடைய எழுத்துப் பணிகள் ஆக்கமும் ஊக்கமும் அளித்துள்ளன. மொழிபெயர்ப்புத் துறையில் ஒரு சாதனையாளராகப் பணியாற்றிய 'மாஜினி'க்கு நிகர் எவருமில்லை எனலாம்.

தினத்தந்தி, தமிழன், தமிழ்நாடு, ஜனசக்தி, தாமரை, சோவியத் நாடு ஆகிய இதழ்களில் எழுதியவர் மாஜினி. தாமே முழுமையாகப் பொறுப்பேற்று நடத்திய இதழ் 'புரட்சி'. 1946 ஆம் ஆண்டு முதல் 60 ஆண்டுக் காலம் பத்திரிகைத் துறையில் நீண்ட நெடிய அனுபவமும், ஆற்றலும், அவருடைய மூலதனமாகும். உடனுக்குடன் மொழி பெயர்த்துப் பத்திரிகையில் இடம்பெறச் செய்ய வேண்டிய நெருக்கடியான சூழல்கள் நிலவுவது வழக்கம். இத்தகைய கடுமையான சவால்களைச் சந்திப்பது மாஜினிக்குக் கை வந்த கலை.

பல தலைவர்களும், இதழாளர்களும், உடன் பணியாற்றிய தோழர்கள் பலரும் மாஜினியைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது அவருடைய எழுத்தாற்றலை, வேகமான வீச்சு நிறைந்த கருத்துகளை, வியக்க வைக்கும் மொழிபெயர்ப்புத் திறனைக் குறிப்பிடாதவர் எவருமில்லை.

> மொழிபெயர்ப்புக்கலை என்பது மூல ஆசிரியரின் உள்ளுணர்வை வாசகர்கள் உணர்ந்து கொள்ளும் தன்மை உடையதாக இருக்க வேண்டும் என்ற இலக்கணத்தை வகுத்துக் கொண்டவர் மாஜினி ரங்கசாமி அவர்கள். அவர்களின் எழுத்து நடை எல்லோரையும் படிக்கத் தூண்டும். கரடுமுரடான சொற்களைக் கையாண்டு மொழிபெயர்க்கும் நூல்கள் வாசகர்களால் வரவேற்கத்தக்கதாக இருக்காது என்ற நுணுக்கத்தை உணர்ந்து தமிழாக்கம் செய்வதில் தனித்தன்மை வாய்ந்தவர். பிறநாட்டு நல்லறிஞர்களின் நூல்கள் பலவற்றைத் தமிழாக்கம் செய்து பெருந் தொண்டாற்றியுள்ளார்.

மார்க்சிய மெய்ஞ்ஞானத்தை நம் தமிழ் மக்களி டையே கொண்டு சேர்த்ததில் பெரும் பங்கு அவருடையது. கீதை ஆய்வுரை, பண்டைக்கால இந்தியா போன்ற மிகவும் தரமான புத்தகங்களை வெளியிட்டதற்குக் காரணமானவர். மாஜினி ரங்கசாமி அவர்களின் கடின உழைப்பு இல்லாமல் அம்பேத்கர் தொகுப்புகள் தமிழில் மொழிபெயர்த்து வந்திருக்க முடியாது. நியு செஞ்சுரி புத்தக நிறுவனத்தின் பதிப்பகத் துறையோடு நாற்பதாண்டுகளுக்கு மேலாகத் தொடர்பு கொண்டுள்ளார். தேசிய இயக்கத்தில் இருந்து கம்யூனிஸ்டு இயக்கத்திற்கு வந்தவர். சோவியத் நாடு புத்தகத்தின் மொழிபெயர்ப்புத் துறையில் பணிபுரிந்தவர்.

மாஜினி ரங்கசாமி அவர்களின் வளமையான எழுத்து முதிர்வு அவரது வயதை இளமையாக்கிக் கொண்டிருக்கிறது. மேன்மையான சிந்தனை கொண்டவர். பெருந்தன்மைக்கு எடுத்துக்காட்டானவர். கதர் ஆடையைத் தவிர மற்ற ஆடையை அணிந்துகொள்ள விரும்பாதவர். சிறந்த தேசபக்தர். அறிஞர்களும் அரசியல் மேதைகளும் பாராட்டும் எழுத்து வண்ணத்துக்குச் சொந்தக்காரர். பல அறிஞர்களுக்குக் கம்யூனிச சித்தாந்தத்தைக் கற்றுக் கொடுத்தவர்'

என அறிஞர் மாஜினியை நியுசெஞ்சுரி புத்தக நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் ஆர்.இராதாகிருஷ்ணமூர்த்தி மற்றும் செயலாளர் சுப்பிரமணியம் அவர்கள் மதிப்பீடு செய்துள்ளனர். அத்தகைய எழுத்துலகச் சிற்பியை ஒரு மொழிபெயர்ப்பு முன்னோடி எனும் கண்ணோட்டத்தில் அவருடைய மாபெரும் பங்களிப்பை இப்பகுதியின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

**'மாஜினி'யின் இளமைப்பருவம்**

1920 ஏப். 14 ஆம் நாள் மதுரையில் பிறந்தார். தந்தையின் பெயர் இராமானுஜம். தாயார் பெயர் சுப்பம்மாள். போக்குவரத்துக் காவலரின் மகனாகப் பிறந்த மாஜினி இளமைப்பருவம் முதலே வறுமையின் கொடும்பிடியில் சிக்கிக் கொண்டவர். அவர் தனது வீட்டைப் பற்றியும் குடும்பத்தைப் பற்றியும் குறிப்பிடுவதைக் கொண்டே மாஜினி எப்படிப்பட்ட சூழலிலிருந்து தோன்றியவர் என்பது தெரிய வரும்.

வீடு என்றா சொன்னேன்? இல்லையில்லை, மாட்டுத் தாவணம். அக்காலக் காவலர் குடியிருப்பை இப்போது நினைத்தாலும் நெஞ்சம் குமுறுகிறது. அடிவயிற்றில் குமற்றல் ஏற்படுகிறது. அவ்வளவு அருவருப்பான பொந்து அது! தெரியாத்தனமாகச் சற்று நிமிர்ந்து

*உள்ளே சென்றால் தலையைப் பதம் பார்க்கும் பத்தாம்பசலியான ஓட்டடுக்கு வீடு; ஆங்காங்கு காறை உதிர்ந்து பல்லை இளித்துக் கொண்டிருக்கும் சுவர்கள். முன்புறம் ஒரு திண்ணை. அதைக் கடந்து சென்றால் ஒரு சிறு கூடம் அதுதான் வரவேற்பறை, படுக்கை அறை, படிப்பு அறை, சாப்பாட்டு அறை எல்லாம்! அதனையடுத்து ஒரு சின்னஞ்சிறு சமையல் கூடம். இறுதியில் கொல்லைப் புறம். பெருச்சாலிகள் ஏகபோக ராஜ்யம் நடத்தும் இடம் அது! முடிவில் முடை நாற்றமெடுக்கும் கழிப்பிடம். இந்த 'மாடமாளிகை' தான் எங்கள் குடும்பத்துக்குப் புகலிடம். 'எங்க குடும்பம் பெரிசு' என்று அந்நாட்களில் ஒரு பிரபலமான பாட்டு உண்டு. அந்தப் பாட்டுக்கு இலக்கணமாக அமைந்திருந்தது எங்கள் குடும்பம். அப்பா, அம்மா, என்னுடன் சேர்த்து எட்டுக் குழந்தைகள், அத்துடன் விதவையாகிவிட்ட என் பெரியம்மா. ஆக மொத்தம் 11 பேர். இந்தப் பதினோரு பேர்களின் ஒரே போஷகராக இருந்தவர் என் தந்தைதான்; அவர் ஒருவர்தான் எங்கள் அனைவருக்கும் படியளந்து வந்தார். இத்தனைக்கும் அவர் சம்பளம் எவ்வளவு தெரியுமா? மாதம் பதிமூன்று ரூபாய்! அந்தப் பதிமூன்று ரூபாய் சம்பளத்தில் பதினோரு பேர் உண்டு உடுத்து உறங்கி வாழ வேண்டுமே, எப்படி? காலையில் பத்து மணி வரை எங்கள் வீட்டுத் திண்ணையில் இட்லிக்கடை நடக்கும், அதற்கு மேல் அந்தத் திண்ணையிலேயே அரிசி வியாபாரம்! இவ்விதம் வறுமை எங்கள் குடும்பத்தைப் பிணந் தின்னும் கழுகுகள் போல் கொத்தியெடுத்தது; கைக்கும் வாய்க்கும் எட்டாத கஷ்ட ஜீவனம். போதிய போஷாக்கின்றி என் தம்பிகள் இருவர், இளம் பிஞ்சுகள் ஐந்து வயதுக்குள்ளேயே வாடி வதங்கிக் கருகி விட்டனர். இந்த உலகிலிருந்தே நிரந்தரமாக விடைபெற்றுக் கொண்டு விட்டனர். இத்தகைய சூழ்நிலையில்தான் நான் வளர்ந்தேன்.[2]*

இப்படிப்பட்ட கொடுமையான வறுமைச் சூழலை மாஜினி தன் இளமைப்பருவ காலத்திலேயே அனுபவிக்கத் தொடங்கிவிட்டார்.

இருந்தபோதிலும் தனது கல்வியைத் தொடர்ந்தார். மிகுந்த வேதனை, சோதனைகளுக்கிடையே அவருடைய தந்தை அவரைப் படிக்க வைத்தார். முதலில் மதுரை நாடார் பள்ளியிலும், பின்னர் யூனியன் கிறித்துவ உயர்நிலைப் பள்ளியிலும், மதுரைக் கல்லூரியிலும் படிக்க வைத்தார். தந்தையின் எதிர்பார்ப்பின் படியே கல்வியில் சிறந்து விளங்கினார் மாஜினி. ஆசிரியர்களின் பாராட்டைப் பெற்றார்.

உயர்நிலைப் பள்ளி இறுதித் தேர்வில் வரலாற்றுப் பாடத்தில் மதுரை மாவட்டத்திலேயே முதன்மை இடத்தைப் பெற்றமைக்காகப் பரிசு பெற்றார்.

இவருடைய இளம் பிஞ்சு மனத்திலேயே தாம் ஒரு சிறந்த எழுத்தாளராக, பத்திரிகையாளராக, நூலாசிரியராக வேண்டும் என்ற தணியாத வேட்கை பதிந்திருந்தது. இவர் எட்டாம் வகுப்பு படிக்கும் காலத்திலேயே இப்படி ஒரு சிந்தனை மலர்ந்தது வியப்புக்குரியதாகும். இந்த இலட்சியத்தை நோக்கி மாஜினியின் வாழ்க்கைப் பயணம் தொடங்கியுள்ளது. சிறுவயதிலேயே பேரறிவைப் பெறுவதற்காகப் பல நூல்களைப் படிப்பதில் ஆர்வம் காட்டியுள்ளார்.

> ***சின்னஞ்சிறு வயதிலேயே நிறையப் படிக்க ஆரம்பித்தேன். என் காலடி படாத வாசகச் சாலைகள் இல்லை. நூலகங்கள் இல்லை; நான் படிக்காத தமிழ் நூல்கள், சஞ்சிகைகள், பத்திரிகைகள் இல்லை. வள்ளுவரைப் படித்தேன். கம்பரைப் படித்தேன். இளங்கோவடிகளைப் படித்தேன். பாரதியைப் படித்தேன். பாரதிதாசனைப் படித்தேன். தாகூரை, ரூசோவை, வால்டேரை, இங்கர்சாலை, டால்ஸ்டாயை, சரத்சந்திரரை, பங்கிம்சந்திரரை, ஹரீந்திரநாத்தை, கிருஷ்ண சந்தரை, சுத்தானந்த பாரதியை, புதுமைப் பித்தனை, கல்கியைப் படித்தேன். காந்தியடிகளின் சத்திய சோதனையும், நேருஜியின் சுயசரிதமும், அவர் தமது புதல்வி இந்திரா காந்திக்கு எழுதிய கடிதமும், வீர சாவர்க்கரின் எரிமலையும், இன்னும் எத்தனை எத்தனையோ நூல்களும் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. இவை யாவும் என்னை ஓர் இளம் எழுத்தாளனாக, பத்திரிகையாளனாக உரமிட்டு வளர்த்தன. விதையாய், முளையாய், தளிராய், மரமாய், காயாய், கனியாய் இந்த இலட்சியம் என்னுள் வளர்ந்தது. இவற்றையெல்லாம் விட முக்கியமாக ஒரு போலிஸ்காரரின் மகனாகிய என் இளம் உள்ளத்தில் தேசபக்திக் கனலை, விடுதலை வேட்கையை, அன்னையின் அடிமைச் சங்கிலியைச் சுக்கு நூறாக உடைத்தெறிய வேண்டும் என்ற தணியாத தாகத்தை, வேகத்தை, எழுத்துப் பசியைக் கிளர்த்தி விட்டது. எனது இந்தக் கன்னி முயற்சிக்கு முதன் முதலில் ஆக்கமும் ஊக்கமும் அளித்ததவர் என் பள்ளிக்கூடத் தமிழாசிரியர் ரெட்டியார்தான்[3]***

தமிழாசிரியர் அளித்த ஊக்கமும் பாராட்டும் தொடர்ந்து இந்தச் சிந்தனை மாஜினியின் மனதிற்கு உரமூட்டியது. எழுத்துலகில் அடியெடுத்து வைக்கும் முயற்சியைத் தூண்டியது.

## எழுத்துலகில் நுழைவு

'ஆனந்தபோதினி', 'பிரசண்ட விகடன்' ஆகியன அக்காலத்தில் புகழ்பெற்ற தமிழ் இதழ்களாக விளங்கின. இவை கட்டுரைகள், கதைகள் வெளியிட்டு இளம் எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் பணியைச் செய்து வந்தன. மாஜினி எழுத்துலகில் அடியெடுத்து வைக்க இவ்விதழ்கள் தூண்டுகோல்களாக அமைந்தன. எதிர்காலக் கனவை நனவாக்க முதல் படியமைத்துக் கொடுத்தன. இந்த அனுபவத்தைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது,

> எனது இந்தப் பசிக்கு முதன் முதலில் தீனி போட்டவை 'ஆனந்த போதினி', 'பிரசண்ட விகடன்' போன்ற சஞ்சிகைகள்தான். அவை எனது கட்டுரை களையும் கதைகளையும் வெளியிட்டுச் சன்மானம் அளிக்காவிட்டாலும், தமிழ் வாசகர்களின் மத்தியில் என்னை ஓர் எழுத்தாளனாக அறிமுகம் செய்து வைத்தன. இதே போன்று, அச்சமயம் நடைபெற்று வந்த 'ஹனுமான்', 'ஹிந்துஸ்தான்' முதலான வார ஏடுகளும் எனது துணுக்குக் கதைகளை வெளியிட்டு, ஒரு ரூபாய் அன்பளிப்பாக அனுப்பி ஊக்குவித்தன. இது என் முயற்சிக்கு ஒரு வலுவான தூண்டுகோலாக, நெம்புகோலாக அமைந்தது. எனக்கு இப்போது புதுத்தெம்பு வந்துவிட்டது. தமிழ்ப் பத்திரிகை உலகில், தமிழ் வாசகர்களின் மத்தியில் எனக்கு அங்கீகாரம் கிட்டும் என்ற நம்பிக்கை பூத்தது. எழுத்தாளனாக, பத்திரிகையாளனாக உருவாக வேண்டும் என்ற என் கனவு நனவாகும் என்பதற்கு இதனை ஓர் ஆதாரமாக, அறிகுறியாக எடுத்துக் கொண்டேன்[4]

என்று கூறியுள்ளார்.

மாஜினி இளம் வயதிலேயே தாம் ஒரு எழுத்தாளராக வேண்டும் என்ற இலட்சிய வேகம் இருக்கும் அளவிற்கு நாட்டுப் பற்றும், அந்நியர் ஆட்சியின் அடக்குமுறை கண்டு வெகுண்டு, நாட்டின் விடுதலைக்குப் பாடுபட வேண்டும் என்ற கொள்கையும் இரண்டறக் கலந்தன. அக்காலத்தில் சிறைக்கோ, சித்திரவதைக்கோ, அடக்குமுறைக்கோ, தூக்குமேடைக்கோ, துப்பாக்கி முனைக்கோ அஞ்சாது அடிமையாட்சியை ஒழித்து, விடுதலை நாடாக்கும் பணியில் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட விடுதலை வீரர்களையும், தியாகிகளையும் கண்டு தாம் இனிக் கதர் ஆடையே அணிவது என உறுதி பூண்டார். தனது 16 வயதில் கதர் ஆடை அணிந்த ரங்கசாமி எனும் 'மாஜினி' இன்றும் அதைத் தொடர்ந்து கடைப்பிடித்து வருகிறார்.

பள்ளி செல்லும் வயதில் கதர் ஆடை அணிந்ததால் பலரும் இவரை வியந்து பார்த்தனர். ஒரு விந்தைப் பொருளாக, விநோதப் பொருளாகக் கண்ணுற்றனர். ஆனால் தான் அணிந்திருக்கும் ஆடையின் இலக்கணமாக அதற்கான பணியிலும் ஈடுபடத் தொடங்கினார். அவ்வேளையில் 'மாணவர் காங்கிரஸ்', மாணவர் களிடையே நாட்டுப் பற்றுணர்வைத் தட்டியெழுப்பி வந்தது. விடுதலை வேள்வியில் தம்மை இணைத்துக் கொள்ள வேண்டி மாஜினி மாணவர் காங்கிரசில் தன்னை இணைத்துக் கொண்டார். மதுரை மாநகரில் மாணவர் இயக்கத்தைக் கட்டி வளர்க்கும் பணியில் அயராமல், பாடுபட்டார். மேலும் சமூகச் சீர்கேடுகளை, ஏற்றத் தாழ்வுகளை, இழிவுகளை, தீண்டாமையை அகற்றுவதிலும் சிறு வயது முதலே நாட்டம் கொண்டிருந்ததால் அந்தப் பணிகளையும் இணைத்தே செய்து வந்தார்.

மாணவப் பருவத்தில் பொதுக்கூட்டங்கள், ஊர்வலத்தில் கலந்துகொண்டு பல தலைவர்களின் அறிவாற்றல் மிக்க சொற்பொழிவுகளைக் கேட்கும் வாய்ப்பினைப் பெற்றார். அனல் பிழம்பு கக்கும் எரிமலையாகத் தன் சொற்பொழிவை நிகழ்த்தும் தோழர் ஜீவானந்தம், மடைதிறந்த வெள்ளம்போல் புள்ளி விவரங்களை அடுக்கு அடுக்காக அள்ளி வழங்கும் தோழர் பி. ராமமூர்த்தி ஆகிய இருவரும் அவருடைய இளம் உள்ளத்தில் ஆழமான முத்திரையைப் பதித்தவர்கள். மதுரைக் கல்லூரியில் ஓராண்டுடன் இவருடைய படிப்பு முடிவடைந்து விட்டது. அன்றைய சூழலில் இவரால் படிப்பைத் தொடர முடியாமல் போயிற்று. தொடர்ந்து பொன்னமராவதியைச் சேர்ந்த சுப்புலட்சுமி என்பவரை மணந்து மணவாழ்க்கையில் ஈடுபட்டார். ஆனால் எழுத்தாளனாக வேண்டும் என்ற இலட்சியத்தை மனத்தில் இருத்தி, கதைகள், காவியங்கள், கவிதைகள், பிறதுறை சார்ந்த நூல்கள் என்று ஏராளமான நூல்களைப் படித்தார். பிறகு சில சிறுகதைகளை எழுதத் தொடங்கினார்.

### அறிஞர் வெ. சாமிநாதசர்மா வழங்கிய மாஜினி

அதுவரை ரங்கசாமியாக இருந்து எழுத்துலகிற்குத் தான் வேறு ஒரு புனைபெயரில் அறிமுகமாக வேண்டும் என்று முடிவு செய்து கொண்டார். எந்தப் பெயரில் எழுதுவது என்று பலவிதச் சிந்தனையில் மூழ்கிய பிறகு வரலாற்றுப் புகழ்மிக்க நூல்களைத் தமிழில் அறிமுகம் செய்த முதுபெரும் அறிஞரான வெ.சாமிநாத சர்மாவின் 'இத்தாலியின் வரலாறு' எனும் நூலே இவருக்கு வழி அமைத்துக் கொடுத்தது. இப்புனைபெயரிட்டுக் கொண்டதைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது,

> அந்த இக்கட்டான நிலைமையில் வாராது வந்த வரப்பிரசாதமாக ஒரு புத்தகம் என் உதவிக்கு வந்தது.

மூத்த அறிஞரும் எழுத்துலகில் தனக்கென ஒரு நேர் நிகரற்ற இடத்தைப் பெற்றிருந்தவருமான வெ.சாமிநாத சர்மா எழுதிய இத்தாலியின் வரலாறே அது. அந்த நூலில், அந்நிய நுகத்தடியிலிருந்து விடுதலை பெறுவதற்கு இத்தாலி நடத்திய வீரஞ்செறிந்த போராட்டத்தை நாடி நரம்புகள் முறுக்கேறும் வகையில், உணர்ச்சிகரமாகச் சித்திரித்திருந்தார். இந்த வீர காவியத்தின் நாயகர்கள் இருவர். ஒருவர் கரிபால்டி, மற்றவர் மாஜினி. இவர்களில் மாஜினி இத்தாலி நாட்டு எழுத்துலக சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி. விண்ணரசை மண்ணிலே கொண்டுவரத் தனது பேனாவைக் கொண்டு பாடுபட்டவர், இருண்ட உள்ளங்களிலே அறிவு விளக்கை ஏற்றி வைத்தவர், சமூகக் கோணல்களை நேர் செய்ய அயராது சளையாது, சலியாது உழைத்தவர். இவற்றை எல்லாம் விட முக்கியமாகத் தாய்த்திருநாடு விடுதலை பெற, அடிமைச் சங்கிலியை உடைத்து நொறுக்கக் கரிபால்டியுடன் இணைந்து நின்று போராடித் தூக்குமேடை சென்றவர்.

இங்குதான் மாஜினி என்னை வெகுவாகக் கவர்ந்தார். அவரும் ஓர் எழுத்தாளர். நானும் ஓர் எழுத்தாளன். அவரும் ஒரு தேசபக்தர். நானும் தேசபக்த உள்ளம் கொண்டவன். எனவே, அந்த வீரப் பெருந்தகையின் பெயரையே எனது புனைபெயராக வைத்துக்கொள்வதென முடிவு செய்தேன். அந்தக் கணம் முதல் வெளிஉலகுக்கு, ஏன் என் உற்றார் உறவினர்களுக்குக் கூட ரங்கசாமி என்றால் தெரியாது, மாஜினி என்றால்தான் தெரியும்![5]

1942ஆம்ஆண்டிலிருந்து 'மாஜினி' என்ற புனைபெயரைத் தாங்கிப் புத்தார்வம் பொங்கும், சிந்தனையைத் தூண்டும் வகையில் எழுதி வாசகர்களின் கவனத்துக்குரிய எழுத்தாளரானார் ரா. ரங்கசாமி. இதற்குக் கால்கோளிட்டவர் அறிஞர் வெ. சாமிநாதசர்மா.

## மாஜினியின் முதல் படைப்பு

மாஜினி என்ற புனைபெயரைத் தாங்கிக் கருவாகி, உருவாகி வெளியான முதல் படைப்பு 'பார்வதியின் உயில்' என்ற சிறுகதை. அப்போது பிரபல வார இதழான 'ஆனந்த விகடனு'க்கு 1942 இல் அனுப்பி வைத்தார். அச்சிறுகதை அடுத்த மாதமே அவ்விதழில் இடம் பெற்று வெளிவந்தது. அதற்கான தொகை ரூ. 15 மாஜினிக்குக் கிடைத்தது. அன்று கதை உலகில் மிகப் பெரும் எழுத்தாளர்களின் செல்வாக்கு கோலோச்சிய அந்நாட்களில் புதிய இளம் எழுத் தாளரான மாஜினியின் கதை ஆனந்தவிகடனில் வெளியிடப்பட்டது

குறித்து பலரும் வியந்தனர். மாஜினியும் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார். பின்னர் அடுத்தடுத்து ஆனந்த விகடன், கல்கி இதழ்களில் மாஜினியின் சிறுகதைகள் வெளிவந்தன. அல்லயன்ஸ் நிறுவனத்தார் வெளியிட்ட 'ஐம்பது சிறந்த தமிழ்ச் சிறுகதைகள்' எனும் தொகுப்பில் மாஜினியின் 'குலதெய்வம்' எனும் சிறுகதை இடம் பெற்றதும், 1943-இல் ஆனந்த விகடனின் தீபாவளி மலரில் தமிழகத்தில் தலைசிறந்த நாற்பது சிறுகதை எழுத்தாளர்களின் புகைப்படங்கள் வரிசையில் மாஜினியின் புகைப்படமும் இடம் பெற்றதும் ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்வுகளாக அமைந்தன. தொடர்ந்து தாம் ஒரு பத்திரிகையாளனாக வேண்டும் என்ற இலட்சியத்தை நோக்கி அடியெடுத்து வைத்தார் மாஜினி. இதற்கான முதல் கதவை திறந்து விட்டது தினத்தந்தி.

## பத்திரிகையாளர் மாஜினி – பணி கிடைத்தது மொழி பெயர்ப்பினால்

பொன்னமராவதியில் இருந்த மாஜினி அப்போது தினத்தந்தி நிறுவனர் ஆதித்தனார் அவர்களைச் சந்தித்து, தன்னுடைய நிலை, இலட்சியம் அனைத்தையும் எடுத்துக் கூறினார். ஆதித்தனார் அப்போது அருகிலிருந்த 'டெலிபிரிண்டரிலிருந்து போர்முனைச் செய்தி ஒன்றை வழங்கி மொழிபெயர்க்கும்படி கூறினார். மிகக் குறுகிய நேரத்தில் அதை மொழிபெயர்த்துக் கொடுத்தார் மாஜினி. ஆதித்தனார் மிக்க மகிழ்ச்சியுடன்

> **அருமையாக மொழிபெயர்த்திருக்கிறீர்கள். இனிய, எளிய விறுவிறுப்பான நடையில் மூலத்திலிருந்து அணுவளவும் விலகிச் செல்லாமல் மொழியாக்கம் செய்திருக்கிறீர்கள், உங்களுக்கு எனது உளமார்ந்த பாராட்டுகள். நாளையே நீங்கள் வேலைக்கு வரலாம். இவ்வாறு தமிழ்ப் பத்திரிகை உலகில் அருஞ்சாதனை படைத்த அந்தப் பெருமகனார் கூறினார். அப்போது நான் அடைந்த மகிழ்ச்சிக்கு உள்ளக் கிளர்ச்சிக்கு, உற்சாகத்திற்கு ஈடேது இணையேது![6]**

என்று குறிப்பிடுகிறார் மாஜினி.

'தந்தி' மதுரைப் பதிப்பில் பணியில் சேர்ந்த மூன்று மாதங்களுக்குப் பிறகு குன்னூரில் வட்டாட்சியர் அலுவலகத்தில் வேலை கிடைத்தது. குடும்பத்தாரின் வற்புறுத்தலால் அப்பணிக்குச் சென்று ஒரு சில நாட்களில் அந்த வேலை தன் மனதுக்குப் பிடிக்கவில்லை என ராஜிநாமா செய்துவிட்டு மீண்டும் தினத்தந்தி அலுவலகத்துக்கு வந்து சேர்ந்தார் மாஜினி. தினத்தந்தியில் இடம் பெற்று வந்த மாஜினியின் தலையங்கக் கட்டுரைகள் அக்காலத்தில்

புகழ்பெற்ற தலைவர்கள், கல்வியாளர்கள், அறிஞர்களின் பாராட்டைப் பெற்றன. அவ்வாறு எழுதப்பட்ட தலையங்கக் கட்டுரைகள், வாசகர்களின் புகழ்பெற்ற வாசகமாக, கம்யூனிஸ்டு எதிர்ப்பு வாசகமாக அமைந்த 'மாஸ்கோவில் மழை, மதுரையில் குடை' என்பதாகும். இதனால் காங்கிரஸ் தலைவர்கள் பலருடன் நேரிடையான அறிமுகமும் நட்பும் கிடைத்தன.

1946-இல் தினத்தந்தி சென்னைப் பதிப்பு தொடங்கப்பட்டது. 'தமிழன்' வார ஏடும் இந்த அலுவலகத்திலிருந்தே வெளிவந்தது. இவ்விரு இதழ்களிலும் மாஜினி பணியாற்றி வந்தார். எதிர்பாராத விதமாகத் 'தந்தி ஊழியர் சங்கம்' அமைத்து அதற்கு 'மாஜினி' தலைவரானதால் ஏற்பட்ட சிக்கலினால் ஆதித்தனாருக்கும் மாஜினிக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. மாஜினி இப்பத்திரிகை யிலிருந்து விலக நேரிட்டது.

பிறகு சேலம் டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு 1919-இல் தொடங்கிய 'தமிழ்நாடு' பத்திரிகையில் பணியாற்றும் வாய்ப்பு கிடைத்தது. இது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்க்கும் கூர் வாளாக, போர்வாளாகத் திகழ்ந்தது. மக்கள் குரலை எதிரொலித்தது. பாவேந்தர் பாரதிதாசன், நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை, யோகி சுத்தானந்த பாரதியார், தே.ப. பெருமாள், கம்பதாசன், கவிஞர் கா.மு. ஷெரீப் போன்ற கவி உலக மேதைகளின் கவிதைகள் எழுத்துலகச் சிற்பிகளான அகிலன், சுகி சுப்பிரமணியன், வல்லிக் கண்ணன் ஆகியோரின் சிறுகதைகள், ஆகியவை இந்த இதழில் இடம் பெற்றன. மாஜினியின் சிறுகதைகளும் இதில் இடம்பெற்றன. 'சுவர்க்கபூமி' எனும் சிறுகதை வாசகர்களின் பெரும் பாராட்டைப் பெற்றது.

### காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியில் மாஜினி

1947 ஆகஸ்டு 15 க்குப் பிறகு காங்கிரசின் பணி முடிவடைந்தது. இதனால் காங்கிரசைக் கலைத்து விடுங்கள் என்ற காந்திஜியின் அறிவுரை மிகவும் சரியெனத் தோன்றியது மாஜினிக்கு.

> ஏனென்றால் நம் முன்னுள்ள அடுத்த பணி நாட்டில் சோஷலிசத்தை மலரச் செய்வதாகும். இந்தப் பணியைச் சோஷலிஸ்டுக் கட்சி, கம்யூனிஸ்டுக் கட்சி போன்ற இடதுசாரிக் கட்சிகளால் தான் வெற்றி கரமாக மேற்கொள்ள முடியும். காங்கிரசால் இப் பணியைச் சாதிப்பது கடினம் என்பது எனது கருத்து, துணிபு. எனவே, காங்கிரஸ் சோஷலிஸ்டுக் கட்சியில் என்னை இணைத்துக் கொண்டேன்[7]

என்று குறிப்பிடுகிறார் மாஜினி.

'தமிழ்நாடு' பத்திரிகை இக்கொள்கையை முன் வைத்துப் பல செய்திகளை வெளியிட்டு ஆதரவு அளித்ததைப் பலரும் பாராட்டியுள்ளனர். ஒருவரின் பெயருக்குப் பின்னால் சாதிப் பெயரைப் போடுவதில்லை; தெருக்களின் பெயர்களில் சாதிப்பெயரிடக் கூடாது போன்ற முற்போக்குச் சிந்தனைகள் பலரின் கோபத்தைக் கிளறின. தொடர்ந்து ஏற்பட்ட சில பிரச்சினைகளும் இனித் தமிழ்நாடு இதழின் ஆசிரியர் பணியில் நீடிப்பது சரியல்ல எனக் கருதி அதிலிருந்து விலகினார் மாஜினி. பிறகு தாமே ஒரு வார இதழைத் தொடங்குவது எனத் தீர்மானித்துப் 'புரட்சி' எனப் பெயரிட்டுத் தொடங்கினார். 'நேர்மை, நியாயம், நிர்தாட்சண்யம்' என்பது புரட்சி இதழின் இலட்சிய வாசகமாக இடம் பெற்றது. எதற்கும் அஞ்சாமல், நேர்மையுடன் செய்திகளை வெளியிட்டு மக்களிடம் விழிப்புணர்ச்சி ஏற்பட வேண்டும் என்பதுடன் எல்லோரும் எல்லாம் பெற்று இன்புற்று வாழவேண்டும் என்பதும் புரட்சியின் இலட்சியமாகத் திகழ்ந்தது. இந்த இலட்சியத்தை முன்னெடுத்துச் சென்று உலக மெலாம் பரவி வந்த கம்யூனிஸ்டு கட்சி 'மாஜினி'யின் கவனத்தை ஈர்த்தது.

> தீவிர கம்யூனிஸ்டு எதிர்ப்பாளனாக இருந்த நான் இப்போது அணுவுக்கு அணு ஆழமான கம்யூனிஸ்டாக மாறியிருந்தேன்...... உலகெங்கும் கம்யூனிஸ்ட்களின் வரலாறு இப்போது என் கண் முன்னால் விரிந்தது. நலிவுற்றவர்களுக்காக, உழைக்கும் மக்களின் உத்தாரணத்துக்காக, ஏகாதிபத்திய சங்கிலிகளைத் துணித்தெறிவதற்காக அவர்கள் ஏற்ற விழுப்புண்கள், செய்த தியாகங்கள் அளப்பரியவை. விவரிக்க வொண்ணாதவை. இவற்றில் எதை மறக்க முடியும்?[8]

உலக அளவிலும், இந்திய அளவிலும் தமிழகத்திலும் அன்றைய கம்யூனிஸ்டுகளின் போராட்ட வாழ்வையும், தியாகத்தையும், அர்ப்பணிப்புத் தன்மையையும் நெஞ்சுருக நினைத்துப் பார்த்தே தன்னை ஒரு முழுமையான கம்யூனிஸ்டாக்கிக் கொண்டார் 'மாஜினி'.

புகழின் சிகரத்தைப் 'புரட்சி' இதழ் எட்டிய போதிலும் சில வேளைகளில் பொருளாதார நெருக்கடிகளை இதுவும் சந்திக்க நேர்ந்தது. நடிகவேள் எம்.ஆர். இராதா, என்.எஸ். கிருஷ்ணன் போன்றோர் இவ்விதழுக்கு நேசக்கரம் நீட்டி நன்கொடை வழங்கினார்கள். 'புரட்சி'யைப் புதுப்பொலிவுடன் வெளியிடத் திட்டமிட்ட வேளையில் கம்யூனிஸ்டுக் கட்சியின் தமிழகச் செயற்குழு 'ஜனசக்தி'யில் பணியாற்ற மாஜினிக்கு அழைப்பு விடுத்தது.

> இந்த அன்பான அழைப்பு என்னைப் பெருமகிழ்ச்சி கொள்ளச் செய்தது. மக்களுக்கு அரும்பெரும் தொண்டாற்றும் ஒரு மாபெரும் இயக்கத்தின், கட்சியின் புகழ்பெற்ற பத்திரிகையில் பணியாற்றப் போகிறோம்

> **என்ற உணர்வு என் உள்ளத்தில் பெரும் தாக்கத்தை, பெருமிதத்தைத் தோற்றுவித்தது. புது மனிதனாக, புத்தெழுச்சி பெற்றவனாகச் சென்னைக்கு ரயிலேறினேன். 1954 ஆம் ஆண்டு சென்னை மண்ணில் அடியெடுத்து வைத்து இப்போது 48 வருடங்கள் ஆகின்றன**[9]

என நினைவுகூர்ந்தள்ளார் மாஜினி.

'ஜனசக்தி' இதழில் மாஜினியின் கைவண்ணத்தில் இடம் பெற்ற 'உரைகல்' எனும் பகுதி பல அறிஞர்களின் பாராட்டைப் பெற்றது. இதைப்பற்றிக் குறிப்பிடும்பொழுது,

> **கட்சியில் என்னை இணைத்துக் கொண்டு, 'ஜனசக்தி' ஆசிரியர் குழுவில் சேருவதற்கு முன்னர், நாடு போற்றும் பிரபல கம்யூனிஸ்டுத் தலைவர்களைப் பற்றிக் கேள்விதான் பட்டிருக்கிறேன். நேரில் பார்த்தது இல்லை. நெருங்கிப் பழகியதுமில்லை. ஆனால் இப்போது அந்த நல்வாய்ப்பு கிட்டிற்று. ப. ஜீவானந்தம், பி. ராமமூர்த்தி, சீனிவாசராவ், எம்.ஆர். வெங்கட்ராமன், ஏ.எஸ்.கே. அய்யங்கார், மோகன் குமாரமங்கலம், என்.கே. கிருஷ்ணன், பார்வதி கிருஷ்ணன், கே. பாலதண்டாயுதம், நல்லகண்ணு, சங்கரய்யா, நல்லசிவன், ப. மாணிக்கம், வி.பி.சிந்தன், வ. சுப்பையா, சரஸ்வதி சுப்பையர், எம். கல்யாண சுந்தரம், சுப்பிரமணிய சர்மா போன்ற மாபெரும் சுதந்திரப் போராளிகள், தியாகச் செம்மல்கள் என் எழுத்தைப் பாராட்டி எனக்கு மிகுந்த ஆக்கமும் ஊக்கமும் அளித்தனர்.**[10]

இதில் தோழர் ஜீவானந்தத்தின் மறைவு மாஜினிக்குப் பேரதிர்ச்சியை அளித்தது. சொல்லொணாத் துயருற்ற மாஜினி ஜீவா நினைவு மலர் ஒன்றைத் தயாரித்து வெளியிட்டது ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாக அவருடைய வாழ்வில் அமைந்தது.

இந்நிகழ்ச்சிக்குப் பிறகு எதிர்பாராதவிதமாக மாஜினிக்குச் 'சோவியத்நாடு' துணை ஆசிரியர் பணியில் சேரும் வாய்ப்பு கிடைத்தது. சோவியத் நாடு இதழின் பொறுப்பாசிரியராக இருந்த தோழர் ஆர். கிருஷ்ணய்யா இப்பதவிக்கு மாஜினி பொருத்தமானவர் என முடிவு செய்து சோவியத் வைஸ்கான்சலுக்குப் பரிந்துரைத்தார். அவருடைய பரிந்துரை ஏற்கப்பட்டு மாஜினிக்கு அழைப்பு விடுக்கப் பட்டது. 'சோவியத்நாடு' இதழ்ப் பணியை ஏற்றுக் கொண்டு 'தாமரை'யை நடத்தும் பொறுப்பையும் ஏற்று நடத்தி வந்தார். பிறகு தாமரையை அறிஞர் தி.க. சிவசங்கரன் அவர்கள் பொறுப்பேற்று நடத்தி வந்தார்.

சோவியத்நாடு இதழில் அறிஞர் மாஜினி

சோவியத் யூனியன் இந்திய மொழிகளிலும் ஆங்கிலத்திலும் பல பத்திரிகைகளை நடத்தியது. இந்திய மொழிகளில் இந்தப் பத்திரிகைகள் இருப்பதால் எல்லா மாநிலத்தைச் சேர்ந்த மக்களும் சோவியத்யூனியனைப் புரிந்து கொள்ள ஒரு வாய்ப்பாக இருந்தது. தமிழ் வாசகர்களின் கண்களுக்கும், உள்ளத்திற்கும் கண்ணாடி போல் காட்டி, புத்துணர்வு அளிப்பதாகச் சோவியத் நாடு இதழ் தமிழகத்தில் வலம் வந்தது. சோவியத் இந்திய நட்புறவு தொடர்பான செய்திகள் முக்கியத்துவம் பெற்றதாக இவ்விதழில் இடம் பெற்று வந்தன. இதில் இடம் பெறும் செய்திகள் அனைத்தும் மொழிபெயர்க்கப் பட்டவையாகும். சோவியத்தின் பண்டைய செய்திகள் முதல் தற்கால அறிவியல் செய்திகள் வரை மொழிபெயர்ப்பில் இடம் பெற்று வந்தன.

(எ.டு.) சோவியத் நாடு, ஏப். 1988, இதழ் 4 - இவ்விதழில் இடம்பெற்றுள்ள செய்திகள் பின்வருமாறு

1. எரபுனி - பண்டைய எரவான் விழா, 2. வாசகர் மன்றம் கடிதங்கள், 3. ஒரு புதிய சகாப்தத்தின் முதல் நூற்றாண்டில் முன்னேறி வரும் சூப்பர் கண்டக்டர்கள், 4. சோவியத் யூனியனில் சூப்பர் கம்ப்யூட்டர்கள், 5. புகழ்பெற்ற சோவியத் கருவியல் நிபுணர், 6. அணுசக்தி நிலையங்களின் வருங்காலம், 7. ஒரு மறுசீரமைப்புச் சித்தாந்தம், இந்தியத் தலைவர்களுடன் ஏற்பட்ட சந்திப்புகளை ஆந்திரி குரோமிகோ நினைவு கூர்கிறார், 8. சோவியத் விஞ்ஞானத் தொழில்நுட்பக் காட்சிகள், 9. சோவியத் இந்திய ஒத்துழைப்பு, புதிய வாய்ப்புகள், 10. விண்வெளியில் நாம் நாடுவது என்ன?, 11 வெண் பனியின் நிறம் என்ன?, 12. இளைஞர்களுக்கு விண்வெளி ஆய்வு தேவைதானா?, 13. எஸ்.டி.ஐ. வளரும் நாடுகளுக்கு ஆபத்து, 14. கரிசல் மண்ணில் வெள்ளை வாத்துகள், 15. ரோட்டோரத்தில் ஒரு பிக்னிக், 16. விசாகையில் ஒரு நாள், 17. இது யாருடைய நாய் (சிறுவர்களுக்கான கதை) - இதில் வாசகர் கடிதங்களைத் தவிரப் பிற செய்திகள் அனைத்தும் மொழிபெயர்ப்பில் இடம் பெற்றவையாகும். கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கும் புதுமையான செய்திகள் சிந்தனையைத் தூண்டும் புரட்சிகரக் கட்டுரைகள், கதைகள், கவிதைகள், சோவியத் இளைஞர்கள், குழந்தைகள் பற்றிய வாழ்வியல் சித்திரங்கள், பெண்களின் முன்னேற்றம் ஆகியவற்றை விளக்கும் வகையில் வண்ணப்படங்களுடன் சோவியத் நாடு இதழ் வெளிவந்து கொண்டிருந்தது. இந்த இதழில் 1964ஆம் ஆண்டு முதல் மாஜினி ஆசிரியர் பணியை ஏற்று 1990ஆம் ஆண்டு வரை 26 ஆண்டுகள் பணியாற்றியுள்ளார்.

சோவியத் நாடு இதழில் பணியாற்றிய அனுபவம் குறித்து மாஜினி குறிப்பிடும்பொழுது,

> சோவியத் நாடு, 'பலகணி', 'புதுப்புனல்' போன்ற சஞ்சிகைகள் குறித்து இங்கு ஒரு சில வார்த்தைகள் கூறுவது உசிதமாக இருக்கும். இவையனைத்தும் முழுக்க முழுக்க மொழிபெயர்ப்பு ஏடுகள். இவற்றிற்கான விஷயதானங்கள் அனைத்தும் மாஸ்கோவிலிருந்து ஆங்கிலத்தில் அனுப்பப்படும், கலை, இலக்கியம், விஞ்ஞானம், தத்துவம், வானூல், பூகர்ப்பவியல், அரசியல், பொருளியல், உளவியல், மார்க்சியம், வரலாறு, தருக்கவியல் முதலான பல்வேறு துறைகளையும் சேர்ந்த கட்டுரைகளும், ஆய்வுகளும், விவாதங்களும், நேர்காணல்களும் இவற்றில் அடங்கும். இதல்லாமல் அருமையான சிறுகதைகளும், குட்டிக்கதைகளும், நகைச்சுவைச் சித்திரங்களும், ஓவியங்களும் புகைப்படங்களும் இடம்பெறும். இவற்றை எல்லாம் இனிய, எளிய சரளமான உள்ளத்தைத் தொடும் நடையில் தமிழில் மொழி பெயர்த்து வெளியிடுவது என்பது சாமான்யமான சாதாரணமான காரியமல்ல. இந்தச் சிரமமான பணியை நாங்கள் பெரும் பிரயாசை எடுத்துக் கொண்டு செவ்வனே செய்து வந்தோம். இதன் பயனாகச் 'சோவியத் நாடு' இதழுக்கும் ஏனைய சோவியத் சஞ்சிகைகளுக்கும் பல்லாயிரக்கணக் கானோர் சந்தாதாரர்களாயினர்"

என்று கூறியுள்ளார். சோவியத் நாடு இதழில் அறிஞர் மாஜினியுடன் பணியாற்றியவர் மூத்த பத்திரிகையாளர் கோ. ஆளவந்தார். இவர் மாஜினியைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது,

> நாங்கள் இருவரும் ஒரே பிரிவில் – பத்திரிகைப் பிரிவில் பணியாற்றினோம். அப்போதுதான் நாங்கள் நெருங்கிப் பழகும் வாய்ப்பு கிட்டியது. அவருடைய இனிய சுபாவம் எவரையும் கவரும். அவர் அதிர்ந்து பேசி நான் கேட்டதில்லை; கோபத்தில் அவர் குரல் உயர்ந்ததையும் கண்டதில்லை. சோவியத் நாடு வெளியீடுகளுக்கு நான் பொறுப்பாக இருந்ததால், தோழர் மாஜினியிடம் மொழிபெயர்ப்புக்காகப் பல நூல்களைத் தந்துள்ளேன். மொழிபெயர்ப்புகளைப் படித்துப் பார்த்திருக்கிறேன். ஆங்கிலத்தில் சிக்கலாக இருக்கும் வாக்கியங்களைக் கூட, தெளிவாக மொழி பெயர்த்திருப்பார். இந்த நூல்கள் எல்லாம் அக்கால அரசியல் கருத்துகளைக் கொண்டவை. எனவே அர்த்தம் மாறிப் போகாத

> முறையில் மொழிபெயர்க்க வேண்டும். மாஜினியின் மொழிபெயர்ப்பில் அதைப் பற்றிய கவலை இல்லை. எல்லாம் கச்சிதமாக இருக்கும்[12]

எனக் குறிப்பிடுகிறார். இதேபோன்று 'சோவியத்லாண்ட்' தென்மொழிப் பதிப்புகளின் இணை ஆசிரியரும் மூத்த பத்திரிகையாளருமான வ. விஜயபாஸ்கரன் அவர்கள் மாஜினியைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது,

> சோவியத்லாண்ட் தென்மொழிப் பதிப்புகளின் இணை ஆசிரியராக நான் இருந்தபோது அதன் தமிழ்ப் பதிப்பான 'சோவியத் நாடு' தயாரிப்பதில் இருபத்து ஐந்து ஆண்டுகள் எனக்கு உறுதுணையாக இருந்தார். அவருடன் சேர்ந்து பணியாற்றியது ஒரு சுகமான அனுபவம். 'சோவியத்லாண்டு' சோவியத் நாட்டுத் தூதரகத்தின் செய்தித்துறை மூலம் வெளியிடப் பட்ட அதிகாரப் பூர்வமான சஞ்சிகை. இந்திய மொழி களுடன் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டது. பெரு வாரியான கட்டுரைகளும் பக்க வடிவமைப்புகளும் எல்லா மொழிகளுக்கும் பொதுவானவை. கட்டுரைகள் ஆங்கிலத்தில் தயாரிக்கப்பட்டு மாஸ்கோவிலிருந்து வந்து சேரும் அவற்றை மொழிபெயர்த்துக் கொடுக்கப் பட்ட பக்கங்களுக்குள் அடக்க வேண்டும். மிகச் சிரம மான காரியம் இது. பிற இந்திய மொழிகளுக்கில்லாத தனித்தன்மை தமிழுக்கு மட்டும் உண்டு. ஒரு பக்கத்துக்குள் அடங்க வேண்டிய ஆங்கிலக் கட்டுரை ஹிந்தி மொழிபெயர்ப்பில் ஒரு பக்கத்துக்குள் அடங்கி விடும். பிற வடஇந்திய மொழிகளிலும் அநேகமாக ஒரு பக்கத்துக்குள் மொழிபெயர்த்து விட முடியும் தமிழில் இது சாத்தியமில்லை. ஆங்கிலத்தில் உள்ள ஒரு பக்கக் கட்டுரையைத் தமிழில் மொழிபெயர்த்தால் ஒன்றரைப் பக்கமாகி விடும். கட்டுரையின் ஜீவனைச் சிதைக்காமல் தொடர்பும் விடாமல் ஒரு பக்கத்துக்குள் அடங்கும்படி மொழிபெயர்க்க வேண்டும். இதற்கு அசாத்திய திறமை வேண்டும். பொறுமை வேண்டும். தமிழ்மொழியில் நல்ல தேர்ச்சி இருக்க வேண்டும். அப்பொழுதுதான் இந்த அசுர சாதனையை நிகழ்த்த முடியும். நண்பர் மாஜினி வெற்றிகரமாகத் தமிழ் 'சோவியத் நாடு' இதழில் இதைச் செய்து காண்பித்தார்.
>
> காலந்தவறாமை அவருடன் பிறந்த குணம். எவ்வளவு கடினமான மொழிபெயர்ப்புகளாக இருந்தாலும் துணிச்சலாக எடுத்துச் செய்வார்; குறித்த காலத்தில் செய்து முடிப்பார். உழைப்பதற்குக் கொஞ்சம்கூடச் சளைக்காதவர் அவர்.

> வெளிநாட்டுத் தூதரகத்தின் செய்தித்துறையாக இருப்பதால் எதிர்பாராமல் நிகழும் உலக நிகழ்ச்சிகளுக் கேற்ப அப்போதைக்கப்போது சுடச்சுடப் பிரசுரங்கள் வெளியிட வேண்டிய நிர்ப்பந்தங்கள் அடிக்கடி ஏற்படும். காலதாமதமானால் ஆறின கஞ்சி பழங்கஞ்சி கதைதான். இந்த நெருக்கடிகளைச் சமாளிப்பதில் நண்பர் மாஜினி ஆபத்பாந்தவராகக் கரம் கொடுப்பார். அவருக்குள்ள பணிகளுக்கிடையேயும் முகம் கோணாமல் மொழிபெயர்த்துக் கொடுத்து எல்லோராலும் பாராட்டப்பட்டிருக்கிறார். அவசரம் என்பதற்காக ஏனோதானோ என்று வேலையை முடித்துக் கொடுத்தால் போதும் என்று ஒப்பேற்று பவர்களை நான் நிறையவே பார்த்திருக்கிறேன். நண்பர் மாஜினி இவர்களுக் கெல்லாம் முற்றிலும் மாறுபட்டவர். செய்யும் தொழிலைச் செம்மையாகச் செய்ய வேண்டும் என்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பவர் அவர். சொந்த வாழ்க்கையில் ஏற்பட்ட பல நெருக்கடிகளுக்கிடையிலேயும், உடல் நலன் குன்றியிருந்த நேரங்களிலும் எடுத்த வேலையைக் குறித்த நேரத்தில் முடித்துக் கொடுக்க அவர் என்றுமே தவறியதில்லை. மற்றவர்கள் செய்த மொழிபெயர்ப் பானாலும் பொறுமையாகப் பார்த்து அவற்றைச் செப்பனிட்டு அச்சுக்குக் குறித்த நேரத்தில் கொடுத்த கர்மவீரர் அவர்.
>
> 'சோவியத்நாடு' இதழின் மொழிபெயர்ப்பைப் பற்றி பல தமிழறிஞர்கள் பாராட்டியிருக்கின்றனர். மொழி பெயர்ப்பு என்ற தோற்றத்தைக் கொடுக்காமல் எப்படித்தான் உங்களால் கொடுக்க முடிகிறது என்று பலரும் பாராட்டியிருக்கிறார்கள். இந்த பாராட்டு களுக்கெல்லாம் உரியவர் நண்பர் மாஜினி ஒருவரே[13]

என அவருடன் இருபத்தைந்து ஆண்டுக் காலம் பணியாற்றிய மூத்த பத்திரிகையாளரான வ. விஜயபாஸ்கரன் உளமாரப் பாராட்டியுள்ளார்.

## மொழிபெயர்ப்பு குறித்து மாஜினி

தாய்மொழியில் எழுதி வாசகர்களின் கவனத்தை ஈர்ப்பது என்பதே மிகவும் கடினமான பணி என்ற நிலை இருக்கும் பொழுது மொழிபெயர்ப்புச் செய்து அவற்றை மக்களின் கைகளுக்குக் கிடைக்கச் செய்து, அவர்களின் ஆதரவைப் பெறுவதென்பது கடுமையான ஒரு பணிமட்டுமன்று சவால் நிறைந்ததுமாகும். குறிப்பாக இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் ஏற்பட்ட ஆங்கில இலக்கியங்களும், மற்றும் துறைசார்ந்த பலவிதமான நூல்களும் தமிழ்நாட்டு எழுத்தாளர்களிடையேயும், வாசகர்களிடையேயும், ஒரு விறுவிறுப்பையும், விழிப்புணர்வையும் ஏற்படுத்தின. மொழிபெயர்த்து

அளிக்கப்பட்ட கதைகளுக்கும், சிந்தனைகளுக்கும், செய்திகளுக்கும் பெரும் வரவேற்பு ஏற்பட்டது. தொடர்ந்து இவை இதழ்கள் வழியாகவும், நூல்கள் வழியாகவும் ஒரு பெரும் சிந்தனைத் தளத்தை உருவாக்கின. மூலமா, மொழிபெயர்ப்பா என்று அறியாத வகையில் புதுவிதமான கதைகள் தமிழில் அறிமுகமாயின. சமுதாயத்தை, தனி மனிதனின் வாழ்க்கைப் போராட்டங்களை, விடுதலை உணர்வுகளைப் பிரதிபலிக்கும் நாவல்களும், சிறுகதைகளும் வாசகர்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றன. தமிழ்ப் படைப்பாளிகளை ஊக்குவித்தன.

> நனிசிறந்த மொழிபெயர்ப்புகள் 30ஆம் 40ஆம் ஆண்டுகளில் தமிழ் மண்ணில் கொடிகட்டிப் பறந்தன. பங்கிம் சந்திர சட்டர்ஜியின் "ஆனந்த மடத்தை" இவ் வகையில் முக்கியமாக இங்குக் குறிப்பிடவேண்டும். அன்பு நண்பர் த.நா. குமாரசாமி இந்த வங்க நவீனத்தை அருமையாக மொழிபெயர்த்திருந்தார். இந்தப் புதினத்தில்தான் ''வந்தேமாதர'' கீதம் இடம் பெற்றிருந்தது. புகழ்மிக்க கவிஞரும், நோபல் பரிசு பெற்றவருமான இரவீந்திரநாத் தாகூர் இந்தப் பாடலுக்கு இசையமைத்து அகில இந்திய காங்கிரஸ் மாநாட்டில் அதனைப் பாடிக்காட்டவும் செய்தார். இன்னும், சரத்சந்திரர், காண்டேகர், ஹரீந்திரநாத் சட்டோபாத்யாயா, ராகுல் சாங்கிரத்யாயன், தகழி சிவசங்கரன் போன்றோரின் அரிய படைப்புகளும் சிறந்த முறையில் தமிழாக்கம் செய்யப்பட்டு, தமிழ்நாட்டில் ஏராளமாக விற்பனையாகின. கா.ஸ்ரீ.ஸ்ரீ, சேனாபதி போன்றோர் மொழிபெயர்ப்பில் சிறப்புற்று விளங்கினர். இன்னும் டால்ஸ்டாயின் 'போரும் அமைதியும்', 'அன்னாகரினா', மாக்சிம் கார்க்கியின் 'தாய்', செக்காவின் 'செரியாட்', கோகலின் 'இன்ஸ்பெக்டர் ஜெனரல்', ஹோவர்டு பாஸ்டின் 'சுதந்திரப் பாதை', 'மார்க் ட்வைனின் 'மில்லியன் பவுண்டு நோட்டு', துர்க்கனேவின் 'நெஸ்ட் ஆப் தி ஜென்ரி', அலெக்சி டால்ஸ்டாயின் 'ஆர்டியல்', போரிஸ் பொலவோயின் 'உண்மை மனிதனின் கதை, ஆஸ்ட்ரோவ்ஸ்கியின் 'மேக்கிங் ஆப் தி ஹீரோ', ஹரீந்திரநாத்தின் 'கூண்டுக்கிளி', கிருஷ்ண சந்தரின் 'செம்மலர்', முல்க்ராஜ் ஆனந்தின் 'கூலி' போன்ற அரிய படைப்புகள் தமிழில் வெளிவந்து வாசகர்களின் பேராதரவைப் பெற்றிருந்தன என்பதை மறுக்க முடியுமா? மறக்க முடியுமா?[14]

என்று மொழிபெயர்ப்பாளர் மாஜினி அக்கால மொழிபெயர்ப்பு களின் வரவையும், வரவேற்பையும் பற்றிக் குறிப்பிட்டுள்ளதை ஒரு சான்றாகக் காட்டலாம்.

இப்படி வரவேற்புப் பெற்றதற்கான காரணம் மொழி பெயர்ப்பாளர் மொழிபெயர்ப்பில் கையாண்ட மொழிநடை. மூலத்தின் பொருளைப் பெயர்ப்பில் அமைத்து வாசகர்களுக்குப் புரியும் வகையில் கையாளப்பட்ட மொழிநடை இதற்கு அடிப்படை. இந்த மொழிநடையைக் கையாளும் விதத்தில் மொழிபெயர்ப்பு ஒரு கலையாக உணரப்படுகிறது; அவ்வாறே வெளிப்படுகிறது. ஆனால் இந்தக் கலை எல்லோருக்கும் வந்து விடாது என்பது அனுபவம் பெற்றவர்களின் கருத்து. மாஜினியின் கருத்தும் இதுவே. நாவல், சிறுகதைகள், நாடகங்கள், திரைப்படங்களுக்குக் கதை, வசனம், கவிதைகள், அரசியல் கட்டுரைகள், விஞ்ஞானக் கட்டுரைகள் ஆகியவற்றை எழுதுவது ஒரு தனிக்கலை. அதை எல்லோரும் எழுதி விட முடியாது. அதைப் போலவே மொழிபெயர்ப்பும் ஒரு தனிக்கலை என்று குறிப்பிடுகிறார் மாஜினி.

> **மொழிபெயர்ப்பும் ஒரு தனிக்கலை. எல்லோரும் மொழி பெயர்த்துவிட முடியாது. மொழிபெயர்ப்பு என்கிறபோது, மூலத்தை எழுத்துக்கு எழுத்து, வரிக்கு வரி, கால்புள்ளி, முற்றுப்புள்ளிகூட மாறாமல் அப்படியே கொச்சைத்தனமாக, வரட்டுத்தனமாக, புரியாத நடையில் விளங்காத முறையில் பகர்ப்பு செய்வது சிறந்த மொழிபெயர்ப்பு ஆகாது. இத்தகைய மொழிபெயர்ப்புகள் காரணமாக மொழிபெயர்ப்புக் கலையே உதாசீனம் செய்யப்படுகிறது. மூலத்திலிருந்து பிறழாமல், அதனை அடியொட்டி, நடையில், வேகத்தில், வீச்சில், நோக்கில், போக்கில், இனிய, எளிய நடையில் மொழிபெயர்ப்பதே சிறந்த, உயர்ந்த மொழிபெயர்ப்பாகும். சுருக்கமாகக் கூறினால் மொழி பெயர்ப்பைத் தத்ரூபமாகப் படம் பிடித்துக்காட்டும் ஒரு 'காமிரா' என்று சொல்லலாம்[15]**

என்பது மாஜினியின் அனுபவ மொழியாக உள்ளது.

### மாஜினியின் மொழிபெயர்ப்பு நூல்கள்

சோஷலிச தத்துவத்தை மையமாகக் கொண்ட வரலாற்று நூல்களும், நாவல்களும், டாக்டர் அம்பேத்கரின் நூல் தொகுதிகளும், கதை ஆய்வுரையும் மாஜினியின் மொழிபெயர்ப்புகளாக வெளி வந்துள்ளன.

**பணநாயகம், சோஷலிச சோதனை, சிந்து முதல் கங்கை வரை, பண்டைக்கால இந்தியா, பெரிஸ்ரோய்க்கா, சோவியத் யூனியன் தகவல் களஞ்சியம்** ஆகிய நூல்களும் **சகோதரிகள், யுவதிகள், உல்லாசக் குடும்பம், நாலாயிரம் வயது மனிதன்** ஆகிய ரஷ்ய நாவல்களும் **நான் கல்லறையிலிருந்து பேசுகிறேன்** எனும் ஜுலியஸ் பூசிக்கின் நூலும், சி.எஸ். **சுப்பிரமணியத்தின் வாழ்க்கை**

வரலாறு 'பசுமைப்புரட்சி' எனும் பெயரிலும், பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கரின் நூல்கள் (37 தொகுதிகள், மொழிபெயர்ப்பு வெளியீட்டுப் பணிகள் திலகரின் 'கீதை ஆய்வுரை' (1300 பக்கங்கள்) ஆகியவை மாஜினியின் மொழிபெயர்ப்பு நூல்களாகும்.

## மாஜினியின் முதல் மொழிபெயர்ப்பு நூல்கள்

பத்திரிகையாளராக வாழ்க்கையைத் தொடங்கிய மாஜினி 1943 ஆம் ஆண்டு மொழிபெயர்ப்பாளராகும் ஒரு சூழல் ஏற்பட்டது.

> இளம் வயது முதலே சிறுகதைகளும், புதினங்களும் படைப்பதில் முழுக்க முழுக்க ஈடுபாடு கொண்டிருந்த நான் 1943–இல் 'தந்தி'யில் (இப்போது 'தினத்தந்தி') என்னை இணைத்துக் கொண்ட போது ஒரு பத்திரிகையாளனானேன்; அதைத் தொடர்ந்து ஒரு மொழிபெயர்ப்பாளனானேன்; அப்போது நான் ஒரு தீவிரக் காங்கிரஸ் சோஷலிஸ்டு. அச்சமயம் பிரபல காங்கிரஸ் சோஷலிஸ்டு கட்சித் தலைவர்களில் ஒருவரும், ஆற்றல் மிக்க எழுத்தாளருமான அசோக் மேத்தா மதுரை வந்திருந்தார். அவருக்கு நானும் இதரப் பல காங்கிரஸ் சோஷலிஸ்டுகளும் சேர்ந்து கீழாவணி மூலவீதியிலுள்ள என் நண்பரின் மாளிகையில் வரவேற்பு விருந்தளித்தோம். அப்போது அவர் எனக்குப் பரிசளித்த ஆங்கில நூல்தான் பின்னர் 'பணநாயகம்' என்ற பெயரில் தமிழில் வெளிவந்தது. இதே போல் 'சோஷலிச சோதனை' என்ற மொழிபெயர்ப்பு நூலும் பிரசுரமாயிற்று. இவைதாம் என் மொழிபெயர்ப்புப் பணிக்கு முதன் முதலில் அஸ்திவாரமிட்ட, அச்சாரமிட்ட படைப்புகளாகும். இதன் பின்னர் எத்தனை எத்தனையோ நூல்கள் மொழிபெயர்க்கப்பட்டு என் பேனா முனையிலிருந்து வெளிவந்தன[16]

எனத் தனது முதல் மொழிபெயர்ப்பு நூல்கள் குறித்துக் குறிப்பிட்டுள்ளார் மாஜினி.

இம்மொழிபெயர்ப்புகளைத் தொடர்ந்து மாஜினி 'ஜனசக்தி' இதழில் பணியாற்றிக் கொண்டிருந்தபொழுது 1956 ஆம் ஆண்டு நியுசெஞ்சுரி புத்தக நிறுவனத்துக்காக முதன் முதலில் மொழி பெயர்ப்புப் பணியை மேற்கொண்டார். ஜூலியஸ் பியூசிக் எனும் உலகப் புகழ்பெற்ற செக்கோஸ்லோவாகிய எழுத்தாளரின் 'நான் கல்லறையில் இருந்து பேசுகிறேன்' எனும் நூலை நியூசெஞ்சுரி புத்தக நிறுவனத்துக்காக மொழிபெயர்க்கத் தொடங்கினார். கொடுங் கோலாட்சி செலுத்தி வந்த ஹிட்லருக்கு எதிராகத் தன் எழுத்தை

ஆயுதமாக ஏந்திய வரலாற்றுப் புகழ்மிக்க ஜுலியஸ் பியூசிக்கின் நூலைத் தமிழில் மொழிபெயர்த்த அனுபவத்தை வாழ்வின் ஓர் அரிய அனுபவமாகவே கருதுகிறார் மாஜினி. தமிழுலகில் அந்த எழுத்துலகச் சிற்பியை அறிமுகப்படுத்தி ஒரு எழுத்தாளனுக்குரிய மிகப் பெரும் ஆற்றலை, இந்த நூலின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

> 'நான் கல்லறையிலிருந்து பேசுகிறேன்' என்ற நூல் மொழிபெயர்ப்புக்காக என்னிடம் தரப்பட்டது. அந்த நூலை எழுதியவர் ஜுலியஸ் பியூசிக் என்ற உலகப் புகழ்பெற்ற செக்கோஸ்லோவாகிய எழுத்தாளர். அந்த நூலை அவர் எத்தகைய சூழ்நிலையில், எங்கே, எப்படி எழுதினார் என்பதை நினைவுகூரும்போது எனது நெஞ்சம் பதைபதைக்கிறது. கண்கள் இரத்தக் கண்ணீர் வடிக்கின்றன; உள்ளம் குமுறுகிறது. இரண்டாம் உலகப் போர் நடைபெற்றுவந்த காலம். நாஜிகள் பயங்கரப் பேயாட்டம் போட்டு வந்த நேரம். அந்தச் சமயம் பாசிஸ வெறியன் ஹிட்லரை எதிர்த்து ஜுலியஸ் பியூசிக்கின் பேனாமுனை அனலும் கனலும் கக்குகிறது; இதனைக் கண்டு வெகுண்ட ஹிட்லர், பியூசிக்குக்கு மரணதண்டனை விதித்து வெஞ் சிறையில் தள்ளுகிறான். ஆனால் எங்கேயாவது சூரியனை முறம் கொண்டு தடுத்து விட முடியுமா? முடியாதல்லவா, அதேபோல் நீதிக்காக, நியாயத்துக் காக, உண்மைக்காக சத்தியத்துக்காகத் தன் உயிரையே தியாகம் செய்யச் சித்தமாக உள்ள ஒரு மாவீரரைச் சிறைச்சாலை என்ன செய்யும்? சித்திரவதைகள் என்ன செய்யும்? தூக்குமேடை என்ன செய்யும்? இவற்றை யெல்லாம் அவர் தூசாக மதித்தார்; துச்சமாகக் கருதினார். கொடிய அடக்குமுறை, ஒடுக்குமுறைக் கிடையேயும், இரும்புக் கட்டுக்காவலுக்கிடையேயும் ஜுலியஸ் பியூசிக் தமக்குக் கிடைத்த துண்டுத் துணுக்குக் காகிதங்களில் தமது எண்ணங்களை, சிந்தனைகளை, கருத்துகளை எழுதி இரகசியமாக வெளியே அனுப்பி வந்தார். இவ்வாறு பல நாட்கள் நடைபெற்றன. ஒரு நாள் நாஜி வெறியர்களால் அந்த மனிதப் பிண்டங்களால் அந்த இளம் எழுத்துலகச் சிற்பி தூக்கிலிடப்பட்டார். அவர் வெஞ்சிறையிலிருந்து அனுப்பிய துண்டுக் காகிதங்கள்தான் சில தினங் களுக்குப் பிறகு உள்ளத்தைத் தூண்டும், உணர்ச்சிகளைக் கிளர்த்தி விடும், கண்களில் கண்ணீர் ஆறாகப் பெருக் கெடுத்தோடச் செய்யும் அற்புத நூலாக உருவெடுத்தன, வடிவெடுத்தன. அதுதான் "நான் கல்லறையிலிருந்து பேசுகிறேன்" என்ற அரிய படைப்பு"[7]

ஒரு மொழிபெயர்ப்பாளர் எந்த அளவிற்கு ஒரு அரிய வரலாற்றுச் சிறப்புமிக்க ஒரு மூலமொழிப் படைப்பை உணர்வுப் பூர்வமாக நேசித்து அதைத் தமிழாக்கம் செய்கிறார் என்பதற்கு மாஜினியின் இந்த நூலைப் பற்றிய கருத்துரை ஒரு சான்றாகும். ஏதோ ஒருநூலை ஒரு மொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்த்துத் தருகிறோம் என்றில்லாமல் மாஜினி முழுமையாகத் தன்னையே ஒரு மூலமொழிப் படைப்பாளனாக்கிக் கொண்டு 'கூடு விட்டுக் கூடு பாயும்' கலையில் ஈடுபடுவதைப் போலவே மொழிபெயர்த்து வருகிறார்.

### பசுமைப்புரட்சி

'என் வாழ்க்கை நினைவுகள்' எனும் தலைப்பில் திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் எழுதிய சுயசரிதை நூலின் இரண்டாம் தொகுதியைப் 'பசுமைப்புரட்சி ' எனும் துணைத் தலைப்புடன் 'மாஜினி' மொழிபெயர்த்துள்ளார். முதல் தொகுதி 'திருப்புமுனை' என்னும் தலைப்பினைக் கொண்டது. இது சி.சுப்பிரமணியம் அவர்களின் பிள்ளைப் பருவம் முதல் இளமைப் பருவம் வரை அவருடைய சொந்த வாழ்க்கை நினைவுகளையும், அரசியல் நினைவுகளையும் கூறுவதாக அமைந்தது. 'பசுமைப்புரட்சி' எனும் இரண்டாவது தொகுதி மைய அரசில் திரு. சி. சுப்பிரமணியம் உருக்கு மற்றும் கன இயந்திரப் பொறியியல் துறை அமைச்சராகப் பணியாற்றியபோது ஆற்றியுள்ள பணிகள் குறித்தும், இக்காலக்கட்டத்தில் ஜவஹர்லால்நேரு, லால்பகதூர் சாஸ்திரி, இந்திராகாந்தி ஆகியோரிடம் அவருக்கு இருந்த உறவுகளை விவரிப்பதாகவும் உள்ளது. மேலும், அக்காலகட்டத்தில் இந்தியாவில் நிலவிய அரசியல், பொருளாதாரச் சூழல்களை, பலதரப்பட்ட விவாதங்களைக் கருத்து மாறுபாடுகளை, காந்தி, நேரு போன்றோரின் செயல்பாடுகளை அறிந்துகொள்ள ஏதுவாக அமைந்துள்ளது. இது மொழிபெயர்ப்பு நூல் என்ற நினைவே வாசகர்களுக்கு ஏற்படா வண்ணம் அமைந்துள்ளது இதன் சிறப்பாகும்.

திரு. சி. சுப்பிரமணியத்தின் சுயசரிதையின் இரண்டாவது தொகுதியைப் 'பசுமைப்புரட்சி' எனும் தலைப்பில் மாஜினி மொழி பெயர்த்துள்ளார்.

> **இதுவரையிலான எனது மொழிபெயர்ப்புப் பணியில் சிகரமாக விளங்குவது லோகமான்ய பாலகங்காதர திலகரின் 'கீதா இரகசியம்' என்னும் நூலைக் 'கீதை ஆய்வுரை' என்ற தலைப்பில் மொழிபெயர்த்ததாகும்..... கீதா இரகசியம்' பகவத் கீதையைப் பற்றிய ஓர் அற்புதமான ஆய்வு நூல். கீதைக்கு எத்தனை எத்தனையோ அறிஞர்கள் விளக்க உரை எழுதியிருந்த**

போதிலும், திலகரின் உரை அவற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்ட, வேறுபட்ட ஒன்றாகும். மனிதப் பிறவிகள் எடுத்தவர்கள் அனைவரும் ஆற்ற வேண்டிய கடமைகளை, உலக சுபிட்ச நலனுக்கு அவர்கள் செலுத்த வேண்டிய பங்கைப் பிரதானமாக வலியுறுத்தும் கோணத்தில் இந்த ஆய்வுரை ஆக்கப் பட்டிருக்கிறது..... மராத்தி மூலத்திலிருந்து அமரர் ஞான குருபரன் பல ஆண்டுகளுக்கு முன்பு எடுத்திருந்த குறிப்புகளை 'இன்ஸ்ட்டிடியூட் ஆப் சௌத் இண்டியன் ஸ்டடீஸ்' நிறுவனத்தார் என்னிடம் தந்து "கீதை ஆய்வுரை'யின் முதல் பாகத்தை மொழிபெயர்த்துத்தர வேண்டும் என்று என்னைக் கேட்டுக் கொண்டனர். இப்பணியைப் பெரும் பேறாகக் கருதி அவ்வாறே மொழிபெயர்த்துத் தர ஒப்புக் கொண்டேன். உண்மையில் இது எனக்கு ஒரு பெரும் சவாலாக அமைந்தது. ஏனெனில் பெரும்பாலும் அரசியல், பொருளாதாரம், சமூகவியல், புதினங்கள் போன்றவற்றையே இதுவரை மொழிபெயர்க்கப்பட்டு விட்ட எனக்கு உலகப் புகழ்பெற்ற இந்த ஆன்மீக நூலை மொழிபெயர்ப்பது ஒரு புதிய முயற்சியாகவே இருந்தது.[18]

சோவியத் புரட்சிகரத் தத்துவத்தையொட்டிய மொழி பெயர்ப்புகளை வழங்கிய மாஜினி ஆன்மீகத்தின் அடிப்படையாக உள்ள பகவத் கீதையை மொழிபெயர்த்திருப்பது வியப்புக்குரியதாகும். 'கீதை ஆய்வுரை' 1300 பக்கங்கள் கொண்டது. இரண்டு பாகங்களாக வெளியிடப் பட்டுள்ளது. முதல் பாகத்தை மத்திய அரசின் மனிதவள மேம்பாட்டுத்துறை மொழியியல் பிரிவின் நிதி உதவியுடன் இன்ஸ்டிடியூட் ஆப் சௌத் இண்டியன் ஸ்டடிஸ் நிறுவனத்தார் குறைந்த விலையில் 1994 ஆம் ஆண்டில் வெளியிட்டார்கள். இந்த நூலின் முதல் பாகத்தின் இரண்டாம் பதிப்பையும், இரண்டாம் பாகத்தின் முதல் பதிப்பையும் பாவை பப்ளிகேஷன்ஸ் வெளி யிட்டுள்ளது.

### திலகரின் 'கீதா இரகசியம்'

அய்ந்தாவது வேதமாகக் கருதப்படும் மகாபாரதத்தின் ஒரு பகுதியாக அமைந்துள்ள பகவத் கீதை கிரேக்கம், சீனம், இலத்தீன், ஆங்கிலம், ஜெர்மன், ரஷ்யன், பிரெஞ்சு முதலான உலகின் பல மொழிகளிலும் இந்திய மொழிகள் அனைத்திலும் மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. இதற்குப் பல அறிஞர் களால் விளக்க உரைகள் எழுதப்பட்டுள்ளன. இந்த உரைகளில் லோகமான்ய பாலகங்காதர திலகரின் உரை முற்றிலும் வேறுபட்டு

விளங்குகிறது என்பது அறிஞர்களின் கணிப்பாகும். இந்த ஆய்வுரையைத் தமிழில் மொழிபெயர்த்தளித்தது தமக்கு மிகுந்த மனநிறைவு ஏற்படுத்தியதாக அறிஞர் மாஜினி குறிப்பிட்டார்.* இவர் 'இந்த நூலைப் பற்றி' எனும் தலைப்பில் சில கருத்துகளை வழங்கியுள்ளார்.

பகவத்கீதைக்கு அன்று முதல் இன்று வரை எத்தனை எத்தனையோ உரைகள் எழுதப்பட்டுள்ளன. அவற்றை ஓரளவு மட்டுமே கணக்கிட்டு மூவாயிரத்துக்கும் அதிகமான உரைகள் இருப்பதாகக் கோரக்பூர் கீதா அச்சகத்தார் தாம் வெளியிட்டுள்ள கீதைப் பதிப்பில் குறிப்பிட்டுள்ளனர். கீதையின் விழுமிய, புனிதமான செய்தியைப் பாரெங்கும் பரப்புவதற்குப் பல்லாண்டு களாக அரும்பெரும் தொண்டாற்றி வரும் தர்ம நிறுவனம் இது.

ஆதிசங்கரர், இராமானுஜர், மத்வாச்சாரியார், வல்லபாச் சாரியார், நிம்பகாச்சாரியர், ஸ்ரீதர் சுவாமி, ஞானேஸ்வரர், துக்காராம், சமர்த்த ராமதாசர், ஆனந்த கிரி, வேங்கடநாதர், இராகவேந்திரர், ஜயதீர்த்தர், வாமன பண்டிதர் முதலான மேதைகள், ஆச்சாரியார்கள், பண்டிதர்கள், கவிஞர்கள் பகவத்கீதைக்கு உரைகளும் (பாஷ்யங்கள்) விரிவுரைகளும் விளக்க உரைகளும் கருத்துரைகளும் எழுதியுள்ளனர்.

மேற்கண்ட வைதீக சம்பிரதாய ரீதியான உரைகளைத் தவிர்த்துக் கீதையின் அருமையை, பெருமையை, மகிமையை, எடுத்துரைக்கும் வகையில் அறிஞர்கள் பலர் ஏராளமான நூல்கள் எழுதியுள்ளனர். பேருரைகள் ஆற்றியுள்ளனர். காந்திமகானின், அநாசக்தி யோகம், சுவாமி விவேகானந்தர், அரவிந்தர், பாரதியார், இன்னும் இதரப் பல அறிஞர்களின் கீதைப் பேருரைகளும் இவ்வகையில் முக்கியமானவையாகும்.

இந்த வரிசையில் லோகமான்ய பாலகங்காதர திலகர் ஒரு முன்னணி இடத்தைப் பெற்றுள்ளார். 'கீதா இரகசியம்' என்ற தலைப்பில் அவர் கீதையைப் பற்றி எழுதியுள்ள நூல் உலகப் புகழ் பெற்றது. மாக்ஸ் முல்லர் போன்ற அயல்நாட்டுப் பேரறிஞர்களே இந் நூலை வெகுவாகச் சிலாகித்துள்ளனர், பெரிதும் பாராட்டியுள்ளனர். கீதா இரகசியம் என்ற இந்த நூலைத்தான் மொழியாக்கம் செய்து 'கீதா ஆய்வுரை' என்ற தலைப்பில் முதன்முதலில் தமிழில் வெளி யிட்டுள்ளோம்.

---

* மொழிபெயர்ப்பாளர் மாஜினியுடன் இந்நூலாசிரியர் மு. வளர்மதி நேர்காணல், நாள் 14.6.2004

> ***செயல்நிலைத் தத்துவமே அதாவது கர்ம யோகமே பகவத்கீதையின் அடிப்படைப் பொருள், உட்கிடைப் பொருள், உள்ளுறை சாரம் என்பதை மறுக்க முடியாத வேதாந்த சான்றுகளுடன், ஆதாரங்களுடன் உள்ளத்தைத் தொடும் உதாரணங்களுடன் ஆணித்தர மாக, திலகர் நிலை நாட்டியுள்ளார்"[19]***

என்று திலகரின் ஆய்வுரைக்கு உள்ள சிறப்பினை அறிஞர் மாஜினி சுட்டிக்காட்டியுள்ளார்.

திலகர் இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு, பிரிட்டிஷ் அரசால் கைது செய்யப்பட்டுத் திபாவின் தலைநகரமான மாண்டலேவில் உள்ள சிறையில் அடைக்கப்பட்டு சொல்லொண்ணா வேதனையை அனுபவித்த போதிலும், அந்தச் சூழலிலும் திலகர் பண்டைய வேத, சாத்திர நூல்களையும், பிற உலக இலக்கியங் களையும், உலகப் பேரறிஞர்களின் நூல்களையும் பயின்றார். பாலி, பிரெஞ்சு, ஜெர்மன் மொழிகளைக் கற்றுக் கொண்டார். இந்தச் சிறைவாசத்தின் போதுதான் கீதா இரகசியம் (கீதை ஆய்வுரை) என்னும் இந்தப் புகழ்பெற்ற நூலை எழுதினார். விடுதலையானபின் அந்த நூலை மேலும் செம்மைப்படுத்தி 1915ஆம் ஆண்டில் இந்த நூலை வெளியிட்டதாக இம்மொழிபெயர்ப்பு நூலின் வழியாக அறிகிறோம். சுமார் 80 ஆண்டுகள் கழித்து இந்த நூல் அறிஞர் மாஜினியால் தமிழில் வெளிவந்துள்ளது.

இந்நூலில் ஒவ்வொரு ஸ்லோகத்திற்கும் நீண்ட விளக்க உரைகள் இடம்பெற்றுள்ளன. சமசுகிருத சுலோகங்கள் தமிழில் ஒலிபெயர்ப்புச் செய்யப்பட்டு இடம்பெற்றுள்ளன. சமசுகிருத மொழியின் உச்சரிப்பைத் தமிழில் ஒலிபெயர்த்து எழுதுவது கடினமான காரியம். எனினும் மாஜினி இந்த முயற்சியில் வெற்றி பெற்றுள்ளார் என்றே கூறலாம்.

(எ.டு) ***"தாரணாத் தர்ம மித்யாஹு: தர்மோ தாராயதே பிரஜா: யத்ஸ்யாத் காரண சம்யுக்தம் ஸ தர்ம இதி நிச்சய:"***

இதன் பொருள் வருமாறு:

> ***தர்மம் என்னும் சொல் 'த்ரு' என்ற வேர்ச் சொல்லி லிருந்து பிறந்தது. ஒன்றாகப் பிணைத்து வைத்திரு என்று இதற்கு அர்த்தம். தர்மம் என்ற பிணைப்பில் சகல மக்களும் ஒன்றாக இணைத்துப் பிணைக்கப் பட்டுள்ளனர். மக்கள் அனைவரையும் ஒன்றுபடுத்தி வைத்திருப்பது எதுவோ அதுவே தர்மம். ஆகையால் இந்தத் தர்மம் கடைபிடிக்கப்படவில்லை என்றால், சமுதாயத்தைப் பிணைத்திருக்கும் கயிறுகள் பலமிழந்து***

**தொய்ந்துவிடும்: இந்தப் பிணைப்புக் கயிறுகள் கட்டவிழ்ந்துவிடும் போது எத்தகைய விபரீத விளைவுகள் நேரும் தெரியுமா? கதிரவனும் ஏனைய கோள்களும் அடங்கிய வான்கோள மண்டலம் ஈர்ப்பு சக்தி இல்லாமல் வானில் தடுமாறும் ஓர் அவலநிலையை, அல்லது எல்லையற்ற மாகடலில் ஒரு கப்பல் சுக்கான் இல்லாமல் தத்தளிக்கும் பரிதாப நிலையை இந்தச் சமுதாயமும் அடைய நேரிடும். எனவே, பாரதத்தில் வியாசர் பின்வருமாறு அறிவுரை பகர்கிறார். சமுதாயம் இத்தகைய ஓர் இரங்கத்தக்க நிலையை அடைந்து, அழிந்து விடாமல் இருக்க வேண்டுமானால், பொருளை ஈட்டுபவர்கள் தர்ம நியாயப்படியே அதனைச் செய்ய வேண்டும்: அதாவது சமுதாய அமைப்பு சீர்குலைந்து விடாதபடி இக்காரியத்தைச் செய்ய வேண்டும்[20]**

இந்நூலைப் படிக்கும் வாசகர்கள் தொடர்ந்து விரும்பிப் படிக்கும் வகையில் இந்நூலின் மொழிபெயர்ப்பு அமைந்துள்ளது என்பதைச் சுட்டிக்காட்ட இச்சிறு சான்று இங்கு எடுத்தாளப் பட்டுள்ளது. தமிழறிஞர்கள் பலரும் இம்மொழிபெயர்ப்பைப் பாராட்டியுள்ளனர்.

### சிந்து முதல் கங்கை வரை

மொழிபெயர்ப்பாளர் மாஜினி ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கு மொழிபெயர்ப்புச் செய்வது அவருடைய பணியாக இருந்து வந்தது. இதில் "சிந்து முதல் கங்கை வரை" என்ற ஒரு நூல் மட்டும் தெலுங்கி லிருந்து மொழிபெயர்த்ததாகக் குறிப்பிட்டுள்ளார். மூல நூலின் ஆசிரியர் வரலாற்று ஆராய்ச்சி அறிஞரான ராகுல சாங்கிரத்யாயன். இத் தமிழ் மொழிபெயர்ப்பு பல பதிப்புகள் வெளிவந்துள்ளது.

இந்நூலின் மொழிபெயர்ப்புக் குறித்துக் குறிப்பிடும்பொழுது

**"சகோதரிகள், யுவதிகள், நாலாயிரம் வயது மனிதன், சிந்து முதல் கங்கை வரை" முதலான ஏராளமான நூல்களை நியுசெஞ்சுரி புத்தக நிறுவனத்துக்கு மொழிபெயர்த்துத் தந்தேன். இதில் 'சிந்து முதல் கங்கை வரை' தெலுங்கிலிருந்து மொழிபெயர்க்கப் பட்டதாகும். 'வால்கா முதல் கங்கை வரை' என்ற பிரசித்திப் பெற்ற நூலைப் படைத்துத் தந்த பெரும் புகழார்ந்த ஆராய்ச்சி அறிஞரான ராகுல சாங்கிரத் யாயன்தான் இந்த நூலை இயற்றியவர். அவர் ஒரு மாபெரும் வரலாற்று மேதை; வரலாற்றுச் சித்தர், வித்தகர் – வரலாறு என்றால் என்ன? மன்னர்களையும்,**

> அவர்களது வம்சங்களையும், வழித் தோன்றல்களையும், அந்தப்புறங்களையும், ஆரணங்கு களையும், அங்கு நடைபெறும் லீலா விநோதங் களையும், கோலாகலங்களையும், கும்மாளங்களையும், அவர்களது படையெடுப்புகளையும், அவர்கள் நடத்திய போர்களையும் மற்றும் இத்யாதி இதர விஷயங்களையும் விவரிப்பதுதான், வருணிப்பதுதான் பெரும்பாலும் வரலாறு எனக் கருதப்பட்டு வந்தது. இதற்கு மாறான, வேறுபட்டதொரு நிலையை மேற் கொண்ட பல அறிஞர்கள் இருந்தனர். இவர்களில் முக்கியமானவர் ராகுல சாங்கிரத்யாயன். இவர் வரலாற்றை விவரிப்பதில் புதிய யுக்தியைக் கையாண்டார். சில கற்பனைப் பாத்திரங்களைப் படைத்து அப் பாத்திரங்கள் மூலம் வரலாற்றைப் பேச வைத்தார். இதனை அவரது "வால்கா முதல் கங்கை வரை என்ற அரிய நூலில் காண்கிறோம். இதே போல் 'சிந்து முதல் கங்கை வரை' நூலிலும் பார்க்கிறோம். இந்நூலில் சிம்மன் என்ற கற்பனைப் பாத்திரத்தைப் படைத்து அவன் மூலம் புத்தர், பிம்பிசாரன், வர்த்தமான மகாவீரர் போன்றோர் காலத்தையும், அன்றைய ஆட்சி அமைப்பு, சமூக அமைப்பு, பொருளாதார அமைப்பு, மன்னராட்சி முறை, குடியரசு ஆட்சி முறை, சமூகப் பழக்க வழக்கங்கள், சடங்கு முறைகள் போன்ற பல்வேறு அரிய விஷயங்களையும் அற்புதமாக தத்ரூபமாகப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார் அறிஞர் ராகுல சாங்கிரத்யாயன். இந்நூல் பல பதிப்புகள் வந்திருப்பது வாசகர்களிடையே அது பெற்றுள்ள நன்மதிப்பைக் காட்டுகிறது[21]

என்று குறிப்பிட்டுள்ளார். இம்மொழிபெயர்ப்பு ராகுல சாங்கிரத் யாயன் எனும் வரலாற்று அறிஞரின் கருத்துகளைத் தமிழுலகில் புதிய கண்ணோட்டத்துடன் வழங்கியிருக்கிறது.

### பண்டைக்கால இந்தியா

'சிந்து முதல் கங்கை வரை' என்ற நூலைப் போன்றே மாஜினி மொழிபெயர்த்த மற்றொரு நூல் 'பண்டைக்கால இந்தியா'. பாட்னா பல்கலைக்கழகத்தின் ஓய்வு பெற்ற வரலாற்றுப் பேராசிரியரான டோரன்டோ, டில்லிப் பல்கலைக்கழகங்களில் வரலாற்றுப் பாடம் போதித்தவரான, இந்திய வரலாற்று ஆராய்ச்சிக் கழகத்தின் முதல் தலைவராகத் திகழ்ந்த ஆர்.எஸ். சர்மா இந்நூலின் ஆசிரியராவார். வரலாற்று அறிஞர்களாலும், சான்றோர்களாலும் பெரிதும் போற்றிப் பாராட்டப்பட்ட இந்நூலை மாஜினி தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார்.

### பெரிஸ்த்ரோய்க்கா

மாஜினியின் மொழிபெயர்ப்பில் குறிப்பிடத்தக்க ஒன்றாக அமைந்தது 'பெரிஸ்த்ரோய்க்கா'. கொர்ப்பச்சேவின் புதிய கோட்பாடான 'பெரிஸ்த்ரோய்க்கா' உலகெங்கும் பரபரப்பாகப் பேசப்பட்டது. தமிழில் இதை அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட நியு செஞ்சுரி புத்தக நிறுவனம் முடிவு செய்து அதற்கான பணியில் ஈடுபட்டது. இந்நூலின் மொழிபெயர்ப்பை வழங்கிய மாஜினி

> **இந்த நூலுக்கு அப்போது அடிப்படையாக, ஆதார சுருதியாக, அடிமூலமாக அமைந்திருந்த கருத்துக்கள், எண்ணங்கள், சிந்தனைகள், கோட்பாடுகள் யாவும் இப்போது செல்லாக் காசுகளாக, கவைக்குதவாதவை யாக, ஏட்டுச் சுரைக்காயாக ஆகியிருக்கலாம். ஆனால் அன்று அந்த நூல் அகிலமெங்கும் மிகுந்த பரபரப்பை, எதிர்பார்ப்பை, சோவியத் நாட்டில் மிகவும் புரட்சி கரமான மாற்றங்கள் ஏற்படக்கூடும் என்ற ஊகங் களை, எண்ணப்போக்குகளைத் தோற்றுவித்திருந்தது என்பதை மறுப்பதற்கில்லை. இதனால்தான் பெரிஸ்த்ரோய்க்கா உலகின் பல்வேறு மொழிகளிலும் பெயர்க்கப்பட்டது. அது ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு அமெரிக்காவில் வெளியிடப்பட்டது அந்த ஆங்கிலப் பதிப்பைத்தான் தமிழில் வெளியிட நியு செஞ்சுரி புத்தக நிறுவனத்தார் முடிவு செய்தனர். அதற்கு அன்புத் தோழர் கோ. ஆளவந்தாரைப் பதிப்பாசிரியராக நியமித்தனர். அதனை மொழி பெயர்க்கும் பணி என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. அன்றைய சூழ்நிலையில் அதில் தெரிவிக்கப்பட்டிருந்த சில கருத்துகள் ஓரளவு ஏற்புடையதாக இருப்பதாகப் பலரும் கருதினர். அச்சமயம் இதே கருத்து என்னுள்ளும் ஓரளவு முளைவிட்டிருந்தது. எனவே அந்த மொழிபெயர்ப்புப் பணியில் முழுக்க முழுக்க என்னை ஈடுபடுத்திக் கொண்டேன். அதில் இணைந்து பிணைந்து ஒன்றிப்போய் மொழிபெயர்ப்பைச் சிறப்புறச் செய்து முடித்தேன்[22]**

என்று இந்நூலைப் பற்றி மாஜினி குறிப்பிடுகிறார். இந்நூல் தமிழில் வெளிவந்தமைக்காக அறிஞர்களும், ஆர்வலர்களும் பாராட்டி யுள்ளனர். தமிழ் இதழ்களிலும் இது குறித்துப் பெரிதும் விளம்பரப் படுத்தப்பட்டது. ஏனெனில் சோவியத் யூனியனில் ஏற்படும் மிகப்பெரும் மாற்றம் என உலகம் முழுமைக்கும் கவனிக்கப்பட்டது. ஆகவே இந்நூலைப் பற்றி அறிந்து கொள்வதில் பெரிதும்

ஆவலுற்றனர். தமிழில் 'பெரிஸ்த்ரோய்க்கா' என்று ஒலிபெயர்ப் பாகவே இடம் பெற்றுள்ளது.

> *தற்போது சோவியத் யூனியனில் நிகழ்ந்தேறி வரும் புரட்சி குறித்து மிகையில் கொர்பச்சேவ் அளிக்கும் விவரங்களே இந்தப் பெரிஸ்த்ரோய்க்கா எனும் நூல். பெரிஸ்த்ரோய்க்கா என்றால் மறுசீரமைப்பு என்று பொருளாகும். அக்டோபர் புரட்சிக்கு எழுபது ஆண்டுகளுக்குப் பிறகு அது அணுகுமுறைகளிலும், போக்குகளிலும், கருத்துகளிலும், நடைமுறையிலும் ஒரு புரட்சியாக அமைந்துள்ளது. உள்நாட்டு வெளிநாட்டுக் கொள்கையில் ஓர் அடிப்படையான மாற்றத்தை அது குறிக்கிறது. பெரிஸ்ரோய்க்கா சோஷலிச வரலாற்றில் அடுத்த கட்டமாகும். இந்தக் கட்டத்தில், ஒரு மெய்யான சொந்த ஈடுபாட்டு உணர்வின் மூலம் மக்களிடம் மிகுந்த பொறுப் புணர்ச்சியும், முன்முயற்சியும், பகிரங்கத் தன்மையும், ஆதர்சப் போட்டி உணர்வும் மிகப் பெருமளவுக்கு ஊக்குவிக்கப்படும். எளிதில் புரிந்து கொள்ளக்கூடிய தாகவும், நேருக்கு நேர் உரையாடுவது போன்ற பாங்கில் அமைந்ததுமாகும். சொல்வளமும் ஆற்றொழுக்கு போன்ற நடையும் கொண்டதாகவும் விளங்கும் பெரிஸ்ரோய்க்காவை நம் காலத்தின் மிக முக்கியமான அரசியல் தஸ்தாவேஜுகளில் ஒன்று எனக் கூறலாம்*[23]

எனச் சோவியத் யூனியனுக்கும் உலகில் உள்ள பிறநாடுகளுக்கும் இது ஒரு புதிய சிந்தனை என்ற வகையில் தமிழில் இந்நூல் இடம் பெற்றது. சோவியத் யூனியனைப் பற்றிய மற்றொரு குறிப்பிடத்தக்க நூலான 'சோவியத் யூனியன் தகவல் களஞ்சியம்' என்ற நூலை மாஜினி மொழிபெயர்த்துள்ளார். இந்தியா சோவியத்துடன் கொண்டிருந்த நட்புறவு, நேசம் காரணமாக இத்தகைய நூல்கள் தமிழ் வாசகர்களுக்கு நியுசெஞ்சுரி புத்தக நிறுவனத்தின் மூலம் கிடைத்தன.

> *1967ஆம் ஆண்டில் சோவியத் யூனியனின் பொன் விழாவையொட்டி மாஸ்கோ நொவொஸ்தி செய்தி நிறுவனம் வெளியிட்ட 'சோவியத் யூனியன்: கேள்விகளும் பதில்களும் என்னும் புத்தகத்தின் தமிழாக்கமே இந்த நூல். மிகப் பல நாடுகளிலிருந்து வாசகர்கள் கேட்ட கேள்விகளுக்கு இந்நூல் பதிலளிக்கிறது. உலகின் முதலாவது தொழிலாளிகள்– விவசாயிகள் அரசை நிறுவிய சோவியத் யூனியனைப் பற்றி, உலக சமாதானத்தின் ஒப்பற்ற பாதுகாவல னான சோவியத் யூனியனைப் பற்றி, ஒடுக்கப்பட்ட அடக்கப்பட்ட மக்களின் நந்தா விளக்கான சோவியத்*

> **யூனியனைப் பற்றி, தேச விடுதலை இயக்கத்தின் வளரும் நாடுகளின் உற்ற நண்பனான சோவியத் யூனியனைப் பற்றி, இந்தியாவின் பாதுகாப்புக்கும் தொழில் வளத்திற்கும் உறுதுணையான சோவியத் யூனியனைப் பற்றித் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்கு இந்நூல் பெரிதும் துணைபுரியும் என்பதில் ஐயமில்லை[24]**

என்பதைக் காட்டும் வகையில் 590 பக்கங்கள் கொண்ட ஒரு பெரும் தகவல் களஞ்சியமாக இந்நூல் விளங்குகிறது.

தமிழகத்திலிருந்து சோவியத் நாடு கண்ணுக்கு எட்டாத, எளிதில் சென்று வர முடியாத தொலைவிலிருந்த போதிலும் தமிழில் இம்மொழிபெயர்ப்பு நூல்கள் சோவியத்தை மிக அருகாமையில் இருப்பது போல ஒரு பிரமிப்பை உருவாக்குகின்றன. இந்த மனக் காட்சியை வாசகர்களுக்கு 'மாஜினி' போன்ற மொழிபெயர்ப்பாளர்கள் வழங்கி வருகின்றனர்.

## பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் நூல் தொகுப்பு – மொழிபெயர்ப்பில் மாஜினியின் பங்கு

பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் நூல் தொகுப்புப் பணியில் மாஜினி தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டுள்ளார். இதுவரை வெளியிடப்பட்ட 34 தொகுதிகளிலும் மாஜினியின் மொழிபெயர்ப்பு இடம்பெற்றுள்ளது. ஒரு சில தொகுதிகள் முழுமையும் மாஜினியால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. பெரும் பாலும் 5 அல்லது 6 பேர் கொண்ட மொழிபெயர்ப்புக்குழுவில் ஒருவராகவும், மொழிபெயர்ப்பு மேற்பார்வையாளராகவும், நிர்வாக ஆசிரியராகவும் இம்மொழிபெயர்ப்புத் தொகுப்பு நூல் வெளியீட்டுப் பணியில் மாஜினி இடம்பெற்றுள்ளார்.

பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் மீது மாஜினிக்கு இருந்து வந்த எல்லையற்ற மதிப்பும் மரியாதையும், அப்பழுக்கற்ற தேசத் தலைவர் என்ற கருத்தினாலும் இப்பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். அதற்கேற்பச் சூழல்களும், வாய்ப்பும் அவருக்குக் கிடைத்தன. இந்த மாபெரும் பணி குறித்து குறிப்பிடும்பொழுது இப்பணியின் தொடக்க நிலையிலிருந்து கூறியுள்ளார்.

> **பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கரின் நூல்கள் அனைத்தையும் எல்லாத் தேசிய மொழிகளிலும் வெளியிடவேண்டும் என்ற ஒரு கோரிக்கை எழுந்தது. இந்தக் கோரிக்கை உதாசீனம் செய்யப்பட்டது. இதனை எதிர்த்து மகாராஷ்டிர மாநிலத்தில் ஆயிரக்கணக்கான தலித் மக்கள் ஒரு மாபெரும் போராட்டத்தை நடத்தினர். எண்ணற்றோர் கைது செய்யப்பட்டு**

**வெஞ்சிறை ஏகினர். பலர் உண்ணா விரதம் இருந்தனர். இதன் பேரில் மகாராஷ்டிர அரசு இறங்கி வந்து, அதன் கல்வித்துறை 1992 இல் பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கரின் எழுத்துகளையும் பேச்சுகளையும் ஒன்று விடாமல் வெளியிட்டது. இதனை அடுத்து மற்றொரு கோரிக்கை எழுந்தது. டாக்டர் அம்பேத்கரின் பேச்சுகளையும் எழுத்து களையும் அனைத்துத் தேசிய மொழிகளிலும் வெளியிட வேண்டுமென்பதே அந்தக் கோரிக்கை. அந்தக் கோரிக்கையும் ஏற்கப்பட்டு 1993 இல் டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் நிறுவப்பட்டது. முதலில் அது இந்திய அரசின் நல அமைச்சகத்தின் கீழ் நிறுவப்பட்டது. தற்போது அது இந்திய அரச சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகத்தின் கீழ்ச் செயல்பட்டு வருகிறது. அம்பேத்கர் பவுண்டேஷனின் முதலாவது இயக்குநராக டாக்டர் சியாம் சிங் சஷி பொறுப்பேற்றார். டாக்டர் சஷி சென்னை வந்திருந்த போது அவரைச் சந்தித்து அளவளாவி இருக்கிறேன். அவர் புகழ்பெற்ற எழுத்தாளர், சிறந்த ஆராய்ச்சி யாளர், பல அரிய நூல்களை எழுதியிருப்பவர், அவர் டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷனின் முதல் இயக்கு நராக நியமிக்கப்பட்டது மிகவும் பொருத்தமானதே[25]**

என்று குறிப்பிட்டுள்ளார் மாஜினி.

டாக்டர் அம்பேத்கரின் பேச்சும் எழுத்தும் ஆங்கிலத்தி லிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு இதுவரை 37 தொகுதிகள் வெளியிடப்பட்டுள்ளன. இதற்காக, பதிப்புக்குழு, மொழிபெயர்ப் பாளர்கள், ஒப்புநோக்குபவர்கள் ஆகியோரால் இப்பணி மேற் கொள்ளப்பட்டு டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன், நல அமைச்சகம், இந்திய அரசால் (புதுடில்லி) வெளியிடப்பட்டுள்ளது. முதல் தொகுதி ஏப்ரல் 1993 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுத் தொடர்ந்து இப்பணி மேற்கொள்ளப்பட்டுள்ளது. டாக்டர் எஸ். பெருமாள், ஐ. இசக்கி, ஜி. ஆளவந்தார், கல்பனாதாசன், ரங்கசாமி (மாஜினி), ஆர். பார்த்தசாரதி, ஆர்.எஸ். நாராயணன் ஆகியோரால் முதல் தொகுதி மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு தொகுதிக்கும் வெவ்வேறு மொழிபெயர்ப்பாளர்கள் இடம்பெற்றுள்ளனர். ஆனால் இவ்வரிசையில் ரங்கசாமி (மாஜினி) அனைத்துத் தொகுதியிலும் இடம் பெற்றுள்ளார்.

**இது ஏறத்தாழ 15 ஆயிரம் பக்கங்களை எட்டும். அதிகத் தொகுதிகளை வெளியிடுவதில் ஆரம்பம் முதலே**

> தமிழ்ப் பதிப்புதான் அநேகமாக முதலிடம் வகித்து வருகிறது எனலாம். முதல் தொகுதியிலிருந்தே இந்த அரும்பணியில் நான் ஈடுபட்டு வந்தமை குறித்துப் பெருமையும் பெருமிதமும் அடைகிறேன். என்னுடைய இனிய நண்பரான டாக்டர் பெருமாள் அண்மைக் காலம் வரை தமிழ்ப் பதிப்பின் நிர்வாக ஆசிரியராக இருந்து வந்தார். அவர் சிறந்த தமிழ் அறிஞர், அனுபவமிக்க எழுத்தாளர். பல நல்ல நூல்களை எழுதியவர். சென்னை அண்ணா நகரில் ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ் பயிற்சியாளர்களுக்கான அரசினர் கல்லூரியின் முதல்வராக இருந்து சில ஆண்டுகளுக்கு முன்னர் ஓய்வு பெற்றவர். தொடக்கத்திலிருந்தே பாபா சாகேப் டாக்டர் அம்பேத்கரின் நூல்களின் தமிழ்ப் பதிப்பை வெளியிடுவதில் அவருக்கு உறுதுணையாக இருந்து வந்தேன். ஆனால் எவரும் சற்றும் எதிர்பாராத வகையில் உற்றார்களையும் உறவினர்களையும் எண்ணற்ற அன்பர்களையும் நண்பர்களையும் மீளாத் துயரில் ஆழ்த்திவிட்டுச் சென்ற ஜூலை மாதம் அவர் அமரராகி விட்டார். டாக்டர் அம்பேத்கர் தமிழ் நூல் தொகுப்பு வெளியீட்டில் அவரது பணி பெரிதும் பாராட்டுக்குரியதாகும். அவரது மறைவுக்குப் பிறகு தமிழ்நூல் நிர்வாக ஆசிரியராக டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் என்னை நியமித்துள்ளது[26]

என இம்மொழிபெயர்ப்புப் பணி குறித்துக் குறிப்பிட்டுள்ளார்.

டாக்டர் அம்பேத்கரின் சிந்தனைகள் பொதுமக்களுக்கு எட்ட வேண்டும் என்பது இம்மொழிபெயர்ப்பின் நோக்கமாகும். அதனால் இம்மொழிபெயர்ப்பு எளிமையாக அமைய வேண்டும் எனும் கருத்துடன் செயல்பட்டுள்ளனர். இம்மொழிபெயர்ப்பின் தலைமைப் பதிப்பாளர் டாக்டர் ஷ்யாம் சிங் ஷஷி பதிப்புரையில் இப்பணி குறித்துச் சில கருத்துகளைக் குறிப்பிட்டுள்ளார்.

> டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் பேச்சும் எழுத்தும் அடங்கிய தொகுதிகளை ஆங்கிலத்தில் திரு. வஸந்த் மூன் அவர்கள் தொகுத்தளித்துள்ள பொருள் வரிசை நிறையிலேயே இந்தியிலும் பிற இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடு கின்றோம். எனினும் வாசகர்களின் வசதியைக் கருதி ஆங்கிலத் தொகுதிகள் சிறிய அளவில் பல பகுதிகளாக வெளிவருகின்றன. மொழிபெயர்ப்பும் அதனிலும் ஒப்புநோக்கும், பதிப்புப்பணியும் கடினமானவை. இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்குள் அனைத்துத் தொகுதிகளையும் மொழிபெயர்த்து வெளியிட வேண்டும் என்னும் திட்டம் நிறைவேற்றுவதற்குக்

> கடினமானது என்ற போதிலும் காலவரையறையைக் கருத்தில் கொண்டு விரைந்து செயற்படுகின்றோம். ஆற்றல் மிக்க நமது மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர், பதிப்பாளர்கள் ஆகியோரின் துணைக்கொண்டு திட்டமிட்டவாறு இந்தப் பணியை நிறைவு செய்ய உறுதி பூண்டுள்ளோம். இந்த மொழி பெயர்ப்பு நூல்களை இலக்கியப் படைப்புகளாகக் கருதாமல், டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் தத்துவங்களையும் சிந்தனைகளையும் நன்கு அறிந்து கொள்ள உதவும் எளிய மொழி பெயர்ப்பு நூல்களாகக் கருத வேண்டுகிறோம்[27]

என இத்தொகுப்பு நூலின் பதிப்புரையில் குறிப்பிட்டுள்ளார். படிப்பவர்களின் வசதி கருதி ஆங்கிலத்தில் ஒரு தொகுதியாக உள்ளவை தமிழில் இரண்டு அல்லது மூன்று தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டு வழங்கப்பட்டுள்ளன. இதில் பல மொழிபெயர்ப் பாளர்களின் மொழிபெயர்ப்புகள் அடங்கியுள்ளன.

> இயல்பாக எழுதுவதை விட மொழிபெயர்ப்பது மிகவும் கடினமான பணி. ஒருவகையில் இன்னொரு வரின் சிந்தனை ஓட்டத்தை எடுத்துக் கொள்வது என்று கூடக் கூறலாம். மொழிபெயர்ப்பாளர் மூல நூலின் மொழி மற்றும் மொழிபெயர்க்கப்பட வேண்டிய மொழி ஆகியவற்றில் புலமை பெற்றிருந் தால் மட்டும் போதாது, அவர் மொழிபெயர்க்கும் நூலில் கூறப்பட்டுள்ளவை பற்றியும் நன்கு அறிந்திருக்க வேண்டும்.[28]

இத்தகைய பெரும் திட்டப் பணியில் நீண்ட அனுபவம் வாய்ந்த மாஜினி தம்மை இணைத்துக் கொண்டு பெரும் பங்காற்றி யுள்ளார். நீண்ட காலம் பொதுமக்கள் விரும்பிப் படிக்கும் பத்திரிகைகளில் பணியாற்றிய அனுபவம் மாஜினிக்கு இந்த மொழிபெயர்ப்புத் திட்டத்தில் பெரிதும் கைகொடுத்துள்ளது.

> டாக்டர் அம்பேத்கர் நூல் தொகுப்புகளை மொழி பெயர்ப்போர் ஒப்பு நோக்குவோர் ஆகியவர்கள் பலராக இருப்பதன் காரணமாக மொழிபெயர்ப்பு நூல் முழுவதும் ஒரே சீராக இல்லாமல் போகக் கூடிய நிலைமையை உணர்ந்துள்ளோம். இந்தக் குறையைப் போக்கவும் கருத்தோட்டத்தில் சிதைவு இல்லாமல் காக்கவும் முயன்றிருக்கின்றோம். மக்களுக்கு எளிதாக விளங்கும் வகையில் எளிய சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன.[29]

இத்தொகுப்பு நூலில் எந்தப் பகுதி யாரால் மொழிபெயர்க்கப் பட்டது என்பது குறிப்பிடப்படவில்லை. நூலின் தொடக்கத்தில்

மொழிபெயர்ப்பாளர்கள் என்ற தலைப்பில் பெயர்ப்பட்டியல் கொடுக்கப்பட்டுள்ளது. ஒரு சில தொகுதிகள் தனி ஒருவரால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

டாக்டர் எஸ். பெருமாள், ஐ. இசக்கி, ஜி. ஆளவந்தார், ரா. ரங்கசாமி (மாஜினி), கல்பனாதாசன், ஆர். பார்த்தசாரதி, ஆர்.எஸ். நாராயணன், உலோ. செந்தமிழ்க்கோதை, ஏ.எஸ். மூர்த்தி, ஜோசப் சந்திரகுமார், ஏ.எஸ். மணி, இரா. கிருஸ்துதாஸ் காந்தி, வி. பரஞ்சோதி, நா.மாணிக்கவாசகன், டாக்டர் கோ. தங்கவேலு, டாக்டர் இசு. முத்துசாமி, வி. முருகன், தியாகராஜன் (தியாகு), முனைவர் அ. இளங்கோவன், என். இராமகிருஷ்ணன், நா. ஜெயராமன், முனைவர் கே.வி. பாலசுப்பிரமணியன், வி. ராதாகிருஷ்ணன், எஸ். குகராஜ், ப. அன்புமணி, டாக்டர் எஸ். செல்வராசன், வி.வி. சந்திரசேகரன், எம்.ஏ. பழனியப்பன், கே.எம். நடராஜன் எம்.ஏ.எல், கே. நீலகண்டன், டி.எஸ். இரவீந்திரதாஸ், பசுமைக்குமார், என். ராஜாராம், ஆர். கணேசன், இரா.சு. முத்து ஆகியோர் பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் நூல் தொகுப்பில் ஈடுபட்ட மொழிபெயர்ப்பாளர்கள் ஆவர். இப்பணியில் கே. நீலகண்டன், ஏ.எஸ்.மணி, வி. இராதா கிருஷ்ணன் போன்றோரின் பங்கு மிகப் பெரியதெனக் குறிப்பிடுகிறார் மாஜினி. இப்பெரும்பணியின் தொடக்கம் முதல் பல தமிழ் அறிஞர்கள் அனுபவம் மிக்க மொழிபெயர்ப்பாளர்கள் பங்கேற்று வந்துள்ளனர். சுமார் 50 தொகுதிகள் அம்பேத்கரின் பேச்சும் எழுத்தும் தமிழில் வெளிவர உள்ளன. தற்போது இதன் முழுப் பொறுப்பையும் அறிஞர் மாஜினி ஏற்றுச் செயல்பட்டு வருகிறார். இதில் தொகுதி 17, 23 (627 பக்) (275 பக்) ஆகிய இரண்டு தொகுப்புகள் முழுமையும் மாஜினியால் மொழிபெயர்க்கப்பட்டவை. தொகுதி 16 (பக். 627), மாஜினி, நா. ஜெயராமன் ஆகிய இருவரால் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. டாக்டர் அம்பேத்கரின் பேச்சும் எழுத்தும் வருங்காலத் தலைமுறைகளுக்கு ஆவணமாக்கித் தருகின்ற இப்பணியில் மாஜினி மொழிபெயர்ப்பாளராக, பிழை திருத்துவோராக, ஒப்பு நோக்குபவராக, நிர்வாக ஆசிரியராக என அனைத்துப் பணிகளிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டுள்ளார். மாஜினியின் மொழிபெயர்ப்பு எப்படியிருக்கும்? என்று அறியாதோர் பலர்; 'மக்களுக்கு' என வெளியிடப்பட்ட அம்பேத்கரின் நூலிலிருந்து ஒரு சான்று:

> **உலகின் பல்வேறு பகுதிகளும் அறிஞர் வார்டு குறிப்பிடுவது போன்று தமக்கே உரிய கீழ்மட்ட மக்களைக் கொண்டிருந்திருக்கின்றன. ரோமானியர்கள் அடிமைகளையும், ஸ்பார்ட்டன்கள் ஹியோட்டு களையும், பிரிட்டிஷார் வில்லெய்ன்கள் எனப்படும் கொத்தடிமைக் குடியானவர்களையும், அமெரிக்கர்கள் நீக்ரோக்களையும், ஜெர்மானியர்கள் யூதர்களையும் அடித்தட்டு மக்களாக நடத்தி வந்திருக்கின்றனர்.**

ஆனால் இவர்கள் எல்லோரையும் விடத் தீண்டப் படாதவர்களின் கதிப்போக்குத்தான் மிகமிக மோச மானதாகும். அடிமைத்தனம், கொத்தடிமைத்தனம், பண்ணையடிமைத்தனம் போன்றவை எல்லாம் மறைந்தொழிந்துவிட்டன. ஆனால் தீண்டாமை மட்டும் இன்னும் ஒழிந்தபாடில்லை. இந்து மதம் இருக்கும் வரை அது நீடித்திருக்கவே செய்யும். ஒரு தீண்டப்படாதவனின் நிலைமை யூதனின் நிலைமையை விட மிக மிக மோசமானது, பரிதாபத்திலும் பரிதாபத்துக்குரியது. யூதனுக்கு ஏற்பட்டுள்ள அவலங்கள் அவனே உருவாக்கிக் கொண்டவை. ஆனால் தீண்டப் படாதவனுக்கு ஏற்பட்டுள்ள துன்பத் துயரங்களோ அப்படிப்பட்டவை அல்ல. அவற்றிலும் கொடுமை யிலும் கொடுமையானவை இந்து சமயத்தின் திட்டமிட்ட சதியே. இவற்றிற்கெல்லாம் காரணம். நாகரிகமற்ற, காட்டுமிராண்டித்தனமான, முரட்டுத் தனமான, வன்முறையை விடவும் அதிகக் குரூரங்களை விளைவிக்க வல்லது இந்தத் தீண்டாமை எனும் சாபக்கேடு, சாபத்தீடு. யூதன் வெறுக்கப்படுகிறான் என்பதில் ஐயமில்லை. ஆனால் முன்னேறுவதற்கான வாய்ப்புகள் அவனுக்கு மறுக்கப் படுவதில்லை. ஆனால் அதேசமயம் தீண்டப்படாதவனின் நிலைமை என்ன? அவன் வெறுத்து ஒதுக்கப்படுவதோடு, அவன் முன்னேறுவதற்கான சகல வாய்ப்புகளும் மறுக்கப்படு கின்றன. எல்லாக் கதவுகளும் அவனுக்கு மூடப் பட்டுள்ளன. இவ்வாறு ஏறத்தாழ 6 கோடி தீண்டப் படாதவர்கள் 600 இலட்சம் ஆத்மாக்கள் – சொல் லொண்ணாத் துன்பத்திலும் துயரிலும், வேதனையிலும் வாதனையிலும் ஆழ்ந்து அமிழ்ந்து பாம்பு வாய்ப் பட்ட தேரையாக உழன்று வரும்போது இது குறித்து எவரும் கவனம் செலுத்தியதாகத் தெரியவில்லை. அவர்களது நலனுக்காகக் குரல் எழுப்புவதாகவும் தோன்றவில்லை.[30]

இந்தியாவில் தலித் மக்களுக்கு எதிரான பிரச்சினை களையும், அதற்கானத் தீர்வுகளையும் பற்றி எடுத்துக்கூறும் இந்த நூல் பலவகைகளில் முக்கியத்துவம் வாய்ந்தது. இத்தொகுப்பினை 'மொழிபெயர்ப்பு' என்ற எண்ணம் தோன்றா வண்ணம், தமிழிலேயே எழுதப்பட்டது போல மாஜினியின் மொழிபெயர்ப்பு சரளமான நடையில் அமைந்துள்ளதை மேற்குறிப்பிட்டுள்ள ஒரு சான்றின் மூலம் அறியலாம். டாக்டர் அம்பேத்கர் நூல்களைத் தமிழில் வெளியிடும் பணியில் ஈடுபட்ட மாஜினியின் நண்பர் கோ. ஆளவந்தார் இப்பணியில் மாஜினியின் மாபெரும் உழைப்புக் குறித்துக் குறிப்பிட்டுள்ளார்.

> இப்போது தோழர் மாஜினி அம்பேத்கர் பற்றிய நூல் தொகுப்புகளுக்கு ஆசிரியராகவும், மொழிபெயர்ப்பாள ராயும் இருக்கிறார். நான் முதலிரண்டு தொகுப்புகளுக்கு மொழிபெயர்ப்புச் செய்தேன். பின்னர் உடல் நலக் குறைவால் இப்பணியைத் தொடர முடியவில்லை. தோழர் மாஜினியின் விடாமுயற்சியால்தான் அம்பேத்கர் தொகுப்பு திட்டமிட்டபடி வெளியிடப்படுகிறது என்றால் மிகை யாகாது. ஹிந்தியிலும் தமிழிலும் மட்டுமே சுமார் 30 தொகுதிகள் வெளிவந்துள்ளன. இதரமொழிகளில் இத்தனை தொகுதிகள் வெளியாகவில்லை. இதற்கு தோழர் மாஜினியின் விடாமுயற்சியும், எடுத்த காரியத்தை முடிக்காமல் ஓய்வதில்லை என்ற மனத்திண்மையும்தான் பிரதான காரணங்கள் எனலாம்[31]

என்ற கருத்துரை அறிஞர் மாஜினியின் அருந்தொண்டினை, பேருழைப்பை எடுத்துக் காட்டுவதாகும்.

### சோவியத் நாவல்கள்

சகோதரிகள், யுவதிகள், நாலாயிரம் வயது மனிதன், உல்லாசக்குடும்பம், ஜமீலா ஆகிய நாவல்கள் இவருடைய மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன. இதில் 'லாஸர் லாகின்' என்பவர் எழுதிய 'நாலாயிரம் வயது மனிதன்' எனும் நாவல் மாஜினி மொழிபெயர்ப்பில் 681 பக்கங்களைக் கொண்ட ஒரு பெரும் நூலாக வெளிவந்துள்ளது. இது சிறுவர்களுக்கான கதையாகும். நாலாயிரம் வயதுடைய மனிதன் இதன் கதாநாயகன். மந்திர தந்திர சாகசங்கள் நிறைந்த இக்கதையை விறுவிறுப்பான நடையில் மாஜினி மொழிபெயர்த்துள்ளார். உருஷ்ய மொழியில் வெளிவந்த நாவல்களின் ஆங்கில மொழிபெயர்ப்பைக் கொண்டு மாஜினி இந்நூல்களை மொழிபெயர்த்துள்ளார். இரண்டு மொழிகளைக் கடந்து வந்தாலும் உருஷ்ய மண்ணுக்கும், மக்களுக்கும், மொழிக்கும் உரிய தன்மையைத் தமிழில் வடித்துத் தந்துள்ளார் மாஜினி. இந்நாவல்களில் 'ஜமீலா' பெரும் புகழ் வாய்ந்தது. மூல நூலாசிரியரின் பணியை மாஜினி மீண்டும் தமிழில் செய்துள்ளார்.

> எந்த மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்படுகிறதோ அந்த மொழியில், எடுத்துக் கொண்ட விஷயத்தைத் தெள்ளத் தெளிவாகப் புரிந்து கொள்ளும் ஞானம் இருந்தால் போதும். ஆனால் அதேசமயம் எந்த மொழியில் மொழிபெயர்ப்புப் பணி நடைபெறு கிறதோ அந்த மொழியில் நல்ல பாண்டித்யம் இருக்க வேண்டும். தெள்ளத் தெளிந்த நீரோடை போன்ற நடையில் எழுதும் ஆற்றல் இருக்க வேண்டும். தாம் படிப்பது மொழிபெயர்ப்பை அல்ல, மாறாக, மூலத்தையே. கருத்துக்குக் கருத்து, சாரத்துக்குச் சாரம்,

> உள்ளடக்கத்திற்கு உள்ளடக்கம் அப்படியே ஒன்றிப் பிணைந்து, கிரகித்துப் படிக்கிறோம் என்ற உணர்வு படிப்பவருக்கு ஏற்பட வேண்டும். கைதேர்ந்த பேனா மன்னர்களால்தான் இதனைச் சாதிக்க முடியும். இன்னும் சொல்லப் போனால் கவிச்சக்கரவர்த்தி கம்பரும், வில்லிபுத்தூராரும் கூட ஒருவிதத்தில் மொழி பெயர்ப்பாளர்களே ஆவர். வால்மீகி ராமாயணத்தை அடியொட்டித் தமிழ் இலக்கியத்தின் தலைசிறந்த, நனி சிறந்த, ஒப்புயர்வற்ற மகாகாவியத்தைக் கம்பர் படைத்தளித்தார். இதேபோன்று வில்லிபுத்தூராரும் ஈடு இணையற்ற காப்பியமான வில்லிபாரதத்தை செந்தமிழ்நாட்டுக்கு, தேன்தமிழ் மொழிக்கு வழங்கினார். பிறநாட்டுச் சாத்திரங்கள் தமிழ் மொழியில் வரவேண்டும் என்று மகாகவி பாரதியார் மிகவும் தீர்க்க தரிசனத்தோடு கூறினார். அப்போதுதான் தமிழ்மொழி மேலும் வளமுற முடியும். செழுமையுற முடியும். பிறநாடுகள் பல்வேறு துறைகளில் கண்டுள்ள மகத்தான சாதனைகளை, அவற்றின் அனுபவங்களை, அவை கடந்து வந்துள்ள பாதைகளை, அப்பாதைகளில் அவை எதிர்கொண்ட இக்கட்டுகளை, இன்னல் இடுக்கண்களைச் சாதாரணத் தமிழ் மக்களும் தெரிந்து புரிந்து பலனடைய முடியும். இதன் பொருட்டு மொழிபெயர்ப்புக் கலைக்குப் புதிய ஆக்கமும் ஊக்கமும் கிட்டும். இதில் ஆன்ற அனுபவமிக்க, சிறந்த மொழிபெயர்ப்பாளர்களுக்கு மிகப் பெரும் பங்கு உண்டு[32]

என்று குறிப்பிடுகிறார் மாஜினி.

மிகப் பெரும் பங்களிப்பைச் செய்யும் மொழிபெயர்ப் பாளர்களுக்கு எவ்வித அங்கீகாரமும், மதிப்பும் தமிழுலகில் இல்லை. இந்திய அளவிலும் இல்லை என்பதே பெரும்பாலான மொழிபெயர்ப் பாளர்களின் கருத்து. அப்படி ஒரு கருத்து தொடக்க காலம் தொட்டு இருந்த போதிலும் இந்தப் பணிகளை இடையறாது செய்து வருகின்றனர் தமிழ் மொழிபெயர்ப்பாளர்கள். ஒவ்வொரு துறையிலும் விரிவான தளத்தை உருவாக்கும் இம்மொழிபெயர்ப்பாளர்களுக்கு அங்கீகாரம் ஏதுமில்லை என்று மாஜினி கருதுகிறார்.

> அரசும் சரி, பல்கலைக்கழகங்களும் சரி, சாகித்ய அகாடமி போன்ற அமைப்புகளும் சரி, பதிப்பகங் களும் சரி, சிறுகதை எழுத்தாளர்களுக்கு, நவீனங்கள் படைக்கும் எழுத்தாளர்களுக்கு அளிக்கும் அங்கீகாரத்தை, மதிப்பை மொழிபெயர்ப்பாளர்

> களுக்கு அளிப்பதில்லை என்ற கசப்பான உண்மையை எடுத்துக்காட்டத்தான் இத்தனையும் கூறுகிறேன். மொழிபெயர்ப்பாளர்கள் என்பவர்கள் வெறும் 'ஜெராக்ஸ்' எந்திரங்களே தவிர வேறல்லர் என்ற தவறான மோசமான, இழிவினும் இழிவான கருத்து சில வட்டாரங்களில் நிலவுகிறது. இது மிகவும் வருந்தத்தக்கதாகும். மொழிபெயர்ப்பாளர்கள் படைப் பாற்றலும், கற்பனை வளமும், எழுத்து வன்மையும், நடைநேர்த்தியும் கொண்ட எழுத்தாளர்களாக இருந்தால்தான் அவர்கள் தேர்ந்த, தெளிந்த திறமை யான எழுத்தாளர்களாக இருந்தால்தான் மூலத்தை அப்படியே தத்ரூபமாகப் படம்பிடித்துக் காட்ட முடியும். இதுதான் சிறந்த மொழிபெயர்ப்பாளர் களுக்கான இலக்கணமாகும்[33]

என்று அறிஞர் மாஜினி கூறுவது உண்மை என்பது இத்துறையில் உள்ளோர் அறிவர். இன்னும் இந்திராகாந்தி திறந்தவெளிப் பல்கலைக்கழகத்தின் பாடத்திட்ட நூல்களை இவர் மொழிபெயர்த்தளித்து வருகிறார்.

### மாஜினிக்குக் கிடைத்த பாராட்டு

மாஜினி சாதாரண வாசகர்களின் மனத்தை மட்டுமல்ல பெரும் தலைவர்களின் மனத்தையும் கவர்ந்தவர். மாஜினி என்ற பெயரில் எழுதிய அரசியல் கட்டுரைகள் அன்றைய இளைஞர்களால் பெரிதும் விரும்பிப் படிக்கப்பட்டன. அவருடைய வேகமான எழுத்து நடை, ஆழமானது, ஆணித்தரமானது என்று பாராட்டியுள்ளனர்.

அவருடைய மொழிபெயர்ப்புக்குக் கிடைத்த பாராட்டுகள் குறித்து மூத்த பத்திரிகையாளர் கோ. ஆளவந்தார் குறிப்பிடும் பொழுது,

> 'அவர் மொழிபெயர்த்த இரண்டு புத்தகங்களைப் பற்றிச் சிறப்பாகக் குறிப்பிட விரும்புகிறேன். முதலாவது, சோவியத் அதிபர் கொர்பச்சேவ் எழுதிய 'பெரெஸ்த்ரோய்க்கா'. இந்த நூல் அன்றைய உலக அரசியலையே உலுக்கி எடுத்தது. அடுத்தது முன்னாள் மத்திய அமைச்சர் மாண்புமிகு சி. சுப்பிரமணியம் அவர்கள் எழுதிய சுயசரிதையின் இரண்டாம் தொகுதியான 'பசுமைப்புரட்சி'. இந்த இரண்டு நூல்களுக்கும் நான் பதிப்பு ஆசிரியராக இருந்தேன்.
>
> 'பெரெஸ்த்ரோய்க்கா' நூலின் வெளியீட்டு விழாவில் பல தமிழ் அறிஞர்கள் கலந்து கொண்டார்கள். நூலின் தமிழாக்கம் மிகச் சிறப்பாக உள்ளது என்றும்

**சொற்றொடர்கள் எளிமையாகவும், சரளமாகவும் அமைந்துள்ளன என்றும் பாராட்டினார்கள். விழாவுக்குத் தலைமை தாங்கிய ம.பொ. சிவஞானம் அவர்கள் கொர்பச்சேவ் தமிழில் எழுதியது போல, மொழியாக்கம் போலன்றி, மூலநூல் போன்றே விளங்குகிறது என்று பாராட்டியது குறிப்பிடத்தக்கது.**

**'பசுமைப்புரட்சி' நூல் வெளியீட்டு விழா விவசாய விஞ்ஞானப் பேரறிஞர் எம்.எஸ். சுவாமிநாதன் தலைமையில் அவருடைய அலுவலக அரங்கில் நடை பெற்றது. விழாவில் பேசியவர்கள் தமிழாக்கத்தை வெகுவாகப் பாராட்டினார்கள். திரு. சி.எஸ். அவர்கள் பேசுகையில் 'தானே தமிழில் எழுதியிருந்தாலும் இத்தகைய சொற்களைக் கையாண்டிருக்க முடியுமா என்பது சந்தேகமே' என்று பேசி மாஜினியைப் பாராட்டினார். இந்த நூல் பிரசுரம் சம்பந்தமாகப் பல தடவை சி.எஸ். அவர்களை அவருடைய வீட்டில் சந்தித்திருக்கிறேன். அப்போது, ஒவ்வொரு முறையும் நூலின் தமிழ்நடையைப் பற்றி அவர் சிலாகித்ததுண்டு.[34]**

*என்று மூத்த பத்திரிகையாளர் கோ. ஆளவந்தார் மாஜினியின் மொழிபெயர்ப்புத் திறமையைப் பல தலைவர்களும், தமிழறிஞர்களும் பாராட்டியதைச் சுட்டிக்காட்டியுள்ளார்.*

*எழுத்துக்கு வயது கிடையாது என்பது போல் தமது 92 ஆவது வயதிலும் சுறுசுறுப்புடன் தொடர்ந்து எழுதி வந்தார். இந்தியா விடுதலை பெற எத்துணை ஆயிரம் மக்கள் இதில் ஈடுபட்டுச் சிறையேகினர். உயிர் துறந்தனர். சொல்லொண்ணாக் கொடுமை களுக்கு ஆளாயினர். ஆனால் அந்தத் தியாகிகளின் வரலாறு மறக்கப்பட்டுவிட்டது என்று வேதனையுற்றதால் நாட்டிற்காக, சமுதாயத்திற்காகப் போராடியவர்களின் நினைவாக அறக்கட்டளை அமைத்து அதன் மூலம் இன்றைய இளந்தலைமுறையினருக்குப் பல செய்திகளைக் கூறும் வகையில் இச்சிந்தனையை முன்னெடுத்துச் செல்லும் அறிஞர் குழு மூலம் பல நூல்களை வெளியிடத் திட்டமிட்டிருந்தார்.*

*இந்த அமைப்பிற்கு 'விடுதலைப் போராட்ட ஆய்வு மையம்' என்று பெயரிட்டுள்ளனர் (Freedom Struggle Research Institute) இதன் மூலம் சுதந்திரம் பிறந்த கதை, பெரியாரும் டாக்டர் அம்பேத்கரும் (மாஜினி), விலங்கொடித்த வீரகாவியம் (கோ. ஆளவந்தார்) ஆகிய நூல்களை வெளியிடத் திட்டமிட்டு செயல்பட்டு வந்தார். இந்திராகாந்தி திறந்தவெளிப் பல்கலைக் கழகத்தின் பாடத்திட்ட நூல்களையும் மொழிபெயர்த்தளித்து வந்தார்.*

அறிஞர் மாஜினி தமிழ்மொழிக்கும், நாட்டிற்கும் பணியாற்றும் ஓர் இலட்சிய எழுத்தாளராக வாழ்ந்து வந்தார்.

> தோழர் மாஜினி இலட்சிய எழுத்துக்காக வாழ்பவர். ஜனசக்தி, தாமரை முதலிய கொள்கை இதழ்களில் இவர் எழுதிய எழுத்துகள் இதற்குச் சாட்சி கூறுகின்றன. பள்ளிப்பருவத்தில் பிறந்த இவருடைய எழுத்து இப்பொழுதும் தொடர்கிறது. இந்த எழுத்துக்குள் தெரியும் வாழ்க்கை உண்மையானது என்பதும், இதனை நேசிக்கிற அனைவரையும் ஒன்று திரட்ட வேண்டும் என்பதும், வாழ்க்கைக்குத் தடை விதிக்க நினைப்பவர்களை எதிர்த்துப் போராட வேண்டும் என்பதும், தோழர் மாஜினியின் தூய வாழ்க்கையை வாழ என் மனம் ஆசைப்படுகிறது[35]

எனத் 'தாமரை' இதழ் ஆசிரியர் சி. மகேந்திரன் குறிப்பிடுகிறார். இன்றைய எழுத்தாளர்கள் பலருக்கு வழிகாட்டும் வகையில் அறிஞர் மாஜினி வாழ்ந்து வந்தார். 23-03-2010 அன்று மாஜினி மறைந்தார் என்ற செய்தி அறிவுலகத்தின் பேரிழப்பாக உணரப்பட்டது. பொதுவுடைமைத் தத்துவப் பரப்புதலுக்குப் பெருந்துணையாக அமைந்த அப்பெருமகனாரின் புகழ் என்றும் மறையாது.

## குறிப்புகள்

1. **எனது மலரும் நினைவுகள்,** மாஜினி (ரா. ரங்கசாமி), விடுதலைப் போராட்ட ஆய்வு மையம், சென்னை-83, பதி. ஜூலை 2002, பக். பின்னிணைப்பு XVI
2. மேற்படி, ப. 7.
3. மேற்படி, ப. 9.
4. மேற்படி, ப. 9.
5. மேற்படி, ப. 21.
6. மேற்படி, ப. 25.
7. மேற்படி, ப. 67.
8. மேற்படி, ப. 85.
9. மேற்படி, ப. 93.
10. மேற்படி, ப. 109-10.
11. மேற்படி, ப. 126.
12. மேற்படி, ப. 126.

13. மேற்படி, பின்னிணைப்பு, பக். XX - XXII.

14. மேற்படி, ப. 129.

15. மேற்படி, ப. 129.

16. மேற்படி, ப. 130.

17. மேற்படி, ப. 137.

18. மேற்படி, ப. 143.

19. **கீதை ஆய்வுரை**, லோகமான்ய பாலகங்காதர திலகர், (மொழி.பெ) ரா. ரங்கசாமி (மாஜினி) பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை 14, பதி.2001, முன்.

20. மேற்படி, ப. 118.

21. **சிந்துமுதல் கங்கை வரை**, ப. 5.

22. **எனது மலரும் நினைவுகள்**, ப. 150.

23. பெரிஸ்த்ரோய்க்கா, கொர்பச்சேவ், (மொ.பெ.) மாஜினி, நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், முன்.

24. சோவியத் யூனியன் தகவல் களஞ்சியம், (தமி.) மாஜினி, நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், முன்.

25. **எனது மலரும் நினைவுகள்**, மாஜினி, ப. 150.

26. மேற்படி, ப. 151.

27. பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் நூல் தொகுப்பு, தொகுதி 3, டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன், புதுதில்லி, பதி.மார்ச் 1994, பதிப்புரை.

28. மேற்படி, தொகுதி 1, ஏப். 1993, முன்னுரை.

29. மேற்படி.

30. மேற்படி, தொகுதி 17, அம்பேத்கர் பவுண்டேஷன், பதி. 1999, பக். 1.

31. எனது மலரும் நினைவுகள், மாஜினி, பின்னுரை, ப. XIV.

32. மேற்படி, ப. 129-130.

33. மேற்படி, ப. 129.

34. மேற்படி, பின்னுரை XV.

35. மேற்படி, பின்னுரை XV.

# ரா. வீழிநாதன்

சிறந்த படைப்பாளியாகவும், மொழிபெயர்ப்பாளராகவும் விளங்கிய ரா. வீழிநாதன் 'மொழி இணைப்புப் பாலம் அமைக்கும் ஓர் என்ஜினியர்' எனப் பாராட்டப்பட்டவர். பிற மொழிகளிலிருந்து தமிழுக்கும், தமிழிலிருந்து பிறமொழிகளுக்கும் மொழிபெயர்ப்புச் செய்து அரிய தொண்டாற்றியதால் மொழிபெயர்ப்புலகில் ரா. வீழிநாதன் குறிப்பிடத்தக்க இடத்தினைப் பெற்றுள்ளார்.

> **வீழிநாதன்! ஆம், சுப்ரமண்யம், ராமஸ்வாமி, வெங்கட்ராமன் போன்ற சர்வசாதாரணப் பெயர் அல்ல இது. ஒருமுறை கேட்டால் படித்தால் – கவனத்தைக் கவரும், மறக்கமுடியாத, அபூர்வமான பெயர்! தமிழில் இருநூறுக்கும் அதிகமான சிறுகதை களையும், பல கட்டுரைகளையும், நவீனங்களையும், நாடகங்களையும் எழுதியுள்ள வீழிநாதனை, 'மொழி இணைப்புப் பாலம்' அமைக்கும் ஓர் என்ஜினியர்' எனலாம். வடக்கும் தெற்கும் ஒன்றையொன்று நன்கு புரிந்து கொள்ளச்செய்யும் 'இணைப்பு இலக்கியச் சேவை'யை அவர் போற்றத்தக்க அளவு அதிகம் செய்திருக்கிறார்[1]**

சுமார் அறுபது ஆண்டுகள் வீழிநாதனின் இலக்கியப் பணிக்குப் பெரிதும் துணைபுரிந்தவை அவர் கற்றுக் கொண்ட மொழிகளும், அவரது அயராத உழைப்பும் என்பது உண்மை.

## இளமைப்பருவமும் கல்வியும்

ரா. வீழிநாதன் 1920 ஆம் ஆண்டு மே 15ஆம் நாள் தஞ்சை மாவட்டத்தில் உள்ள விஷ்ணுபுரம் என்ற ஊரில் பிறந்தார். இவர் பள்ளி வாழ்க்கையின் பொழுதே சமசுகிருதம், இந்தி மொழிகளைக் கற்றார். காந்தியடிகளின் கொள்கைகளிலும், நிர்மாணத் திட்டங் களிலும் ஈடுபாடு கொண்டவர். இந்தி ராஷ்டிரபாஷா தேர்வில் தென்னாட்டிலேயே முதல் மாணவராகத் தேர்ச்சி பெற்றார். ஈரோடு, கொரடாச்சேரி, கரூர், தேவக்கோட்டை, திருச்சி ஆகிய இடங்களில் உள்ள இந்திப் பிரச்சார சபைகளிலும், நேசனல் கல்லூரி, செயிண்ட் ஜோசப், ஹோலிகிராஸ் ஆகிய கல்லூரிகளிலும் இந்தி மொழி விரிவுரையாளராகப் பணியாற்றியுள்ளார். திருச்சியிலிருந்து தமிழ்நாடு இந்திப் பிரச்சார சபை நடத்தி வந்த 'இந்தி பத்திரிகா' (Hindi Patrika) என்ற இதழிலும் இவர் பங்காற்றினார். காந்தி

அடிகள் சென்னையில் நடந்த இந்திப் பிரச்சார சபாவின் வெள்ளி விழாவிற்கு வருகைபுரிந்த பொழுது அதன் பணிகளில் பங்கு கொண்ட பெருமை வீழிநாதனுக்கு உண்டு. இயல்பாக இவருக்கு இருந்த மொழியார்வம் காரணமாகக் குஜராத்தி, வங்காளி, உருது எழுத்துக்களையும் கற்றுக்கொண்டார்.

## வீழிநாதனின் எழுத்துலக நுழைவு

வீழிநாதன் தேவக்கோட்டையில் பணியாற்றும் பொழுது, இந்திப் பிரச்சாரம் தொடர்பான அன்றாட நடவடிக்கைகளை ஒரு நையாண்டி நாடகமாக எழுதினார். இந்த நாடகம் 'இந்திப் பிரச்சார சமாச்சார்' பத்திரிகையில் வெளிவந்த பொழுது அவருடைய நண்பர் உடன் பணியாற்றும் இந்திப் பிரச்சாரகர் பூர்ணம் சோமசுந்தரம் அதை மிகவும் பாராட்டினார். அவருடைய ஊக்கத்தினால் வீழிநாதன் பத்திரிகைகளில் எழுதத் தொடங்கினார். வீழிநாதனின் முதல் சிறுகதை 'ரயில் பிரயாணம்'. கலைமகளில் 1942 ஆம் ஆண்டு வெளிவந்தது. அதனைத் தொடர்ந்து 'காவேரி' இதழில் இவருடைய படைப்புகள் வெளிவந்தன.

> இந்திப் பிரச்சாரகராக இருந்ததன் பயனாக, காந்திஜி முதலான பல அரும்பெரும் தலைவர்களையும், தேச பக்தர்களையும் ஆசிரியர்களையும் சந்திக்கும் பாக்கியம் அவருக்கேற்பட்டது. இப்படி முன் பரிச்சயம் ஏற்பட்டிருந்த 'கல்கி' அவர்களை வீழிநாதன் சென்னையில் எழுத்துலகில் நுழைந்ததும் 1942இல் சந்தித்தார். ஏககாலத்தில் அவருக்கு ஒரு வேலைக்குப் பதில் இருவேலைகள் கிடைத்தன! 'கல்கி' பத்திரிகையில் உதவி ஆசிரியர் உத்தியோகம். அதோடு அப்பொழுது இந்தி 'மீரா' படத்தில் நடித்துக் கொண்டிருந்த எம்.எஸ். சுப்புலட்சுமிக்கு இந்தி போதனை. இரண்டு வாய்ப்புகளையும் அவர் நன்கு பயன்படுத்திக் கொண்டார். 'கல்கி'யும் 'மனிதனா தெய்வமா' என்ற முதல் கதையைத் தொடர்ந்து பல வெளிவரலாயின. 'மீரா' இந்திப் பட வசன மேற்பார்வையும் அவரிடம் விடப்பட்டது.[2]

கல்கி அவர்கள் வீழிநாதனைப் பல வடமொழிக் கதை களையும், நாவல்களையும் தமிழில் மொழிபெயர்க்குமாறு கூறினார். தனது பல கதைகளையும், நாவல்களையும் இந்தி மொழியில் மொழிபெயர்க்கக் கூறினார். இலக்கியப் பரிமாற்றத்தில் வீழிநாதன் ஈடுபடவும் பெரிதும் தூண்டுகோலாக இருந்தார். இவருடைய படைப்புகள், மொழிபெயர்ப்புகள் பலவும் தமிழ்-இந்திப் பத்திரிகைகளில் இடம்பெற்றன. பல நல்ல தமிழ் எழுத்தாளர்களைத் தமிழகத்துக்கு

அறிமுகஞ் செய்து வைத்த கல்கி பன்மொழித் திறம் பெற்ற ரா. வீழிநாதனையும் மக்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்துள்ளார். சிறுகதைகள், கட்டுரைகள், நாடகங்கள், திரைப்படத் திறனாய்வு, நாடகத் திறனாய்வு, துணுக்குகள், பிறமொழிப் படைப்புகளைத் தமிழில் மொழிபெயர்த்தவை, தமிழ்ப் படைப்புகளைப் பிறமொழிகளில் மொழிபெயர்த்தவை என இவருடைய எழுத்துக்கள் பல்வேறு இலக்கிய வடிவங்களில் சுமார் 1400 ஆக வெளிவந்துள்ளன. 'கல்கி' வார இதழில் வீழிநாதன் துணை ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். 1980 (பிப்.) முதல் 'அமர பாரதி' இதழ் ஆசிரியராகவும் வீழிநாதன் பணியாற்றி வந்துள்ளார். உடல் நலிவுற்ற போதிலும் இவர் தனது எழுத்துப் பணியைத் தொடர்ந்து செய்து வந்தார்.

### வீழிநாதனின் படைப்புகள்

வீழிநாதனின் படைப்புகள் காவேரி, கல்கி, நவயுவன், கலைவாணி, சக்தி, கலைமகள், ஆனந்தபோதினி, பிரசண்ட விகடன், நவசக்தி, நாடோடி, தென்றல், மாலதி, திரைஒலி, சிவாஜி ஹிந்துஸ்தான், நல்ல மாணவர், அணுவிரதம், தமிழ்நாடு, குங்குமம், குமுதம், ஆனந்தவிகடன், சாவி, இதயம் பேசுகிறது, முத்தாரம், மஞ்சரி, ஹிந்துமித்திரன், விஜயபாரதம், கோகுலம், பூந்தளிர், சுதேசமித்திரன், தினமணி, தினமணிகதிர் ஆகிய இதழ்களில் இடம் பெற்றுள்ளன. இவர் சுமார் 20 புனைபெயர்களில் எழுதி வந்துள்ளார். அட்சயம், குறும்பன், ஆங்கிலம், மாரீசன், இராம யோகி, இராமகுமார், கிருத்திவாஸ், ராவி, விஷ்ணு ஆகிய பெயர்கள் குறிப்பிடத்தக்கவை.

### வீழிநாதனின் சிறுகதைகள்

வீழிநாதன் தன் அனுபவம், தன் கண்முன் நடப்பவை, தன் கற்பனையில் விளைந்தவை, ஆகியவற்றைக் கருவாகக் கொண்டு சுமார் 200 சிறுகதைகளைப் படைத்து வழங்கியுள்ளார். 'ரயில் பிரயாணம்' என்ற தலைப்பில் தொடங்கி, தெய்வமா மனிதனா, தட்டியும் கோலமும், துறவறம், வீடு எப்படி, கெட்டிக்காரப்பெண், வழக்கு வளர்ந்த கதை, ஒரு முடிவும் இல்லை, ஒண்டிக்குடித்தனம், சம்மதந்தானா, கொம்புவானம், எதிர்பாராத உதவி, மௌனவிரதம், திரும்பி வருமா, விளம்பரமணம், யாருக்குச் சொந்தம், மாஜிகைதி, சியாமளாவின் சந்தேகம், மூன்று வருஷங்களுக்குப் பின், அத்தாட்சி, அதுவும் அப்படியா, தங்கம் நல்லவள், ஆற்றங் கரையிலே, அத்திப்பூ, அன்பின் அலைகள், நிபந்தனை, ஆத்ம திருப்தி, அவள் தெய்வம், சிதம்பர ரகசியம், அவன் யுக்தி, வழக்கும் விசாரணையும், கண்டியூர் கந்தசாமி, கல் இழைத்த மோதிரம், கோண்டுவின் தியாகம், விராலிமலை வீரப்பன், புதுக்கணக்கு, பிறவி நடிகர், சோலைக்கிளி, வெகுமதி, கானல் நீர், அன்னதானம், உள்ளம் உயர்ந்தது, பொய்யும் மெய்யும், சுமப்பது யார்?, மயங்காதவர் யார்?,

வீட்டுக்கு வீடு, களவும் காவலும், அவன் வந்த வழி, ஆண்டவனின் செல்வம் என இவர் எழுதிய சிறுகதைகள் நீண்ட பட்டியலில் அடங்குவனவாகும். குழந்தைகளுக்காக எழுதுவதிலும் வல்லவராகத் திகழ்ந்தார். சுமார் 40 கதைகள் குழந்தைகளுக்காக எழுதப்பட்டவை. பேசும் கிளி, அழுவானேன், குதிரை வியாபாரி, பணமும் பானையும், சிங்கக்கூண்டுப் போன்ற பல கதைகளும், 'விளையும் பயிர்' என்ற தலைப்பில் வெளிவந்த 13 கதைகளும் குழந்தைகளுக்கான படைப்புகளில் குறிப்பிடத்தக்கவையாகும். ஏராளமான புத்தகத் திறனாய்வு, திரைப்படத் திறனாய்வு, நாடகத் திறனாய்வு ஆகியன தமிழிலும் இந்தியிலும் பிரபல வார, மாத இதழ்களிலும் இடம் பெற்று வந்துள்ளன. 'காசி யாத்திரை' என்ற நூல் இவரது எழுத்துலக அனுபவத்திற்குச் சிறந்த சான்றாகும்.

### மொழிபெயர்ப்புச் சிறுகதைகள்

> தமிழில் எவ்வளவு சிறுகதைகள் எழுதி வந்தேனோ, அதற்கும் மேலாக என்றுகூட சொல்லலாம், அவ்வளவு சிறுகதைகள் இந்தி மொழியிலும், தமிழிலிருந்து சிறந்த சிறுகதைகளை இந்தியில் மொழிபெயர்த்தும், இந்தி, வங்காளி, குஜராத்தி, உருது, தெலுங்கு, ஆங்கிலம் ஆகிய மொழிகளி லிருந்தும் மொழிபெயர்த்திருக்கிறேன்[3]

என்று கூறுகிறார் வீழிநாதன். சுமார் 50 நூலாசிரியர்களின் படைப்புகளை மொழிபெயர்த்துள்ளார். கமல் ஜோஷி, பிரேம்சந்த், சுதர்சன், தாராசங்கர் பானர்ஜி, விமல்மித்ரா, கே.எம். முன்ஷி, விபூதிபூஷன் முகோபாத்யாயா, பரசுராம், நரேந்திரநாத் மித்ரா, பீதாந்த பட்டேல் போன்ற புகழ்பெற்ற இந்தி, வங்காளி, குஜராத்தி மொழிப் படைப்பாளிகளின் சிறுகதைகளை வீழிநாதன் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

சுதந்திரக்கோயில், தோல்வியில் வெற்றி, பழைய வேலைக் காரன், உயிர்ப்பிச்சை, பிரமன் படைப்பிலே, ஆயிரத்தொரு கவிஞர்கள், ஊர்வலம், முத்தண்ணா, உள்ளம் கவர்ந்தவள், கற்பனையும் காரிகையும், நிழலும் வெயிலும், உள்ளத்தரசி, நர்ஸ் நிர்மலா, ஓடும் ரயிலில், நாலாம்பிறை, இடைக்கால மனைவி, ஸ்டேஷன் மாஸ்டர், வினோத விருந்து, மூன்று குடும்பங்கள், மூன்று முடிச்சுகள், இழந்த நாணயம், மூன்றாவது ஆட்டம், அந்தரங்கக் காரியதரிசி, ஜன்னல், பயங்கர ஆயுதம், கல்லும் கனியும், மனைவி, கல் கரைந்தது, முள்ளும் மலையும், பழையனூர்ப்பித்தன், அதிர்ச்சி, ஆவிகள் விஜயம், யாருக்கு வரவேற்பு, மூன்று ரொட்டிகள், பலே வரவேற்பு, ரமாதேவியின் உயில், வீடும் வாழ்வும், இதய அமுதம், ரகசியம்

போன்ற பல சிறுகதைகள் வீழிநாதனின் மொழிபெயர்ப்பில் வெளி வந்துள்ளன. இந்திமொழி எழுத்தாளர்களான பிரேம்சந்த், சுதர்சன், கே.எம். முன்ஷி, கமல்ஜோஷி ஆகியோரின் படைப்புகள் வீழிநாதனின் மொழிபெயர்ப்பில் மிகுதியாக உள்ளன.

### சிறுகதைத் தொகுப்பு நூல்கள் (மொழிபெயர்ப்பு)

பஞ்சாபியிலும், உருதுவிலும் வெளிவந்த பல சிறுகதைகளை மொழிபெயர்த்துச் சிறுகதைத் தொகுதிகளாக வீழிநாதன் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன. 'கதாபஞ்சாப்' என்ற நூலைப் 'பஞ்சாபிக் கதைகள்' என்ற பெயரிலும் 'உர்து கஹானியன்' என்ற சிறுகதைத் தொகுப்பை 'உர்தூக்கதைகள்' என்ற தலைப்பிலும் வீழிநாதன் மொழிபெயர்ப்பில் நேஷனல் புக் டிரஸ்ட் வெளியீடாக வெளிவந்துள்ளன. இக்கதைத் தொகுப்புகள் பஞ்சாபி, உருது மொழி எழுத்தாளர்களையும், அவர்களுடைய படைப்பின் தன்மையையும் அறிந்து கொள்ளத் துணைபுரிவதாகும். கே.எம். முன்ஷியின் இந்திமொழிச் சிறுகதைகளைத் தொகுத்துக் 'குலப் பெருமை' என்ற பெயரில் வீழிநாதன் மொழிபெயர்ப்பில் நூலாக வெளிவந்துள்ளன.

### ரா. வீழிநாதனின் மொழிபெயர்ப்பு நாவல்கள்

இந்தி, குஜராத்தி, வங்கம், உருது, பஞ்சாபி, ஒரியா ஆகிய மொழிகளில் வெளிவந்த நாவல்களைத் தமிழில் மொழிபெயர்த்து தமிழ் இலக்கிய உலகிற்கு வளம் சேர்த்துள்ளார் வீழிநாதன். இம்மொழிகளில், புகழ்பெற்ற எழுத்தாளர்களின் படைப்புகளைத் தேர்வு செய்து, மொழிபெயர்த்து முதலில் தொடர் கதைகளாக, தமிழ் இதழ்களில் இடம்பெறச் செய்துள்ளார். காவேரி, நவயுவன், சக்தி போன்ற அக்காலத்தில் வெளிவந்த இதழ்களில் 1946 ஆம் ஆண்டு முதல் தொடர்கதைகளாக இடம்பெற்றன. இக்கதைகள் வாசகர்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்றதால் பின்பு நூல்களாக வெளிவந்துள்ளன. பல படைப்புகள் இன்னும் நூல் வடிவம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பிரேம்சந்த், சுதர்சன், சந்திரஜோதி, விசுவம்பரநாத் கௌசிக், பகவதி சரண் வர்மா, ரமண்லால் வசந்தலால் தேசாய், கே.எம். முன்ஷி, காளிந்தி சரண் பாணி கிரஹி, விமல்மித்ரா, குல்ஷான் நந்தா, ஆகியோரின் நாவல்கள் வீழிநாதன் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன.

### இது என்ன உலகம்?

இந்தியில் சந்திரஜோஷி எழுதிய 'கிருணாமயி' என்ற நாவல் 'இது என்ன உலகம்' எனும் பெயரில் காவேரி இதழில் 1946 ஆம் ஆண்டு தொடர்கதையாக இடம்பெற்றது. இக்கதை இன்னும் நூல்

வடிவம் பெறவில்லை. பிரேம்சந்த் காலத்திய முன்னணி எழுத்தாளர்களில் ஒருவரான சுதர்சன் என்ற இந்தி எழுத்தாளரின் 'தோ மித்ர தே,' 'ஃபரூண் கா பிரேம்,' 'சதாசூக்,' 'பரிவர்த்தன்' என்ற நான்கு நாவல்களும் முறையே 'இரு நண்பர்கள்', 'பாதுஷாவின் காதல்', 'அருவிக்கரை ஆசிரமம்', 'மாற்றம்' எனும் பெயர்களில் கதைத் தொடராக வீழிநாதன் மொழிபெயர்ப்பில் கல்கியில் இடம்பெற்றுப் பின்பு நூல்களாக வெளிவந்துள்ளன. 'பாதுஷாவின் காதல்' கல்கியில் இடம்பெற்ற முதல் மொழிபெயர்ப்பு நாவல் தொடர் எனும் சிறப்பைப் பெற்றது. 1950 களில் இருநண்பர்கள், பாதுஷாவின் காதல், அருவிக்கரை ஆசிரமம் என்ற மூன்று நாவல்களும் அமுத நிலைய வெளியீடாக வெளிவந்துள்ளன.

> **இரு நண்பர்கள் - ஒரு பெண்மணி இவர்களின் உள்ளப் போராட்டங்களை அபூர்வமாகச் சித்திரிக்கும் உணர்ச்சிமிக்கக் கதை இது. கதையினைச் சுவை குன்றாதபடி எளிய சரளமான நடையில் வீழிநாதன் மொழிபெயர்த்திருக்கிறார்.[4]**

### பாதுஷாவின் காதல்

இது இந்தி மொழிக் கதையாக இருந்தாலும், எகிப்து நாட்டின் சூழலைப் பின்னணியாகக் கொண்டது.

> **எகிப்து தேசத்திய பரூன் ஓர் அடிமைப் பெண்ணைக் காதலிக்கும் கதை இது. அல்லது அவன் ஓர் அடிமைப் பெண்ணின் காதலில் குறுக்கிடும் கதை என்றும் சொல்லலாம். கதையில் கதாநாயகனே, கதையின் வில்லனாகவும் விளங்குகிறான். அவன் வில்லனா யிருந்தும் நாம் அவன் மீது கடைசியில் அனுதாபங் கொள்கிறோம்.**
>
> **பிற பாஷைகளிலிருந்து மொழிபெயர்க்கும் கதைகளைப் பற்றிப் புகழ்ந்து கூறும்போது மூலத்தின் சுவை குன்றாமல் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது என்று கூறுவது வழக்கம். ஆனால் ஸ்ரீ வீழிநாதன் மூலத்தின் சுவை அதிகரிக்கும் விதத்தில் கதையை எழுதியிருக்கிறார். மூலத்தின் கதையை அப்படியே மொழி பெயர்த்ததோடு மட்டுமல்லாமல் சொந்தமாகச் சில விஷயங்களைச் சேர்த்தும் கதையை விரிவாக்கி அழகுப் படுத்தியிருக்கிறார்.[5]**

நேர் மொழிபெயர்ப்பாக இருந்தால் படிக்கும் சுவையைக் குறைத்துவிடும் என்பதால் இத்தகைய உத்தியை மொழிபெயர்ப்பில் கையாண்டுள்ளார் வீழிநாதன்.

'அருவிக்கரை ஆசிரமம்'

இந்தி மொழியில் 'சதாசூக்' எனும் துறவியின் பெயரில் இடம் பெற்றது.

> **இந்நாவல் அருவிக்கரை ஆசிரமத்தில் உள்ள ஒரு துறவியின் கதை இது. அத்துறவியின் பெயரை வழங்கினால் தமிழில் பொருத்தமாக இருக்காதென 'அருவிக்கரை ஆசிரமம்' என்ற தலைப்பில் இக் கதையை மொழிபெயர்த்தேன்[6]**

என்று கூறுகிறார் மொழிபெயர்ப்பாளர் வீழிநாதன்.

**'யசோதரா'**

விசும்பரநாத் கௌசிக் எழுதிய 'பிகாரினி' (பிச்சைக்காரி)யை வீழிநாதன் 'யசோதரா' எனப் பிச்சைக்காரியின் பெயரையே தலைப்பாக வழங்கியுள்ளார்.

> **இனவெறி எப்படி குடும்பங்களையும் தனிநபர்களின் வாழ்க்கையையும் அடியோடு நாசம் செய்துவிடுகிறது என்பதை விளக்கும் கதை இது. இந்தக்கதை ஹிந்தியில் எப்படி இருக்கிறதோ எனக்குத் தெரியாது. தமிழில் உள்ளத்தைத் தொடும்படி திரு. வீழிநாதன் எழுதி யிருக்கிறார். கதையின் ஆரம்பத்தில் பிச்சைக்காரி யாகத் தோன்றி நடுவில் ஜமீன்தாரினியாகி, கடைசியில் மீண்டும் பிச்சைக்காரியாகவே. ரயிலேறிவிடும் யசோதராவின் சோகக்கதை பல சிறப்பு அம்சங் களைக் கொண்டது. தமிழ் மக்கள் இதன் கதைச் சிறப்புக்காக மட்டுமன்றி ஆசிரியர் வீழிநாதனின் இனிய தமிழ் நடைக்காகவும் படிப்பார்களென்று நம்புகிறேன். யசோதரா நமது இலக்கிய மொழி பெயர்ப்புப் பிரிவில் உன்னதமான இடத்தைப் பெறவல்லது. ஆசிரியர் வீழிநாதனின் இடையறா இலக்கியத் தொண்டென்னும் சங்கிலியில் இது மற்றுமொரு சிறந்த இணைப்பு[7]**

என்ற சாண்டில்யனின் முன்னுரை இந்நூலின் சிறப்பை உணர்த்து வதாகும்.

> **கல்கி அவர்கள் இதனை மொழிபெயர்க்கும் பொறுப்பை என்னிடமே விட்டார்கள். இப்பணியை நான் மகிழ்ச்சியுடன் மேற்கொண்டேன் என்றாலும், மொழிபெயர்ப்புத் துறையில் உள்ள அனுபவக் குறைவு நமக்கு வெற்றி தருமா என்று தயங்கினேன். என் தயக்கத்தை நீக்கி, எந்த எந்த இடங்கள் தமிழ்ச்**

> *சூழலுக்கு ஒவ்வாதவை, எப்படி மொழிபெயர்த்தால் அவை நன்றாக அமையும் என்பதை எல்லாம் எடுத்துக் கூறி அவர் அளித்த ஊக்கம் காரண மாகவே 'பிகாரினி' 'யசோதரா'வாகித் தமிழில் பவனி வந்தாள்.... எனது மொழிபெயர்ப்பை அப்பட்டமான தமிழாக்கம் என்று கூறமுடியாது. பல இடங்களில் சுருக்கிப் பெருக்கி எழுதப்பட்டிருக்கும் இந்த நவீனத்தில் மூல ஆசிரியரின் கருத்து ஓங்கி நிற்கவே இயன்றவரை முயன்றிருக்கிறேன்*[8]

என்று இம்மொழிபெயர்ப்பைப் பற்றிக் குறிப்பிடுகிறார் வீழிநாதன். ஒரு நவீனத்தை மொழிபெயர்ப்பாளர் எப்படி மொழியாக்கம் செய்ய வேண்டும் என்று விரும்புகிறாரோ, அவ்வாறே அப்பெயர்ப்பு அமையும் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும்.

*'சந்திரஹாரம்'*

பிரேம்சந்த்தின் 'கபன்' தமிழில் 'சந்திரஹாரம்' என்ற பெயரில் தமிழில் கல்கியில் தொடராக வீழிநாதன் மொழிபெயர்ப்பில் வெளிவந்தது.

> *பெண்களின் நகை ஆசையைப் பற்றிக் கூறும் கதை இது. இக்கதை இந்தியில் நாடகமாக அரங்கேறும் பொழுது 'சந்திரஹாரம்' என்ற பெயரையே பிரேம்சந்த் வழங்கியதாக வீழிநாதன் கூறுகிறார்.*[9]

*'சித்திரலேகா'*

இந்தி எழுத்தாளரான பகவதி சரண் வர்மாவின் படைப்பு களில் தலைசிறந்தது 'சித்ரலேகா' எனும் நாவல். வீழிநாதனின் மொழிபெயர்ப்பிலும் தலைசிறந்தது 'சித்ரலேகா' என்று குறிப்பிடலாம்.

> *மனித நேயமே அனைத்திலும் உயர்ந்தது என்பதில் உறுதியான நம்பிக்கை கொண்டவர் பகவதி சரண் வர்மா. இலக்கிய உலகில் பகவதி சரண் வர்மாவின் புகழுக்குப் புகழ் சேர்த்த நாவல்கள் பல. 'டேடே மேடே ராஸ்தே' (கோணல் மாணலான பாதைகள்), 'பூலே பிஸரே சித்ர', (சிதைந்த ஓவியங்கள்) என்ற நாவல்கள் பகவதி சரண் வர்மாவை இலக்கிய உலகில் சுடர்விடும் நட்சத்திரங்கள் ஆக்கிவிட்டன. 'பூலே பிஸரே சித்ர' என்ற நாவல் சாகித்திய அகாதெமிப் பரிசைப் பெற்றது என்றாலும் 'சித்ரலேகா' என்ற நாவல்தான் பகவதி சரண் வர்மாவை இலக்கிய உலகில் பூரணச்சந்திரன் போல் பிரகாசிக்கும்படி செய்தது. சித்ரலேகா உலக மொழிகள் பலவற்றில்*

> மொழிபெயர்க்கப்பட்டது. ஹிந்தி மொழியில் மட்டுமே ஏராளமான பதிப்புகள் வெளிவந்தன. சித்ரலேகா இரண்டு முறை திரைப்படமாகக் கூட வெளிவந்தது. சித்ரலேகா நாவலில் கிடைத்த சன்மானத் தொகையில் பகவதி சரண் வர்மா தமக்கென்று பெரிய பங்களா கட்டினார். அந்தப் பங்களாவுக்குச் 'சித்ரலேகா' என்ற பெயரையும் சூட்டி மகிழ்ந்தார்"[0]

இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த இந்த நாவல் தமிழிலும் சிறந்த வரவேற்பைப் பெற்றுள்ளது. ஒரு பிராமண விதவை அறிவிலும் அழகிலும் சிறந்தவள். அரண்மனை நாட்டியக்காரியாக இடம் பெறுகிறாள். தனது அழகினாலும் தத்துவ அறிவினாலும் பீஜகுப்தன் என்ற மன்னனை வென்று அவனது நாயகியாகிறாள். பின்பு குமாரகிரி எனும் பெரும் யோகியையும் தனது வலையில் வீழ்த்துகிறாள். இறுதியில் தன் தவறை உணர்ந்து மனம் திருந்தி பீஜகுப்தன் மன்னனிடம் வந்து சேருகிறாள். தத்துவ நோக்கில் அமைந்துள்ள உரையாடல்கள் இக்கதையின் சிறப்பம்சமாகும். 'சித்ரலேகா' நாவலைத் தமிழாக்கம் செய்யும் உரிமையை வீழிநாதன் தனது பதினெட்டாவது வயதிலேயே பகவதி சரண் வர்மாவிடம் பெற்றார். இம்மொழிபெயர்ப்பு நேரான மொழிபெயர்ப்பு என்பதைக் காட்டிலும் தமிழ் வடிவாக்கம் எனக் கூறலாம். ஏனெனில் இக்கதையின் இறுதி பத்து அத்தியாயங்கள் இந்தி மூலக்கதைக் கருவை மையமாக வைத்து வீழிநாதன் தனது கற்பனைகளையும் சேர்த்து எழுதிச் சென்றுள்ளார். தமிழில் இக்கதையை மேலும் மெருகூட்டி வாசகர்கள் விரும்பிப் படிக்கும் நோக்கில் இவ்வாறு எழுதியுள்ளார்.

**'மனோரமா'**

இந்தியில் ஆர்.வி. தேசாய் எழுதிய 'பத்ரலாலா' எனும் நாவலைத் தமிழில் 'மனோரமா' என்ற பெயரில் வீழிநாதன் மொழிபெயர்த்துள்ளார். முதலில் கல்கியில் தொடராக வெளிவந்து, 1967 ஆண்டில் நூலாக வெளிவந்தது. இது நாடக வடிவமாக்கப்பட்டு சென்னை வானொலியிலும் ஒலிபரப்பாகியுள்ளது.

> பெண் உள்ளத்தின் நுண்ணிய பண்புகளைத் தெள்ளென விளக்கும் இந்த நவீனத்தின் தலைப்பை 'மனோரமா' என்று மாற்ற எனக்குத் துணிவு வழங்கியவர்கள் ஆதி கவி வால்மீகியும் மகாகவி காளிதாசரும் ஆவர். இராமாயணத்தை இயற்றிய ஆதிகவி சீதையின் மகத்தான சரிதத்தை வடிப்ப தாகவே கூறியிருக்கிறார். மகாகவி காளிதாசரோ

பெண்ணின் பெயருக்கே ஓர் இனிமை உண்டு என்னும் கோட்பாட்டைப் பின்பற்றித் தமது சிறந்த நாடகத்துக்குச் 'சாகுந்தலம்' என்று பெயரிட்டு வழிகாட்டியிருக்கிறார்.

கல்கி பத்திரிகையில் தொடராக வெளிவந்த பொழுது 'மனோரமா'வை நேயர்கள் பெரிதும் விரும்பினார்கள் என்பதற்கு அத்தாட்சி அதை நாடகமாக்கி மேடையேற்ற வேண்டும் என்று பலரும் விரும்பியதாகும். தென்கோடியிலிருந்து வடகோடி வரை பல இடங்களில் மேடையேறிய மனோரமாவுக்குத் தமிழ் மண்ணின் மணம் வீச நாடக உருவம் தரும் பணியை நான் ஏற்றேன். அதோடு இந்தியிலும் நாடக உருவம் கொடுக்க எனக்கு அரியதொரு வாய்ப்பு கிட்டியது[11]

என்று இம்மொழிபெயர்ப்பின் முக்கியத்துவத்தையும், வரவேற்பையும் வீழிநாதன் குறிப்பிட்டுள்ளார்.

### 'கோகிலா'

ஆர்.வி. தேசாய் எழுதிய 'கோகிலா' என்ற நாவல் தமிழிலும் 'கோகிலா' என்ற பெயரில் வீழிநாதன் மொழிபெயர்ப்பில் கல்கியில் 1954 – 1955 இல் ஒரு வருடம் தொடர் கதையாக இடம் பெற்றுள்ளது. பொது உடைமைவாதியாகத் திகழும் ஜகதீஷ் என்ற பத்திரிகையாளர் கதாபாத்திரம் இந்தியில் பெரும் வரவேற்பைப் பெற்றது. தமிழிலும் வாசகர்களின் பாராட்டுதல்களைப் பெற்றன.

### இன்பத்தென்றல்

இந்தியில் குல்ஷன் நந்தா எழுதிய 'பஃமவர்' என்ற காதல் கதையை வீழிநாதன் 'இன்பத்தென்றல்' எனும் தலைப்பில் மொழிபெயர்த்து கல்கியில் 1975-76ஆம் ஆண்டில் தொடராக இடம்பெறச் செய்துள்ளார்.

### இன்ஸ்பெக்டர் ராய்

இந்தியில் கே.எம். முன்ஷி எழுதிய நாவல் இது. பழுத்த அரசியல்வாதியும் நிருவாகத் திறமைமிக்கவருமான கே.எம்.முன்ஷி ஒரு சிறந்த இலக்கியப் படைப்பாளர். சுதந்திரப் போராட்டத்தின் பொழுது ஆங்கிலேய அரசின்கீழ்ப் பணியாற்றும் இன்ஸ்பெக்டர் ராய் சத்தியாக்கிரகி, போராட்ட வீரர் தினேஷ் இருவருக்கு மிடையே நிலவும் உளப்போராட்டத்தைச் சித்திரிப்பதுடன், துப்பறியும் நாவலாகவும் உள்ளது. 'இன்ஸ்பெக்டர் ராய்' எனும் பெயரிலேயே கல்கியில் இடம் பெற்றது. இதைப்போலவே

வங்கமொழியில் வெளிவந்து பின், விமல் மித்ராவின் இந்தி மொழிபெயர்ப்பில் வெளிவந்த 'கவா நம்பர் தீன்' எனும் துப்பறியும் கதையைத் தமிழில் வீழிநாதன் 'சாட்சி நம்பர் மூன்று' எனும் பெயரில் கல்கியில் வெளியிட்டுள்ளார். ஒரிய மொழியில் வெளி வந்து பின்பு இந்தியில் 'காளிந்தி சரண் பாணி கிரஹி' வழங்கிய 'மாட்டின் மனிஷ்' எனும் நாவலை 'மண்பொம்மை' எனத் தமிழில் வீழிநாதன் மொழிபெயர்த்துள்ளார். இந்நாவல்கள் தவிர, 'தீன் பஞ்சாபி நாடக்' என்ற நாடக நூலை 'மூன்று பஞ்சாபி ஓரங்க நாடகங்கள்' என்ற பெயரில் மொழிபெயர்த்துச் சாகித்திய அகாதெமி வெளியீடாக வெளிவந்துள்ளது. மேலும் 'பஞ்சாபி ஏகான்கி' என்ற நூலைப் பஞ்சாபி ஓரங்க நாடகங்கள் எனும் பெயரில் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். ஆச்சார்ய நரேந்திர தேவ்வின் 'பௌத்த தர்ம தரிசனம்' என்ற புத்தரின் தத்துவத்தை விளக்கும் ஓர் அரிய நூலை வீழிநாதன் மொழிபெயர்த்து வெளி யிட்டுள்ளார். இந்தியில் ஸ்ரீ விட்டல்தாஸ் ஜெராஜானி எழுதிய 'காதி கி கஹானி' என்ற நூலை வீழிநாதன் 'கதரின் கதை' என்ற பெயரில் மொழிபெயர்த்துள்ளார். சென்னை நகரக் கதர் அபிவிருத்தி கூட்டுறவுச் சங்க வெளியீடாக இந்நூல் வெளிவந்துள்ளது.

வீழிநாதன் ஒரு படைப்பாளியாக விளங்கிய போதிலும் 200க்கும் மேற்பட்ட சிறுகதைகள், 3 சிறுகதைத் தொகுதிகள், 15 நாவல்கள், 2 நாடக நூல்கள், வரலாறு, அறிவியல் தொடர்பாக 2 நூல்கள் ஆகியவற்றை மொழிபெயர்த்துத் தமிழ் வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தியுள்ளார்.

## இந்தி மொழியில் தமிழ் படைப்புகள்

தமிழில் சிறந்து விளங்கும் படைப்பாளர்களின் படைப்புகளை இந்தி மொழியினருக்கு அறிமுகப்படுத்தும் பணியில் பெரிதும் ஈடுபாடு கொண்டு வீழிநாதன் செயல்பட்டுள்ளார். கல்கியின் 'சோலைமலை ராஜகுமாரி' நாவலை, 'சோலைமலை கி ராஜகுமாரி' என்றும், 'பார்த்திபன் கனவு' என்ற நாவலைப் 'பார்த்திமவ் க சப்னா' என்றும், 'அலையோசை' என்ற நாவலை 'லஹரான் கி அவாஜ்' என்றும், இந்தியில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். இதில் 'அலையோசை' (லஹரான் கி அவாஜ்) இந்தி மொழிபெயர்ப்புக்காக வீழிநாதன் பரிசு பெற்றார். ஜெகசிற்பியனின் 'ஜீவகீதம்' என்ற நாவலைப் 'பஹர் க அத்மி' என்ற பெயரில் வீழிநாதன் மொழிபெயர்த்துள்ளார். ஜெயகாந்தனின் 'ஜெய ஜெய சங்கர' இராஜாஜியின் 'பஜகோவிந்தம்' இதே பெயர்களில் இந்தியில் மொழிபெயர்த்துள்ளார். இராஜாஜியின் 'நவீன உத்தரகாண்டம்' அவரே கேட்டுக்கொண்டதன் பெயரில் வீழிநாதன் இந்தியில் வழங்கியுள்ளார். என். சிதம்பர சுப்பிரமணியம்

எழுதிய 'இதயகீதம்' 'ஹிருதய நாடு' என்ற பெயரிலும், நா. பார்த்தசாரதியின் 'சமுதாய வீதி' 'ய கலி பிகாவ் நஹீன்' அதாவது 'இந்த தெரு விலைக்கில்லை' என்ற பொருளில் வெளிவந்துள்ளது. இவை இரண்டும் சாகித்திய அகாதெமி வெளியீடாகும். தி. ஜானகி ராமனின் 'வடிவேலு வாத்தியார்' அதே பெயரிலும், பி.எஸ். ராமையாவின் 'பதச்சோறு', 'கசௌளட்டி' என்ற பெயரிலும் வீழிநாதன் மொழி பெயர்த்துள்ளார். இவை தவிர, சுலப 'இந்தி போதினி' 'வாணி இந்தி போதினி' 'இந்தி கற்றுக்கொள்ளுங்கள்' என்ற நூல்களையும் வீழிநாதன் எழுதியுள்ளார்.

> **வீழிநாதன் இந்தியில் தமிழ் எழுத்தாளர்களின் சிறுகதைகளை மொழிபெயர்த்து இந்திப் பத்திரிகை களில் வெளிவருமாறு செய்துள்ளார். அவை 'சப்தஹிக் இந்துஸ்தான்' 'தர்மயுக்', 'அஜ்', 'அஜ்கல்', 'நவபாரத் டைம்ஸ்', 'நவநீத்' 'சாரிகா', 'சரிதா' 'காதம்பரி', 'கல்பனா', 'ராஷ்ட்டி பாரதி' ஆகிய இந்தி மொழி இதழ்களில் வெளிவந்துள்ளன. கி.ரா. எம்.வி. வெங்கட்ராமன், பி.எஸ். ராமையா, கல்கி, புதுமைப் பித்தன், நா. பார்த்தசாரதி, ஜெகசிற்பியன், அசோக மித்திரன், கி.வா.ஜ. ஆகியோரின் படைப்புகள் இப்பத்திரிகைகளில் வீழிநாதனின் இந்தி மொழி பெயர்ப்பில் இடம்பெற்றன. இந்தி மொழியிலும் இவர்களின் சிறுகதைகள் நல்ல வரவேற்பைப் பெற்றதாகக் கூறுகிறார் வீழிநாதன்.[12]**

இவையல்லாமல் தமிழிலக்கியச் சிறப்பை எடுத்துக்கூறும் வகையில் இந்தி மொழியில் 'முத்தொள்ளாயிரம்' பற்றிய கட்டுரைகள், தமிழில் நாவல்கள், 'தமிழில் சிறுகதைகள்' ஆகிய தலைப்புகளில் எழுதி வந்துள்ளார். ஆண்டாள், மாணிக்கவாசகர் சிறப்புப் பற்றியும் இந்தி மொழியில் கட்டுரைகளாக எழுதி வந்துள்ளார். சிலப்பதிகாரக் கதையை மையமாக வைத்து இந்தியில் 'பஜ் யூட்டி பாயெலியா' (சிலம்பு ஒலித்தது) எனும் தலைப்பில் வெளிவந்துள்ள வெளியீடு இவரது இலக்கியப் பணிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். 'மரகத மாலை காதலர்களைப் பிரித்து விடும்' என்ற கருத்தை மையமாகக் கொண்டு கண்ணகியிடம் மரகதமாலை இருக்கும் பொழுது கோவலனைப் பிரித்தது, இறுதியில் கௌசிகன் என்னும் முனிவரிடம் அம்மாலை சேர்ந்த பொழுது நான் பிரம்மச்சாரி; இம்மரகதமாலை தன்னிடமே இருக்கட்டும் என்று வைத்துக் கொள்வதாக இக்கதையை அமைத்துள்ளார். 1975 க்குப் பிறகு வீழிநாதன் எழுதிய இக்கதை 1995 இல் இந்தி மொழியில் வெளிவந்துள்ளது.

## மொழிபெயர்ப்பாளன் இரண்டாந்தரக் குடிமகனாகக் கருதப்படுகிறான்

படைப்பாளிக்குரிய பெருமையும் சிறப்பும் மதிப்பும் மொழிபெயர்ப்பாளனுக்குத் தமிழுலகில் கிடைப்பதில்லை என வீழிநாதன் மொழிபெயர்ப்பு பிரச்சினைகள் (ஏப். 1995 மஞ்சரி ப.25) குறித்து எழுதும்போது குறிப்பிட்டுள்ளார்.

> **மொழிபெயர்ப்பாளன் இரு மொழிகளிலும் தேர்ந் தவனாக இருக்க வேண்டும். சொல்வளம் கொண்ட வனாக இருக்கவேண்டும். அதோடு சொற்களின் உயிர்நாடியை உணர்ந்திருப்பவனாகவும் இருக்க வேண்டும். மூல ஆசிரியன் தன் சக்திக்கு ஏற்ப அறிவாற்றலைக் காட்டுகிறான். கற்பனைச் சிறகு கட்டிக்கொண்டு பறக்கிறான். மொழிபெயர்ப்பாளன் மூல நூலாசிரியனுக்கும் ஒரு படி மேலே நின்றால்தான் வெற்றிபெற முடிகிறது. இப்படி இரட்டிப்புப் பொறுப்புக் கொண்ட அவன் கலையுலகில் இரண் டாந்தரக் குடிமகனாகவே கருதப்படுகிறான். இது அவனது சாபக்கேடு**

என்று குறிப்பிடுகிறார் வீழிநாதன். பல மொழிபெயர்ப்பாளர்களின் அனுபவக் கருத்து இதுவே.

மொழிபெயர்ப்புப் பணிக்குச் சொல்லாட்சி மிகவும் முக்கியமானதாகும். இன்று கலைத்துறையிலும், அறிவியல் துறையிலும், மற்றும் சமூகப் பொருளாதாரத் துறையிலும் பல புதிய புதிய பிரிவுகள் தோன்றி வளர்ந்து கொண்டிருக்கின்றன. குறிப்பாக அறிவியல் சொற்களைத் தமிழாக்குவதில் பல முறைகள் கையாளப்படுகின்றன. அறிஞர் வீழிநாதன் இத்தகைய சிக்கலை எவ்வாறு கையாளலாம் என்பதைப் பற்றி ஒரு குறிப்பு வழங்கியுள்ளார்.

> **எல்லாம் தமிழ், எல்லாம் ஹிந்தி என்ற ஆர்வத்தில் அறிவியல் பற்றிய சொற்களை எந்த மொழி முன் வந்து தந்ததோ, அந்த மொழியிலேயே வைத்துக் கொள்வது நல்லது. உதாரணத்துக்குக் 'கிரேன்' என்னும் சொல்லை எடுத்துக்கொள்வோம். கொக்குப் போல ஒரு பொருளை ஓரிடத்திலிருந்து எடுத்து இன்னோர் இடத்தில் வைக்கும் பணியைச் செய் வதினால், அதைக் கொக்கு என்றோ 'பகுலோ' என்றோ மொழிபெயர்த்து விடக் கூடாது.**
>
> (மஞ்சரி. ஏப்.1995, ப.26)

சொல்லும் பொருளும் முரண்படாமல் இசைவாக இருக்க வேண்டும் என்பதை ஒரு எடுத்துக்காட்டுடன் விளக்குகிறார் வீழிநாதன்.

> **மொழியாக்கம் செய்பவர்கள் இருமொழியில் புலவர்களாக இருக்கவேண்டும். சொற்களின் உயிர் நாடியை உணர்ந்தவர்களாக இருக்கவேண்டும். இதைக் கம்பர் நமக்கு எவ்வளவு அழகாகக் காட்டிக் கொடுக்கிறார். எங்கும் எல்லாமாய் நிறைந்திருக்கும் இறைவனின் உறைவிடத்தைக் கூறும் இடத்தில் 'அணுவைச் சத கூறிட்ட கோணினும் உளன்' என்கிறார். அதாவது அணுவென்னும் சமஸ்கிருதச் சொல்லை அப்படியே வைத்துக் கொண்டு 'பரமணு' என்னும் சொல்லைக் கையாள்கிறார். படைப்பிலக்கியத்தில் அறிவியல் இலக்கியத்தை அழகுற நுழைத்துத் தமிழின் வளம் காட்டினார் கம்பர். எனவே தான் 'கம்பசித்திரம்' என்ற புகழ்மொழி பழமொழியாக இன்றும் நிலவுகிறது**
>
> ***(மஞ்சரி ஏப்.1995, ப.25)***

என்று சுட்டிக்காட்டியுள்ளார். மொழிபெயர்ப்பில் சொல் திறம் அறிந்து மொழிபெயர்த்தால் அது வாசகர்களிடையே சிறந்த மொழிபெயர்ப்பாக விளங்கும் என்பதை நமது அனுபவத்தின் மூலம் எடுத்துக்காட்டியுள்ளார் ஆர். வீழிநாதன்.

### வீழிநாதனுக்குக் கிடைத்த பரிசுகள்

வீழிநாதன் தமிழ் - இந்தி மொழிக்கு ஆற்றியுள்ள இலக்கியப் பணிக்காக அவருக்குப் பல்வேறு சங்கங்களும், அமைப்புகளும், பரிசுகள் வழங்கியுள்ளன. தமிழ் எழுத்தாளர் சங்கம் 1962 ஆம் ஆண்டு இந்தி - தமிழ் மொழிக்கு ஆற்றியுள்ள இலக்கியப் பணிக்காக வீழிநாதனுக்குத் தங்கப்பதக்கம் வழங்கிப் பாராட்டியுள்ளது. 1975 ஆம் ஆண்டு நாக்பூரில் நடந்த முதல் விஸ்வ இந்தி சம்மேளன மாநாட்டில் இந்தி - தமிழ் இலக்கியப் பணிக்காக மரியாதை செய்யப் பட்டார். கல்கியின் 'அலை ஓசை' நாவலை இந்தி மொழியில் சிறந்த மொழிபெயர்ப்புக்காக இந்திய அரசின் கல்வி மற்றும் சமூக நலத் துறையினரால் வீழிநாதனுக்கு விருது வழங்கப்பட்டது. வித்வான் சுந்தர கிருஷ்ணமாச்சார்ய அறக்கட்டளைப் பரிசு வழங்கப்பட்டது. இவரது இந்திப் பிரச்சாரப் பணிகளுக்காக, சென்னை இந்திப் பிரச்சார சங்கம் வழங்கும் 'சன்மான்' பரிசும் இவருக்குக் கிடைத் துள்ளது. 1988 டிசம்பர் மாதம் நடந்த பிரயாகை இந்தி சாகித்திய சம்மேளன விழாவில் நினைவுப் பரிசும், 1990 ஆம் ஆண்டு லக்னோவில் நடந்த உத்திரப்பிரதேச இந்தி சமஸ்தான் விழாவில் ரூ. 10,000 பரிசும், 'சௌஹர்தா சம்மன்' விருதும் வழங்கப்பட்டுள்ளன.

இப்பரிசுகள் யாவும் வீழிநாதனின் இருமொழி இலக்கியப் பரிமாற்ற சேவையை முன்னிட்டு வழங்கப்பட்டவை என்பது தெளிவு.

"சென்றிடு வீரெட்டுத் திக்கும் – கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்"

நந்தமிழ் நாட்டு மகாகவி பாரதியின் இவ்வருள் வாக்கைப் பின்பற்றி நடக்கும் பேறு எனக்கு இளம் பிராயம் முதற்கொண்டே கிடைத்தது. இத்துறையில் உற்சாகமும் ஊக்கமும் ஊட்டி என்னை இறங்கப் பணித்தவர் பேராசிரியர் கல்கி.

ஆனால் எனக்கு ஒரு குறை. நம்மைச் சொந்தமாக எழுத விடாமல் இப்படி மொழிபெயர்க்கப் பணிக்கிறாரே என்று.

என் அகத்தின் கருத்தை ஒரு நாள் என் முகமே அவரெதிரெ எடுத்துக்காட்டிவிட்டது. அன்பு கலந்த முறுவலுடன் அவர் மகாகவி பாரதியின் வாக்கை மேற்கோளாகச் சுட்டிக்காட்டிச் சொன்னார்.

பாரதியின் இந்த வாக்கை நிறைவேற்றப் பல அன்பர்கள் முன்வந்தால்தானே நம் தமிழ் இலக்கியம் வளமுறும்? அறிஞர் தி.வெ. சாமிநாதசர்மா, ஸ்ரீ த.நா. குமாரசாமி போன்றவர்கள் பேரறிஞர்களின் சாத்திரங்களைத் தமிழில் தரவில்லையா? மொழிபெயர்ப்பு என்பது ஓர் அருங்கலை. அதைக் குறைவாக எண்ணாதே. நிறைவாக எண்ணி இப்பணியில் இறங்கு. அவையே உனக்குப் பெரும்புகழ் தேடித்தரும். வெவ்வேறு ஆசிரியர்களின் கருத்தைப் புரிந்துகொண்டு, நடையைப் புரிந்து கொண்டு அவற்றுக்கேற்பத் தமிழ்ப்படுத்து வதில் உள்ள சிரமத்தை நான் நன்கு உணர்வேன். இக்காரியத்தில் நீ வெற்றி கண்டு விட்டாயானால் நீ சொந்தமாக எழுதும்போது, அவ்வாசிரியர்கள் அனைவரும் படைப்புலகில் நின்று கொண்டு உனக்குக் கைகொடுத்து உதவுவார்கள். உனது எழுத்தும் மெருகு ஏறிச் சோபையுறும், உன் நலனில் அக்கறை கொண்டே இதை நான் சொல்கிறேன். அவரது உற்சாகமூட்டும் இந்த அருமையான உபதேசமே பல நவீனங்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் வாய்ப்பை எனக்கு அளித்தது[13]

என்று தனது மொழிபெயர்ப்பு அனுபவத்தைக் குறிப்பிட்டுள்ளார். மொழிபெயர்ப்பு எனும் அருங்கலையை மேற்கொள்பவர்களில் தொடர்ந்து பணியாற்றி வெற்றிபெற்றவர்கள் ஒருசிலரே. அவர்களுள் வீழிநாதன் தனித்துவம் மிக்கவர். அவருடைய இருமொழி இலக்கியப் பணி மொழிபெயர்ப்புலகில் என்றும் நிலைத்து நிற்கும்.

## குறிப்புகள்

1. மனோரமா, ரமண்லால் வசந்தலால் தேசாய் (தமி.), ரா. வீழிநாதன், சாரதி பிரசுரம், சென்னை 15, ப.1967, ப. III.
2. மேற்படி, ப. IV.
3. நேர்காணல், ரா. வீழிநாதன், சென்னை, நாள்: 28.6.95.
4. இருநண்பர்கள், சுதர்சன், (தமி.). ரா. வீழிநாதன், அமுத நிலையம் லிமிடெட், சென்னை-18, மு.ப. ஆகஸ்டு 1951, ப. IV.
5. பாதுஷாவின் காதல், சுதர்சன், (தமி.) ரா. வீழிநாதன், அமுத நிலையம் லிமிடெட், சென்னை, மு.ப. ஆகஸ்டு 1951, ப. IV.
6. நேர்காணல், ரா. வீழிநாதன், சென்னை, நாள். 3. 7. 95.
7. யசோதரா, ஸ்ரீ விசுவம்பரநாத் சர்மா 'கௌசிக்' (தமி.). ரா. வீழிநாதன், தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் லிமிடெட், சென்னை - 8, மு.ப. பிப். 1968, ப. 4.
8. மேற்படி, ப. 5 - 6.
9. நேர்காணல், ரா. வீழிநாதன், சென்னை, நாள்: 28.6.95.
10. ஓம்சக்தி (கட்.) பகவதி சரண் வர்மா, பிப். 1993, ப. 22 23.
11. மனோரமா, ரமண்லால், வஸந்த்லால் தேசாய் (தமி.) ரா.வீழிநாதன், சாரதி பதிப்பகம், சென்னை 15, பதி. 1967, ப. III.
12. நேர்காணல், ரா. வீழிநாதன், சென்னை, நாள்: 3.7.95.
13. குலப்பெருமை, கே.எம். முன்ஷி (தமி.) ரா. வீழிநாதன், பாரதி பதிப்பகம், சென்னை - 17, பதி. நவ. 1957, ப. IV.

# ரா. கிருஷ்ணையா

பிறமொழி இலக்கியங்களைத் தமிழில் அறிமுகம் செய்து தமிழ்ப் படைப்புலகில் ஒரு புத்துணர்வை ஊட்ட வேண்டும், அதன் மூலம் புத்தெழுச்சியும், விழிப்புணர்வும் பெற வேண்டும் என்ற சிந்தனையுடன் எழுதுகோலை ஏந்திய மொழிபெயர்ப்பாளர்களில் குறிப்பிடத்தக்க ஒருவர் ரா. கிருஷ்ணையா. இவர் தன்னை முழுமையாகக் கம்யூனிஸ்ட் கட்சியில் ஈடுபடுத்திக் கொண்டமையால் **'தோழர் கிருஷ்ணையா'** என்று சிறப்பிக்கப்பட்டவர். வழக்கறிஞராகத் தன் வாழ்வைத் துவக்கிய ரா. கிருஷ்ணையா தன்னுடைய அறிவாற்றலால் இலக்கியப் பணியில் குறிப்பாகக் கம்யூனிசத் தத்துவ விளக்கத்தை மக்களிடம் கொண்டு செல்லக்கூடிய அரசியல், தத்துவ நூல்களை, உருஷ்ய இலக்கியங்களைத் தமிழில் அறிமுகம் செய்வதில் முனைப்பாக ஈடுபட்டவர். மொழி பெயர்ப்புப் பணியில் 50 ஆண்டுக் கால அனுபவம் வாய்ந்தவர்.

ரா. கிருஷ்ணையா 26-2-1923ஆம் நாள் அன்றைய பிரெஞ்சு ஆளுகைக்குட்பட்ட காரைக்கால் அருகில் நெடுங்காடு எனும் சிறிய கிராமத்தில் பிறந்தார். தந்தையின் பெயர் ராமதாஸ், தாய் ராஜாமணி அம்மாள். கிருஷ்ணையா பிறந்ததும் தாய் ராஜாமணி அம்மாள் இறந்து விட்டார். இதனால் இவருடைய தாத்தா, பாட்டியின் அரவணைப்பில் வளர்ந்து வந்தார். திருவாரூரில் வழக்கறிஞராகப் பணிபுரிந்த இவருடைய தந்தை ராமதாஸ், தன் மகன் கிருஷ்ணையாவை மிகவும் அன்புடன் கவனித்து வந்தார்.

ரா. கிருஷ்ணையா தமது பள்ளிப்படிப்பை நாகையிலும், திருவாரூரிலும் முடித்தார். திருச்சி செயிண்ட் ஜோசப் கல்லூரியில் தமது கல்வியைத் தொடர்ந்தார். இம் மாணவப் பருவத்தில் கொள்கை யளவில் இவர் உள்ளத்தில் சில மாற்றங்கள் ஏற்படத் தொடங்கின. இக்காலத்தில் தந்தை பெரியாரிடம் நெருக்கமாயிருந்த கிருஷ்ணையாவின் உறவினர்களான சுப்பையா, நடராஜன் ஆகியோர் அவரைப் பெரியார் கொள்கையின் பால் கவர்ந்திழுத்தார்கள். இதனால் கிருஷ்ணையா சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் இயற்பியல் துறையில் பி.ஏ. படித்த போதும், பிறகு சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பொருளாதாரத் துறையில் எம்.ஏ. படித்த போதும் மாணவர் இயக்கங்களில் பங்கேற்றார். இக்காலக்கட்டத்தில் இந்தியாவெங்கும் பெரு வீச்சாகப் பரவிக் கொண்டிருந்த கம்யூனிசக் கொள்கையின் பால் ஈர்க்கப் பட்டார். தமது எம்.ஏ. படிப்பை முடித்த

பின்பு 1946ஆம் ஆண்டு முதல் எழுத்துப் பணியில் ஈடுபடத் தொடங்கினார். சொந்தமாகவும், ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்தும் அரசியல் கட்டுரைகளை எழுதி வெளியிட்டு வந்தார்.

1947-1948 ஆம் ஆண்டு சட்டக் கல்லூரியில் பி.எல். பட்டம் பெற்றுப் பின்பு ராவன், ரெட்டி ஆகிய மூத்த வழக்கறிஞர்களிடம் இரண்டு ஆண்டுகள் துணை வழக்கறிஞராகப் பணியாற்றி வந்தார். இக்காலக்கட்டத்தில் (1951-1952) தோழர் விஜய பாஸ்கரன் நடத்தி வந்த கம்யூனிசக் கொள்கைப் பிரச்சார ஏடான 'விடிவெள்ளி' எனும் வார இதழை கிருஷ்ணையா இணை ஆசிரியராக இருந்து ஓராண்டுக்காலம் நடத்தி வந்தார். 1953-1954ஆம் ஆண்டில் 'ஜனசக்தி' பத்திரிகைக் குழுவில் இருந்து பணியாற்றினார். அப்பொழுது தோழர்கள் ஆளவந்தார், ஆர்.கே. கண்ணன் ஆகியோரும் இந்த ஆசிரியர் குழுவில் பணியாற்றி வந்தனர். முழுமையாகக் கம்யூனிசத் தத்துவத்தில் ஈடுபாடு கொண்ட கிருஷ்ணையா கம்யூனிஸ்ட் கட்சியில் முழுநேர ஊழிய ராகவும் பணியாற்றி வந்தார். சென்னை மாகாணக் கட்சி கமிட்டி யிலும் உறுப்பினராகக் கிருஷ்ணையா செயல்பட்டு வந்தார். கம்யூனிஸ்ட் கட்சி 1950களில் இந்தியாவில் தடை செய்யப்பட்ட பொழுது கிருஷ்ணையா தலைமறைவாய் இருந்த தலைவர்களிடையே சென்று செய்திகளைச் சொல்லும் பணியைச் செய்து வந்தார்.

### சோவியத் நாடு இதழில் கிருஷ்ணையா

சோவியத் ரஷ்யாவின் செயல் திட்டங்களை, மக்களின் வாழ்க்கை முறைகளை, கல்வி மற்றும் இலக்கியச் செய்திகளை உலகமெங்கும் பல மொழிகளில் கொண்டு செல்லத் திட்டமிட்டு **'Soviet Land'** இதழ் தொடங்கப்பட்டுச் சோவியத்திலிருந்து வெளி வந்து கொண்டிருந்தது. பலமொழிகளிலும் இவ்விதழ் நல்ல வரவேற்பைப் பெற்று வந்தது. 1954ஆம் ஆண்டு வாக்கில் 'சோவியத் நாடு' என்ற பெயரில் தமிழில் கொண்டு வர முடிவு செய்யப்பட்டதும் அதில் பணிபுரிய கிருஷ்ணையாவுக்கு அழைப்பு வந்தது. அப்பணியை ஏற்று டில்லி சென்று சுமார் 9 ஆண்டுகள் பணிபுரிந்து வந்தார். 'சோவியத் நாடு' இதழ் முழுமையாக மொழிபெயர்ப்பு மூலமாக நடைபெற்று வந்ததால் இதற்காகக் கிருஷ்ணையா ஏராளமான உருஷ்யமொழிச் சிறுகதை, கட்டுரைகளை மொழிபெயர்த்து வழங்கி வந்தார். 'சோவியத் நாடு' இதழின் அலுவலகம் சென்னை வந்ததும், அங்கே ஆறு ஆண்டுகள் பணியாற்றி வந்தார். ஆங்கிலத்தை மூலமாகக் கொண்டு 'சோவியத் நாடு' இதழுக்காக மொழிபெயர்ப்புப் பணியைச் செய்து வந்தார். இதைத் தொடர்ந்து சோவியத் நாட்டின் மாஸ்கோ முன்னேற்றப் பதிப்பகத்தில் தமிழ் மொழிபெயர்ப்பாளராகப்

பணிபுரிய அழைப்பு வந்ததை ஏற்று, கிருஷ்ணையா மாஸ்கோ சென்றார். அங்கு 1968 ஆம் ஆண்டு முதல் 1978 ஆம் ஆண்டு வரை பதது ஆண்டுகள் மாஸ்கோ முன்னேற்றப் பதிப்பகத்தின் மொழி பெயர்ப்பாளராகப் பணியாற்றி வந்தார்.

மாஸ்கோ சென்ற பின் கிருஷ்ணையா உருஷ்ய மொழியிலும் புலமை பெற்றார். பல உருஷ்ய இலக்கியங்களையும் மார்க்ஸ் எங்கெல்ஸ் லெனின் நூல்களையும் மற்றும் பல்வேறு துறை களுக்குரிய நூல்களையும் மொழிபெயர்த்து வந்தார். உருஷ்யாவும், மொழிபெயர்ப்புப் பணியும் அவருக்குப் பிடித்திருந்த போதிலும் அவர் மீண்டும் இந்தியாவுக்குத் திரும்ப முடிவு செய்தார். முன்னேற்றப் பதிப்பகத்தார் அவரை இன்னும் சிறிது காலம் தங்கிச் செல்ல வற்புறுத்திய போதிலும் கிருஷ்ணையா அதனை மறுத்துச் சென்னை திரும்பினார்.

## கிருஷ்ணையாவின் மொழிபெயர்ப்புகள்

'சோவியத் நாடு' இதழ் மொழிபெயர்ப்புப் பணியில் சுமார் 15 ஆண்டுகள் ஈடுபட்டிருந்தார் ரா. கிருஷ்ணையா. இதில் இடம்பெறும் செய்திகள், அரசியல், சமூகம், பொருளாதாரம், வாழ்வியல் சார்ந்த கட்டுரைகள், உருஷ்யப் படைப்பாளிகளின் படைப்புகள், மற்றும் அறிவியல் சார்ந்த கட்டுரைகள், சிறுவர்களுக்கான படைப்புகள் அனைத்தும் இவ்விதழில் இடம்பெற்று வந்தன. இவற்றை மொழி பெயர்த்துத் தமிழகத்திற்கு வழங்கிக் கொண்டிருந்த ரா. கிருஷ்ணையா தமிழ் மக்களுக்கு மற்ற எழுத்தாளர்களைப் போல் அறிமுகமாக வாய்ப்பில்லை. மொழிபெயர்ப்பாளர்களுக்குத் தகுந்த முக்கியத்துவம் அளிக்கப்படுவதில்லை என்பதும் ஒரு காரணமாகும். சோவியத் நாடு இதழ் மொழிபெயர்ப்புகள் தவிர உருஷ்ய இலக்கியவாதிகளின் குறிப்பிடத்தக்க படைப்புகளைக் கிருஷ்ணையா மொழிபெயர்த்து அளித்து வந்துள்ளார். விளாதிமிர் கொரலென்கோ எழுதிய **கண்தெரியாத இசைஞன்**, லேவ் தல்ஸ்தோய் எழுதிய **புத்துயிர்ப்பு**, அலெக்சாண்டர் ரெக்கெம்சூக் எழுதிய **பாட்டிசைக்கும் பையன்கள்**, சிங்கிஸ் ஐத்மாத்தவ் எழுதிய **குல்சாரி**, பியோதர் தாஸ்தேயேவ்ஸ்கி எழுதிய **வெண்ணிற இரவுகள்**, அந்தோன்சேகவ் **சிறுகதைகளும், குறு நாவல்களும்**, 'நவரத்தின மாலை' எனும் தலைப்பில் **சோவியத் நாட்டுக்கதைகள்**, வி. தெந்திரியாக்கோவ் எழுதிய **மருமகள்** வி.கோத்செத்தவ் எழுதிய **தொழிலாளர் குடும்பம்** போன்ற இலக்கியப் படைப்புகளைத் தமிழில் வழங்கியுள்ளார் ரா. கிருஷ்ணையா.

வி.இ. லெனின் எழுதிய **அரசும், புரட்சியும்; சோவியத் ஆட்சியதிகாரம் என்பது என்ன?; திருத்தல்வாதம் எதிர்ப்போம் மார்க்சியம் காப்போம்; சோஷலிச சித்தாந்தமும் கலாச்சாரமும் குறித்து; தேசிய இனப் பிரச்சினை பற்றிய விமர்சனக் குறிப்புகள்**

ஆகிய நூல்கள் ரா.கிருஷ்ணையாவின் மொழிபெயர்ப்பில் வெளி வந்துள்ளன. கார்ல் மார்க்ஸ் எழுதிய **கூலி உழைப்பும் மூலதனமும்**, மார்க்ஸ், ஏங்கெல்ஸ் இருவரும் எழுதிய **சீனாவைப் பற்றி; கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை;** ஏங்கெல்ஸ் எழுதிய **கற்பனாவாத சோஷலிசமும் விஞ்ஞான சோஷலிசமும்** என்னும் அரசியல் தத்துவ விளக்க நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கி யுள்ளார். இந்நூல்களின் மொழிபெயர்ப்பு மூலம் அவருடைய இடையறாத உழைப்பும், அர்ப்பணிப்பும் தென்படுகின்றன.

ஜான்ரீடு எழுதிய 'உலகைக் குலுக்கிய பத்து நாட்கள்' யெலேனா சப்பாரினா எழுதிய **நம்முள் செயல்படும் சைபர்னெத்தியம்**, பிளெஹானவ் எழுதிய **'கலையும் சமுதாய வாழ்க்கையும்'**, அ. மலாஹவ் எழுதிய **'புவியகத்தின் புரியாப் புதிர்கள்**, யா. பெரெல்மன் எழுதிய **விளையாட்டுக் கணிதம்**, ஆகிய துறை சார்ந்த நூல்களும் கிளாராஜெட்கின் எழுதிய **'என் நினைவுகளின் லெனின்'** ஆகிய முக்கியத்துவம் வாய்ந்த சுமார் 30 நூல்களுக்கு மேல் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார்.

ரா. கிருஷ்ணையா தனது மொழிபெயர்ப்புத் திறனும் தமிழ்ப் புலமையும் இணைந்த அனுபவத்தைக் கொண்டு ஆங்கிலம்-தமிழ் அகராதி ஒன்றைத் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். அப்பொழுது அவரைக் காசநோய் தாக்கியது. இருந்தபோதிலும் தாம் எடுத்த பணியை முடிக்கும் நோக்கத்துடன் அகராதிப் பணியை இடை யிடையே செய்து வந்தார். இதில் A முதல் I வரை முடிந்திருந்தார். அப்போது தியாகு மொழிபெயர்த்த மார்க்சின் மூலதன மொழி பெயர்ப்பை தலைமைப் பதிப்பாசிரியராக இருந்து பதிப்பாக்கம் செய்ய நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம் கிருஷ்ணையாவை அழைத்தது. தமது உடல்நிலையைக் கருத்தில் கொள்ளாமல் இப்பணியை ஏற்று அய்ந்து ஆண்டுக் காலம் அதற்காகப் பணியாற்றியுள்ளார்.

தீவிர அரசியல் காரணங்களுக்காகத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டவர் தியாகு எனும் தியாகராஜன். பின்னர் இது ஆயுள் தண்டனையாகக் குறைக்கப்பட்டது. 16 ஆண்டுகள் அவர் சிறைத் தண்டனை அனுபவிக்க நேர்ந்தது. தமது வாழ்நாளைப் சமுதாயத் திற்குப் பயன்தரும் வகையில் பணியாற்றக் கருதி, சிறையில் இருந்தவாறே ஏராளமான நூல்களைப் படித்துத் தமது அறிவை மேலும் மேலும் வளர்த்துக் கொண்டார். மாமேதை மார்க்சின் 'மூலதனத்தை' மொழிபெயர்க்கும் மிகப் பெரும் பணியைத் தியாகு மேற்கொண்டார். அவர் சிறையிலிருந்து விடுதலையாகி வெளி வந்ததும் அவருடைய மூலதன மொழிபெயர்ப்பை வெளியிட நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம் முன்வந்தது. இப்பணியை மேலும் செம்மையாக்கிச் சிறந்த ஒரு பதிப்பாகக் கொண்டு வரவேண்டும்

என்று நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம் கருதியது. ஜெ. சாந்தாராம் என்பவர் கிருஷ்ணையாவைப் பற்றி ஒரு சிறு கையேடு வெளியிட்டுள்ளார். அதில் இப்பதிப்புப் பணி பற்றிக் குறிப்பிடும் பொழுது,

> **கிருஷ்ணையாவும், தியாகுவும் உதவியாய் நாங்களும் (நான் உள்பட சி.எஸ். இளங்கோவன், மணிமொழியன், ஆமீனா) ஒவ்வொரு பாகத்திலும், அத்தியாயத்திலும் சொல்லிலும் இறங்கி மார்க்சின் மொழியைத் தொழிலாளி வர்க்கப் பார்வையில் தேர்ந்த சொற்களாலான வார்த்தை களாய் அழகுறக் கோத்தமைத்துச் சென்ற பதிப்புப் பணியில் கடைசிப் பாகத்தின் கடைசி முற்றுப் புள்ளியில் ஐந்து வருடகாலம் (1987–1992 நவம்பர்) முடிவுற்றது'[1]**

எனச் சுட்டிக்காட்டியுள்ளார். இப்பணியினை அனைவரும் எவ்வளவு முயற்சியுடன் உழைத்துப் பாடுபட்டுள்ளனர் என்பதை இந்த ஒரு சில வரிகளே உணர்த்தி நிற்கின்றன.

1992 ஆம் ஆண்டில் இப்பதிப்புப் பணி முடிவடைந்தது. அவர் அதற்குப் பிறகு வேறெந்தப் பணியையும் மேற்கொள்ள முடியவில்லை. அவருடைய உடல்நிலை மேலும் மேலும் மோசமடைந்து, தீவிரக் காசநோய் தாக்குதலால் மாரடைப்பு ஏற்பட்டு 23-3-1996ஆம் நாள் (பகத்சிங் நினைவு நாள்) மருத்துவமனையில் கிருஷ்ணையா உயிர் நீத்தார்.

கிருஷ்ணையாவின் வாழ்வில் மூலதனம் - பதிப்புப்பணி மிகவும் குறிப்பிடத்தக்க ஒரு பெரும்பணியாக அமைந்தது. இந்த அனுபவத்தைப் பற்றி ஜெ. சாந்தாராம் 'பேனா நிழலில் தோழர் கிருஷ்ணையா' எனும் சிறு வெளியீட்டில் (16 பக்கங்கள்) குறிப்பிட்டுள்ளார். இதை அலைகள் வெளியீட்டகம் வெளியிட்டுள்ளது. இதில் மார்க்சின் மூலதனம் மொழிபெயர்ப்பு தமிழில் சிறந்த முறையில் வெளியிட வேண்டும் என்ற நோக்கில் அவருடைய சில அனுபவங் களும் அறிவுரைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. இதன்மூலம் எவ்வளவு துன்பங்களுக்கிடையே ஒரு மொழிபெயர்ப்பு நூல் உருவாகிறது என்பதை அறிய இது ஒரு சான்று.

> **அண்ணா நகரிலிருந்து பேருந்தில் வந்து அம்பத்தூர் தொலைபேசி தொடர்பகத்தில் இறங்கி நடையில் மெல்ல மெல்ல வயோதிகத்தைப் பின்னுக்குத் தள்ளிய வாறே NCBH வளாகத்தில் மூலதனம் பதிப்புப்பணி நடைபெறும் அறைக்குள் சோர்வை மறைக்கும் புன்னகையோடு நுழைந்து அமர்வார் கிருஷ்ணையா. உடல் அதிரதிர ஈளை மீறிவரும் மூச்சை எறிந்தபடி 10 நிமிடம் பேசாது ஓய்வெடுப்பார். பிறகு அளவாய்**

அமைதியாய் 'மூலதனம்' குறித்த விளக்கங்களிலும் விவாதங்களிலும் அவரது தனித்த மொழி சுழல்வுறும். சிறைச்சுவர்களுக்குள் விரிக்கப்பட்ட மார்க்சின் மூலதனம் நூலின் குறுக்கே கம்பிகளின் நிழல் ஊடுருவும் வெளிச்சத்தில் தனியொருவராய்த் தனக் குள்ளேயே விவாதித்து விவாதித்து மூளையெழுத் துழைப்பில் தன்னை முழுவதுமாய் செலுத்தி, தியாகு சாதித்து முடித்த மூலதனம் – தமிழ்ப்பிரதி சரியான மொழிபெயர்ப்பாக அமைந்திருந்த போதிலும், பெயர்ப்பைச் சற்றும் ஆங்கிலச் சாயலற்ற தமிழாக்கமாக உருவமைக்கவும், வாசகனின் எளிமைக்கும் புரிவுக்கும் முடிந்தவரை நெருக்கமாக மார்க்சின் தத்துவ மொழியை கொண்டு சேர்க்கவும் கிருஷ்ணையா விரும்பினார். தியாகுவின் ஐந்து வருடப் பேருழைப்பை உறிஞ்சியிருந்த மூலதனம் – தமிழ்ப் பிரதியின் ஆயிரக் கணக்கான பக்கங்களில் விரிந்திருந்த வார்த்தைகளை அர்த்தம் மாறாமல் அழகுற மறு கட்டமைப்புக் குள்ளாக்க வேண்டிய தேவையைக் கிருஷ்ணையா வலியுறுத்தினார்[2].

பதிப்புப்பணி என்றாலும் கிருஷ்ணையா ஒரு மொழி பெயர்ப்பாளர் எனும் நோக்கில் மிகுந்த அக்கறையுடன், பலவிதமான உடல் தொல்லைகளுக்கிடையே செயல்பட்டு வந்துள்ளார். தொழிலாளி வர்க்கப் பார்வையில் சொற்களைத் தேர்ந்தெடுப்பது குறித்துக் குறிப்பிடும்பொழுது

பொருளியல் கலைச்சொற்கள் மட்டுமல்ல மார்க்சின் மூலதனம் நூல் மொத்தமும் பொருளாதார மனித வாழ்வு சார்ந்த பல்லாயிரக்கணக்கான சொற்களின் தொகுதியே. மேலும் ஒவ்வொரு சொல்லும் தொழிலாளி வர்க்கப் பார்வையில் உணரப்பட வேண்டும். எனவே மொழிபெயர்ப்பாளர், பதிப்புப்பணிபுரிவோர், தட்டெழுத்தர், அச்சுக்கோப்போர், பிழைதிருத்துவோர் யாவருக்கும் தொழிலாளி வர்க்கப்பார்வை அவசியம். யாரேனும் ஒருவர் மனிதத் தவறாய்ப் பிரக்ஞை ஒரு கணம் பிறழ நேர்ந்தால், மார்க்சின் சொற்கள் அவர் பயன்படுத்தியதற்கு நேரெதிரான அர்த்தத்தில் முதலாளித்துவப் பார்வை கொண்டதாகிவிடும். உங்களின் ஒரு கணத் தவறால் மூலதனம் நூலை உருவாக்க மார்க்ஸ் மேற்கொண்ட 15 வருடக் கால உழைப்பும் குறைபட்டதாகிவிடும்[3]

என்று குறிப்பிட்டுள்ளார். மூலநூலின் தன்மையை மொழிபெயர்ப்பு கெடுத்துவிடக்கூடாது என்பதில் எவ்வளவு அக்கறையுடன் செயல்பட்டிருக்கிறார் என்பதற்கு அவருடைய இந்த விளக்கமே போதுமான சான்று. தொழிலாளி வர்க்கப் பார்வை எழுத்தாளனாக வாழ்ந்தவர் ரா. கிருஷ்ணையா.

> ஐந்து வருடக் காலமும் கிருஷ்ணையா, தியாகு மற்றும் பதிப்புப் பணியாற்றிய அனைவருக்கும் வழங்கப்பட்ட மாதச் சம்பளம் ரூ. 60/- பேருந்துக் கட்டணம், பேனா, மை, டீ செலவுக்கே போதுமானதாக இல்லையென்ற போதிலும், NCBH நிறுவனத்தார் எங்களிடம் காட்டி வந்த கருணையும் பரிவும் எங்களின் தொழிலாளி வர்க்கப் பார்வையை மேன்மேலும் கூர்மையடையச் செய்திரா விட்டால், இப்பணியைச் செவ்வனே முடிக்கும் சக்தி எங்களுக்குக் கை கூடியிருக்காது'

என்று குறிப்பிடுகிறார் ஜே. சாந்தாராம். மனித சமுதாயத்தின் மீது உள்ள அக்கறையும் ஈடுபாடும் அவர்களுடைய எல்லா இழப்பு களையும் பொருட்படுத்தாது ஒரு மாபெரும் வரலாற்றுச் சாதனையை படைத்துள்ளனர். ஒரு மொழிபெயர்ப்பாளர் எந்த அளவிற்கு வேறு இலாப நோக்கு, அல்லது பணபலன், எதுவுமில்லாமல் தன் உழைப்பை வழங்குகிறார் என்பதற்குக் கிருஷ்ணையா ஒரு சிறந்த சான்று. 'மூலதனம்' தமிழ் மொழிபெயர்ப்பு 6 தொகுதிகளாக, 5-5-98ஆம் நாளன்று நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம் வெளியிட்டுள்ளது.

இந்தியாவுக்கும் சோவியத்துக்குமிடையே அரசியல் பாதையில் ஒரு வகையில் நட்புறவு செயல்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருந்த அதே வேளையில் கம்யூனிசக் கோட்பாட்டு விளக்க நூல்களும், அதையொட்டிய உருஷிய இலக்கியங்களும் இவ்விரு நாடுகளுக்கு மிடையே நட்புறவை மேலும் மேலும் வலுப்படுத்தின; விரிவாக்கியுள்ளன.

> பாரதத்துக்கும் சோவியத் யூனியனுக்குமிடையேயுள்ள நட்பும் நல்லுறவும் நாளும் வளர்ந்தோங்கி வருகின்றன. இந்த இருபெரும் நாடுகளுக்கிடையே இமய நெடுஞ் சுவர் இடைமறித்து நின்றாலும், இரு நாட்டினரின் இதயங்களும் கூடிக் குலாவுவதற்கு, எந்தவொரு நெடுஞ்சுவரும் தடை மதிலாக நிற்கவில்லை. மேலும், பாரதம் இன்று சமதர்ம இலட்சியத்தைத் தனது சமுதாய மார்க்கமாக ஏற்றுக் கொண்டுள்ளது. சோவியத் யூனியனோ சமதர்ம லட்சியத்தை நடைமுறைக்குக் கொண்டு வந்ததில் உலகிற்கே மூத்த பிள்ளையாக விளங்குகிறது. எனவே அந்நாட்டின் அனுபவங்கள் நமக்கு நல்ல பல படிப்பினைகளை வழங்க முடியும்.

> இதனால் நாமும் அந்நாட்டின் வாழ்வையும் வளர்ச்சி யையும் தெரிந்துகொள்வதில் அக்கறை காட்டு கிறோம். எனினும் இவற்றைத் தெரிவிக்கும் வரலாற்று நூல்களின் மூலம் நாம் அந்நாட்டின் புறவளர்ச்சியைத் தான் பெரிதும் தெரிந்து கொள்ள முடியும். அந் நாட்டின் அகவளர்ச்சியை, இதயப் பண்பைப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால், அவற்றை நாம் உணர வேண்டுமென்றால் அந்நாட்டின் இலக்கியங்கள்தான் நமக்கு உதவ முடியும்[5]

என்று எழுத்தாளர் தொ.மு.சி. ரகுநாதன் குறிப்பிடுகிறார். கருத்துக்குச் சான்றாக அமைவது உருஷ்ய இலக்கியங்களின் தமிழ் மொழி பெயர்ப்புகள். ரா. கிருஷ்ணையாவின் மொழிபெயர்ப்பில், **புத்துயிர்ப்பு, குல்சாரி, கண் தெரியாத இசைஞன், வெண்ணிற இரவுகள், பாட்டிசைக்கும் பையன்கள்** ஆகிய நாவல்களும் அந்தோன் சேகவ் சிறுகதைகளும், நாவல்களும், ஆகியன இலக்கிய மொழி பெயர்ப்புகள் எனும் வகையில் குறிப்பிடத்தக்கவை.

உலகப் புகழ் பெற்ற உருஷ்யப் படைப்பாளியான லேவ் தல்ஸ்தோயின் மிகச் சிறந்த நாவலான 'புத்துயிர்ப்பு' வரலாற்றுச் சிறப்புமிக்கது. இந்நாவலின் தமிழ் மொழிபெயர்ப்பு நூல் 842 பக்கங்களைக் கொண்டது. 1979ஆம் ஆண்டில் முன்னேற்றப் பதிப்பகம் (மாஸ்கோ) இத்தமிழ் மொழிபெயர்ப்பு நூலை வெளியிட்டுள்ளது. இந்நாவலின் சிறப்பினை ரா. கிருஷ்ணையா மொழிபெயர்ப்பின்மூலம் தமிழ் வாசகர்கள் அறிந்துகொள்ள முடிகிறது.

> அலெக்சாண்டர் கோனி என்றொரு பிரபல சட்ட அறிஞர் தமது வழக்குகளில் ஒன்றைப் பற்றி 1887இல் தல்ஸ்தோயிடம் கூறினார். இந்த வழக்கில் ஒரு பெண் திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டிருந்தாள். சான்றாயர்களில் ஒருவரான பிரபுக் குலத்து இளைஞருக்கு இந்தப் பெண்ணை அடையாளம் தெரிந்தது; முன்பு தாம் ஆசை காட்டிக் கெடுத்துப் பிறகு கைவிட்ட அதே பெண்தான் இவள் என்பதைக் கண்டார். இவளுக்கு நேர்ந்த கதியைக் கண்டு அதிர்ச்சியடைந்த அவர், தாம் புரிந்த கொடிய செயலுக்குப் பாவ மன்னிப்பு பெறு வதற்காக, இவளை மணம் புரிந்து கொள்வதென்றும் தண்டனைக் கைதியான இவளது கடின நிலைமையை இலகுவாக்க முயலுவதென்றும் தீர்மானித்தார். இந்த உண்மைக் கதையிலிருந்து தான் உருப்பெற்று எழுந்தது, தல்ஸ்தோயின் மிகச் சிறந்த படைப்புகளில் ஒன்றான புத்துயிர்ப்பு. பத்து ஆண்டுகளாய்ப் (1889– 1899) பாடுபட்டு, தேட்டங்களுக்கும், தயக்கங்களுக்கும் பரிசீலனைகளுக்கும் பிற்பாடு, தல்ஸ்தோய் இந்த

**நாவலை எழுதி முடித்தார். மனிதனையும், புவியில் அவனது வாழ்க்கையின் நோக்கத்தையும், அவனது ஆன்மா புத்துயிர்ப்பு பெற்று மறுமலர்ச்சி அடைவதையும் இந்த நாவல் ஆராய்கிறது**[6]

ஒரு பணக்கார இளைஞன் திமீத்ரி இவானவிச் நெஹ்லூதவ் என்பது அவன் பெயர். விடுமுறைக் காலத்தில் தன் அத்தை வீட்டுக்கு வந்த அவன் அங்கே வேலைக்காரி போலவும் வளர்ப்பு மகள் போலவும் இளமைப் பொலிவுடன் விளங்கிய கத்யூஷா மாஸ்லவா என்ற பெண் மீது ஆசை கொண்டு கற்பழித்து விடுகிறான்.

கத்யூஷா கர்ப்பமாகிறாள். வேலை இழக்கிறாள். அவமானப் படுகிறாள். அங்கீகரிக்கப்பட்ட விபச்சாரியாகிறாள். ஒரு பணக்கார வாடிக்கையாளரைக் கொன்றதாகக் (பொய்யான வழக்கில்) கைது செய்யப்பட்டு நீதி மன்றத்துக்கு வருகிறாள்.

பல ஆண்டுகளுக்குப் பின் யாரால் அவளது வாழ்க்கை சீரழிந்து சின்னாபின்னமாகியதோ அவனை - நெஹ்லூதவ்வை நீதிமன்றத்தில் தண்டிக்கப்பட வேண்டிய குற்றவாளிகளின் தீர்ப்புகளை வடிவமைக்கும் பணியில் சான்றாயராகச் சந்திக்கிறாள்.

தன்னால் கெடுக்கப்பட்ட பெண் செய்யாத குற்றத்துக்காகச் சைபீரியாத் தண்டனைக்கு அனுப்பப்படுவதை அறிந்த நெஹ்லூதவ் குற்ற உணர்வால் சுற்றி வளைக்கப்படுகிறான். அவனுடைய மனச்சாட்சி அவனை நாளுக்கு நாள் வதைத்து அவனது இதயத்தைத் திறந்து விடுகிறது.

கத்யூஷாவை எப்படியாவது விடுதலை செய்ய வேண்டும். அவளைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று எவ்வளவோ முயற்சி செய்கிறான். ஆனால் பணக்கார வர்க்கத்தின் பரிவை இப்போது ஏற்கும் மனநிலையில் இல்லை கத்யூஷா.

கத்யூஷா தன்னைக் குறித்து என்ன நினைத்தாலும் அவளுக்காக எதையும் செய்து பாவமன்னிப்புப் பெற வேண்டும் என்று தவிக்கிறான் நெஹ்லூதவ். தனது சொத்துக்களையெல்லாம் வேலையாட்களுக்கே பகிர்ந்து கொடுத்துவிட்டுக் கத்யூஷாவுடன் சைபீரியாவுக்கும் செல்லத் துணிகிறான்.

தண்டனை பெற்றுச் சைபீரியாவுக்குச் செல்லும் கத்யூஷாவுடன், அரசை எதிர்க்கும் தீவிரவாத இயக்கத்தைச் சேர்ந்த குற்றவாளிகளில் ஒருவனுடன் அன்புடன் பழகுவதைக் கண்ட நெஹ்லூதவ் அவர்களை மனத்துள் வாழ்த்தியவாறு நாடு திரும்புகிறான். மன அமைதியற்ற அவன் ஒரு துறவியாகப் புதிய மனிதனாகப் புத்துயிர் பெறுகிறான்.

டால்ஸ்டாய் இக்கதையை இவ்வாறு வடிவமைத்துள்ளார். மூன்று பாகங்களடங்கிய இந்நாவல் தமிழ் வாசகர்களுக்கு, தமிழ் எழுத்தாளர்களுக்கு லேவ் தல்ஸ்தோயின் உலகப் புகழ்பெற்ற நாவலான 'புத்துயிர்ப்பு' ரா. கிருஷ்ணையாவின் பெரும் உழைப்பாலும் முயற்சியாலும் தமிழுலகிற்குக் கிடைத்தது. சோவியத் இலக்கியத்தின் மிக முக்கியமான மிகச் சிறந்த எழுத்தாளரும், மிகவும் அதிகமாகப் படிக்கப்படுகின்ற எழுத்தாள ராகவும் திகழ்ந்த சிங்கிஸ் ஐத்மாத்தவ் எழுதிய 'குல்சாரி' குறுநாவல் ரா. கிருஷ்ணையா மொழிபெயர்ப்பில் தமிழுக்குக் கிடைத்துள்ளது.

> ***ஒரு முதியவரும் ஒரு கிழட்டுக் குதிரையும் கிர்டீகஸ்யாவின் ஸ்டெப்பியில் போய்க் கொண்டிருக் கிறார்கள். பகல் இரவாக மாறிக் கொண்டிருக்கிறது. அந்தக் குதிரை தள்ளாடித் தள்ளாடி நடக்கிறது...... அன்றைய மாலைப்பொழுது அதற்குக் கடைசி மாலை. முதியவர் நெருப்பு மூட்டுகிறார். முதியவரும் குதிரையும் நெருப்புக்குப் பக்கத்தில் உட்கார்ந்து குளிர் காய்கிறார்கள். ஆட்டு இடையன் தானாபாயும் குதிரை குல்சாரியும் தங்கள் கடந்த காலத்தை அசை போடுகிறார்கள்....... சோவியத் கிர்கீஸிய எழுத்தாளரும் லெனின் பரிசும் அரசுப் பரிசுகளும் பெற்றவருமான மக்கள் எழுத்தாளர் சிங்கிஸ் ஐத்மாத்தவின் (பிறப்பு 1928) குறுநாவல் இந்தக் காட்சியுடன் தொடங்குகிறது. கூட்டுப் பண்ணையின் ஆட்டிடையன் தானாபாய் இக்குறுநாவலின் கதாநாயகன்....... இந்தப் பாத்திரத்தின் உறுதியும் பலமும் ஐத்மாத்தவின் தானாபாயை ஷோலகவின் உலகப் புகழ்பெற்ற கதையான 'அவன்விதி'யில் சித்திரிக்கப்பட்டிருக்கும் ஸொலோவுக்குச் சமமாக்குகிறது. இரண்டு கதாநாயகர்களின் வீரமும் மனஉறுதியும் அவர்கள் பிறந்த மண்ணின் இயற்கையான கொடையாகும். அவர்கள் உண்மையான மக்கட் பண்புகளின் உருவங்கள்'***

என இந்நூலின் முக்கியத்துவம் குறிப்பிடப் பட்டுள்ளது. உலகப் புகழ் பெற்ற இந்த உருஷ்ய எழுத்தாளரின் படைப்புகளைத் தமிழ் வாசகர்களை தேடிப் பிடித்துப் படிக்கத் தூண்டியிருக்கிறது.

வாழ்வின் உயிர்ப்பை இத்தகைய இலக்கியங்கள் புதுவிதமாக எடுத்துச் சொல்வதை வாசகர்கள் உணர முடிகிறது. தமிழ் எழுத்தாளர்களுக்கு இதுபோன்ற படைப்புகள் வழிகாட்டிகளாகவும் அமைந்துவிடுகின்றன. இந்தத் திருப்பம் ரா.கிருஷ்ணையா போன்ற மொழிபெயர்ப்பாளர்களால் உருவாக்க முடிகிறது.

உருஷ்ய இலக்கியத்தின் சிறுகதை உலகில் மிகவும் போற்றப் படுபவர் அந்தோன்சேகவ். உலகில் கோடானுகோடி வாசகர்கள்

அந்தோன் சேகவின் கதைகளை ஆவலுடன் படிக்கின்றனர். இதற்கான காரணம் பற்றிக் குறிப்பிடும்பொழுது

> **சேகவ் யாவற்றுக்கும் முதலாய் உண்மையை எடுத்துரைக்கிறார். உள்ளதை உள்ளபடி கூறி உள்ளத்தை ஒளிபெறச் செய்கிறார். சேகவின் உண்மையானது மனச்சான்றைத் துயிலெழச் செய்யும் உண்மையாகும்; மனித வாழ்வு வளமும் எழிலும் பெற வேண்டும், பெறவும் போகிறது என்ற உணர்வையும் ஊக்கத்தையும் ஊட்டும் உண்மையாகும். மனிதனின் நிலையை மனிதனுக்குத் தெரியப்படுத்தும்போது மனிதன் மேம்படுவான் என்று சேகவ் கூறி வந்தார். சேகவின் வாழ்க்கையும் சேகவின் கதைத் தலைவர்களது வாழ்க்கையும் இன்னல் மிக்கதாகவே இருந்தன; ஆயினும் அவர் இந்த உடனடி நிலைமையை மட்டுமின்றி, ஓசையின்றி அடியெடுத்து வைத்து நெருங்கி வரும் வருங்காலத்தையும் கணக்கில் எடுத்துக் கொண்டார். சேகவ் மகத்தான எழுத்தாளர் ஆவார். அதோடு அவர் மகத்தான வாசகர்களை மனதிற் கொண்டு எழுதியவருமாவார். வாசகர்களின் உயர் பண்புகளில், அவர்களது கூர்மதியிலும் நல்லுணர்விலும் உள்ளன்பிலும் முழு நம்பிக்கை கொண்ட எழுத்தாளர் சேகவ் வாசகர்களை அவர் ஒன்றும் தெரியாத சிறு பிள்ளைகளாகவோ, சிந்தனையற்றவர்களாகவோ கருதி, ஒவ்வொன்றுக்கும் தாமே தீர்வைத் தயாரித்தளிக்க முயலவில்லை, அவர்களுக்கு உபதேசிக்க முற்படவில்லை. தாம் எழுதுவதை வாசகர்கள் கூர்ந்து நோக்குவர், சிந்தனை செய்வர், பிழையின்றிப் புரிந்து கொள்வர் என்று அவர் திட நம்பிக்கை கொண்டிருந்தார்.[8]**

அந்தோன் சேகவ் கதைகளை விரும்பிப் படிக்கும் வாசகர்களின் பட்டியலில் தமிழ் வாசகர்களுக்கும் இடமுண்டு. இவ்வகையில் மொழிபெயர்ப்பாளர் ரா. கிருஷ்ணையாவுக்குப் பெரும் பங்கு உண்டு.

வரலாற்று நோக்கில் ரா. கிருஷ்ணையாவின் மொழி பெயர்ப்பில் குறிப்பிடத்தக்க ஒரு நூல் **"உலகைக் குலுக்கிய பத்து நாட்கள்"**. அமெரிக்காவைச் சேர்ந்த ஜான் ரீடு வழங்கிய இந்நூலின் சிறப்பைப் பற்றி லெனின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

> **ஜான் ரீடு எழுதிய இந்தப் புத்தகத்தை அளவிலா ஊக்கத்தோடும் தளராத கவனத்தோடும் படித்தேன். அனைத்து உலகிலுமுள்ள தொழிலாளர்களுக்கு முழுமனதுடன் இப்புத்தகத்தைச் சிபார்சு செய்கிறேன். பத்து இலட்சக்கணக்கான பிரதிகளில் அச்சாகி வெளி**

வர வேண்டும். எல்லா மொழிகளிலும் பெயர்க்கப்பட வேண்டுமென நான் விரும்பும் புத்தகமாகும் இது. பாட்டாளி வர்க்கப் புரட்சி என்றால் என்ன, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்வதற்கு மிகவும் முக்கியமான நிகழ்ச்சிகளை உள்ளது உள்ளபடி உயிர்க்களையுடன் இது விவரிக்கின்றது. இந்தப் பிரச்சினைகள் விரிவாய் விவாதிக்கப்படுகின்றவை; ஆனால் எவரும் இந்தக் கருத்துகளை ஏற்றுக் கொள்ளவோ, நிராகரிக்கவோ முற்படுமுன் தமது முடிவின் உட்பொருளைச் சரிவரப் புரிந்து கொள்வது அவசியமாகும். சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தின் அடிப்படையான பிரச்சினையாகிய இதனைத் தெளிவுபடுத்த ஜான் ரீடின் புத்தகம் துணைபுரியும் என்பதில் ஐயமில்லை'

என லெனினின் குறிப்பு இந்நூலில் இடம்பெற்றுள்ளது. வரலாற்று முக்கியத்துவம் பெற்ற இந்நூல் ரா. கிருஷ்ணையாவின் மொழி பெயர்ப்பில் தமிழில் இடம் பெற்றுள்ளது. 684 பக்கங்கள் கொண்ட இந்நூல் கிருஷ்ணையா தனித்த ஒருவரால் மொழிபெயர்க்கப் பட்டிருப்பது ஓர் அரிய சாதனை எனலாம்.

### கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை

கம்யூனிசத் தத்துவம் மற்றும் நடைமுறைத் திட்டம் ஆகியவற்றை விளக்கும் மூல ஆதார வழிகாட்டி நூல்தான் 'கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை'. சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பு மார்க்ஸ், எங்கெல்ஸ் ஆகியோர் இந்நூலை வெளியிட்டுள்ளனர். இது உலகையே புரட்டிப் போட்ட புத்தகமாகக் கருதப்படுகிறது. உலகமெங்கும் முதலாளித்துவத்தால் பாட்டாளி வர்க்கம் நசுங்கிக் கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தது. தங்களுடைய இனிய வாழ்க்கை தொலைந்து போய் விட்டதாகக் கருதிக் கொண்டிருந்தார்கள். மார்க்சும் எங்கெல்சும் தங்களுடைய கம்யூனிசத் தத்துவத்தின் மூலம் கண்ணீருக்குப் பதிலாகப் புரட்சியை முன் வைத்து இந்த அறிக்கையைத் தயாரித்து வெளியிட்டார்கள்.

1. முதலாளிகளும் பாட்டாளிகளும், 2. பாட்டாளிகளும் கம்யூனிஸ்டுகளும், 3. சோஷலிச, கம்யூனிச இலக்கியம், 4. தற்போதுள்ள பற்பல எதிர்கட்சிகள் குறித்துக் கம்யூனிஸ்டுகளின் நிலை என நான்கு தலைப்புகளில் இந்த அறிக்கை வெளியிடப் பட்டுள்ளது. உலக முக்கியத்துவம் பெற்ற இச்சிறுநூல் தமிழில் ரா. கிருஷ்ணையா அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டு 1975ஆம் ஆண்டு முன்னேற்றப் பதிப்பகத்தால் வெளியிடப்பட்டுள்ளது. ஜெர்மன் மொழியில் வெளியிடப்பட்ட இந்நூல் ஜெர்மனியிலும்,

இங்கிலாந்திலும், அமெரிக்காவிலுமாய் வெவ்வேறான பன்னிரண்டு பதிப்புகளுக்குக் குறையாமல் வெளியிடப்பட்டது.

> **முதன்முறையாய் ஆங்கிலத்தில் இது 1850 இல் இலண்டன் Red Republican பத்திரிகையில் வெளியாயிற்று. இந்த மொழிபெயர்ப்பைச் செய்தவர் மிஸ் ஹெலன் மாக்ஃபர்லென். 1871இல், அமெரிக்காவில் மூன்றுக்குக் குறையாத வெவ்வேறு ஆங்கில மொழி பெயர்ப்புகள் வெளிவந்தன. பிரெஞ்சு மொழிபெயர்ப்பு 1848 ஆம் ஆண்டு ஜூலை எழுச்சிக்குச் சிறிது காலத்துக்கு முன் முதன் முதல் பாரிசில் வெளியாயிற்று. அண்மையில் நியூயார்க் Le Socialiste பத்திரிகையிலும் வெளிவந்திருக்கிறது. புதிய மொழிபெயர்ப்பு ஒன்று தயாராகி வருகிறது. முதன் முதல் ஜெர்மன் மொழியில் வெளிவந்தபின் சிறிது காலத்துக்கு எல்லாம் போலிஷ் பதிப்பு ஒன்று இலண்டனில் வெளியிடப்பட்டது. அறுபதாம் ஆண்டுகளில் ருஷ்யப் பதிப்பு ஒன்று ஜினீவாவில் வெளிவந்தது. முதன் முதல் வெளியாகிய பின் சிறிது காலத்துக்குள் டேனிஷிலும் மொழிபெயர்க்கப்பட்டது[10]**

எனக் கார்ல் மார்க்ஸ், பிரெடெரிக் எங்கெல்ஸ் ஆகிய இருவரும் 1872ஆம் ஆண்டு இலண்டன் பதிப்பு முன்னுரையில் இந்த அறிக்கையின் மொழிபெயர்ப்பு மூலம் உலகமெங்கும் பரவி வருகின்ற சூழ்நிலையை எடுத்துக் காட்டியுள்ளனர். இதே போன்று 1882ஆம் ஆண்டுகளில் ருஷ்யப் பதிப்பு, 1883ஆம் 1888ஆம் ஆண்டு ஆங்கிலப்பதிப்பு, 1890ஆம் ஆண்டு ஜெர்மன் பதிப்பு, 1892ஆம் ஆண்டு போலிஷ் பதிப்பு, 1893ஆம் ஆண்டு இத்தாலியப் பதிப்பு ஆகியவற்றை மார்க்ஸ், எங்கெல்ஸ் சரிபார்த்து முன்னுரை வழங்கியுள்ளனர். பிரடெரிக் எங்கெல்ஸ் இவ் அனைத்து மொழிப் பதிப்புகளுக்கும் முன்னுரை வழங்கியுள்ளார். இதில் கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை பல மொழிகளில் மொழிபெயர்க்கப் படுவதும், அதற்குரிய முக்கியத்துவம் குறித்தும் இம்முன்னுரைகளில் மார்க்சும், எங்கெல்சும் குறிப்பிட்டுக் காட்டியுள்ளனர். இந்த முன்னுரைகளையும் சேர்த்து மொழிபெயர்த்துத் தமிழில் இந்நூலை வெளியிடச் செய்துள்ளார் கிருஷ்ணையா. 1850ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட இந்த அறிக்கை நூல் ‘150 ஆண்டுகளுக்குப் பிறகு கம்யூனிஸ்டு அறிக்கை’ எனும் தலைப்பில் ‘எல்லென் மீய்க்சின்ஸ் வுட்’ என்பாரும் ‘கம்யூனிஸ்டு அறிக்கை இன்று’ எனும் தலைப்பில் பால் எம்ஃஸ்வீஸி என்பாரும் எழுதியுள்ள கட்டுரைகளை மொழி பெயர்ப்பாளர் நா. தர்மராஜன் தமிழில் மொழிபெயர்த்து ஒரு சிறு நூலாக (47 பக்கங்கள்) வெளியிடச் செய்துள்ளார்.

> *கம்யூனிஸ்டு அறிக்கை அதன் தலைப்பைப் போல ஒரு அறிக்கைதான். அது மிகவும் விரிவான ஆராய்ச்சி நூல் அல்ல. அது பொதுமக்கள் படிப்பதற்கு வெளியிடப் பட்ட அரசியல் செயல் திட்டம். எங்கள் நோக்கம் இது என்று சுருக்கமாகவும், ஆர்ப்பாட்டமாகவும் செய்யப்பட்ட பிரகடனம். போருக்குப் புறப்படுங்கள் என்று விடுவிக்கப்பட்ட அறைகூவல். அரசியல் கொந்தளிப்புகளுக்கு நடுவில், உலகம் அதுவரை கண்டிராத சர்வதேசப் புரட்சி என்று சொல்லக்கூடிய சம்பவங்களின் முற்பொழுதில் எழுதப்பட்ட நூல்*[11]

என எல்லென் மீய்க்சின்ஸ்வுட் என்ற அறிஞர் இந்த நூலைப் பற்றிக் குறிப்பிடுகிறார். கம்யூனிஸ்ட் கட்சியினர் இதை வழிகாட்டி நூலாகக் கொண்டிருப்பதால் இதை அவர்கள் அனைவரும் அறிந்து கொள்ள வேண்டி மீண்டும் மீண்டும் மொழிபெயர்ப்பில், பதிப்பில் இடம் பெற்று வருகிறது. தமிழில் நவ. 1999ஆம் ஆண்டில் இரா. ஜவஹர் அவர்களால் எளிய தமிழில் சுருக்கி 'மார்க்ஸ், எங்கெல்ஸ் கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கை' எனும் தலைப்பில் வெளியிடச் செய்துள்ளார்.

> *பாட்டாளிகள் தமது அடிமைச் சங்கிலியைத் தவிர இழப்பதற்கு ஏதும் இல்லாதவர்கள். அவர்கள் வென்று பெறுவதற்கு அனைத்து உலகும் இருக்கிறது. உலகத் தொழிலாளர்களே, ஒன்று சேருங்கள்*[12]

எனும் புகழ்பெற்ற வரிகள் பாட்டாளி வர்க்கத்தின் முழக்கமாக எல்லா மொழிகளிலும் ஒலிக்கச் செய்யும் இந்த நூல் ரா. கிருஷ்ணையாவின் மொழிபெயர்ப்பில் தமிழில் இடம் பெற்றிருப்பது அவருக்கு மேலும் மேலும் சிறப்புக் கூட்டுவதாகும்.

> *கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கையின் இந்தத் தமிழ் மொழி பெயர்ப்பு, எங்கெல்சால் சரிபார்க்கப்பட்ட 1888ஆம் ஆண்டு ஆங்கிலப் பதிப்பின் வாசகத்திலிருந்து செய்யப்பட்டதாகும். 1888 ஆம் ஆண்டு ஆங்கிலப் பதிப்புக்கும், 1890ஆம் ஆண்டு ஜெர்மன் பதிப்புக்கும் எங்கெல்ஸ் எழுதிய குறிப்புகளும் மொழிபெயர்த்துத் தரப்படுகின்றன. அறிக்கையின் ஆசிரியர்கள் பல்வேறு பதிப்புகளுக்கும் எழுதிய எல்லா முகவுரைகளும் இந்தத் தமிழ்ப் பதிப்பில் சேர்க்கப்பட்டிருக்கின்றன*[13]

என்ற குறிப்புகளுடன் இத்தமிழ் மொழிபெயர்ப்பு நூல் வெளியிடப் பட்டுள்ளது. கம்யூனிசத் தத்துவம் தமிழகத்தில் பரவி மக்கள் நல்வாழ்வு பெறவேண்டும் என்ற நோக்கத்திற்காக எழுதப்படும், மொழிபெயர்க்கப்படுகின்ற நூல்கள் பல மக்களிடையே பரவலாக அறிமுகமாகின்ற நூல்களும் உண்டு, அறியப்படாத நூல்களாகவும்

இருப்பதுண்டு. பொதுவாக ஒரு தத்துவத்தை முன்னெடுத்துச் செல்கின்ற நூல்களுக்கு ஒரு குறிப்பிட்ட விழுக்காட்டு மக்கள் அதன் வாசகர்களாக இருப்பதுண்டு. இதைப்போன்றே இந்நூல்களின் ஆசிரியர்களும், மொழிபெயர்ப்பாளர்களும் குறிப்பிட்ட அளவிற்கு அறியப்பட்டவர்களாக இருப்பர். ஆனால் பொதுவாக இத்தகைய நூல்களின் மொழிபெயர்ப்பாளர்க்குத் தமிழுலகு ஊக்கமளிப்ப தில்லை; பரவலாக மக்களின் பாராட்டுக்கும், பெருமதிப்புக்கும் ஆளாகும் வாய்ப்பும் நேருவதில்லை; இச்சூழ்நிலை வருத்தத்தை அளிக்கின்ற ஒன்றாகும்.

மொழிபெயர்ப்பாளர் சிந்தனைக்கு என ரா. கிருஷ்ணையா தம் அனுபவத்தின் வாயிலாக மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபடுவோருக்குப் பல கருத்துகளை வழங்கியுள்ளார். குறிப்பாகத் தமிழில் மொழிபெயர்ப்பு எவ்வாறு இடம் பெறவேண்டும் என்ற நோக்கில் சில சிந்தனைகளை வழங்கியுள்ளார்.

1. *ஒவ்வொரு மொழிக்கும் அதற்குரிய தனிப் பண்பும் மணமும் இருக்கிறது. தமிழுக்குரிய பண்பும் மணமும் கொண்ட தமிழ் எழுத்துதான் தமிழ் மக்கள் மனங் கவருவதாக, அவர்களை ஊக்குவிப்பதாக, சிந்திக்கவும் செயல்படவும் வைப்பதாக இருக்கும். மொழி பெயர்ப்பிலும் இந்த மணம் இருக்க வேண்டும். ஆங்கில வாடை வீசக்கூடாது.*

2. *ஆங்கிலச் சொற்களுக்கும் தொடர்களுக்கும் தமிழில் நேர்ப்பதங்களைக் குறித்து வைத்துக்கொண்டு, சில விதிமுறைகள் கையாண்டு, கண்ணை மூடிக் கொண்டு இயந்திர முறையில் மொழிபெயர்த்தால் சிரமங்கள் குறைவதும் வேகம் அதிகரிப்பதும் மெய்தான். ஆனால் இந்த* **Mechanical** *மொழிபெயர்ப்பு உணர்ச்சி நயங்களையும் ஓசை நயங்களையும் கெடுத்து விடும். வாய்க்கு வழங்காது, காதுக்குக் கடூரமாயிருக்கும். அர்த்தம் புரியாது. வாசகர்கள் இதைப் படிப்பது எப்படி?*

   *மூலத்தின் கருத்துகளும் உணர்ச்சிகளும் கெடாமல் சுவைகள் குன்றாமல் அவற்றை உள்ளது உள்ளபடி இயல்பான பொருத்தமான தமிழ் நடையில் நம் வாசகர்களுக்குக் கிடைக்கச் செய்தல் நமது கடமை என்கிற உணர்வுடன் பாடுபாட்டுச் செய்யப்படுகிற மொழிபெயர்ப்புதான் நமக்கு வேண்டும்.*

3. *சொல்லின் அர்த்தமும் உணர்ச்சியும் மட்டுமின்றி, சொல்லின் ஒலிப்பண்பும் நம் கவனத்துக்கு உரியது. ஒலிக்ள் அர்த்தத்துக்கும் உணர்ச்சிக்கு'ம் வலுவூட்டி நடையைச் சிறப்பிக்கச் செய்தல் வேண்டும். இத்தகைய ஒலி நயம் கைவரப்பெறும் விதத்தில் சொற்களையும்*

தொடர்களையும் தெரிந்துதெடுத்து, வாக்கியங்களைத் தக்கவாறு அமைத்திட வேண்டும்.

சில சொற்களின் ஒலி, அச்சொற்கள் குறிக்கும் பொருள் அல்லது செயல் அல்லது இயல்பினை நம் மனத்தில் தோற்றுவிக்க வல்லதாக இருக்கும் காக்கை கூச்சல், கிளுகிளுத்தல், கிரீச்சிடல், ரீங்காரம் போன்ற சொற்கள் இவ்வகைப்பட்டவையே.

4. எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய எல்லா உறுப்புக்களும் பொருந்தியே வாக்கியங்கள் அமைய வேண்டும் என்பதில்லை. பெயரும் வினையும் தான் பிரதான உறுப்புகள். பெயர் மாத்திரமோ, வினை மாத்திரமோ தனித்து நின்று வாக்கியமாக அமைந்து விடலாம். தமிழில் அடிக்கடி இப்படி அமைவது உண்டு. பெயரோ வினையோ தொக்கி நிற்பது தமிழில் அதிகம். ஆங்கிலத்தில் மிகக் குறைவு. வினை இல்லாத ஆங்கில வாக்கியம் அரிதிலும் அரிது.

5. மொழிபெயர்க்கையில் ஆங்கில வாக்கியத்தைப் பார்த்து, அதன் முறையைப் பின்பற்றி, தமிழிலும் வாக்கியம் தோறும் பெயரும் வினையும் தவறாமல் இடம்பெறச் செய்கிறோம். நான், அவர், அது போன்ற பெயர்ச்சுட்டுக்கள் பல சந்தர்ப்பங்களில் தமிழ் வாக்கியங்களில் வேண்டாத உறுப்பாக அமைந்து மொழிபெயர்ப்புத் தமிழ் நடையைக் கெடுக்கின்றன.

சுயமாக எழுதப்பெற்ற நல்ல தமிழ் வசனத்தையும் மொழிபெயர்க்கப்பட்ட தமிழ் வசனத்தையும் ஒப்பிட்டுப் பார்ப்போமானால், தொக்கி நிற்கும் பெயர்களும் சுட்டுகளும் வினைகளும் முன்னதில் பன் மடங்கு அதிகம் இருப்பது தெரியும். மொழிபெயர்ப்போ இவ்விதம் ஆங்கில முறையைப் பின்பற்றித் தமிழ் வாக்கியங்களை அமைப்பதால் தமிழ் நடையின் வேகம் குறைகிறது. வாசகரின் கவனம் கலைகிறது.

6. ஆங்கில வாக்கிய அமைப்புக்கு நேர் மாறானது தமிழ் வாக்கிய அமைப்பு. பயனிலை முன்னதாகவும் செயப்படுபொருள் முடிவிலும் வருவது ஆங்கிலம். தமிழில் மொழிபெயர்க்கையில் ஆங்கில வாக்கியத்தின் இறுதியிலிருந்து ஆரம்பித்துத் தமிழ் வாக்கியத்தை அமைக்கின்றோம். இப்படி வாலில் ஆரம்பித்துத் தலையை நோக்கிச் செல்ல வேண்டியிருப்பதால் ஏற்படுகிற சிக்கல்கள் ஏராளம்.

இவற்றைச் சமாளித்துப் பொருள் குலையாமல், உணர்ச்சி நயங்கள் கெடாமல், உயிருள்ள நல்ல தமிழில் மொழிபெயர்த்தல் எளிய காரியமன்று. ஆங்கில வாக்கியத்தை உடைத்து இரண்டு மூன்று வாக்கியங்களாகத் தமிழில் அமைக்க முடிந்தால் நல்லதுதான். ஆனால் மூலத்தின் சிந்தனையோட்டமும் அழுத்தமும் வேகமும் கெடாமல் இதைச் செய்தாக வேண்டும். பல சந்தர்ப்பங்களில் இதற்கு வழி இல்லாமற் போகலாம். அப்போது ஆங்கில வாக்கியத்தைக் கூறுகளாகப் பிரித்து ஒவ்வொன்றையும் தனித்தனியே மொழிபெயர்க்கிறோம். பிறகு மூலத்தின் அர்த்தமும் சுவையும் கெடாமல் இந்தக் கூறுகளை ஒன்றிணைத்து நல்ல தமிழ் வாக்கியமாக்க முயலுகிறோம்.

7. மொழிபெயர்ப்பவர் வெவ்வேறு வகை நடையிலும் எழுதிப் பழக்கமும் தேர்ச்சியும் பெறுதல் வேண்டும். குழந்தைகளுக்குக் கதை சொல்லுகிற நடை வேறு; கற்றறிந்தோருக்குச் சிக்கலான விஷயங்களைச் சொல்லுகிற நடை வேறு; வழங்குகிற சொற்களும் வேறு. சொல்லக் கருதும் விஷயத்துக்கு ஏற்பவும் சொல்லும் நோக்கத்துக்கு ஏற்பவும் நடை வேறு படுதல் இயல்பு.

8. கதையானாலும் அரசியலானாலும் கடுமையான அறிவியல் நூலானாலும் சிறு சிறு வாக்கியங்களில், எளிய தமிழில், எல்லோரும் படிக்கக் கூடிய விதத்தில் மொழிபெயர்க்க வேண்டுமெனக் கூறுவது சரியல்ல. யாவற்றையும் எல்லாரும் படிக்கும்படி எளிய நடையில் மொழிபெயர்ப்பது சாத்தியமன்று.

முதலாவதாக மூல நூலின் நடைக்கு ஏற்பவே தமிழ் மொழிபெயர்ப்பின் நடையும் அமைய முடியும். அமையவும் வேண்டும். இரண்டாவதாக, நுட்பமான, சிக்கலான கருத்துக்களையும், தமிழ் வாசகர்கள் அதிகம் படித்துப் பழக்கமில்லாத விஷயங்களையும், எளிய சொற்களைக் கொண்டு சிறு சிறு வாக்கியங் களாக அமைத்து எளிய நடையில் எழுதவேண்டு மெனக் கோருவது முறையாகாது. கற்றறிந்தோருக்கு மட்டுமே விளங்கும் நெடிய கடின பதங்களும் பல சந்தர்ப்பங்களில் அவசியமாகிவிடுகின்றன.[14]

என்று ரா. கிருஷ்ணையா ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கு மொழி பெயர்க்கும்பொழுது மொழிபெயர்ப்பாளர்கள் கவனிக்க வேண்டிய நுட்பங்கள் குறித்து விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளார். மொழி

பெயர்ப்பைக் குறித்து மிக விரிவாகவும் ஆழமாகவும் ஆராய்ந்துள்ளார் என்பதை இக் குறிப்புகளின் மூலம் அறியலாம். இதன் மூலம் மொழிபெயர்த்தல் எளிய செயலன்று என்பது தெரியவரும். குறிப்பாக ஆங்கிலத் தமிழ் மொழிபெயர்ப்புகளை வாசித்த அனுபவத்தின் மூலம் ஆங்கிலத்தின் செல்வாக்குப் பற்றியும், நேருக்கு நேராக மொழி பெயர்த்தலால் ஏற்படும் சில குறைபாடுகளையும் ரா. கிருஷ்ணையா சுட்டிக் காட்டியுள்ளார்.

1. Verb in the Passive Voice, அதாவது செயப்பாட்டு வினையின் பிரயோகம் ஆங்கிலத்தில் மிகவும் சகஜம். தமிழில் இது விரும்பத் தக்கதல்ல. செய்வினைச் சொல்லாக்கமே தமிழ்ப் பண்புக்கு உகந்தது. ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கையில் நம்மை அறியாமலே செயப்பாட்டு வினையையும் அப்படியே தமிழில் எடுத்தாண்டு விடுகிறோம். இந்தப் பழக்கத்தை விட்டொழித்துக் கூடுமான வரை செய்வினையாக்கத்தையே கைக்கொள்ள வேண்டும்.

'படும்' பட்ட என்பவற்றை 'விடும்' என்று அந்தக் காலத்தில் டாக்டர் வரதராசுலு கூறுவது வழக்கமாம். 'முடிவு செய்யப்படும் என்று தெரிவிக்கப்பட்டது - ஏன் இப்படி சுற்றி வளைத்து எழுதி உயிரை வாங்குகிறாய்? முடிவு செய்வதாகத் தெரிவித்தார்கள்' என்று முனைப்பாகவும் நேராகவும் எழுதக் கூடாதா? - இவ்வாறு கேட்டு டாக்டர் வரதராசுலு அந்தக் காலத்துப் பத்திரிகைத் தமிழை அடிக்கடி கடிந்து கொள்வாராம்.

2. ஆங்கிலச் சுட்டுப் பெயரான 'a' தமிழுக்கு அவ்வளவு அவசிய மில்லை. 'a' வரும்போதெல்லாம் 'ஒரு' என்று மொழிபெயர்த்துத் தமிழ் வாக்கியத்தில் சேர்ப்போமானால், அது மொழிபெயர்ப்புத் தமிழாகுமே அன்றி நல்ல தமிழ் ஆகாது.

3. 'and' என்பதை 'மற்றும்' என்று தமிழாக்கும் பழக்கம் தற்போது வெகுவாகப் பரவியிருக்கிறது. கண்ணை மூடிக் கொண்டு 'மற்றும்' என்பதைப் பிரயோகிக்கிறார்கள். தபால் மற்றும் தந்தி இலாகா விஞ்ஞான மற்றும் தொழில்நுட்ப முன்னேற்றம்' என்றுதான் மொழிபெயர்க்க வேண்டுமா? இயந்திர முறை மொழிபெயர்ப்பு உத்திகளில் இதுவும் ஒன்றாகப் பரவியிருக்கின்றது. இதனை நாம் கடைப்பிடிப்பது நல்லதல்ல

4. தமிழில் வேற்றுமை உருபுகள் தொக்கி நிற்பது இயல்பு. வேற்றுமை உருபுகளை விடாமல் சேர்த்து வாக்கியம் அமைப்பது மொழிபெயர்ப்புத் தமிழுக்குரிய அறிகுறி தொக்கி நிற்க வேண்டிய இடங்களில் தொக்கி நிற்கும்படி எழுதுவதுதான் இயல்பான தமிழ்.

5. ஆங்கிலத்தில் பன்மையில் வருவதால் தமிழிலும் பன்மையாகத் தான் மொழிபெயர்க்க வேண்டும் என்பதில்லை. Ten Rupees என்பது

ஆங்கில வழக்கு. ஆனால் பத்துரூபாய் என்பதே தமிழ் மரபு; அதுவே நல்ல தமிழ். பத்து மைல் நடந்தேன். அதன் உயரம் மூன்று மீட்டர் என்கிறோமே தவிர, இவ்விடங்களில் பன்மையைப் பிரயோகிப்பதில்லை.

ஆனால் பலரும் ஆங்கிலத்தைக் காப்பியடித்து - பத்து ரூபாய்கள், பத்துமைல்கள், நான்கு பேர்கள், இரண்டு அடிகள் என்று எழுதுகிறார்கள். சில இடங்களில் பன்மை அவசியமே. ஆனால் 'முத்தமிழ்கள்', 'ஏழுமலைகள்', 'நான்மறைகள்' என்பவற்றைப் போல், மேற்கண்ட பன்மைப் பிரயோகங்களும் விரும்பத்தகாதவையே.

> **Close your eyes என்று ஆங்கிலத்தில் பன்மையில் இருப்பதைத் தமிழில் 'கண்ணை மூடிக்கொள்' அல்லது 'கண்ணை மூடு' என்று ஒருமையில்தான் சொல்ல வேண்டும்[15]**

என மொழிபெயர்ப்பாளர் ரா. கிருஷ்ணையா ஆங்கிலம் - தமிழ் மொழிபெயர்ப்பில் கவனிக்க வேண்டிய சில முறைகளைக் குறிப்பிட்டுக்காட்டியுள்ளார். மொழிபெயர்ப்புப் பணியில் அவருடைய நீண்டகாலப் பழுத்த அனுபவம் பலருக்கும் பயன்படக்கூடியது. ஆனால் இத்தகைய மாபெரும் மொழிபெயர்ப்பாளர்களைத் தமிழுலகம் பொருட்படுத்தவில்லை என்பது வருத்தத்திற்குரியது.

### மரணப் படுக்கையில் கிருஷ்ணையா

காசநோயால் தீவிரமாய்த் தாக்கப்பட்ட நிலையில் அவர் தனது இறுதிக்காலத்தைக் கழித்தார். இசை கேட்பதும் இடை யிடையே படிப்பதும் உறங்குவதுமாக மூன்று வருடங்களைக் கழித்தார். எங்கும் வெளியில் செல்ல முடியாத நிலையில் பீத்தோவனின் சிம்பொனி இசை கேட்பதில் மிகுந்த நாட்டமுடையவராக இருந்துள்ளார். தலித்துகள், இட ஒதுக்கீடு பற்றி வரும் செய்திகளை வெட்டி ஒட்டி வைக்கும் பணியையும் செய்துள்ளார். தமிழில் வெளிவராத தாஸ்தோயெவ்ஸ்கியின் நாவல்களை மொழிபெயர்க்க விரும்பிய தாகவும் ஆனால் தன்னுடைய வாழ்நாளில் அதைச் செய்ய முடியாமல் போயிற்று என்றும் கூறியுள்ளார்.

> ஏராளமான சிம்பொனிகளையும், ஒபெராக்களையும் இசையமைத்த மொசார்ட் (1756-1791) தன் மரணத்தை முன்னுணர்ந்தார். மிகவும் பலவீனமான அவருக்கு வலிப்பும் உணர்விழப்பும் அடிக்கடி வந்து முடக்கு வாதத்தால் தாக்குண்டு படுத்த படுக்கையானார். அப்போதும் மொசார்ட் தனது மரண நேர இசைக் கான குறிப்புகளைத் தானே உருவாக்கி அதை நிறைவேற்றும் பொறுப்பைச் சிஷ்யன் சுஸ்மேரிடம் ஒப்படைத்தார். அதன் சில இசைப்பகுதிகள் மொசார்ட்

மரணத்தின் விளிம்பை நெருங்கிக் கொண்டிருந்த போது அவரின் நண்பர்களால் இசைக்கப் பெற்றது – இதைச் சொல்லிவிட்டுக் கண்ணை மூடியபடியிருந்த கிருஷ்ணையா புரியாத மொழியில் சில வரிகளை முணுமுணுத்தார். அது ரஷ்யப் பாடல். வான்செகின் எழுதியது. அதைப் பிறகு கிருஷ்ணையா தமிழில் சொன்ன போது அவரது இறுதிக் காலப் பாடலோ எனத் தோன்றியது.

காலஜன்னலில் கரையும் ஒளியை
இரவின் முகத்தில் மீண்டும் எழுதியெழுதி
கண்களில் திரை படரும்போதும்
மீண்டும் அருகில் போய்
கண்கொள்ள விரும்புகிறேன்
முழுப்பூவுலகை
முழுக்கடல்வெளியை
பழகிக் கழித்த
தோழமை நிஜமான நாட்களை
மனிதனது முழு அர்ப்பணிப்பை

தனது இரு மகன்களையும் இசைப்பிரியர்களாக வளர்த்தேன் என்றார். தனது துணைவியாருக்கு மொசார்ட் மிகவும் பிடிக்கும் என்றார். புரட்சிக் கருத்துகளை இசை மூலம் வெளியிடவேண்டு மென்றால் மக்கள் மனதில் சகல உணர்வுகளையும் உணர்வெழுச்சிகளையும் அறிந்திருக்க வேண்டும்; கோபங்களின் உச்சஸ்தாயிகள் மட்டுமே புரட்சிகர இசையாகி விடாது என்றார்.

அதிகாரத்துவ எண்ணத்திற்கும், நிலப்பிரபுத்துவத் திற்கும் எதிராக இசைக்கப்பட்ட மொசார்ட்டின் ஒபெராக்கள் (குறிப்பாக நகைச்சுவை நாடகங்களுக்கு அவர் இசைத்தவை, சிம்பொனிகள்) புதிய சமூக மாற்றத்திற்கு இட்டுச் செல்லும் உணர்வெழுச்சிகளைப் பதிவு செய்த பீத்தோவன் சிம்பொனிகள்..... வாழ்வின் சகல பக்கங்களையும் வெளிப்படுத்தும் விதமாய் மக்கள் கோருகிற இசைக் கலாச்சாரத்தை தேசிய சுதந்திரம் வேண்டித் தோற்றுவித்த ரஷ்ய இசைமேதை சாய்கோவ்ஸ்கி...... பிரெஞ்சுப் புரட்சியின்போது அந்நாடெங்கும் ஒலித்த மொசார்ட் இசை........ எனப் பேசிக் கொண்டிருந்தார் கிருஷ்ணையா.

சமூக முரண்களை, மனிதத் துயருணர்வுகளின் கொந்தளிப்பை, வேதனை அழுத்தத்தில் ஊற்

றெடுக்கும் மனவெழுச்சிகளைச் சிம்பொனிகளாய்த் தந்த பீத்தோவனை நினைவுகூர்ந்தார். நோய்மை கொண்ட பழைய உலகின் சவ ஊர்வலாமாகவும், மக்கள் தலைவன் மாவீரன் நெப்போலியன் பேரெழுச்சி யாகவும் இசையமைத்த பீத்தோவனின் மூன்றாவது சிம்பொனியான Eroica-வை (இது பீத்தோவனால் நெப்போலியனுக்கு அர்ப்பணிக்கப்பட்டது) தான் உற்சாகம் குன்றிய போதெல்லாம் கேட்டுக்கேட்டு புத்துணர்ச்சி அடைந்ததாகக் கிருஷ்ணையா சொன்னார்.

எட்டுச் சிம்பொனிகளைத் தந்த பிறகு நெப்போலியனின் வீழ்ச்சியை ஒட்டி நேர்ந்த நிகழ்வுகளால் மனம் பாதிப்புற்றுப் பீத்தோவன் பதினொரு ஆண்டுகள் எவ்வொரு புதிய இசையாக்கத்திலும் ஈடுபடாமல் இருந்ததை (அதன்பின் பீத்தோவன் தன் வாழ்நாளில் ஒரேயொரு சிம்பொனியைத்தான் இசைத்தார்) சுட்டிக்காட்டிய கிருஷ்ணையா சோவியத் யூனியனின் வீழ்ச்சி தன்னை வெகுவாய்ப் பாதித்து முடக்கி விட்டதாய்ச் சொன்னார்[16]

இந்த அனுபவத்தை ஜெ. சாந்தாராம் 'பேனா நிழலில் தோழர் கிருஷ்ணையா' என்ற சிறு நூலில் பதிவு செய்துள்ளார்.

இடையறாது மொழிபெயர்ப்புப் பணி செய்து வந்த ரா. கிருஷ்ணையா 1996ஆம் ஆண்டு மறைவுற்றாலும், அவர் மொழிபெயர்த்த ஏராளமான பக்கங்களைக் கொண்ட நூல்கள் அவரை என்றென்றும் நினைவுபடுத்தும்.

## குறிப்புகள்

1. பேனா நிழலில் தோழர் கிருஷ்ணையா, (தொகு.) ஜெ. சாந்தாராம், அலைகள் வெளியீட்டகம், சென்னை, பதி. மே 5, 1998, ப. 2.
2. மேற்படி, ப.12.
3. மேற்படி, ப.13.
4. மேற்படி.
5. சோவியத் இலக்கியம் நோக்கும் போக்கும் (தமி.) சா.செகத்ரட்சகன், அப்பல்லோ வெளியீடு, சென்னை, பதி. மே.1, 1984, ப.7.
6. புத்துயிர்ப்பு, லேவ்தல்ஸ்தோய் (தமி.) ரா. கிருஷ்ணையா, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, பதி., 1979, ப.4.
7. குல்சாரி, சிங்கிஸ் ஐத்மாத்தவ் (தமி.) ரா. கிருஷ்ணையா, ராதுகா பதிப்பகம், மாஸ்கோ, இ. பதி. 1985, ப.1.

8. அந்தோன் செகவ் சிறுகதைகளும் குறுநாவல்களும் (தமி.) ரா. கிருஷ்ணையா, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, பதி.1975, முன். ப.11.

9. உலகைக் குலுக்கிய பத்துநாட்கள், ஜான் ரீடு (தமி.), ரா. கிருஷ்ணையா, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, முன்., ப.2.

10. கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை, மார்க்ஸ், எங்கெல்ஸ் (தமி.), ரா.கிருஷ்ணையா, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, பதி.1975, ப. 7-8.

11. மேற்படி.

12. மேற்படி, ப.101.

13. உங்கள் நூலகம், ஜன. - பிப்ரவரி 2005, 29ஆவது சென்னைப் புத்தகக் காட்சிச் சிறப்பிதழ் (கட்) மொழிபெயர்ப்பாளர் சிந்தனைக்கு, ரா.கிருஷ்ணையா, ப.19.

14. மேற்படி, பக்.20-21.

15. பேனா நிழலில் தோழர் கிருஷ்ணையா (தொகு.) ஜெ. சாந்தாராம், அலைகள் வெளியீட்டகம், சென்னை, பதி. மே 5, 1998, ப.3-5.

16. மேற்படி.

# சரஸ்வதி ராம்னாத்

ஏறத்தாழ நாற்பது ஆண்டுகள் சிறந்த மொழிபெயர்ப்பாளராகத் தமிழ்ச் சூழலில் திகழ்ந்தவர் சரஸ்வதி ராம்னாத். தமிழிலிருந்து இந்தி மொழிக்கும் இந்தி மொழியிலிருந்து தமிழுக்கும் மொழிபெயர்ப்புச் செய்து சிறந்த இலக்கியப் பணியாற்றிய பெருமைக்குரியவர். சரஸ்வதி ராம்னாத் 7-9-1925 ஆம் நாளன்று பிறந்தார். கோயம்புத்தூர் மாவட்டம் தாராபுரத்தைச் சேர்ந்தவர். வித்வான் (இந்தியில், சென்னைப் பல்கலைக்கழகம்); பிரவீன் (இந்திப் பிரச்சாரசபை) நிலையில் தேர்ச்சி பெற்றவர். தமிழில் சிறந்த எழுத்தாளராகத் திகழ்ந்தவர். இவருடைய எழுத்துப் பணிக்காகப் பல விருதுகளும் சிறப்புகளும் பெற்றவர்.

1993-ஆம் ஆண்டு சரஸ்வதி ராம்னாத் தமிழில் சிறந்த மொழிபெயர்ப்புக்கான சாகித்திய அகாதெமி விருதும், இந்திப் பிரச்சார்சங் விருதும் பெற்றார். 1994-ஆம் ஆண்டில் கேந்திரிய இந்தி சன்ஸ்தான் விருதும், இந்தி சன்ஸ்தான் விருதும் பெற்றார். மேலும் பாரதீய அநுவாட் பரிஷத் துவிவாகிஷ் புரஸ்கார் (Dwivagish Puraskar) விருதும் இவருக்குக் கிடைத்தது. இந்தி மொழிக்கு இவர் ஆற்றியுள்ள சேவையைப் போற்றும் வகையில் மத்திய அரசு விருது வழங்கி யுள்ளது. இவருடைய ஒட்டு மொத்தமான சேவையைப் பாரரட்டும் வகையில் மேற்கு வங்கத்தில் இயங்கும் சாந்திநிகேதன் பல்கலைக் கழகம் 1977 ஆம் ஆண்டு செப். 17ம் நாள் விருதளித்துப் பெருமைப் படுத்தியது. தமிழின் முக்கியப் படைப்பாளிகள் பலரை இந்தி இலக்கிய உலகத்துக்கு அறிமுகப்படுத்தியிருக்கும் இவர், இந்திமொழிப் படைப்பாளிகளையும் இந்தி வழியாகப் பிறமொழிப் படைப்பாளி களையும் தமிழில் அறிமுகப்படுத்தியவர். சில நூல்களில் சரஸ்வதி ராம்னாத் என்றும் சில நூல்களில் சரஸ்வதி ராம்நாத் என்றும் இவர் பெயர் இடம்பெற்றுள்ளது. இந்நூலைப் பொறுத்தமட்டில் சரஸ்வதி ராம்னாத் என்றே குறிப்படப்படுகின்றது.

### இந்தி மொழி கற்றுக் கொண்ட சூழல்

விடுதலைக்கு முன் நிலவிய இலக்கியச் சூழல் சரஸ்வதி ராம்னாத் இந்தி மொழி கற்றுக்கொள்ள ஓர் உந்து சக்தியாக இருந்துள்ளது. இந்த அனுபவத்தைப் பற்றி அவர் நினைவுகூரும் பொழுது,

> அது காந்தியச் சூழல். நாட்டில் தேசிய உணர்வு மக்களின் உள்ளங்களில் கிளர்ந்திருந்த காலம். தேசியத்தின் ஓர் அம்சமாக இந்தி மொழி கற்றுக் கொள்வதும் இராட்டை நூற்பதும் கதர் அணிவதுமாக இருந்த காலம். முதன்முறையாக மக்கள் மஞ்சள் பெட்டிக்கு ஓட்டுப் போட்டுத் தமிழ்நாட்டில் காங்கிரஸ் மந்திரிசபை அமைந்தது. பதின்மூன்றாவது, பதினாலாவது வயதில் – திருமணத்திற்கு முன்பு நானும் இன்னும் நாலைந்து சிறுமிகளும் திருமதி சம்பூரண அம்மாளிடம் (எழுத்தாளர் க்ருஷாங்கினியின் தாயார்) உற்சாகத்தோடு இந்தி கற்கச் சென்றோம். ஆனந்த விகடனில் இந்திப் பாடங்கள் வெளிவந்து கொண்டிருந்தன. அச்சமயம் வங்க, மராத்தி, இந்தி மொழிப் படைப்புகளின் மொழிபெயர்ப்புகள் ஆனந்த விகடன், கலைமகள் போன்ற பத்திரிகைகளில் வெளிவந்து கொண்டிருந்தன. வடுவூர் துரைசாமி ஐயங்கார், ஆரணி குப்புசாமி முதலியார் ஆகியோரின் படைப்புகளைப் படித்துக் கொண்டிருந்தவர்களை இவ்வித்தியாசமான படைப்புகள் பெரிதும் கவர்ந்தமை மட்டுமல்ல, தேசிய உணர்வையும் ஊட்டின. குறிப்பாக 'ஆனந்தமடமு'ம், வ.வே.சு. ஐயர் நடத்திய 'பாலபாரதி'யும் எழுச்சியூட்டும் படைப்புகளைக் கொண்டிருந்தன. திருமணத்திற்குப் பின்னர் எனது இந்திப் படிப்பு வீட்டிலேயே தொடர்ந்தது'

என்று கூறியுள்ளார்.

தான் கற்றுக் கொண்ட இந்தி மொழியில் தான் படித்த சிறந்த படைப்புகளைத் தமிழ் வாசகர்களுக்குத் தர வேண்டும் என்ற உந்துதல் காரணமாக மொழிபெயர்ப்பில் ஈடுபட்டார். தமிழிலேயே சொந்தப் படைப்புகளை உருவாக்கினாலும், மொழிபெயர்ப்பில் இவருக்கு மிகுதியான ஈடுபாடு இருந்து வந்துள்ளது. 1942 ஆம் ஆண்டில் சரஸ்வதி ராம்னாத் சென்னை வந்த பின்னர்த் தனது எழுத்துப் பணியைத் தொடங்கியுள்ளார். மொழிபெயர்ப்பிலும் தனது ஈடுபாட்டை வெளிப்படுத்தும் வகையில் இந்தி மொழியிலிருந்தும், இந்தி வழியாகப் பிறமொழிப் படைப்புகளையும் மொழிபெயர்க்கத் தொடங்கியுள்ளார். தனது முதல் மொழிபெயர்ப்பு அனுபவத்தைப் பற்றி இவர் குறிப்பிடும் பொழுது

> தினமணி கதிர் ஆசிரியர் துமிலன், எனக்குப் பெரும் ஆதரவளித்தார். முதலில் 'காவேரி'யில் தான் என் மொழிபெயர்ப்பில் 'வீரசுதந்திரம்' என்கிற குஜராத்தி நாவல் வெளிவந்தது.

**தொடர்ந்து சுதேசமித்திரன், தினமணிகதிர், தீபம், தாமரை, கலைமகள் போன்ற இதழ்களுக் காக மொழிபெயர்த்துத் தந்தேன். ராஜநர்த்தகி என்னும் குஜராத்தி நாவலின் தமிழ் மொழி பெயர்ப்பை ஸ்டார் பதிப்பகம் வெளியிட்டது. தொடர்ந்து தமிழ்ப் புத்தகாலயம் வழியாகவும் என் நூல்கள் வந்தன. தொடர்ந்து வானதிப் பதிப்பகம் பிரசுரித்து வருகிறது. தொடக்கத்தில் பத்திரிகைகளில் இருந்த வரவேற்பு வரவரக் குறைந்துவிட்டது[2]**

என்று கூறியுள்ளார்.

கோபுர் கா தீப் (அகிலன் சிறுகதைகள்), நாரி (அகிலனின் பெண்), ஜெயகாந்தன் கதைகள், 'பாரதி லலித் நிபந்த' (பாரதி நூல்கள்), ரா.சு. நல்ல பெருமாளின் போராட்டங்கள், தமிழ்ச் சிறுகதைகள், தற்காலத் தமிழ்க் கதைகள், 'பவ்பதகி' (சிறந்த தமிழ் எழுத்தாளர்கள் சிறுகதைகள்) ஆகிய படைப்புகளைத் தமிழிலிருந்து இந்தி மொழியில் மொழி பெயர்த்து வழங்கியுள்ளார் சரஸ்வதி ராம்னாத்.

புகழ்பெற்ற எழுத்தாளரான பிரேம்சந்த் அவருடைய மகன் அமிருதராய் நடத்திய 'கஹானி', மாத்ருபூமி பிரசுரித்த 'யுகபிரபாத்' 'தர்மயுக், 'சாரிகா', 'ஆஜ்கல்' போன்ற பல பத்திரிகைகளுக்காகத் தமிழ்ப் படைப்புகள் பலவற்றை இந்தியில் மொழிபெயர்த்துள்ளார். ஜெயகாந்தன், அகிலன், தி. ஜானகிராமன், தொ.மு.சி. ரகுநாதன், ஆர்.வி. சின்னப்ப பாரதி, ஆதவன், சுரா போன்ற முன்னணி எழுத்தாளர்களின் படைப்புகளை இந்தியில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார்.

**இன்று முன்னணியில் இருக்கும் எழுத்தாளர்கள் அனைவரையும் இந்திக்கு அறிமுகப்படுத்தியுள்ளேன். அவர்கள் கதைகளில் ஒன்றையாவது நான் மொழி பெயர்த்துள்ளேன். இதனை ஒரு கடமையாகத்தான் செய்கிறேன். பெரிதாகப் பணம் ஏதும் பெறவில்லை. ஒரு சில வாசகர்களின் கடிதங்கள் தொடர்ந்து வருகின்றன. வெளியீட்டாளர்களைப் பொறுத்த வரையில் ஆதரவு இல்லையென்றுதான் சொல்ல வேண்டும். இதற்குப் பல காரணங்கள் சொல்கிறார்கள். தமிழ்ப் படைப்புகளின் இந்தி மொழியாக்கத்திற்குத் தமிழ்நாட்டில் விற்பனை இல்லை. அரசின் ஆதரவோ நூலக விற்பனையோ இல்லை. பாரதீய ஞானபீடம், என்.பி.டி. சாகித்ய அகாதெமி போன்றவை இத் துறையில் பாராட்டத்தக்க பணியைச் செய்திருக் கிறார்கள். ஆனால், இவ்வளவு பெரிய இந்தியாவுக்கு இம்மூன்று நிறுவனங்களின் பணி எப்படிப் போதும்?[3]**

என்று மொழிபெயர்ப்பின் ஆதரவற்ற நிலையைச் சுட்டிக்காட்டியுள்ளார் சரஸ்வதி ராம்னாத்.

### சரஸ்வதி ராம்னாத்தின் மொழிபெயர்ப்புகள்

இந்தி மொழிப் படைப்புகளைத் தமிழில் அறிமுகம் செய்வதில் முன்னணி மொழிபெயர்ப்பாளராகச் சரஸ்வதி ராம்னாத் திகழ்ந்தார்.

இந்தி மொழியில் ஸ்ரீலால் சுக்ல எழுதிய **தர்பாரிராகம்**, ஸ்ரீராமச்சந்திர தாகூர் எழுதிய **ராஜநர்த்தகி**, கே.எம். முன்ஷி எழுதிய **ஜயதேவன் அல்லது கூர்ஜரத்தின் செல்வன்**, கன்யாலால் மனேக்லால் முன்ஷி எழுதிய **ஜெயசோமநாத்** (குஜராத்தி), பாலி கிருஷ்ண பகவந்த போர்கர் எழுதிய **தேவதாசி** (மராட்டி), சுமதிதேவி தன்வாடே எழுதிய **புயலும் ஒளியும்**, மற்றும் **வீரசுதந்திரம், சப்தபதி, கங்கைதாய்** ஆகிய சிறந்த நாவல்களைச் சரஸ்வதி ராம்னாத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். **லேடி டாக்டர், இதுவா நாகரிகம், சேடன், கதாபாரதி, ராதிகா** (இந்தி) **பஹ்லராஜா, நதி ஓரத்து சிப்பிகள், இந்திய மொழிச் சிறுகதைகள்** (22 சிறுகதைகள்), **பிரேம்சந்த் மோகன் ராகேஷின் நாடகங்கள்** ஆகியன இவருடைய மொழிபெயர்ப்புகளாகும். இந்தி மொழியில் வெளிவந்துள்ள சிறந்த சிறுகதைகளை மொழிபெயர்த்து அவை தொகுப்புகளாக வெளியிடச் செய்துள்ளார். சரஸ்வதி ராம்னாத் மொழிபெயர்ப்பில் **'கதாபாரதி' – இந்திச் சிறுகதைகள்** எனும் தலைப்பில் நேஷனல் புக் டிரஸ்ட் ஒரு சிறுகதைத் தொகுப்பு 1972ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளது. இதில் 1. அவள் சொன்னாள் 2. சவக்கொடி 3.சோதா 4. கொலுசு 5. பிறர் சுகம் 6. கதலின் தியாகம் 7. மூன்றாவது சபதம் 8. இலண்டனில் ஓரிரவு 9. மணங்கள் 10. ரொட்டி 11. கோடைக்காலம் 12. சவயாத்திரை 13. பகலுணவு 14. வேலிக்கு இரு புறமும் 15. சுகம் ஆகிய 15 சிறுகதைகள் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன.

இவை முறையே சந்திரதர்சர்மா குலேரி, பிரேம்சந்த், ஜயசங்கர் பிரசாத், ஜைனேந்திரகுமார், யஷ்பால், ராங்கேயராகவ், பணீஷ்வர்நாத் ரேணு, நிர்மல்வர்மா, ராஜேந்திரயாதவ், மோகன் ராகேஷ், கமலேஷ்வர், ஸ்ரீகாந்த்வர்மா, அமர்காந்த், ஞானரஞ்சன், காசி நாத்சிங் ஆகிய இந்தி மொழியின் சிறந்த எழுத்தாளர்களின் சிறுகதைப் படைப்புகள். நாம்வர்சிங் என்பவரால் தொகுக்கப்பட்டு இந்தி மொழியில் ஒரு தொகுப்பாக வெளியிடப்பட்டுள்ளன. இருபதாம் நூற்றாண்டின் இந்தி மொழிச் சிறுகதைப் படைப்புகளைச் சான்றுக்கு ஒன்றாக அறிந்து கொள்ள இத்தொகுப்பு பயனுள்ளதாகும். சரஸ்வதி ராம்னாத் அவர்களின் இம்மொழிபெயர்ப்பு முயற்சியால் இந்தி மொழிச் சிறுகதைகளின் தன்மைகள், போக்குகள், புதிய முயற்சிகள் ஆகியன

பற்றியும் சிறந்த படைப்பாளிகளையும் இந்த மொழிபெயர்ப்பின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. இதுபோன்றே **'இந்திச் சிறுகதைகள்'** எனும் தலைப்பில் 1. சவக்கொடி, 2. அவள் சொன்னாள் 3. சோதா, 4. அடைக்கலம், 5. கங்கணம், 6. பெரியம்மா, 7. யாரிடம் சொல்வேனடி தோழி? 8. சத்திய வேட்கை, 10. மிட்டாய்க்காரன், 11. அல்லாவின் ராமன் 12. ஓடும் ரயில் 13. தவணை 14. கவிஞரின் துணைவி, 15. தத்சத் 16. வேதனை 17. பாகரின் ஆசை 18. வழி தவறியவள் 19. லைலாவின் திருமணம் 20. ரஹ்மானின் மகன் 21. சோப்பு 22. புள்ளிமான் 23. கதலின் தியாகம் ஆகிய இந்தி மொழியில் ஜைனேந்திர குமார் தொகுத்துள்ள இந்நூலைச் சரஸ்வதி ராம்நாத் தமிழில் மொழிபெயர்த்துச் சாகித்திய அக்காதெமி வெளியீடாக 1968 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளது.

நாம்வர்சிங் தொகுப்பில் இடம்பெற்றுள்ள ஒரு சில கதைகள் ஜைனேந்திரகுமார் தொகுப்பிலும் இடம்பெற்றுள்ளன. அதனால் தமிழில் இரு தொகுப்பிலும் சவக்கொடி, அவள் சொன்னாள், சோதா, கதலின் தியாகம் ஆகிய கதைகள் இடம்பெற்றுள்ளன. இத் தொகுப்பில் முறையே பிரேம்சந்த், சந்திர தர்சர்மாகுலேரி, ஜயசங்கர் பிரசாத், பிருந்தாவன்லால்வர்மா, ராஜாராதிகா ரமணபிரசாத் சிங், விச்வம்பர் நாத் கௌசிக், சதுர்சேன் சாஸ்திரி, சியாராம் சரண் குப்தா, சுதர்சன், பகவத் பிரசாத் வாஜ்பாயி, பாண்டேய பேசன் சர்மா உக்ர, இலாசந்திர ஜோஜி, பகவதி சரண்வர்மா, யஷ்பால், ஜைனேந்திரகுமார், சந்திரகுப்த வித்யாலங்கார், உபேந்திரநாத் அஷ்க், ஆக்ஞேய், ராதாகிருஷ்ண, விஷ்ணுபிரபாகர், நிர்குண், சந்திரகிரண், சோணரேக்சர், ரங்கேய ராகவ் ஆகியோரின் கதைகள் இடம்பெற்றுள்ளன.

மூன்றாவது தொகுப்பாக இடம்பெற்றுள்ள **'இந்திச் சிறுகதைகள்'** எனும் பீஷ்ம சகானி தொகுத்துள்ள சிறுகதைகள் சரஸ்வதி ராம்நாத் அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. இத்தொகுப்பினை 1999ஆம் ஆண்டு சாகித்திய அகாதெமி வெளியிட்டுள்ளது. இதில் 30 சிறுகதைகள் இடம் பெற்றுள்ளன. 1. இதயராணி, 2. இடிபாடுகளின் ராஜா, 3. இரு நம்பிக்கைகள் 4. போலாராமின் ஆத்மா 5. பொழுது புலரும் முன்னர் 6. பகல் உணவு 7. வாங்சூ 8. இழந்த திசைகள் 9. எங்கே லக்ஷ்மி சிறைப்பட்டு நிற்கிறாளோ 10. செர்ரிமரம் 11. அன்னபட்சி தனித்தே இருக்கும் 12.கோசாயி 13.என்னுடைய எதிரி 14. பிரேதத்திற்கு முக்தி 15. நன்ஹோா 16. கவிந்துவரும் மேகங்கள் 17. பறவைகள் 18. திரிசங்கு 19. திரும்பி வருதல் 20. பேப்பர் வெயிட் 21. கிளிகள் 22. நரகம் 23. சாலை, 24. தண்டோரா 25. மோதல் 26. தடங்கல் 27. பாசவலை

28. போய்வாருங்கள் பாபா 29. கேக் 30. மனமாற்றம் ஆகிய சிறுகதைகள் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன.

இவை முறையே பணிஷ்வர்நாத் ரேணு, மோகன் ராகேஷ், அமிருதலால் நாகர், ஹரிசங்கர் பார்சாயி, அமிருதராய், அமர்காந்த், பீஷ்மசகானி, கமலேஷ்வர், ராஜேந்திர யாதவ், ராம்குமார் வர்மா, மார்கண்டேயா, சேகர் ஜோஷி, கிருஷ்ண பல்தேவ் வைத், சைலேன் மடியானி, சிவபிரசாத்சிங் கிருஷ்ணா சோப்தி, நிர்மல்வர்மா, மனு பண்டாரி, உஷா பிரியம்வதா, கிரிராஜ கிஷோர், ஹிருதயேஷ், ஷானி, ராமதர்ஷ் மிஸ்ரா, ஞானரஞ்சன், முத்திரா ராட்சஸ், ரமாகாந்த், கோவிந்த மிஸ்ர, காசிநாத்சிங், அஸ்கர் வஜாகத், மிதிலேஷ்வர் ஆகிய 30 படைப்பாளிகளின் சிறுகதைகள் இத்தொகுப்பில் வெளிவந்துள்ளன.

இந்தி எழுத்தாளர் பீஷ்ம சகானி இச்சிறுகதைகளைத் தேர்ந்தெடுப்பதில் ஏற்பட்ட சிக்கல்களை இந்நூலின் முன்னுரையில் வெளியிட்டுள்ளார்.

> **கடந்த முப்பத்து ஐந்து ஆண்டுகளாக இந்திச் சிறுகதைத் துறையில் குறிப்பிடத்தக்க மகத்தான படைப்புகள் வெளிவந்துள்ளன. இன்றும் வெளிவந்து கொண்டிருக்கின்றன என்பதால்தான் எனது பட்டியல் நீண்ட கொண்டே போயிற்று. முன்பைவிட அதிகமாகவே படைப்பாளிகள் இத்துறையில் மிகுந்த தீவிரத்துடன் செயலாற்றிக் கொண்டிருந்தனர். மற்றும் சிறுகதை இலக்கியத்தைச் செழுமையானதாக, வளமுள்ளதாகச் செய்து கொண்டிருக்கின்றனர் என்பதும் இதற்கொரு காரணம்[4]**

இந்திமொழியில் சிறுகதையின் களம் விரிந்து பரந்து வளமான இலக்கியப் பரப்பை உருவாக்கியுள்ளது என்பதைச் சரஸ்வதி ராம்னாத் தமிழில் மொழிபெயர்த்துள்ள இம்மூன்று சிறுகதைத் தொகுப்புகளின் வழியாகச் சுமார் 70 கதைகளின் மூலம் மிக விரிவாக அறிந்து கொள்ளலாம். இந்த வகையில் சரஸ்வதி ராம்னாத் இந்தி- தமிழ் மொழிக்கு ஓர் இணைப்புப் பாலமாகச் செயல்பட்டுள்ளார்.

இந்தச் சிறுகதைகள் மட்டுமல்லாமல் **'அரையும் குறையும்', 'புதுவாழ்வு', 'அரல்தி'? 'இந்திய மொழி நாடகங்கள்'** எனும் தலைப்புகளில் இந்தி மொழி நாடகங்களையும் சரஸ்வதி ராம்னாத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இதில் 1993ஆம் ஆண்டு 'இந்திய மொழி நாடகங்கள்' சிறந்த மொழிபெயர்ப்பு நூலுக்கான சாகித்திய அகாதெமி பரிசு சரஸ்வதி ராம்னாத் அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளது.

இவையல்லாமல் பிரகாஷ் சந்திரகுப்தா எழுதிய **'பிரேம்சந்த் வாழ்க்கை வரலாறு'** சரஸ்வதி ராம்நாத் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டு, சாகித்திய அகாதெமியால் வெளியிடப்பட்டுள்ளது. கோபிநாத் தல்வல்கர் எழுதிய **'ஆறுமகான்களின் கதைகள்'** எனும் நூல் இவருடைய மொழிபெயர்ப்பில் நேஷனல் புக் டிரஸ்ட் மூலம் வெளியிடப்பட்டுள்ளது. இதே போன்று **'ரங்கையராகவ்'** எனும் இந்தி எழுத்தாளரின் வாழ்க்கை வரலாற்றை இவருடைய மொழி பெயர்ப்பில் சாகித்திய அகாதெமி வெளியிட்டுள்ளது.

சரஸ்வதி ராம்னாத் **'கம்பராமாயணம்'** இந்தி மொழி பெயர்ப்பிற்காகக் குடியரசுத் தலைவர் விருது பெற்றுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. மொழிபெயர்ப்புகள் மட்டுமல்லாமல் படைப் பாற்றலிலும் தன்னுடைய முத்திரையைப் பதித்துள்ளார். தமிழிலும் இந்தியிலும் இவருடைய வெளியீடுகள் 140. 'பாரதநாட்டு ஆறுகளின் கதை' (On Indian Rivers) 5 பதிப்புகள் வெளியாகியுள்ளது. இந்திய மாநிலங்கள் (இந்திய மாநிலங்கள் பற்றி 6 புத்தகங்கள்), நாடோடிக் கதைகள் (5 பதிப்புகள்) மகாபாரதக் கதைகள் (5 பதிப்புகள்) பீர்பால் கதைகள், மலைநாட்டு நாடோடிக் கதைகள் (இந்தியில் மொழி பெயர்க்கப்பட்டவை; கோபுர் காதீப் (Gopur ka Deep) பா பட்டகி (Phau Phatagi), என இவருடைய மொழிபெயர்ப்புகள், படைப்புகள் குறித்து இந்திய எழுத்தாளர்கள் பட்டியல் வரிசையில் குறிப்பிடப்பட்டுள்ளன.

நாவல்கள், சிறுகதைகள், அனைத்தும் சரஸ்வதி ராம்னாத்தின் மொழிபெயர்ப்பில் அவை சிறந்த படைப்புகளாகத் திகழுகின்றன. மொழிபெயர்ப்பு என்ற உணர்வு வாசகர்களுக்கு உருவாகாமல் மொழி பெயர்ப்பது என்பது ஓர் அரிய சாதனையாகக் கருதப்படுகிறது. இவருடைய மொழிபெயர்ப்பு நாவலைப் படிப்போர் எவரும் இவருடைய கலைத்திறனை நன்கு அறிந்து கொள்வார்கள்.

## இந்தியப் பெண் எழுத்தாளர்களின் சிறுகதைகள்

சர்வதேசப் பெண்கள் ஆண்டையொட்டி (1990) இந்தியப் பெண் எழுத்தாளர்களைத் தமிழுக்கு அறிமுகப்படுத்தும் முயற்சியை மேற்கொண்டு 'இந்தியப் பெண் எழுத்தாளர்களின் சிறுகதைகள்' எனும் தலைப்பில் 19 எழுத்தாளர்களின் சிறுகதைகளைத் தமிழில் மொழிபெயர்த்து ஒரு தொகுப்பாக வெளியிட்டுள்ளார். இது ஓர் அரிய, தனித்துவம் வாய்ந்த முயற்சியாகச் சரஸ்வதி ராம்னாத் அவர்களால் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

> **இந்திய மொழிகளில் பெண் எழுத்தாளர்கள் விரல் விட்டு எண்ணக் கூடியவர்கள்தான். பெண்களின் இலக்கிய வளர்ச்சி, அவர்களது எழுத்தாற்றலை**

அறிமுகப்படுத்த வேண்டும் என்ற ஆவலில் மிகுந்த சிரமத்துடன்தான் இக்கதைகளை என்னால் திரட்ட முடிந்தது. இவை யாவுமே மிகச் சிறந்த இலக்கியப் படைப்புகள் என்று துலாக்கோலிட்டு நான் சீர்தூக்கி உங்கள் முன் வைக்கவில்லை. பல்வேறு மொழிகளின், எழுத்துகளின் பிரதிநிதித்துவம் இதில் இடம்பெற் றுள்ளது. படித்துப் பாருங்கள், இத்தொகுப்பிலுள்ள கதைகளில் சமகால வாழ்க்கை, அதன் பிரச்சினை களுடன், பல்வேறு வித்தியாசமான தளங்களிலே, மாறிய மண்ணின் மணத்துடன் கூட ஆழ்ந்து, கூர்ந்து பார்க்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு கதையிலும் பெண்களின் பிரச்சினைதான் தொடப் பட்டுள்ளது. வெறும் கதையாக இவை இல்லாமல், அவலப்பட்டுப் போன, சிதைந்து, தனது தனித் தன்மையை இழந்துவிட்டவர்களை அனுதாபத்துடன் இயல்பாகப் பார்த்துள்ளனர். மிகையாக, போர்க் குரலெடுத்து அறைகூவி அழைக்காமலிருப்பது குறிப்பிடத்தக்கது. இந்தியப் பெண்கள் பொதுவாகச் சமுதாயத்தினால் அங்கீகரிக்கப்பட்ட நியாயங் களுக்கும், நியதிகளுக்கும் உட்பட்டுத்தான் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். எனினும் இன்றைய பெண் குலம், தங்களது தனித்தன்மையை, சுதந்திரத்தை, ஆற்றலை, சுய சிந்தனையை உரத்த குரலில் வெளிப் படுத்தும் துணிவும் பெற்றிருப்பது பாராட்டுதலுக் குரியது. பெண்களின் பிரச்சினைகள் பல்வேறு கோணங்களிலிருந்து அலசப்பட்டிருக்கும் இக் கதைகளில் நம்நாட்டின் பல்வேறு மொழிகளில் பெண் எழுத்தாளர்களின் இப்படைப்புகளின் ஊடாக மெல்லிய சரடு போல் நமது கலாசாரமும், பண்பும், பின்னிப் பிணைந்திருப்பதைக் காணலாம்.[5]

இத்தொகுப்பில் அடங்கியுள்ள இக்கதைகளின் தன்மை, படைப்புகள் குறித்துச் சரஸ்வதி ராம்னாத் சுருக்கமாக முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

### இத்தொகுப்பில் உள்ள பல மொழிச் சிறுகதைகள்

இதில் இந்திய மொழிகளின் மொழிக்கு ஒன்றாக ஒரு பெண் எழுத்தாளரின் சிறுகதையைத் தேர்ந்தெடுத்து மொழிபெயர்த்துள்ளார். அஸ்ஸாம், இந்தி, உர்தூ, ஒரியா, கன்னடம், சிந்தி, குஜராத்தி, மராத்தி, வங்கம், பஞ்சாபி, காஷ்மீரி, டோக்ரி, மலையாளம், மணிபுரி, தெலுங்கு, ராஜஸ்தானி, கொங்கனி ஆகிய மொழிகளிலிருந்தும், தமிழ் மொழியிலிருந்து 2 சிறுகதைகளுமாக 19 சிறுகதைகள் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. இதில் 2 தமிழ்ச் சிறுகதைகளைத் தவிர மீதம்

17 கதைகள் அனைத்தும், இந்தி, ஆங்கிலமொழி வழியாகச் சரஸ்வதி ராம்னாத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

தமிழ்நாட்டின் தலைசிறந்த பெண் எழுத்தாளர்களில் ஒருவரான ஆர். சூடாமணி எழுதிய 'நீலாயதாட்சி அம்மாள் அறுபது வயது' எனும் சிறுகதையும், அம்பை எழுதிய 'வயது பதினைந்து' எனும் சிறுகதையும் இதில் இடம்பெற்றுள்ளன. நிருபமா பர்கோய் எழுதிய **'பெண்'** (அசாமிய மொழி), மிருணாள் பாண்டே எழுதிய **'காக்கைகள்** (இந்தி), அதயா பர்வீன் எழுதிய **'காத்திருந்த விழிகள்'** (உர்தூ), பிரதிபா ராய் எழுதிய **'ஜுமியா'** (ஒரியா), அனுபமா நிரஞ்சன் எழுதிய **'சாருலதாவுடன் ஒரு நாள்'** (கன்னடம்), இந்திரா வாஸ்வானி எழுதிய **'பிறந்த மண்ணை விட்டுப் பிரிந்தவர்கள்'** (சிந்தி), குந்தனிகா கபாடியா எழுதிய **'நிறைவு'** (குஜராத்தி), ஜ்யோத்னா தேவத்ர் எழுதிய **'நாடகம்'** (மராத்தி), ஆஷா பூர்ணாதேவி எழுதிய **'நினைவாலயம்'** (வங்கமொழி), அஜீத்கௌர் எழுதிய **'குல்பானோ'** (பஞ்சாபி), நிர்மலா அகர்வால் எழுதிய **'பிள்ளைக் குழந்தை வேண்டும்'** (காஷ்மீர்), ஆஷாசச்தேவ் எழுதிய **'மடிநிறைந்தது'** (டோக்ரி), சாரா தாமஸ் எழுதிய **'புரியவில்லை'** (மலையாளம்), வினோதினி தேவி எழுதிய **'பாலைவனத்து மலர்'** (மணிபுரி), சாகந்தி துளசி எழுதிய **'சாம்பல் கிண்ணம்'** (தெலுங்கு), லக்ஷ்மிகுமாரி சூடாவத் எழுதிய **'நிபந்தனை'** (ராஜஸ்தானி), ஷீலாநாயக் எழுதிய **'மைகி'** (கொங்கனி) ஆகிய 17 கதைகளைச் சரஸ்வதி ராம்னாத் மொழிபெயர்த்துள்ளார்.

இப்பெண் எழுத்தாளர்களைப் பற்றிய அறிமுகமாக ஒவ்வொருவரின் சிறப்புகளை அறியும் வகையில் சிறு குறிப்புகளையும் முதலாவதாக இடம்பெறச் செய்துள்ளார். வாசகர்கள் இந் நூலாசிரியர்களைப் பற்றி அறிந்து கொள்ள இக்குறிப்பு மிகவும் பயனுடையதாகும். எழுத்துலகில் தங்களை நிலைநிறுத்தி, சிறந்த படைப்புகளை உருவாக்கிப் பல பரிசுகளையும் பாராட்டுதல்களையும் பெற்றுள்ளனர் என்பதை இக்குறிப்புகள் உணர்த்துகின்றன.

பல்துறை அறிஞர்களாக, பத்திரிகையாளர்களாக, கவிஞர்களாக, பன்மொழித் திறம் வாய்ந்தவர்களாக, மொழிபெயர்ப்பாளராகப் பல பரிசுகள் பெற்றவராக இப்பெண் எழுத்தாளர்கள் விளங்குகின்றனர் என்பதை இதன்மூலம் தமிழ் வாசகர்கள் அறிந்து கொள்ளலாம்.

தமிழில் பெண் படைப்பாளிகளுக்கும், பிறமொழிப் பெண் படைப்பாளிகளுக்கும் சிந்தனையில் உள்ள ஒற்றுமையையும், வேற்றுமையையும் அறிந்து கொள்ளவும் இந்நூல் பெரிதும் பயன்படும். இந்நூலின் மொழிபெயர்ப்பாளரான சரஸ்வதி ராம்னாத் இதைப் பற்றியும் ஓரளவு முன்னுரையில் சுட்டிக் காட்டியுள்ளார்.

> சூழல், மொழி, இனம் வேறுபட்டாலும் நமது அடித் தளமான சிந்தனை ஒன்றுதான் எனப் புலனாகிறது. பெண்களின் நிலை, சமுதாயத்தில், குடும்பத்தில், பிரச்சினைகளில் அதிக வேறுபாடுகளைக் காண இயலவில்லை. பெண்ணின் பிரச்சினை, அவள் இந்தியப் பெண்ணாக இருப்பதால் மட்டுமே ஏற்படும் நிர்ப்பந்தங்கள், சமுதாயத்தில் அவளது இடம் இமயத் திலிருந்து கன்யாகுமரி வரை பொதுவானதாகத் தானிருக்கிறது. இன்றைய வாழ்வின் பொருளாதார நிலை, சமுதாய நோக்கு, அரசியலின் அவலம் பெண்களிடையேயும் பெரும் பாதிப்பை ஏற்படுத்தி யுள்ளது. அவர்களிடையே புதியதொரு சமுதாயப் பார்வையும், புதிய மதிப்பீடுகளும் மலர்ந்துள்ளன. பழைய நம்பிக்கைகளும், வழிவழியாய் வந்துள்ள நம்பிக்கைகளும் ஆட்டம் கண்டுள்ளன[6]

என்பதை இக்கதைகள் மூலம் தாம் அறிந்த கருத்தினைச் சரஸ்வதி ராம்நாத் சுட்டிக்காட்டியுள்ளார்.

பொதுவாக ஒரு எழுத்தாளரின் பல சிறுகதைகளை, அல்லது பல நாட்டுச் சிறுகதைகளை மொழிபெயர்த்துத் தொகுப்பாக வெளியிடுவதை ஒருமுறையாக மேற்கொள்ளாமல் இந்நூல் சற்று வேறுபட்டுப் புதிய முயற்சியாக மிகவும் பயனுள்ள வகையில் வெளியிடப்பட்டுள்ளது. இத்தொகுப்பில் சற்று வேறுபட்டது பள்ளியில் படிக்கும் ஒரு குழந்தையை மையமாகக் கொண்ட கொங்கனி மொழிச் சிறுகதை.

> மைகி பள்ளிக்கூடத்திற்குக் கிளம்பியாகிவிட்டது. இன்றும் லேட்தான். நேரமாகிவிட்டது. அவள் வேகமாய் நடக்கிறாள். வழியில் சிறியதொரு பள்ளம். அவள் அதையே பார்த்தவாறு நிற்கிறாள். அந்தப் பள்ளத்தில் தண்ணீர் நிரம்பியிருக்கிறது. மைகி அந்தத் தண்ணீரில் எட்டிப் பார்க்கிறாள். தண்ணீர் நீலமாய், ரொம்ப ஆழமாய் இருப்பது போல் தெரிகிறது. இதைக்கண்ட மைகி நடுங்கினாள். இந்த ஆழமான பள்ளத்தில் வீழ்ந்து விட்டால்? மூச்சுத் திணறி இறந்து விடுவேன். யாருக்கும் இதுபற்றி வருத்தம் இருக்காது. பேபி மட்டும்தான் எனக்காக அழுவாள்[7]

எனத் தொடங்குகிறது இக்கதை. நேரங்கழித்துப் பள்ளிக்குச் செல்லும் மனநிலை, குடிகாரத்தந்தை, அடிவாங்கும் அம்மா, வகுப்பில் மிரட்டி அடிக்கும் 'டீச்சர்' என்று எல்லோரிடமும் அவதிப்படும் ஒரு

குழந்தையின் மனநிலையையும், இறுதியில் வகுப்பில் 'கதை சொல்லுதல்' என்ற வரிசையில் மைகி என்னும் அக்குழந்தை தன் நிலையை, தன் கோபத்தை உருக்கமான ஒரு கதை மூலம் சொல்லி ஆசிரியரின் மனதைத் தொடச் செய்கிறாள்.

இதுபோன்ற வேறுபட்ட கதாபாத்திரங்களை அறிந்து கொள்ள இத்தகைய நூல்கள் உதவும்.

*சரஸ்வதி ராம்னாத் மொழிபெயர்ப்பு மொழி நடை*

ஒவ்வொரு மொழிபெயர்ப்பாளரும் படைப்பாளிகளைப் போலவே வெவ்வேறு மொழிநடையில் எழுதுவது இயல்பு. மூலநூலின் பொருள் கெடாதவாறு பார்த்துக் கொள்ளுதல் என்பது மட்டுமே அனைவருக்கும் பொதுவானது. மொழிநடையில் கையாளும் சொற்கள் பல மூலத்தில் உள்ளது போலவே அமைதல் வேண்டும் என்பது நியதி. அந்நோக்கில் மூலமொழிக் கதையில் இடம்பெறும் கதாபாத்திரங்களின் பெயர், இடப்பெயர், ஊர்ப்பெயர், கதை நிகழுமிடத்தின் பண்பாடு ஆகியன பெயர்ப்பு மொழியில் அதே முறையில் இடம்பெறும் பொழுதுஅது பிறமொழி இலக்கியத் தன்மையை, அதன் மணத்தை வாசகர்கள் உணர நேரிடுகிறது.

(எ.டு) *அடியே! பிர்ஜீவின் அம்மா? கூத்தாட்டம் பார்க்க நீ போகப் போவதில்லையா?*

*சர்க்கரை வள்ளிக்கிழங்கை வேகவைத்துவிட்டு முற்றத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த பிர்ஜீவின் அம்மா மனதிற்குள் பொருமிக் கொண்டிருந்தாள். ஏழு வயதான பிர்ஜீ சர்க்கரை வள்ளிக் கிழங்குக்குப் பதிலாக நாலு அடிவாங்கிக் கொண்டு முற்றத்தின் மண்தரையில் புரண்டு புரண்டு அழுதவாறே உடம்பெல்லாம் மண்ணாக்கிக் கொண்டிருந்தான். அவனுடைய அக்கா சம்பியாவின் மீது அம்மாவின் ஆத்திரம் குமுறிக் கொண்டிருந்தது.*

*முற்றத்தில் வெயிலிருக்கும்போதே மளிகைக் கடைக்காரியிடம் வெல்லம் வாங்கிவரப் போனவளை இன்னமும் காணோம். விளக்கு வைக்கும் நேரமாகி விட்டது. சிறுக்கி இன்னமும் வரவில்லை. வரட்டும் பார்த்துக் கொள்கிறேன்*[8]

பணிஷ்வர்நாத்ரேணு எனும் இந்தி எழுத்தாளரின் 'இதய ராணி' எனும் சிறுகதையின் தொடக்கம் இது. இதில் இடம்பெறும் கதைமாந்தர்களின் பெயரும், இடமும் தமிழ் வாசகர்களுக்குப் புதியன என்றாலும், மனிதனின் வாழ்வு முறை உணர்வும், எண்ண ஓட்டமும் ஒன்று என்பதால் பெரிய அளவிற்கு வேறுபாடு காணமுடிவதில்லை. சரஸ்வதி ராம்னாத்தின் மொழிநடை மூலமொழிக்கு ஏற்றாற்போல்

அப்படியே மொழிபெயர்த்திருப்பதைக் காணமுடிகிறது. பிறநாட்டாரின் ஆங்கிலப் படைப்புகள் தமிழில் இவ்வாறு இடம்பெறும் பொழுது இதே கதைச்சூழல் வேறு மாதிரியாகப் பிரதிபலிப்பதாக அமைகிறது. ஆனால் எந்த மொழியில் இடம்பெற்றாலும் அந்தந்த மொழிக்குரிய நுணுக்கமான சில வேறுபாடுகளும் மொழிபெயர்ப்பில் அமைந்து விடுகிறது.

> ஒரு படைப்பாளியின் உணர்ச்சி வெளிப்பாடானது. அவனுடைய பண்பாடு என்ற முறையில் தனது சூழலை ஏற்றுக் கொள்கிறது. அதிலேயே உயிர் வாழ்கிறது; மூச்சு விடுகிறது. இதனால் எந்தவொரு காலகட்டத்தில் எழுதப்படும் படைப்பிலும் அந்தந்தக் காலத்தின் சூழல்கள் நிறம் பதிந்து தானிருக்கும். நம்நாடு சுதந்திரம் பெறுவதற்கு முன் எழுதப்பட்ட கதைகள், அதற்குப் பின் எழுதப்பட்டவை. அதிலும் கடந்த 25, 26 ஆண்டுகளுக்குள் எழுதப்பட்ட கதைகள் இவற்றிற் கிடையில் இக்கண்ணோட்டத்தின் படி நிச்சயம் வேறுபாட்டினைக் காணலாம்.[9]

ஒரு மொழியின் படைப்புகள் இவ்வாறு காலத்தையும் சூழலையும் உள் வாங்கிக் கொண்டிருக்கின்றன. இவையனைத்தையும் வேற்று மொழியின் இடம், பண்பாடு, காலம் ஆகியவற்றுக்குக் கடத்திக் கொண்டு வந்து அறிமுகப்படுத்துவதில்தான் மொழி பெயர்ப்பாளர்களுக்குச் சவாலாக அமைந்து விடுகிறது.

சரஸ்வதி ராம்னாத்தைப் பொறுத்த மட்டில் சவால் நிறைந்த ஒன்றாக அமைந்த மொழிபெயர்ப்பு குறித்துக் கூறும்பொழுது

> நான் மொழிபெயர்த்த ஒவ்வொரு நூலுமே எனக்கு நிறைவைத் தந்தது. ராங்கேய ராகவ் பற்றிய விமர்சன நூல், 'நிராலாவின் இலக்கியச் சாதனை' என்ற விமர்சன நூல் இரண்டுமே சவால் நிறைந்தன என்று சொல்லலாம். மூலநூல் இலக்கிய நயம் மிகுந்த ஒன்று. கவிதைகள் பல மேற்கோள்களாகக் காட்டப்பட்டிருந்தன. நயம் குன்றாமல் தமிழுக்கு மொழிபெயர்க்கும் போது கடுமையான உழைப்பை வாங்கியது. ஒரு கவிதை யிலிருந்து அது சமஸ்கிருதமோ உருதுவோ எதுவாக இருந்தாலும் இடையிலிருந்து இரண்டொரு கவிதை வரிகளை மேற்கோள் காட்டினால், மொழிபெயர்ப் பாளர் அம்மூலக் கவிதையைத் தேடிக் கண்டுபிடித்துப் படித்துப் புரிந்து கொண்டால்தான் அந்தத் துண்டான வரிகளைப் புரிந்து கொள்ள முடியும். அப்போதுதான் அவ்வரிகளை உணர்வுப்பூர்வமான அர்த்தம் வெளிப் படும்படியாகவும் மொழிபெயர்க்க இயலும்[10]

என்று தனது அனுபவத்தைத் தெரிவித்துள்ளார்.

மொழிபெயர்த்துக் கொண்டு வரும் பொழுது பேச்சு வழக்கில் இடம்பெறும் சொற்றொடர்களை மொழிபெயர்ப்பது ஓர் இடையூறாக அமைவது பெரும்பாலான மொழிபெயர்ப்பாளர்களுக்கு ஏற்படுகின்ற சிக்கல். இதைப்பற்றிச் சரஸ்வதி ராம்னாத் கூறும்பொழுது,

> ஒவ்வொரு மொழியிலும் அந்தந்த மொழிக்கே உரிய சிறப்புகளுடன் இருப்பது இயல்பானதுதான். ஆனால் இந்திய மண்ணுக்கே உரியவை அல்லவா? அதன் மொழிகள், கலாச்சாரம் ஆகியவற்றுக்கிடையே நெருக்கமான ஒற்றுமை இருக்கிறது. பழமொழிகள் எல்லா மொழிகளிலும் ஏறத்தாழ ஒன்றாக இருக்கின்றன. மிக லேசான வேறுபாடு இருக்கக் கூடும். ஆனால் ஒத்த கருத்துடைய இன்னொரு பழமொழியைக் கண்டு பிடிப்பது எளிதாகவே இருக்கும். எனக்கு அதிகம் சிரமம் தருவது இந்த வகைச் சொற்கள், குத்தல், கிண்டல்கள்தான்.[11]

என்று தமது அனுபவத்தின் மூலம் குறிப்பிட்டுள்ளார்.

பல சிக்கல்கள் இடையூறுகளைக் கடந்து தமிழில் மொழிபெயர்ப்புகள் வெளிவந்தாலும், போதிய அளவிற்கு மரியாதையோ கவனிப்போ இல்லை என்பது தமிழ் மொழிபெயர்ப்பாளர்களிடம் நிலவும் ஒரு கருத்தாகும். இந்த வருந்தத்தக்க நிலை குறித்துத் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தின் மூலம் சரஸ்வதி ராம்னாத் வெளிப்படுத்தி யுள்ளார்.

> மொழிபெயர்ப்புகளுக்குரிய மரியாதையோ கவனிப்போ தமிழில் இல்லை. நாட்டின் அரசியல் நடப்புகளில் உள்ள ஆர்வம், நாட்டின் பிறமொழி இலக்கியம் பற்றி, அதன் வளர்ச்சி, அதன் படைப்பாளிகளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதில் இல்லை. ஒருவித அலட்சியப் பாவம்தான் மேலோங்கியுள்ளது. மிகுந்த ஆவலுடன் நான் தேடிப் படித்து, மொழி பெயர்த்துத் தொகுத்த 'இந்திய நாடகங்கள்' ஒரு தொகுதி வெளிவந்தவுடன் நின்றுவிட்டது. மற்ற இரு தொகுதிகளையும் வெளியிடப் பிரசுரகர்த்தா தயங்கு கிறார். காரணம் நாடகங்கள் விற்பதில்லை என்பதுதான். என் முயற்சி தடைப்பட்டுப் போனதில் எனக்கு வருத்தம்தான். இந்தியிலும் இதே நிலைமைதான். தமிழின் சிறந்த படைப்புகளை இந்தியில் தர எனக்கு நிறைய ஆவலுண்டு. இந்தியைத் தேசிய மொழி என்று கூறிக் கொண்டாலும் பிறமொழி சார்ந்த இந்தி மொழி பெயர்ப்பாளர்களுக்குரிய ஆதரவோ, மரியாதையோ தர அவர்கள் முன் வருவதில்லை. தமிழர்கள் எழுதும்

> **இந்தியை மாறுபட்ட கண்ணோட்டத்துடன் பார்ப்பது ஒரு தேசிய மொழிக்கு ஏற்றதல்ல. இந்தி தேசியமொழி என அழைக்கப்படும்போது அது இந்தி மொழியினரின் தனிப்பட்ட பரம்பரைச் சொத்து அல்ல என்று நான் உரக்கவே கூற விரும்புகிறேன். இந்திப் பிரசுரகர்த்தர் களின் இப்போக்கினால் இந்தி மொழிபெயர்ப்பாளர்கள் ஆர்வம் குன்றிவிட்டனர். அடுத்த தலைமுறை மொழி பெயர்ப்பாளர்கள் இத்துறையில் ஈடுபடுவார்களா என்பது கேள்விக்குறிதான்[12]**

என்று இன்றைய சூழலை எடுத்துக் காட்டியுள்ளார்.

மொழிபெயர்ப்புக்கு இலக்கிய உலகில் தகுந்த மரியாதை அளிக்கப்படவில்லை என்பது மட்டுமல்ல மொழிபெயர்ப்பாளர் களுக்கு உரிய மரியாதையும் அளிக்கப்படவில்லை என்பதையும் விளக்குகிறார். படைப்பாளிக்கும் - மொழிபெயர்ப்பாளருக்கும் பெரிய அளவிற்கு வேறுபாடு காட்டப்படுகிறது என்பதைத் தெளிவாக்குகிறார்.

> **மொழிபெயர்ப்பு இலக்கியம் பற்றிய நமது சமூகப் பார்வையே குறுகியதாக உள்ளது. படைப்பிலக்கியத் திற்கு அளிக்கப்படும் அந்தஸ்தும் மரியாதையும் மொழிபெயர்ப்புகளுக்கு அளிக்கப்படுவதில்லை. மொழிபெயர்ப்பாளர்களின் பெயர் கூட முன் அட்டையில் தரப்படுவதில்லை. அவர் பற்றிய குறிப்புகளுக்கும் இடமில்லை. மொழிபெயர்ப்பும் ஒரு படைப்பாக்கம் என்று ஏற்றுக் கொள்ளப்படாத வரையில் இந்நிலை நீடிக்கத்தான் செய்யும். ஏன் என்பதற்கு என்னிடம் நீண்ட பெருமூச்சுதான் பதில்.[13]**

மொழிபெயர்ப்பின் மூலம் மூலமொழிகளில் குறிப்பாகத் தமிழில் பல புதிய புதிய மாற்றங்கள் படைப்புகளில் உருவாக்கப் பட்டாலும் மொழிபெயர்ப்பு எனும்பொழுது அவை இரண்டாம் தரமாகவே கணக்கில் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. உண்மையில் மூலமொழிப் படைப்பின் சிறப்பைப் பிற மொழிக்கு அதன் உயிர்ப்புக் கெடாமல் கொண்டு செல்லும் மொழிபெயர்ப்பாளர்கள் எவ் வகையிலும் படைப்பாளிகளுக்குக் குறைந்தவர்கள் அல்ல என்பதைத் தமிழுலகம் அறியும் காலத்தில் அதற்கு உரிய வாய்ப்பும் மரியாதையும் பெருகும்.

மொழிபெயர்ப்பின் மூலம் தமிழுக்கும் இந்திக்கும் உறவுப் பாலம் அமைத்த பெருமைக்குரிய திருமதி சரஸ்வதி ராம்நாத் அவர்கள் பெங்களூரில் தமது மகன் டாக்டர் ரகுராம் வீட்டில் தங்கியிருந்தார். உடல்நலக்குறைவால் தமது 76ஆவது வயதில் 2-8-1999ஆம் நாளன்று காலமானார்.

## குறிப்புகள்

1. புதியபார்வை, 16-31, அக். 1997, சரஸ்வதி ராம்னாத் - நேர்காணல், பாவண்ணன், பக்.18-19.
2. மேற்படி, ப.19.
3. மேற்படி.
4. இந்திச் சிறுகதைத் தொகுப்பு, பீஷ்ம சகானி, (தமி.), சரஸ்வதி ராம்னாத், சாகித்திய அகாதெமி, பதி. 1999, முன்.
5. இந்தியப் பெண் எழுத்தாளர்களின் சிறுகதைகள் (தமி.), சரஸ்வதி ராம்னாத், வானதி பதிப்பகம், சென்னை-17, பதி. அக்.1990, முன். ப.III.
6. மேற்படி, முன். IV.
7. மேற்படி, ப.276.
8. இந்திச் சிறுகதைத் தொகுப்பு, பீஷ்ம சகானி, (தமி.), சரஸ்வதி ராம்னாத், சாகித்திய அகாதெமி, பதி. 1999, ப.31.
9. மேற்படி, ப.12.
10. புதியபார்வை, 16-31, அக். 1997, சரஸ்வதி ராம்னாத் - நேர்காணல், பாவண்ணன், ப.20.
11. மேற்படி, ப.20.
12. மேற்படி, ப.21.
13. மேற்படி, ப.21.

# மு.கு. ஜகந்நாத ராஜா

பன்மொழிப்புலவர் என்ற சிறப்புப் பெயர் பெற்ற முகு.ஜகந்நாத ராஜா தமிழ் - தெலுங்கு மொழிகளின் உறவுப் பாலமாகத் திகழ்பவர். 26.7.1933 ஆம் ஆண்டு எம்.கே. குருசுவாமி ராஜா-அம்மணி அம்மாள் ஆகியோரின் மகனாகப் பிறந்து இராஜபாளையத்தில் வாழ்ந்து வந்தவர். இவர் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், சமசுகிருதம், பாலி, பிராகிருதம், இந்தி, ஆங்கிலம் ஆகிய 9 மொழி களில் புலமை பெற்றவர். கவிதை, சிறுகதை, நாவல், நாடகம், கட்டுரை, திறனாய்வு, வேதமரபு, சமண-பௌத்த மரபுத் தத்துவங்கள் ஆகிய பல துறைகளில் தம் படைப்பாற்றலின் மூலமும், மொழிபெயர்ப்பின் மூலமும் அரிய பல நூல்களை வழங்கியுள்ளார். அரிய தெலுங்கு ஏட்டுச் சுவடிகளிலிருந்த, இதுவரை எவரும் அறியாத யட்ச கானங்களை ஆய்வு முன்னுரைகளுடன் பதிப்பித்த சிறப்பும் இவருக்கு உண்டு. 6ஆம் வகுப்பு வரை தனது பள்ளிப்படிப்பை முடித்துக் கொண்டு பின் தன் சொந்த முயற்சியால் பல மொழிகளையும் அவற்றிற்குரிய இலக்கண இலக்கியங்களையும் கற்று அறிஞரானார். இவருடைய தாய்மொழி தெலுங்கு. 18-06-1964ஆம் ஆண்டு இராஜபாளையம் காந்தி கலை மன்றத்தில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் இவருக்குப் 'பன்மொழிப் புலவர்' என்னும் பட்டம் அளித்துச் சிறப்பித்தார். அக்காலத்திலேயே தமிழகம் மட்டுமல்லாது இந்தியா முழுவதும் அறியப்பட்ட ஒரு அறிஞராக திகழ்ந்தார்.

### படைப்புகள்

மு.கு. ஜகந்நாத ராஜா தன்னுடைய கற்பனை வளத்தை, படைப்பாற்றலை, ஆய்வுத்திறனைப் பல நூல்களின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார். கற்பனைப் பொய்கை (கவிதைத் தொகுப்பு), தரிசனம் (வசன கவிதை), காவிய மஞ்சரி (குறுங்காவியம்), சிலம்பில் சிறு பிழை (இலக்கியத் திறனாய்வு), வான்கலந்த வாசகங்கள் (வானொலி உரைத் தொகுப்பு), தமிழும் பிராகிருதமும், மணிமேகலை, இந்திய மொழிகளின் ஒப்பிலக்கியம், வடமொழி வளத்துக்குத் தமிழரின் பங்கு, தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகள், ஆமுக்த்திர காவியம், தெரு – புதுக்காவியம், பிஞ்சுக் கரங்கள், ராஜுக்கள் சரித்திரம், திராவிட மொழிகளில் யாப்பியல், கவித்தொகை, அறிவுக்கதம்பம் – வானொலி உரை ஆகிய 17 நூல்கள் இவருடைய படைப்புகளாகத் திகழ்கின்றன.

## மொழிபெயர்ப்பு

பல மொழிகளைக் கற்றறிந்த மு.கு. ஜகந்நாதராஜா மொழி பெயர்ப்புப் பணியில் ஈடுபட்டுப் பல அரிய நூல்களை வழங்கி, சிறந்த மொழிபெயர்ப்பாளர் என்ற சிறப்பைப் பெற்றுள்ளார். கன்யா சுல்கம், சேரி, ஆமுக்தமாலியத – சூடிக்கொடுத்தவள், வேமனா, களாபூர்ணோதயம் (தெலுங்குக் காவியம்), காதா சப்தசதி (பிராகிருத மொழிக் கவிதைகள்), தீகநிகாயம், ஔசித்ய விசாரசர்ச்சா (வடமொழித் திறனாய்வு நூல்), நாகானந்தம் (வடமொழி நாடகம்), குந்தமாலா (வடமொழி நாடகம்), சாணக்கிய நீதி, சாதன ரகசியம் (வேதாந்த நூல்), வஜ்ஜாலக்கம் (பிராகிருத மொழி அறநூல்), சன்மதி சூத்திரம் (சமணத் தத்துவம்), சுமதி சதகம், தேய்பிறை, கந்துகூரி வீரேசலிங்கம் கட்டுரைகள், கற்பூர மஞ்சரி (பிராகிருத மொழி நாடகம்), உதானம் (பௌத்த தத்துவம்), மிலிந்தா பண்ஹா (பௌத்த தத்துவம் – மினாந்தரின் கேள்வி), விக்ஞப்தி மாத்ரதா சித்தி (பௌத்த தத்துவம்), சாருசர்யா வடமொழி நீதிநூல், சிவசரணர் வசனங்கள், பம்ப்ப பாரதம் (கன்னட காவியம்), பிரேம கீதம் (மலையாள கவிதை), மகாயாண மஞ்சரி (2007) ஆகிய 26 நூல்கள் மு.கு. ஜகந்நாத ராஜாவின் பன்மொழிப் புலமையை வெளிப்படுத்தும் மொழிபெயர்ப்புகளாகத் திகழுகின்றன.

தமிழிலிருந்து சைலகீதமு (குறிஞ்சிப்பாட்டு), முத்யால ஹாரமு (முத்தொள்ளாயிரம் – தெலுங்கு), பாரதி – சமகாலீன பாவமுலு, புண்யக்ஷேத்ராலு, திருக்குறள் தேடகீதலு, தமிழ் காவியாம்ருதம், வெலி நானூறு (புறநானூறு), முத்தொள்ளாயிரம் (மலையாளம்), முக்தஹாரா (கன்னடம்) ஆகிய நூல்கள் மு.கு. ஜகந்நாத ராஜா தமிழிலிருந்து பிறமொழிகளுக்கு மொழிபெயர்த் துள்ள நூல்களாகும். இவ்வறிஞர் தொல்காப்பியம் குறித்த நூல் ஒன்றினைக் கொண்டு வரும் பணியில் ஈடுபட்டிருந்தார் என அறிகிறோம்.

## மு.கு. ஜகந்நாத ராஜாவின் கவித்திறன்

கற்பனைப்பொய்கை என்ற கவிதைத்தொகுப்பு (1972), தரிசனம் (1972) என்ற வசன கவிதை நூல், காவிய மஞ்சரி (1986) என்ற குறுங்காவியம், ஆபுத்திர காவியம், தெரு (புதுக்காவியம்) ஆகிய படைப்புகள் பன்மொழிப் புலவர் மு.கு. ஜகந்நாத ராஜாவின் கவிப்புலமையை எடுத்துக்காட்டுவன வாகும். அழகியல், அறவியல், அறிவியல், அரசியல் ஆகிய நான்கும் இணைந்து கலைநயம் மிக்க கவிதைகளை வழங்கும் ஆற்றல் உடையவர் ஜகந்நாதராஜா என்பதற்கு இந்நூல்கள் சான்றாகும். இவருடைய 'தரிசனம்' என்ற வசன கவிதை நூலை உருசியத் தமிழறிஞர் விக்தர் பூர்ணிகா உருசிய மொழியில் மொழிபெயர்த்துள்ளார்.

மொழியியல் நோக்கு, வரலாற்று அணுகுமுறை, கவித்திறன் ஆகியவற்றுடன் ஆழ்ந்த சமூகப் பார்வை கொண்ட மு.கு. ஜகந்நாத ராஜா மொழிபெயர்ப்பு உலகில் தன்னுடைய தனித்துவத்தை நிலைநாட்டியுள்ளார்.

### மொழிப்பெயர்ப்புப் பணி குறித்து முகுஜகந்நாதராஜாவின் கருத்து

மொழிபெயர்ப்புப் பணி குறித்து அவரிடம் கருத்துக் கேட்ட பொழுது

> உலகில் எந்த மக்களும் தனித்து வாழமுடியாது. அரசியல், பொருளாதாரச் சூழ்நிலைகள் நம்மை வெகுவாகப் பிணித்து ஒருவரோருடாருவர் ஒத்திசைந்து வாழவேண்டியுள்ளது. அதற்கு நம் கலாச்சார பரிவர்த்தனைகள் மிகவும் இன்றியமை யாதன. ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளவும், கருத்துகளைப் பகிர்ந்து கொள்ளவும் நம்மிடமுள்ள சிந்தனை வளங்களைப் பிறருக்குக் கொடுத்தும் அவர்களிடமுள்ள வளத்தைப் பெற்றும், நம்மை நாம் நிறைவு செய்து கொள்ளல் வேண்டும். இதற்கு மொழிபெயர்ப்புத் துறைதான் கருவியாக அமைந் துள்ளது. உலக நாகரிகமே மொழிபெயர்ப்பின் மூலமே உருவாகி வந்துள்ளது. பாலி, சமஸ்கிருத மொழியிலுள்ள நூல்களைச் சீனா, திபெத், மங்கோலிய மொழிகளில் பெருவாரியாக மொழி பெயர்த்துக்கொண்டு அந் நாடுகளில் நாகரிக மலர்ச்சி ஏற்பட்டுள்ளது. கிரேக்க, சமஸ்கிருத நூல்களை மொழிபெயர்த்து அரேபிய மொழிவளம் பெற்றது. பிற மொழிகளில் உள்ள சிறந்த நூல்களை மொழி பெயர்த்துதான் ஆங்கிலம் வளம் பெற்றது. அது போன்றே தமிழும் வளம்பெற மொழிபெயர்ப்பு மிகவும் இன்றியமையாதது. அதனால்தான் நானும் மொழிப்பெயர்ப்புத் துறையில் அதிகம் கவனம் செலுத்துகிறேன். இலக்கியம், இலக்கணத் துறைகளை விட்டால் பிற தத்துவக் கலைஞான விமரிசனத் துறைகளில் தமிழில் போதுமான வளம் இல்லை. அதை நிறைவு செய்ய வேண்டும்[1]

என மு.கு. ஜகந்நாதா கருத்துரைக்கிறார்.

### படைப்பு – மொழிபெயர்ப்பு என்ற இருவேறு தளங்களைப் பற்றி மு.கு. ஜகந்நாத ராஜாவின் கணிப்பு

படைப்பாற்றலும், மொழிபெயர்ப்பாற்றலும் மிக்க மு.கு.ஜகந்நாத ராஜா இதன் இருவேறு கோணங்களை ஆராய்கிறார்.

படைப்புத்தான் ஒரு மொழியின் உயிரோட்டமான வளத்தை நிர்ணயிக்கிறது. படைப்பு இல்லாவிட்டால் அந்த மொழிக்குப் பெருமையோ, சிறப்போ இராது. ஆனால் படைப்பு என்று பிறர் சென்ற வழித்தடத்தில் போலிமைகளாக மீண்டும், மீண்டும் நூல்கள், நாவல்கள், கதைகள் எழுதுவதன்று. புதிய முறையில் புதிய உத்தியில் சுய வெளிப்பாடான அனுபவ முத்திரையோடு, அமைய வேண்டும். அத்தகு உயர்ந்த படைப்பு, உருவாக வேண்டின் சுய ஆற்றலோடு, படிப்பும் பயிற்சியும் தேவை. உலகச் சிந்தனைகளைப் பற்றியும், நம் முன்னோடிகளின் படைப்பாக்கங்கள் பற்றியும் தெரிந்திருக்க வேண்டும். அதற்கு மொழிபெயர்ப்புகள் தான் உதவமுடியும்.

ஒரு ஓவியன் தன்கற்பனைக் கண்ணோடு சுயமாக ஒரு மனிதனின் சித்திரத்தை வரைவது போன்றது படைப் பாகும். அதே ஓவியன், ஒரு மனிதனைப் பார்த்து அதே முகச்சாயல் வரும்படி சித்திரம் தீட்டுவது மொழி பெயர்ப்பாகும். இதில் இரண்டாவது ஓவியம்தான் கடினம். அதுபோன்றே படைப்பை விட மொழி பெயர்ப்பே கடினமானது. படைப்பிற் சிறந்த கவிஞர்களே, மொழிபெயர்த்துள்ளார்கள். தாகூர் தாம் படைத்த வங்கமொழி கீதாஞ்சலியைத் தாமே ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த போது, மூலத்தை அப்படியே கொணர முடியவில்லை என்பதை உணர்ந்து கூறியிருக்கிறார். நானும் ஒரு தமிழ்க் கவிதையைத் தெலுங்கில் மொழிபெயர்க்க இயலாமல் தவித்திருக்கிறேன் என்றாலும் சில சமயம் மூலத்தைவிட விஞ்சிய எழிலுடன், மொழிபெயர்ப்பு அமைந்துவிடும். காதா சப்தசதியைத் தமிழிலும் திருக்குறளைத் தெலுங்கிலும் மொழிபெயர்த்தபோது இத்தகு எழில்மிளிர்ந்த இடங்களும் உண்டு.

தொல்காப்பியர் காலத்திலிருந்தே மொழிபெயர்ப்பின் தேவை உணரப்பட்டுள்ளது. தமிழ்க்காவியங்கள் பெரும்பாலும் தழுவல் மொழிபெயர்ப்புகள்தான் அல்லது கதையை மட்டும் பிறமொழிக் காவியத்தி லிருந்து பெற்றவைதான். தமிழில் சிலம்பு, மேகலை, பெரியபுராணம் மட்டுமே சுயமான படைப்புகளான காவியங்கள். தமிழில் சுயமான தனிப்பாடல்கள் (அகம், புறம் சார்ந்த இலக்கியங்கள்) மிகுதி. காவியங்கள் குறைவு. கன்னடம், தெலுங்கு, சமஸ்கிருத மொழிகளில் காவியங்கள் மிகுதி. இன்றும் அதே நிலைதான் காவியக்கோட்பாடுகள் குறித்து வடமொழி போலத்

தமிழில் நூல்கள் தோன்றவில்லை. வடமொழி அலங்'கார சாஸ்திரத்தின் விரிவும் பரப்பும் நுண்மாண் நுழைபுலக் கருத்துக்களும் தமிழில் இல்லை. அதற்குக் காரணம் தமிழில் காவிய மரபின்மையே இங்குத் தனிநிலைப்பாடல் மரபுதான் உள்ளது.

மொழிபெயர்ப்பின் மூலம் நாம் பிற நாட்டுக் காவிய நெறிமுறைகள் அழகியற்கோட்பாடுகளைப் பற்றித் தெரிந்திருக்கிறோம். 'தொன்யாலோகம்' போன்ற நூல்கள் கூட சிறந்த பதிப்பாகத் தமிழில் இல்லாதது குறையே. மொழிபெயர்ப்பின் மூலம் தமிழ்வளம் பெருக்கினால்தான் உயர்ந்த தரமான படைப்புகள் உருவாகும். இன்றைய மரபுக்கவிதை நீர்த்துப் போய் விட்டது. புதுக்கவிதையோ சாரமில்லை. ஆங்கிலம் மட்டுமன்றிப் பிற உலக இலக்கிய மரபுகளையும் அறிதல் வேண்டும். ஜப்பானிய 'ஹைக்கூ' இப்போது வந்திருக்கிறது. அது ஆங்கில மொழிபெயர்ப்பின் மூலமாக உள்ளடக்கத்தில் இன்றி உருவ அமைப்பில் வெளிவந்திருக்கிறது. ஜப்பான் மொழி தெரிந்த தமிழன் நூற்றுக்கணக்கான 'ஹைக்கூ'க்களைத் தமிழாக்கியிருக்க வேண்டும். அப்போதுதான் அதன் உருவமும் உள்ளடக்கமும் புரியும். அதுபோன்றே, வடமொழி, பாலி, பிராகிருதம் மற்றும் கன்னடம், இந்தி, தெலுங்கு போன்ற தற்கால மொழிகளிலும் தமிழ் அறிஞர்கள் பயின்று மொழிபெயர்ப்புகள் செய்தால் நற்பயன் பெற முடியும்[2]

எனப் படைப்பு - மொழிபெயர்ப்பு என்ற இரு பணிகளை மதிப்பிட்டு ஒரு மொழியின் படைப்பாற்றல் பெருக மொழிபெயர்ப்புகள் பெருக வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார்.

### மு.கு. ஜகந்நாத ராஜா மொழிபெயர்த்த கன்யாசுல்கம் (1963)

தெலுங்கு இலக்கிய வரலாற்றில் புகழ் பெற்ற சீர்திருத்த எழுத்தாளரான குரஜாட அப்பாராவ் எழுதிய 'கன்யா சுல்கம்' என்ற தெலுங்கு மொழி நூலை மு.கு. ஜகந்நாத ராஜா தமிழில் மொழி பெயர்த்து 1964-ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார். மூலநூலாசிரியர் தெலுங்கு இலக்கிய நடையில் எழுதாமல் சாதாரண மக்கள் பேசும் பேச்சு மொழியில் எழுதியுள்ளார். கதையமைப்பு, நிகழ்ச்சிகளின் விறுவிறுப்பு, கதைப் பாத்திரங்களின் உரையாடல் நயம், நகைச்சுவை ஆகியவற்றில் சிறந்து விளங்கும் இந்நாடகம் தெலுங்கு இலக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க சிறப்பிடத்தைப் பெற்றுள்ளது. இந் நூலுக்கு 1992 ஆம் ஆண்டு நூற்றாண்டு விழாக் கொண்டாடினர். இந்நூலை மொழிபெயர்த்த மு.கு. ஜகந்நாத ராஜா,

> இந்த நாடகத்தை அப்பாராவ் கொச்சையான தெலுங்கு மொழியில் எழுதினார். மக்கள் மொழியிலேயே இலக்கியம் படைக்க முடியுமெனக் காட்டவே அப்படி எழுதினார். எனினும் நான் தமிழாக்கும் போது தமிழ்நாட்டார் மரபுக்கேற்பத் தற்காலப் பத்திரிகை நடையில் எழுதுவதே சிறந்ததெனக் கருதி அவ்வாறே எழுதலானேன். இந்நாடகம் கிழவர்களுக்கு இளங் குமரிகளைக் கட்டிக் கொடுக்கும் அதிபாலிய விவாஹத்தை ஒழிக்கவும், மணம் புரியப் பெண்களை விலைமாடுகளைப் போல விலைபேசி 'கன்யாசுல்கம்' (பெண்களுக்குத் தரும் தக்ஷிணை) தரும் கொடும் வழக்கத்தை எதிர்த்தும், தேவதாசி முறையை ஒழிக்கவும், விதவா விவாஹத்தை ஆதரித்தும், பிற மூடப்பழக்கவழக்கங்களைக் கேலி செய்தும், சமுதாய சீர்திருத்தத்தை உண்டாக்கவே எழுதப்பட்டது. குறிப்பிட்ட இலட்சியத்தை விளக்கும் உத்தேசத்துடன் எழுதப்படினும் நாடகத்தில் எங்கு நோக்கினும் கலை மணம் கமழ்கின்றது. அரை நூற்றாண்டுக்கு முன்பு எழுதப்பட்ட இந்த நாடகத்திற்கு இணையான நாடகம் இதுவரையும் தென்னக் மொழிகளிலே இயற்றப் பெறவில்லை என்பதிலிருந்து ஒருவாறு இதன் சிறப்பை ஊகிக்கலாம். சமீபத்தில் குரஜாட அப்பாராவின் நூற்றாண்டு விழா ஆந்திர நாட்டில் மட்டுமன்றி ருஷ்யா போன்ற அயல் நாடுகளிலும் கொண்டாடப்பட்டது[3]

என இந்நூலின் சிறப்பையும் மொழிபெயர்ப்பையும் பற்றிக் குறிப்பிடுகிறார். இந்நூல் உருஷ்ய மொழியிலும், பிரெஞ்சு மொழியிலும் மொழிபெயர்க்கப் பட்டுப் பலரின் பாராட்டுக்களைப் பெற்றுள்ளது.

இந்நூலின் தலைப்பு தெலுங்கு மொழியில் வழங்கும் 'கன்யா சுல்கம்' என்ற பெயரே தமிழ் நூலுக்கும் வழங்கப்பட்டுள்ளது. 'அற்புதத் திருமணம்' என அடைப்புக் குறியில் குறிப்பிடப்பட்டுள்ளது. பெரும்பாலும் மு.கு. ஜகந்நாத ராஜா மூல நூலின் பெயரை ஒலிபெயர்ப்பாக மொழிபெயர்ப்பு நூலுக்கு வழங்குகிறார். இந்நூல் ஆங்கிலம், வடமொழி கலந்த பெயர்ப்பாக அமைந்துள்ளது. நாடகத்தில் இடம்பெறுகின்ற கதாபத்திரங்களின் உரையாடல் பேச்சு மொழியில் அமைந்திருப்பதுடன், இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் ஆங்கிலமொழி ஆதிக்கம் பிற மொழிகளில் ஊடுருவி இருந்ததும், மக்கள் நடைமுறையில் இக்கலப்பினைப் பின்பற்றியிருந்ததும் ஒரு காரணமாகும். மேலும் இதில் இடம்பெறும் கிரீசன் என்ற கதாபாத்திரம் ஆங்கிலத்தில் உரையாடுகின்ற, ஆங்கிலத்தைத் தமிழில் கலந்து பேசுகின்ற ஆங்கில மொழியின்மீது அளவிலாப் பற்றுக்

கொண்ட ஒரு கதாபாத்திரமாகும். இந்த நாவலுக்கான கதைச்சூழல் சுமார் 1800 முதல் 1900 வரை எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மொழிபெயர்ப்பிலும் இக்காலப் பின்னணி படிந்துள்ளது என்பதைப் படிப்போர் உணர்வர்.

> இந்நாடகப் பாத்திரமாகிய கிரீசனின் ஆங்கிலம் கலந்த தமிழ்மொழி நடையை மூல நூலாசிரியரின் கருத்துக்கேற்ப ஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன். வாசகர்கள் இந்நூலைக் குறைந்தது இரண்டு தடவை யாவது படித்தால்தான் இதன் நயத்தை உணர முடியுமென்று கருதுகிறேன். மேலும் கதை நடந்த, கால கட்டத்தை மனதிலிருத்திக் கொள்வதோடு பாத்திரங்களைப் பற்றிய குணாதிசயங்களையும் படிப்பவர்கள் நினைவிற் கொள்ள வேண்டும்[4]

என்று இந்நூலின் மொழிபெயர்ப்பாளர் மு.கு. ஜகந்நாத ராஜா குறிப்பிடுகிறார். இதனால் மொழிபெயர்ப்பு தூய தமிழ் நடையில் அமையவில்லை என்பதை ஒரு குறையாகச் சுட்டிக்காட்ட முடியாது. ஏனெனில் மூலநூலாசிரியர் தெலுங்கில் பேச்சு மொழியில் அமைந்த உரையாடலை மொழிபெயர்ப்பில் அப்படியே கொணர்வதுடன் ஆங்கில மொழிக் கலப்பு கதாபாத்திரத்தின் தன்மையுடன் ஒன்றிணைந்து இருப்பதால் இம்மொழி நடை தவிர்க்க முடியாததாகும்.

### காதாசப்தசதி

கிபி. முதல் நூற்றாண்டில் 'ஹாலன்' என்ற சாதவாஹன மன்னன் தொகுத்த எழுநூறு பாடல்களைக் கொண்ட நூல். 'காதாசப்தசதி' எனும் பிராகிருத மொழி இலக்கியமாகும். 'காதா' என்பது பிராகிருதச் செய்யுள். 'சப்தசதி' என்பது எழுநூறு என்று பொருள். இந்நூலை மு.கு. ஜகந்நாத ராஜா 'காதா சப்த சதி' என்ற பெயரிலேயே தமிழில் மொழிபெயர்த்துள்ளார். 'பா எழுநூறு' என்பதை இதன் மொழிபெயர்ப்பாக அடைப்புக் குறிக்குள் வழங்கியுள்ளார். காதாசப்தசதியை இயற்றிய சாதவாகன மன்னன் ஆந்திர நாட்டை ஆண்ட மன்னன் என்பதால் தெலுங்கர்கள் இந் நூலைத் தங்களுடைய இலக்கியமாகக் கருதுகின்றனர். ராள்ள பள்ளி அனந்தகிருஷ்ணசர்மா, கட்டி லக்ஷ்மி நரசிம்ம சாஸ்திரி, திருமல ராமச்சந்திரர், ஸ்வாமி சிவசங்கரர் ஆகியோர் பிராகிருத மொழியி லிருந்து தெலுங்கில் இந்நூலை மொழிபெயர்ப்புச் செய்துள்ளனர். மகாகவி வள்ளத்தோல் இந்நூலை மலையாளத்திலும், எஸ்.வி. பரமேஸ்வர பட்டர் கன்னடத்திலும் மொழிபெயர்த்துள்ளனர். த.நா. குமாரசுவாமி காதாசப்தசதியில் சில பாடல்களை மொழிபெயர்த்துச் 'சாதவாஹனம்' எனும் தலைப்பில் அமுதசுரபி இதழில் வெளி யிட்டுள்ளார். இரா. மதிவாணன் 'ஆந்திர நாட்டு அகநானூறு' எனும் தலைப்பில் 400

பாடல்களைத் தேர்ந்தெடுத்துத் தமிழாக்கம் செய்து 1978 ஆம் ஆண்டு நூலாக வெளியிட்டுள்ளார். 1981ஆம் ஆண்டு பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா 'காதா சப்தசதி' என்ற தலைப்பில் 500 பாடல்களைத் தேர்வு செய்து பிராகிருத மொழியி லிருந்து தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

> ஏழுநூறு கவிதைகளில் நான் ஐந்து நூறு மட்டுமே மொழிபெயர்த்துள்ளேன். கவிச்சுவை குறைந்ததும், கூறியது கூறலாக வரும் பாடல்களையும் நமது பண்பாட்டுக்கும் மரபுக்கும் இசையாத பாடல் களையும் கொச்சையான சிருங்கார ரசம் ததும்பும் பாடல்களையும் மொழிபெயர்ப்பில் மூலக்கருத்து வர இயலாத பாடல்களையும் தவிர்த்துவிட்டேன். ஒரு மொழியின் சிலேடைகள் மற்றொரு மொழியில் கொணர்வது அரிதாதலின் அத்தகைய பாடல்கள் தவிர்க்கப்பட்டன. சங்கச்சான்றோர் பாடல்கள் போல அகவலிலேயே யானும் மொழிபெயர்த்தேன். நாற் சீரடி நான்கு கொண்ட பாடல்கள் பெரும்பாலனவை. சிற்சில மூன்று அடிகளும் ஐந்தடிகளும் வருவன. ஆறடிப் பாடலும் உள. 'யார்கூற்று' என்பதைத் தலைப்பில் குறிப்பிட்டுள்ளேன். மூல உரையாசிரியர் களைத் தழுவியதேனும் விளக்க உரைகள் என்னுடைய சொந்த உரைகளே.[5]

என்று குறிப்பிடுகிறார் ஜகந்நாத ராஜா. சங்க இலக்கிய மொழி நடையையும், செய்யுள் முறையையும் இம்மொழிபெயர்ப்பில் கையாண்டுள்ளதால் சிறந்த மொழிபெயர்ப் பாளரான த.நா. குமாரசுவாமி, பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

> ஜகந்நாத ராஜாவின் தமிழ் மொழிபெயர்ப்பைக் கூர்ந்து படித்தேன். 'காதா' ஏதோ ஒரு வேற்றுமொழி இலக்கியமாகத் தோன்றவில்லை. இதுகாறும் வெளிச்சம் காணாத ஒரு சங்க நூலைப்படித்து நுகர்வது போன்ற இன்பமே மூண்டது எனக்கு[6]

என்று குறிப்பிட்டுள்ளார்.

(எ.டு.)

பாங்கன் கூற்று

ஒருமான் வலமுறின் உறுசெல வழுங்குவர்
இருமான் விழிகள் பெருகு கண்ணீரின்
காதலர் பிரிந்து போதலைத் தடுத்தல்
வியப்பா காதே! இயல்பே யாகும். காலசாரன் (1–25)

**விளக்கம்**

ஒரு மான் இடப்புறத்திலிருந்து வலப்புறம் சென்றால் பயணம் செல்வோர் சகுனத் தடையாகக் கருதிப் பயணம் தவிர்ப்பார்கள். (தற்காலத்தில் பூனை குறுக்கே செல்வது சகுனத் தடையாகக் கருதப்படுவதுபோல் முன்னாளில் மான் செல்லுதல் கருதப்பட்டது). தலைவன் பயணம் செல்வதாக இருந்தான். தலைவியின் இருமான் விழிகள் கண்ணீராற் கலங்கின. தலைவன் பயணம் செல்வதைத் தவிர்த்தான். அது அறிந்த பாங்கன், 'ஒரு மானே சகுனத் தடையாகிப் பயணத்தை நிறுத்தும்போது இருமான் விழிகள் நிறுத்தி விடுதலில் வியப்பில்லைதான்' என்று கூறினான்.

*செலவழுங்குதல்; பயணம் தவிர்த்தல்*"[7]

என மு.கு. ஜகந்நாத ராஜா எளிமையாகவும் சங்க இலக்கியப் பாடல் நயத்துடனும் இம்மொழிபெயர்ப்பினைச் செய்துள்ளார். இவர் மொழிபெயர்த்துள்ள நூல்களில் இந்நூல் இவருக்கு மகுடம் சூட்டுவதாகப் பல அறிஞர்களும் பாராட்டியுள்ளனர். தமிழில் சங்க இலக்கியங்களுக்குரிய அனைத்துக் கூறுகளும் காதாசப்தசதியில் அமைந்திருப்பது இதன் சிறப்பாகும். இதனால் இரா. மதிவாணன் இதை 'ஆந்திரநாட்டு அகநானூறு' எனத் தலைப்பிட்டுத் தாமே திணை, துறைக் குறிப்புகளை வகுத்து வழங்கியுள்ளார். இவருடைய மொழிபெயர்ப்பு உரைநடை நயம்பட அமைந்துள்ளது.

ஜகந்நாதராஜா மூலமொழியான பிராகிருதத்தில் அமைந்துள்ள செய்யுள் நடையைத் தமிழில் அவ்வாறே மொழிபெயர்த்துள்ளார்.

*ஜம் ஜம் ஆலிஹஇ மணோ*
*ஆஸா வட்டீஹி ஹிஅஅப²ல அம்மி*
*தம்தம் பா³ லோ வ்வ விஹீ*
*ணீஉஹீ அம் ஹஸிண பம்ஹீஸஇ*

*இதயப் பலகையில் எதை எதைச் சித்தம்*
*ஆசைத் தூரிகையால் எழுதிற்றோ*
*அதையெலாம் திரித்தவா றழித்திடும் அந்தோ*
*விதி எனும் இந்தவிளையாட்டுப் பிள்ளை*[8]

**(சாலிவாஹனன் 7-56)**

நாடகப் போக்கும் கவித்துவமும் நிறைந்த இத்தகைய கவிதைகள் காதா சப்த சதியில் நிறைந்துள்ளன. காதல் இலக்கியத் திற்கும் காதா சப்த சதி ஒரு மூலநூல் என்று பலமொழி அறிஞர்களும் பாராட்டியுள்ளனர்.

*காதா முதலடி 12 மாத்திரையும், இரண்டாம் அடி 12 மாத்திரையும், மூன்றாம் அடி 12 மாத்திரையும்*

> **நான்காம் அடி 15 மாத்திரையும், அமையப் பாடப் படுவதாகும். தமிழில் எட்டுத்தொகை நூல்களில் குறுந்தொகை 5 முதல் 8 அடிகளைக் கொண்டது. சற்றேறத்தாழ இதே அமைப்பில் சப்தசதி அமைந் திருக்கிறது. இந்நூலில் உள்ள பாடல்களை எழுதியவர் பெயரின்றித் தனியே கொடுத்தால் படிப்பவர் குறுந்தொகையை ஒத்த வேறொர் அருமையான அகப்பொருள் நூல் என்று எண்ணுமளவுக்குப் பாடல்கள் அமைந்துள்ளன'**

இவற்றுள் சுமார் 100 பாடல்களுக்கு ஆசிரியர் பெயர் இல்லை. மீதி 400 பாடல்களை ஏறத்தாழ 300 புலவர்கள் பாடியுள்ளனர். ஒரு புலவருக்கு ஒரு பாடல் என்ற அளவில் இத்தொகுப்பு அமைந்துள்ளது. மிகச் சிலருடைய பாடல்களே ஒன்றுக்கு மேற்பட்ட இரண்டு அல்லது மூன்று என்ற அளவில் உள்ளன. அனுராகன், ஆந்திரலட்சுமி, சாலிவாஹனன், பாலிதன் என்னும் புலவர்கள் பாடல்கள் மட்டுமே பத்தினை எட்டியுள்ளன. செர்மன் மொழியில் பல பதிப்புகளாக இந்நூல் வெளிவந்துள்ளது என்பதும் இந்நூலுக்கான ஒரு சிறப்பாகும்.

## ஆமுக்த மால்யத – சூடிக்கொடுத்தவள்

கிருஷ்ணதேவராயர் தெலுங்கில் இயற்றிய மாபெரும் காவியம் 'ஆமுக்த மால்யத'. ஆண்டாளின் வரலாற்றைத் தெலுங்கு மொழியில் கன்னட மன்னன் இயற்றியுள்ளது இந்நூலின் சிறப்பாகும். புதிய கற்பனைகள், உவமைகள், உருவகங்கள், அறநெறிக் கருத்துகளைக் கூறும் இந்நூலை ஆந்திரா ஐதராபாத் தெலுங்குப் பல்கலைக்கழகம் தமிழில் மொழிபெயர்த்து வழங்கும்படிக் கேட்டுக்கொண்டதற்கிணங்க மு.கு. ஜகந்நாதராஜா இதைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். இலக்கிய ஆர்வலர்க்கேற்றவாறு இனிய மொழி நடையில் மொழிபெயர்த்துப் பாராட்டைப் பெற்றார். இம் மொழிபெயர்ப்புக்கெனச் சாகித்திய அகாதெமிப் பரிசினைப் பெற்றார். 1989 ஆம் ஆண்டு முதன் முதலில் மொழிபெயர்ப்புக்கான சாகித்திய அகாதெமி விருது பெற்ற நூல் 'ஆமுக்த மால்யத' ஆகும்.

ஆமுக்த மால்யத என்ற இந்நூலுக்கு 'விஷ்ணு சித்தீயம்' என்ற மற்றொரு பெயரும் உண்டு. மூலத் தெலுங்குப் பாடல்களைத் தமிழ் எழுத்தில் ஒலிபெயர்ப்புடன் ஒரு பக்கத்திலும் அதற்கு இணையாக இப்பாடலின் மொழிபெயர்ப்பைக் கவிதைப் பாங்கான உரைநடையில் மறுபக்கத்திலும் 0வழங்கப்பட்டுள்ளது இந்நூலின் சிறப்பாகும். 519 பக்கங்கள் கொண்ட இந்நூலில் மூலநூலின் நடையும், கருத்தாழமும் ஒருங்கே காணப்படுகின்றன. மு.கு. ஜகந்நாதராஜாவின்

பன்மொழித் திறமும், கடுமையான உழைப்பும் இந்நூலில் வெளிப்படுகிறது.

> ஆமுக்தமால்யத – தெலுங்குக் காவியமாயினும் வடசொற் பிரயோகங்கள் மிகுதியுள்ள காவியம். நடையும் நாளிகேள (தேங்காய்) பாகம் போன்றது. திராட்சா, கதலீபாகம் போன்றதல்ல. செறிவுமிக்க நடை அதை மொழிபெயர்க்கும்போது மிகுந்த கவனத்துடன் மூலத்தை நன்குணர்ந்து கொண்டு சிற்சில வாக்கியங்கள் இரண்டாகப் பிரித்துத் தமிழாக்கம் செய்ய வேண்டி வந்தது.
>
> செய்யுள் தமிழாக்கத்தில் அக்கருத்து ஒருவகைப் பாவில் அமைக்க முடியாது போனால் வேறு வகைப் பாவில் அமைத்து விடுவேன். சில சொற்களுக்குச் சரியான தமிழ்ச்சொல் கிடைக்காது. மிகக்கவனமாக அதற்கு ஈடான தமிழ்ச் சொல்லைத் தேடிப் போட வேண்டிவரும்[10]

என்று ஜகந்நாதராஜா இம்மொழிபெயர்ப்புக் குறித்துக் குறிப்பிடுகிறார்.

### வேமனா

'வேமனா' தெலுங்கு மொழியில் புகழ்பெற்ற சீர்திருத்தக் கவிஞராவார். அவர் எழுதிய நான்கு வரிக்கவிதைகளான எளிமையும் இனிமையும் மிக்க சமுதாயச் சீர்திருத்தக் கவிதைகள் 'வேமன பத்தியம்' எனப் பாராட்டப்பட்டது. 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து அறநெறி பரப்பிய இவர் திருவள்ளுவரைப் போலத் தெலுங்கு மக்களால் போற்றப்படுகிறார். வடமொழி மிகுதியாகக் கலக்காத தூய தெலுங்குச் சொற்களைப் பயன்படுத்தி மக்கள் கவிஞராக மதிக்கப்பட்ட வேமனா மூவாயிரம் பாடல்களுக்கு மேல் பாடியுள்ளார். அறநெறி, பகுத்தறிவு, சீர்திருத்தக் கருத்துகள் பொதிந்த இவருடைய பாடல்களில் 'விஸ்ததா - பிராம வினுரவேம' என்று நான்காம் அடியுடன் முடிவுறும் பாடல்களைத் தமிழாக்கம் செய்து வழங்கியுள்ளார் மு.கு. ஜகந்நாத ராஜா. இவர் இந்நூலின் முன்னுரையில் வேமனா வரலாறு, அவருடைய கோட்பாடுகள், திருக்குறளுக்கும் அவரது பாடல் களுக்கும் உள்ள ஒப்பீடு முதலியனவும் வழங்கியுள்ளார்.

### களாபூரணோதயம்

தெலுங்கு இலக்கிய உலகின் மாபெரும் கவிஞர் பிங்கலிசூரனா.

> 'பதினாறாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த சூரனாவை அஷ்டதிக் கஜங்களில் ஒருவராகவே இலக்கிய

> **வரலாற்றாசிரியர்கள் கூறி வருகின்றனர். இவர் ராகவ பாண்டவியமு என்ற இருபொருளுடைக் காப்பியத் தையும் 'பிரபாவதி பிரத்யும்னமு', 'களாபூர்ணோதயமு' என்ற பிரபந்தங்களையும் இயற்றியுள்ளார்**[11]

களாபூரணோதயம் என்ற பிரபந்தம் கவிதை நயம் மிக்க புராணக் கற்பனைக் கதையாக அமைந்துள்ளது. துவாரகையில் கிருஷ்ணனின் கதையைத் தொடங்கி, பல்வேறு எதிர்பாராத் திருப்பங்களுடன் கதை விறுவிறுப்பாக அமைக்கப்பட்டுள்ளது. இப்பிரபந்தம் ஆங்கிலக்கவிஞர் ஷேக்ஸ்பியர் எழுதிய 'Comedy of Errors' (தவறுகளின் இன்பியல்) என்ற நாடகம் போல் அமைந்துள்ளது எனத் திறனாய்வாளர்களால் கருத்துத் தெரிவிக்கப் பட்டுள்ளது. இத்தகைய காவியத்தை மூலத்தின் அழகுடன் தமிழில் மொழிபெயர்த்திருப்பது மு.கு. ஜகந்நாத ராஜாவின் அருஞ் சாதனைகளில் ஒன்றாகும். இந்நூலைத் தஞ்சைச் சரசுவதி மகால் நூலகம் 1995 ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளது.

சேரி

தெலுங்கு மொழியில் 'உன்னவ லட்சுமி நாராயணா' எழுதிய நாவலின் பெயர் 'மாலபல்லி'. இதைப் பன்மொழிப்புலவர் 'சேரி' என்ற தலைப்பில் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். தேசீய இயக்கத்தின் முன்னோடிகளில் ஒருவரான உன்னவ லட்சுமி நாராயணா சுதந்திரப் போராட்டக் காலத்தில் இருந்து வந்த பறைச்சேரியைத் தளமாகக் கொண்டு அங்கு வாழ்ந்த தியாக உள்ளம் கொண்ட மனிதர்களைக் கதை மாந்தர்களாக உருவாக்கிச் சமூகச் சீர்திருத்தக் கருத்துகளை விளக்கியுள்ளார்.

> **இலக்கியத்தில் 'சேரி'க்கு ஒரு தனிச்சிறப்புண்டு. ஒத்துழையாமை இயக்கத்தை முன்னிறுத்தி அதன் நீண்ட நிழல்களை இலக்கியத்தில் பரவவிட்டது. கிராம வாழ்க்கை, அதிலுள்ள பிரச்சினைகள், சிக்கல்கள், சுயநலம், இளைஞர்களின் தலைமை, விவசாயத் தொழிலாளர்களின் ஒற்றுமை, ஹரிஜன பிரதான பாத்திரங்கள், தியாகங்கள், பணி முடக்கங்கள், லட்சியத்திற்காகத் துன்பங்களை எதிர்கொள்ளல் முதலிய விஷயங்கள் இதில் சித்தரிக்கப்பட்டுள்ளன**[12]

என இந்நூலின் முன்னுரையில் பெஜவாட கோபாலரெட்டி குறிப்பிட்டுள்ளார்.

உன்னவ லெட்சுமி நாராயணா ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டு 1921ஆம் ஆண்டு ஓர் ஆண்டு சிறைத்தண்டனை அனுபவித்தார். சிறையில் இருந்தபோது இவர் 'சேரி' நாவலை இயற்றினார். இந்நூலைத் தமிழாக்கம் செய்துள்ள மு.கு. ஜகந்நாதராஜா

> **இம்மொழிபெயர்ப்பு நூல் மூலநூலின் சுருக்கப் பதிப்பே ஆகும். எனினும் மூலநூலின் எழில் சிறிதும் சிதையாதவாறு சுருக்கப்பட்டதால் இந்நூல் போது மான அளவு மனநிறைவைத் தருகிறது. ஆசிரியர் கூற்று, நூல் வழக்கிலும், பாத்திரங்களின் பேச்சுகள் நடைமுறையிலுள்ள வழக்காற்று மொழியிலும் அமைந்த மூல நூலின் நடைக்கேற்பவே மொழி பெயர்ப்பின் நடையும் அமைந்திருக்கிறது**[13]

எனத் தமது மொழிபெயர்ப்பைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இந்நாவலில் சேரி மக்களின் உரையாடல்கள் பொதுவான பேச்சு மொழி நடையில் அமைந்துள்ளன. (எ.டு)

*சங்கதாஸ்: நம்ம ஊரில் ரெண்டுமலை நிறையச் சப்பாத்திக்கள்ளி செழித்திருக்கல்லவா? கோடைக்காலம் வந்தபிறகு வந்து பாருங்கள், ஒரு காய் கூட இராது.*

*ராமாநாயுடு: ஒன்றும் கிடைக்கலைன்ன என்ன செய்வார்கள்?*

*சங்கதாஸ்: உங்களைச் சிரமப்படுத்துவது நல்லதில்லை. என்ன செய்வார்களா? 'மடிப்புக் கொழுக்கட்டைகள்' தின்பார்கள்.*

*ராமாநாயுடு: அதென்ன!*

*சங்கதாஸ்: அது நீங்கள் எப்போதும் தின்றதில்லை. அது தின்றால் அஜீரணம் போய்விடும். ஏகாதசியன்று இதுதான் சாப்பிடுவார்கள்.*

*ராமாதாஸ்: நீ கேலி செய்கிறாய்.*

*சங்கதாஸ்: கேலியில்லை. தினந்தோறும் பிணங்களை எரிக்கும் எங்களாட்களுக்குப் பிணங்கள் என்றால் அருவருப் பில்லாமல் போய்விடுகிறது. இந்தத் தினப்பட்டினிகளை நான் தினந் தோறும் பார்ப்பதுதான். பட்டினியிருந்தால் கடவுள் உங்களுக்குப் புண்ணியம் தாரானாம். அதே கடவுள் தினப் பட்டினி கிடக்கும் எங்களுக்கு எதற்குத் தரமாட்டானோ? மறந்து போனோம். மடிப்புக் கொழுக்கட்டைன்னா எங்களுக்குத்தான் நல்லாத் தெரியும். அது பறைச்சக்கிலியர் வயிற்றில் தான் ரொம்ப இருக்கின்றன. சோறு கொஞ்சங்கூட இல்லாதபோது படுத்துக் கொண்டால் துன்பம் அதிகமென்று இரைப்பைக் குடலை மடிப்பு விழுமாறு முடித்து வைத்துக் கொண்டு படுத்துக் கொள்வோம். இது நாங்கள் கண்டுபிடித்த விருந்துச் சமையல்.*

*ராமாதாஸ் : இந்த நிலைமையை மாற்றும் வழி ஏதாவது இருக்கிறதா?*

**சங்கதாஸ் :** எனக்கு ஒன்றுதான் தென்படுகிறது. அருளற்ற இந்தக் கடவுளைப் பதவி விலக்கம் செய்து, அந்தச் சாத்தானையாவது கொண்டு வந்து உட்கார வைத்து அதனதன் பாட்டுக்குக் கிடந்தால் நாம் பிழைக்காலம் என்ற நம்பிக்கை.[14]

மொழிநடை என்பது ஒவ்வொருவருக்கும் வேறுபடுவது என்றாலும், குறிப்பிட்ட சமுதாய மக்களின் வாழ்வியலைச் சொல்லும் படைப்புகளில் அவர்களுடைய மொழிநடையின் தனித்தன்மை யையும் சேர்த்துப் பதிவு செய்யப்பட வேண்டும். மொழிபெயர்ப்பிலும் அப்படியே வழங்கப்பட வேண்டும், என்பதும் ஒரு கோட்பாடாக உள்ளது. 'சேரி' நாவலைப் பொறுத்தமட்டில் சில இடங்களில் பொதுவான மொழி நடையும், சிலவிடங்களில் பேச்சு மொழி நடையும் கையாளப்பட்டுள்ளன. மொழிபெயர்ப்பிலும் மு.கு. ஜகந்நாதராஜா அவ்வாறே வழங்கியுள்ளார். தாழ்த்தப்பட்ட மக்களின் துயர வாழ்வைப் படம்பிடித்துச் சொல்லும் இந்நாவலைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ள பன்மொழிப் புலவரின் இப்பணி அம்மக்களுக்குச் செய்த அருந்தொண்டாகவே கருதப்படல் வேண்டும்.

**தீகநிகாயம் (பௌத்த தத்துவம்)**

புத்தரின் போதனைகள் அனைத்தும் தொகுத்து இந்நூலில் வழங்கப்பட்டுள்ளன. பாலி மொழியில் உள்ள 'திரிபீடகங்கள்' எனும் நூல் தொகை ஐம்பதுக்கும் மேற்பட்ட பெரிய நூல் தொகுதிகளாக வெளிவந்துள்ளது. திரிபீடகம்-சுத்த பீடகம், வினயபீடகம், அபிதரும பீடகம் என மூன்று பகுதிகளாக உள்ளன. சுத்த பீடகத்தில் தீகநிகாயம், மஜ்ஜிமநிகாயம், சம்யுக்த நிகாயம், அங்குதர நிகாயம், குந்தக நிகாயம் என ஐந்து பிரிவுகள் உள்ளன. தீக நிகாயம் நீளமான உரையாடல்களும் உபதேசங்களும் அடங்கியதாகும். இதில் 34 சூத்திரங்கள் உள்ளன. இந்நூலின் முதல் பதினைந்து சூத்திரங்களைப் பன்மொழிப் புலவர் தமிழாக்கம் செய்து வெளியிட்டுள்ளார். இந்நூலை முதற்பாகம், இரண்டாம் பாகம், என வெளியிட வேண்டுமென எண்ணியுள்ளார். புத்தர் காலச் சமுதாயத்தை உணர்வதற்கும் வரலாற்று ஆசிரியர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும் பெரிதும் இந்நூல் பயன்படும். பாலி மொழியிலிருந்து நேரிடையாகத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார் மு.கு. ஜகந்நாதராஜா. பௌத்த நெறியையும் புத்தரின் தத்துவத்தையும் அறிவதற்கு இந்நூல் சிறந்த அடிப்படை நூலாக அமைந்துள்ளது.

**ஔசித்ய விசாரசர்ச்சா** (தகுதிப் பாட்டாய்வியல்)

பல துறைகளில் புகழ்பெற்ற நூல்கள் படைத்த ஷேமேந்திரன் பதினோறாம் நூற்றாண்டில் வாழ்ந்த மாபெரும் கவிஞராவார். காஷ்மீரைச் சேர்ந்த இக்கவிஞர் காவியங்கள், நீதிநூல்கள், இலக்கணம்,

இலக்கியத் திறனாய்வு, சமூகச் சீர்த்திருத்தம் போன்ற பல துறைகளிலும் முப்பத்தாறு நூல்கள் இயற்றியுள்ளார்.

வடமொழித் திறனாய்வு நூல்களில் புதிய சிந்தனையைத் தோற்றுவிக்கும் நூல்களாக இரண்டு நூல்களைக் குறிப்பிடுவர். ஒன்று ஆனந்தவர்த்தனரின் 'தொன்யா லோகம்'. மற்றொன்று க்ஷேமேந்திரனின் 'ஔசித்ய விசாரசர்ச்சா' இந்நூலின் மொழிபெயர்ப்பைப் பற்றி குறிப்பிடும்பொழுது,

> **'ஔசித்ய விசாரசர்ச்சா' என்ற திறனாய்வு நூலின் கலைச்சொல்லைத் 'தகுதிப்பாட்டாய்வியல்' என்று மொழிபெயர்த்தேன். பின் தகுதிப்பாடு, பொருத்தம் என்ற சொற்களை 'ஔசித்யம்' என்ற சொல்லுக்குப் பயன்படுத்தினேன்**[15]

என்று ஜகந்நாதராஜா கூறுகிறார்.

எதைச் சொன்னாலும் அது அந்த இடத்திற்கு, அந்தப் பாத்திரத்திற்கு, அந்தச் சூழ்நிலைக்குப் பொருத்தமாக இருக்க வேண்டும். ஔசித்யம் இல்லாது போனால் அது இலக்கிய இன்பத்தையே கெடுத்துக் குலைத்துவிடும். ஆகவே பொருத்தம் உள்ளவற்றைப் பொருத்தமான முறையில் கையாள்வதே ஔசித்யக் கோட்பாடாகக் கருதப்படுகிறது. இந்நூல் கவிதை, நடை, உத்தி, பாத்திரப்படைப்பு முதலியவற்றில் தகுதிப்பாடாக எப்படி அமைய வேண்டும் என்று விளக்குகிறது. இவ்வரிய வடமொழி நூலை விரிவான ஆய்வு முன்னுரையுடன் வடமொழி அலங்கார சாஸ்த்திர சுருக்க வரலாற்றுடனும் புலமைத் திறத்துடன் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். தமிழறிவும் வடமொழிப் புலமையும் உள்ளவர்களால் தான் இத்தகைய முயற்சியில் ஈடுபட முடியும். ஜகந்நாதராஜா பல சமசுகிருத மொழி நூல்களைத் தாமே முயன்று மொழிபெயர்த்துத் தமிழுக்கும், ஒப்பியல் துறைக்கும் வளம் சேர்த்தவர். அவர் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ள பல சிறந்த நூல்களை இன்று அறிஞர்களும், மாணவர்களும் பயன்படுத்தி வருகின்றனர்.

**நாகானந்தம்**

இந்திய வரலாற்றில் புகழ்பெற்ற மன்னரான ஹர்ஷர் 'நாகானந்தம்', 'ரத்னாவளி', பிரியதர்சிகா என்ற நாடகங்களை வடமொழியில் இயற்றினார். ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த இந்நாடகங்கள் புகழ்பெற்ற படைப்புகளாக வரலாற்றாசிரியர்களால் குறிப்பிடப்படுகின்றன.

இவற்றுள் 'நாகானந்தம்' என்ற நாடகத்தை வடமொழியிலிருந்து தமிழுக்கு மு.கு.ஜகந்நாதராஜா மொழிபெயர்த்து வழங்கி

யுள்ளார். வித்யாதா மன்னனாகிய ஜீமுதவாஹனன் நாகங்களைக் கொன்றொழிக்கும் கருடனுக்குத் தன் உடலைத் தியாகம் செய்யும் புகழ் பெற்ற கதைகளை ஹர்ஷர் உணர்ச்சிகரமான தியாகச் சித்திரமாகத் தீட்டியுள்ளார். தனக்கென வாழாப் பிறர்க்குரியனவாக அரச போகத்தையும் இளம் மனைவியின் இன்பபோகத்தையும் துறந்து, முன்பின் தெரியாத ஒரு நாககுமாரன் துயரத்தைப் போக்கத் தன்னையே தியாகம் செய்த வரலாற்றினை இந்நாடகம் கருணைச் சுவை மிக்க காப்பியமாக்கிக் கூறுகிறது. இந் நாடகத்தைத் தற்கால வசன நடையில் எளிதில் புரியும் வகையில் மூலத்தின் சுவையுடன் மு.கு. ஜகந்நாதராஜா தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

> **வடமொழி நாடகங்களில் உரைநடையும் செய்யுளும் (சுலோகம்) கலந்து இருப்பது மரபு; செய்யுளைச் செய்யுளிலும் உரைநடையை உரைநடையிலும் மொழிபெயர்ப்பதே மரபாக இருந்தது. எனினும் தற்போது வாசகர்களின் மனப்பாங்கைக் கருதி உரைநடையாகவே மொழிபெயர்ப்பது வழக்கமாகி விட்டது. நான் முதலில் செய்யுளைச் செய்யுளாகவே மொழிபெயர்க்கக் கருதி முதலிரு அங்கங்கள் மட்டும் செய்து, பின்னர்க் கருத்தை மாற்றிக்கொண்டு முழுவதும் உரைநடையிலேயே எழுதினேன். வடமொழி நாடகங் களில் உயர்நிலைப் பாத்திரங்கள் சமஸ்கிருதத் திலும் தாழ்நிலைப் பாத்திரங்கள் பிராகிருதத்திலும் பேசுவதாக அமைப்பது மரபாகும். பிராகிருதம் மக்கட் பேச்சு மொழியாக வழங்கியதாகையால் அதனையும் பயன்படுத்தினர். தமிழகத்தில் அவ்விதம் இரண்டு நடைகளைக் கைக்கொள்ளத் தேவையில்லை எனக் கருதி ஒரே தமிழ் நடையைப் பயன்படுத்தியுள்ளேன்[16]**

என்று மு.கு. ஜகந்நாத ராஜா இந்நூலின் மொழிப்பெயர்ப்பைப் பற்றிக் குறிப்பிடுகிறார். இந்நூல் திபெத்திய மொழியிலும் பிற இந்திய மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. தமிழிலும் இந்நூல் பன்மொழிப் புலவரால் இடம்பெற்றுவிட்டது. வடமொழி நாடகங்கள் பல தமிழில் மொழிபெயர்ப்பாக இடம்பெற்றுள்ளன. மறைமலையடிகள் சாகுந்தலத்தையும் பண்டிதமணி கதிரேசன் செட்டியார் 'மண்ணியல் சிறுதேர்' (மிருச்சகடிகம்) என்ற நாடகத்தையும் மொழிபெயர்த்துள்ளனர். உத்தர ராம சரிதம், மாலதி மாதவம், முத்ராராக்ஷசம், ரத்னாவளி, பிரதிமா, ஸ்வப்னாவாசவதத்தம் முதலிய பல நாடக வரிசையில் நாகானந்தமும் இடம் பெறுகின்றது.

### சாணக்கிய நீதி

புகழ்பெற்ற ராஜதந்திரி எனப் போற்றப்படும் சாணக்கியன் இயற்றிய நீதி நூல்களில் ஒன்று சாணக்கிய நீதி. 'அர்த்த சாஸ்திரம்' (பொருள் நூல்) என்னும் புகழ் பெற்ற நூலையும் இயற்றியவர்

சாணக்கியன். பல அறநெறிக் கருத்துகளைக் கூறும் தொகை நூல் களில் 'சாணக்கிய நீதி' மிகச் சிறந்த நூலாகக் குறிப்பிடப்படுகிறது. ஆனால் இதில் உள்ள பல கருத்துக்கள் மனித பேதத்தையும், பெண்ணடிமைத்தனத்தையும், பழமை வாதத்தையும் வலியுறுத்து வதாக உள்ளதால் இது ஒரு பொதுத்தன்மை வாய்ந்த நூல் என்று கூற முடியாது.

> **அந்தணர்க்குக் கல்வியே பலம். அரசர்க்குப் படையே பலம். வியாபாரிகட்குப் (வைசியர்) பணமே பலம். தொண்டர் (சூத்திரர்)கட்குப் பணிவே பலம்"[17]**

எனப்படுகிறது. ஒரு காலக்கட்டத்தில் இதை அறநெறியாகக் கருதியுள்ளனர். இது ஒரு சமுதாய நீதியாக ஏற்றுக் கொள்ள முடியாது. ஒரு குலத்துக்கு ஒரு நீதி என்பதை வலியுறுத்தும் கருத்துகள் எதிர்ப்புக்குரியதாகும். ஏற்க முடியாததாகும்.

> **பணம் இல்லாததால் ஒருவன் தாழ்வடைவதில்லை. செல்வந்தர்கள் எல்லாம் உயர்ந்தோர் என்பதுமில்லை. கல்வி எனும் இரத்தினம் இல்லாதவன் எல்லாப் பொருளிலும் தாழ்ந்தவனே என்பதில் ஐயமில்லை"[18]**

என்ற உயர்ந்த கருத்துகளும் இடம்பெற்றுள்ளன. இச்சிறு நூலைத் தமிழில் பன்மொழிப்புலவர் ஜகந்நாதராஜா அவர்கள் மொழிபெயர்த்து, விசுவசாந்தி பதிப்பகத்தாரால் 1986 ஆம் ஆண்டு வெளியிடப் பட்டுள்ளது.

*சாதனரகசியம்* **(The Secret of Yoga Sadhana)**

இந்தியத் தத்துவஞானத்தை நன்குணர்ந்த ஆந்திர நாட்டைச் சேர்ந்த 'அனுபவானந்த சுவாமிகள்' என்ற துறவி தமது சீடரான மாதாஜிக்கு எழுதிய கடிதங்களை நூலாக்கம் செய்து வெளியிடப் பட்டுள்ளது. இக்கடிதங்களில் சங்கரரின் அத்வைத தத்துவத்தை எளிமையான முறையில் சாதாரண மக்கள் புரிந்து கொள்ளும் வகையில் பக்தி கரும ஞானயோகங்கள் பற்றியும் ராஜயோகம் பற்றியும் 36 தலைப்புகளில் விளக்கமாகக் கூறும் இத்தெலுங்கு நூலை மு.கு. ஜகந்நாத ராஜா தமிழில் மொழிபெயர்த்து 'சாதனரகசியம்' என்ற தலைப்பிலேயே வெளியிட்டுள்ளார்.

அத்வைதத் தத்துவத்தில் இடம்பெறும் கலைச்சொற்களைத் தமிழில் மொழிபெயர்ப்பது கடினம்.

1. பிரத்தியட்சப் பிரமாணம் - காட்சியளவை
2. இந்திரிய ஞானம் - புலன்களால் பெற்ற அறிவு
3. பாஹ்யவஸ்து ஞானம் - புறப்பொருள் அறிவு

4. சப்தபிரமாணம் - உரையளவை
5. ரஜ்ஜு சர்ப்ப பிராந்தி - கயிற்றரவு மயக்கம்
6. சஜாதீபம் - தன்னின வேறுபாடு
7. விஜாதீபம் - பிற இன வேறுபாடு
8. சுவகதம் - தன்னுள் வேறுபாடு

போன்ற அத்வைதத் தத்துவக் கலைச்சொற்களைப் பன்மொழிப்புலவர் தமிழில் மொழிபெயர்த்து இடம்பெறச் செய்துள்ளது இந்நூலில் குறிப்பிடத்தக்க சிறப்பாகும். வேதாந்தம் எனப்படும் இத் தத்துவத்தை உணரப் புகுமுக நூலாகத் தகுதி பெற்றது எனச் சாதனரகசியம் எனும் இந்நூலைப் பற்றிக் குறிப்பிடப்படுகிறது.

## சன்மதி சூத்திரம்

சமண தத்துவத்தைச் சேர்ந்த 'அனேகாந்தவாதம்' என்ற கோட்பாட்டைக் குறிக்கும் மூல நூல்களில் ஒன்று 'சன்மதி சூத்திரம்' ஆகும். ஆசாரியர் சித்தசேனர் வழங்கிய சன்மதி சூத்திரத்தில் நயகாண்டம், ஜீவகாண்டம், அநேகாந்த காண்டம் என்னும் மூன்று பகுதிகள் உள்ளன. பிராகிருத மொழியில் இச்செய்யுட் சூத்திரங்கள் இயற்றப்பட்டுள்ளன. இது சமண சமயத்தாரின் புகழ்மிக்க நூலாகக் கருதப்படுகிறது. 1977ஆம் ஆண்டு டாக்டர் தேவேந்திர குமார் சாஸ்திரி இந்தி மொழியில் வெளியிட்ட இந்நூலைக் கொண்டு பன்மொழிப் புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

> **மிக விரிந்த கருத்தை மிகச் சுருங்கிய சூத்திர ரூபமான சொற்களில் அடக்கி இயற்றப் பெற்ற நூல் ஆதலின் இதன் மொழிபெயர்ப்பில் சிரமம் ஏற்பட்டதுண்டு. சரியான தமிழ்ச்சொல் கிடைக்காமல் தேடுவதுண்டு. ஆழம் தெரியாமல் காலை விட்ட கதையாக உயர்ந்த தத்துவக் கருத்துகளை மொழிபெயர்க்கும்போது - சிறிதும் சிரமம் தோன்றாது சாதாரண வாசகரும் மூலக்கருத்தைத் தெளிவாக உணரவேண்டும் என்ற நோக்கில் நான் முயன்று மொழிபெயர்த்துள்ளேன்[19]**

என்று குறிப்பிடுகிறார். 80 பக்கங்கள் கொண்ட இந்நூலிற்கு ஜகந்நாதராஜா 36 பக்கங்கள் முன்னுரை வழங்கியுள்ளார்.

## பிற மொழிபெயர்ப்புகள்

13ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட புகழ்பெற்ற தெலுங்கு இலக்கியமான 'சுமதி சதகம்' தேவுலபல்லி கிருஷ்ண சாஸ்திரி என்ற தற்காலக் கவிஞரின் 'கிருஷ்ண பட்சம்' என்னும் தெலுங்குக் கவிதை நூல். 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ராஜசேகரன் என்ற கவிஞன்

பிராகிருத மொழியில் எழுதிய 'கற்பூர மஞ்சரி' என்ற நாடகம், ஆகியன தமிழில் ஜகந்நாத ராஜாவின் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன.

பாலி, பிராகிருதம், வடமொழியில் இயற்றப்பட்ட புகழ்பெற்ற நீதி நூல்கள், தத்துவ விளக்க நூல்களை மொழிபெயர்த்து வெளியிடுவதில் மிகுந்த ஈடுபாடு உடையவராக விளங்குபவர் பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா ஆவார்.

'உதானம்' என்ற பௌத்தத் தத்துவத்தைப் பாலி மொழியில் விளக்கும் நூல், புத்தர் காலத்துக்குப் பின் தோன்றிய புகழ்மிக்க தத்துவ நூலான 'மிலிந்த பண்ஹா' ஆசாரிய வசுபந்துவின் 'விக்ஞப்தி வசுபந்துவின்' 'விக்ஞப்தி பாத் ரதாசித்தி' என்னும் நூல். கி.பி. 5 ஆம் நூற்றாண்டில் 'திக்நாகர் என்ற பௌத்த தத்துவவாதி இயற்றிய 'குந்தமாலா' என்னும் நாடக நூல், ஔசித்ய விசார சர்ச்சா என்ற வடமொழி நூலை இயற்றிய ஷேமேந்திரனின் 'சாருசர்யா' என்ற நீதி நூல் ஆகியன பன்மொழிப் புலவரின் மொழிபெயர்ப்புகளாக வெளிவந்துள்ளன.

மேலும் கன்னட இலக்கியத்தில் வீரசைவ அருளாளர்களான பசவர், அல்லமபிரபு, அக்கமாதேவி, சென்னபசவீர முதலியோர் இயற்றிய வசன கவிதைகளில் சிறந்தவற்றைத் தொகுத்துக் கன்னடத் திலிருந்து தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

கன்னட மொழியின் காவியமான 'பம்ப பாரதம்', மலையாள மொழியில் கே.எம். பணிக்கர் இயற்றிய காதற் கவிதைகளின் தொகுப்பான 'பிரேமகீதம்' ஆகியனவும் பன்மொழிப் புலவர் மு.க. ஜகந்நாத ராஜா மொழிபெயர்த்துள்ள நூல்களாகும்.

### பிறமொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டவை

பன்மொழிப் புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா வடமொழி, பிராகிருதம், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளி லிருந்து மொழிபெயர்த்தது போலத் தமிழிலிருந்து தெலுங்குக்கு மொழிபெயர்த்து வெளியிட்டுத் தமிழின் சிறப்பை உணர்த்தியுள்ளார். பலமொழிகள் அறிந்தவர்கள் பலர் இருப்பினும் ஒரு மொழியி லிருந்து மற்றொரு மொழிக்கு மொழிபெயர்த்து வெளியிடுவது ஓர் அரிய செயலாக இருப்பதால் ஓர் சிலரே இப்பணியில் ஈடுபட முன் வருகின்றனர். பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா அத்தகைய ஒரு சிலருள் குறிப்பிடத்தக்க அறிஞராவார். இவர் சைலகீதமு, முத்யாலஹாரமு, பாரதி புண்யக்ஷேத்ராலு ஆகிய நூல்கள் தமிழிலிருந்து பிறமொழிகளுக்கு மொழிபெயர்த்த நூல்களாகும்.

### சைலகீதமு (1968)

சங்க இலக்கிய நூல் வரிசையில் இடம்பெறும் பத்துப் பாட்டில் கபிலர் இயற்றிய 'குறிஞ்சிப் பாட்டை' மு.கு.ஜகந்நாதராஜா

தெலுங்கில் மொழிபெயர்த்துள்ளார். தமிழ் இலக்கிய மரபுகளைப் பற்றியும் சங்க இலக்கியம் பற்றியும் விரிவான அறிமுகம் உள்ள நூல் இதுவே. தெலுங்கில் பழந்தமிழிலக்கியத்தை அறிமுகப்படுத்தும் முதனூல் ஆகும். பன்மொழிப் புலவர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், கவியோகி சுத்தானந்த பாரதியார் எழுதிய ஆங்கில அணிந்துரைகளும், மகாகவி விஸ்வநாத சந்திய நாராயண ஜாஷ்வா ஆகியோரின் வாழ்த்துரைகளுடனும் இந்நூல் திகழ்கின்றது. தெலுங்கு மொழியின் இனிமையும் மென்மையுமுடைய 'துவிபத' எனும் செய்யுள் நடையில் பன்மொழிப்புலவர் 'குறிஞ்சிப்பாட்டை' மொழிபெயர்த்துத் தெலுங்கு அறிஞர்களின் பாராட்டைப் பெற்றுள்ளார். ஞானப்பீடப்பரிசு பெற்ற தெலுங்கு மகாகவி விஸ்வநாத சத்தியநாராயண அவர்கள் இந்நூலின் துவிபத நடை தொன்மையான மகாகவிகளின் நடைக்கு இணையாக இருப்பதாகப் பாராட்டியுள்ளார். தமிழ் மொழிக்கு உரிய செய்யுள் நடையைத் தெலுங்கு மொழியில் அதன் தன்மை கெடாதவாறு வழங்கியுள்ளது மொழிபெயர்ப்பாளர் மு.கு. ஜகந்நாதராஜாவின் தனித்திறனை எடுத்துக்காட்டுகிறது.

### முத்யாலஹாரமு

தமிழின் கவிச்சுவை மிக்க நூலாகிய முத்தொள்ளாயிரத்தின் தெலுங்காக்கம் இந்நூல். அறுபத்தாறு பாடல்கள் மட்டும் தேர்ந்தெடுத்துத் 'தேடகீத' எனும் செய்யுள் அமைப்பில் தெலுங்கு மொழியின் சொற்சுவையுடன் மூலத்தின் பொருட்சுவையுடன் மு.கு. ஜகந்நாத ராஜா மொழிபெயர்த்துள்ளார். இந்நூலுக்கு மகாகவி ஆருத்ரா அணிந்துரை வழங்கியுள்ளார். ஒவ்வொரு பாடலையும் விளக்கும் 'உரைநடைக் குறிப்புரையும் உள்ளது. பல தெலுங்கு அறிஞர்களின், கவிஞர்களின் பாராட்டைப் பெற்றுள்ளது இந்நூல்.

### பாரதி சமகாலீன பாவமுலு (1994)

சிறந்த திறனாய்வாளரும், ஆராய்ச்சியாளருமான தொ.மு.சி. ரகுநாதன் இயற்றிய 'பாரதி-காலமும் கருத்தும் என்ற ஆய்வு நூலை மு.கு. ஜகந்நாதராஜா 'பாரதி - சமகாலீன பாவமுலு' என்ற தலைப்பில் மொழிபெயர்த்துள்ளார்.

தமிழில் சாகித்திய அகாடமி பரிசு பெற்ற இந்நூலை அகாடமியினர் தெலுங்கில் மொழிபெயர்க்குமாறு பன்மொழிப் புலவரைக் கேட்டுக் கொண்டனர். பாரதியின் காலத்திய சுதந்திரப் போராட்டத்தையும் அக்காலச் சூழ்நிலையையும், அதில் பாரதியின் பங்கெடுப்புப் பற்றியும் நானூறு பக்கங்களில் கூறும் ஆய்வு நூலாக இந்நூல் அமைந்துள்ளது.

### புண்யக்ஷேத்ராலு

காஞ்சிபுரத்தைச் சேர்ந்த பு.மா. ஜெயசெந்தில்நாதன் தமிழில் இயற்றிய 'திருமுறைத் தலங்கள்' என்னும் நூலை மு.கு.ஜகந்நாத ராஜா

'புண்யக்ஷேத்ராலு' எனத் தெலுங்கில் மொழிபெயர்த்துள்ளார். 750 பக்கங்கள் உடைய இந்நூலில் 160 பக்கங்கள் (269 - 429) மட்டும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. சி.ஆர். சர்மா, டி.எஸ். கிரிபிரகாஷ், கி.ஆர். ஆச்சார்யா, தூதலூரி ஜகந்நாதம் ஆகியோர் இந்நூலின் பிற பகுதிகளை மொழிபெயர்த்துள்ளனர்.

திருக்குறளின் சில குறட்பாக்களைத் தேர்வு செய்து 'திருக்குறள் தேடகீதலு' என்றும், தமிழ் இலக்கியத்தின் சில பகுதிகளைத் தேர்வு செய்து 'தமிழ்க் காவியர் மருதம்' என்றும், புறநானூற்றுப் பாடல்களை 'வெலி நானூறு' என்றும், மொழிபெயர்த்து வெளியிடும் முயற்சியில் பன்மொழிப் புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா ஈடுபட்டார். இதைப்போலவே 'முத்தொள்ளாயிரத்தை மலையாள மொழியிலும் கன்னடத்திலும் (முக்தாஹாரா) மொழிபெயர்த்து வெளியிடும் பணியில் ஈடுபட்டார்.

சமண தத்துவம், பௌத்த தத்துவம், இந்தியச் சிந்தனை - ஒப்பாய்வு, இராமாயணம் - ஒப்பீட்டாய்வு, தென் மொழிகள் இலக்கியம், சூரியன் கல் ஆகிய நூல்களை எழுதி வெளியிட முயற்சித்து வருகிறார்.

'ராஜபாளையம் ராஜகவுல யட்சகாணமுலு' 'நாஞ்சாரு பரிணயமு' 'கூரத்தாழ்வாரு சரித்ர' ஆகிய தெலுங்கு ஏட்டுச் சுவடிகளைச் சுத்தப்பிரதி செய்து, பதிப்பித்து நூலாக வெளியிட்டார். மேலும் வெளிச்சம் காணாத ஏழு இலக்கிய நூல்களை அச்சிட்டுத் தெலுங்கு இலக்கிய உலகுக்குப் பேருதவி புரிந்த பெருமையும் பன்மொழிப் புலவர் மு.கு. ஜகந்நாதராஜாவுக்கு உண்டு.

இவர் துவக்கிய மணிமேகலை மன்றம் 36 ஆண்டுகளாக இலக்கியப் பணி செய்து வருகிறது. இந்திய மொழிகளின் இலக்கிய உறவுப் பாலமாக இம்மன்றம் தனது பணியைச் செய்து வருகிறது.

ஜகந்நாதராஜாவின் மொழிபெயர்ப்பு நூல்கள் தமிழ் ஆய்வுத் துறைக்குப் பெரும் பலனளிப்பதாக அமைந்துள்ளன என அறிஞர்கள் பலரும் குறிப்பிட்டுக் காட்டியுள்ளனர். ஜகந்நாத ராஜாவின் தாய்மொழி தெலுங்காக இருந்தாலும் அவர் தமிழுக்கே முதன்மை தந்து பல நூல்கள் படைத்துள்ளார். அவர் தெலுங்கிலும் எழுத வல்லவர். நான்கைந்து நூல்களும் எழுதியுள்ளார். ஆனால் தமிழில்தான் படைப்பிலும் மொழிபெயர்ப்பிலுமாக நாற்பது நூல்கள் எழுதியுள்ளார்.

## பல நூல்களை மொழிபெயர்த்த அனுபவம்

தமிழிலிருந்து பிறமொழிகளுக்கும், பிற மொழிகளிலிருந்து தமிழுக்கும் மொழிபெயர்க்கும் பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாத

ராஜா முதிர்ந்த அனுபவம் பெற்றவர். இந்த அனுபவத்தைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது

> ஒரு மொழி வளத்துக்கு மொழிபெயர்ப்பு இன்றியமை யாததாகும். ஒப்பிட்டாய்வுக்கும் தேவைப்படுகிறது. ஒரு மொழியின் அழகை உணரப் பிற மொழியின் அமைப்பும் அழகும் பற்றிய அறிவு தேவை. ஆதலால் மொழிபெயர்ப்பை ஒரு கலையாகவே கருதி அதில் ஈடுபட்டேன். எனது 17வது வயதிலேயே தெலுங்கு நீதி நூலின் ‘சுமதி சதகத்தைத்’ தமிழில் வெண்பா யாப்பில் மொழிபெயர்த்தேன்.
>
> மகாகவி பூதலப்பட்டு ஸ்ரீராமுலுரெட்டி அவர்கள் கம்பராமாயணம், குறள், நாலடியார், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய தமிழ்ச் செல்வங்களைத் தெலுங்கில் மொழிபெயர்த்தவர். அவருடன் கூட நான் 1960இல் ஹைதராபாத்தில் ‘ஆந்திரபிரதேச சாஹித்ய அகாடமி’ கூட்டத்திற்குச் சென்றேன். பெஜவாடா கோபால ரெட்டி தலைவர். ஞானபீட அவார்டு பெற்ற விஸ்வநாத சத்தியநாராயண, சிவசங்கரசாமி போன்ற மாபெரும் தெலுங்குக் கவிஞர்களையும், வடமொழி, பாலி, கற்றறிந்த அறிஞர்களையும் கண்டேன். அவர்கள் சிறந்த வடமொழி, பாலி நூல்களை மொழிபெயர்த்தவர்கள். அவர்களைக் கண்ணுற்ற எனக்கும் தமிழில் சிறந்த நூல்கள் மொழிபெயர்க்க வேண்டும் என்ற உத்வேகம் பிறந்தது. மொழி பெயர்க்கும்போது முதலில் சொல்லுக்குச் சொல், பிறழாது, அப்படியே மொழிபெயர்த்துவிட்டுப் பின்னர் மூலத்தை மறந்துவிட்டு மொழிபெயர்த்ததை, தமிழ் மரபுக்கேற்பவும் எளிதில் பொருள் புரியுமாறும் மீண்டும் அமைப்பேன். அப்போது தேவையற்ற பல மூலச் சொற்களின் மொழியாக்கம் விடுபட்டுப்போம். சில புதிய சொற்கள் சேர்க்க வேண்டிவரும். நானாகச் சேர்த்த சொற்களை அடைப்புக் குறிக்குள் எடுத்துக் காட்டுவேன்.
>
> வடமொழி இந்தி முதலிய மொழிகளின் வேற்றுமை உருபுகள் வேற்றுமை மயக்கங்கள் தமிழாக்கும் போது கவனமாக இருக்க வேண்டும். திராவிட மொழிகளின் இலக்கண அமைப்பு ஒன்று போலிருப்பதால் பிழை நேராது. சிறு சிறு நூல்களை முதலில் மொழி பெயர்த்துப் பயிற்சி பெற்ற பின்பே தரமான சிறந்த நூல்களை மொழிபெயர்க்க வேண்டும்[20]

என்று தனது அனுபவத்தை விளக்கியுள்ளார்.

## ஜகந்நாதராஜாவின் மொழிபெயர்ப்புக் கொள்கை

மொழிபெயர்ப்புப் பற்றிய பொதுக்கொள்கைகள் இருந்தாலும் ஒவ்வொரு மொழிபெயர்ப்பாளனுக்கும் தனக்கெனச் சிறப்புக் கொள்கைகள் இருக்கின்றன. மொழிபெயர்ப்பில் தழுவல், சுருக்க மொழிபெயர்ப்பு, கருத்தாக்கம், நேர்மொழிபெயர்ப்பு என்று பல பொது வகைகள் உள்ளன. ஜகந்நாத ராஜாவைப் பொறுத்தமட்டில் கூடுமானவரை நேரிடையான மொழிபெயர்ப்பாகவும் கருத்தாக்கத்திற்கு முதன்மை தந்தும் மொழிபெயர்க்கக் கருதுகிறார். அதாவது மூல நூலின் கருத்தை வழுவாது பின்பற்றி மொழிபெயர்த்தல் வேண்டும். மூலப்பாடலின் அல்லது கருத்தின் உயிரோட்டமான தொனிப் பொருள் புலனாகுமாறு மொழிபெயர்க்க வேண்டும். மரபிலக்கியச் செய்யுள் நூல்களை மொழிபெயர்க்கும் போது - மூல நூலாசிரியனின் நடைநயம், சொற்பிரயோகம் சிறப்புக் கூறுகளையும் மொழி பெயர்ப்பில் கொண்டு வரவேண்டும். மொழிபெயர்க்கும்போது மூலச் செய்யுளைத் தம் மொழியின் செய்யுள் நடையில் மொழிபெயர்ப்புச் செய்ய நேர்ந்தால் மூலச் செய்யுளின் செறிவைக் கொண்டு வரமுடியாது. ஆகையால் சில சொற்களை விட்டுவிட நேரும். ஆனாலும் மூல நூலின் கருத்தை அப்படியே பிரதிபலிக்க வேண்டும்.

> மொழிபெயர்ப்பு என்பது கரும்பாலை போன்றது. கரும்பை ஆலையில் தரும்போது சக்கைவேறு, சாறு வேறாகத்தான் வரும். நாம் சாற்றைத்தான் தர வேண்டும். சக்கையிலும், சிறிது இனிப்பிருக்கலாம். அதுவே சிறந்ததாகிவிடாது. தமிழ் மரபுச் செய்யுட் களில் தேவையற்ற அடைமொழிகள் பெய்வது நம் மரபாகி விட்டது. அலைகடல், திரைகடல், மறிகடல் என்று கடலைக் குறிக்க அடைமொழிகள் பயன் படுத்துவது நமது முன்னோர் வழக்கு. பிறமொழி களில் பண்பைக் குறிக்காத அடைமொழிகள் இராது. அலையற்ற கடலே இல்லை. கருமுகில், வெண்முகில் என்பவை பண்பு காட்ட வந்த அடைமொழிகள். செஞ்ஞாயிறு, வெண்டிங்கள் என்பன தமிழ் மரபே யாகும். செம்மையற்ற கருஞாயிறு, பசுஞாயிறு இல்லை யல்லவா? இதுபோன்ற அடைமொழிகள், மொழி பெயர்க்கும்போது தேவையில்லை. அரசனைக் குறிக்க இலங்கிலை, வேற்கிள்ளி, நாமநெடுவேல் என்றெல்லாம் வரும். இது தமிழ் மரபு. பிற மொழி யாக்கத்தில் இவை தேவையில்லை. அரசன் என்று குறிப்பிட்டாலே போதும். முத்தொள்ளாயிரம் தெலுங்காக்கம் செய்தபோது இத்தகு அடைமொழிகள் தவிர்த்து விட்டேன். அடைமொழியில், சிலசமயம் தொனிப் பொருள் இருக்கும். அப்படிப்பட்ட இடங்களில் அடைமொழிகளையும் மொழிபெயர்க்கத்தான்

வேண்டும். செய்யுளை உரைநடையில் மொழியாக்கம் செய்யும்போது மூலப்பாடலின் செறிவுக்கேற்ப நம் கருத்துக்களையும் விளக்கமாகக் கூற நேரும். அந்த இடங்களில் அடைப்புக்குறிகள் தர வேண்டும். அடைப்புக் குறிக்குள் உள்ள சொற்றொடர் மொழி பெயர்ப்பாசிரியர் மூலக்கருத்தைத் தெளிவாக்கப் பயன்படுத்தியது என்று வாசகர்கள் உணரமுடியும். இப்படியமைப்பதால் மூல நூலாசிரியர் சொற் பிரயோகங்கள் இவை என்று உணர முடியும். உரைநடை நூலை உரை நடையில் மொழிபெயர்க்கும் போது மூலநூலின் மரபுத் தொடர்கள் மூலமொழிக்கே உரிய சொல்லாக்கங்கள் மொழிபெயர்ப்பில் கொண்டு வருவது கடினம். ஆதலால் அதற்கு இணையான தம் மொழியின் மரபுத் தொடர்கள், சொல்லாக்கங்களைப் பயன்படுத்த வேண்டும். மூல நூலின் மிக நீண்ட தொடர்கள் வினைமுடிபு இறுதியில் எங்கோ இருக்குமாறு அமையும் போது மொழிபெயர்ப்பில் தொடர்களைப் பிளந்து இரண்டு மூன்று சொற் றொடர்களாகப் பிரித்து வினை முடிவு காட்டி எளிதில் புரியும் வகையில் மொழிபெயர்க்க வேண்டும்.

அறிஞர் வெ. சாமிநாதசர்மா அவர்கள் பிளேட்டோவின் அரசியல் (குடியரசு) என்ற நூலை மொழிபெயர்த் துள்ள நயம் நமக்கு முன்னுதாரணமாகும். மூல நூலின் கலைச்சொற்களை, மொழிபெயர்க்கும்போது கூடுமானவரை தருமொழியின் சொற்களில் புதுச்சொல்லாக்கங்கள் கொண்டு பயன்படுத்த வேண்டும். பெறுமொழிச் சொற்களை அப்படியே சில இடங்களில் பயன்படுத்துவதில் தவறில்லை. எனினும், அச்சொல்லின் கருத்தாக்கத்தையும் தருதல் வேண்டும். முக்கியமாகத் தத்துவஞான நூல்களில் வடமொழிச் சொற்களும், விஞ்ஞான நூல்களில் ஆங்கிலச் சொற் களும் அப்படியே பயன்படுத்த நேருகிறது. அப்படிப் பயன்படுத்த நேரினும், அச்சொல்லின் மொழி யாக்கமும் தருவதே – மூலநூல் கருத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்ள உதவும். மொழிபெயர்ப்பாளன் தனது சுதந்திரத்திற்கேற்ப மொழிநடையை உருவாக்கிக் கொள்ள வேண்டும். அது புலமையைக் காட்ட இயலாமல் புரிந்துகொள்ள வைப்பதற்காகவே இருக்க வேண்டும்[21]

என்று குறிப்பிடுகிறார் ஜகந்நாத ராஜா.

## மொழிபெயர்ப்புக் கொள்கைகள் நடைமுறை மொழி பெயர்ப்புப் பணியில் செயல்படுத்தப்படுகின்றனவா?

பொதுவாக மொழிபெயர்ப்புப் பணி பல துறைகளிலும் நடக்கிறது. இலக்கியம், தத்துவம், அறிவியல் போன்ற பலவற்றிலும் நடைபெறுகிறது. இவை அனைத்துக்கும் ஒரு குறிப்பிட்ட மொழி பெயர்ப்புக் கொள்கையைப் பின்பற்றி நடைமுறைப்படுத்துவது என்பது இயலாது.

> **கொள்கைகளை விட நடைமுறைகள் தேவைக் கேற்ப அமைகின்றன. இலக்கியக் கோட்பாடுகளுக்கேற்பப் படைப்பாளி தன் படைப்பைப் படைப்பதில்லை. தன் அனுபவம் கற்பனை நயங்களோடு சுதந்திரமாகத்தான் உயர்ந்த படைப்புகள் தோன்றுகின்றன. மொழி பெயர்ப்புக் கொள்கைகளைப் படித்து உணர்ந்து அதன்படி நடைமுறைப்படுத்த வேண்டுமென்று யாரும் தவமிருப்பதில்லை. ஒன்று மொழிவளம், சிந்தனை வளம் பெருகச் சிறந்த படைப்புகளை, தம் போக்கில் சிலர் மொழிபெயர்ப்பர். பத்திரிகைகள் மற்றும் அலுவலகங்களின் தேவைக்கேற்பச் சிலர் மொழி பெயர்ப்பர். மொழிபெயர்ப்புக் கொள்கைகள் நடைமுறை மொழிபெயர்ப்புப் பணியில் செயல் படுத்தப்படுகிறதா? என்பதைப் பல்கலைக்கழக மொழி பெயர்ப்புத் துறையினர்தான் ஆராய்ந்து கூறவேண்டும்[22]**

என்று கூறுகிறார் பன்மொழிப்புலவர்.

கிரேக்கம் மற்றும் மேனாட்டுச் சிந்தனைகளைத் தமிழில் அறிமுகம் செய்து வைத்த வெ. சாமிநாதசர்மாவும், கவியோகி சுத்தானந்த பாரதியாரும் தமக்குப் பிடித்த மொழிபெயர்ப்பாளர் களாகக் குறிப்பிடுகிறார். இவர்களைப் போன்றே ஜகந்நாதராஜா மொழி பெயர்த்த நூல்கள் பெரும்பாலும் மிகவும் உயர்ந்த தரம் வாய்ந்த நூல்களாகும். இலக்கியத் துறையில், நாவல், நாடகம், காவியம் ஆகியவைகளிலும், தத்துவத்துறையில் பௌத்தம், சமணம், வேதாந்தம் ஆகிய வகையிலும், விமரிசனத் துறையிலும் அமைந்தவை. அந்தந்தத் துறையில் அவை சிறந்தவைதான். எனினும் பிராகிருதமொழி காதா சப்த சதி, தெலுங்குக் காவியம் - ஆமுக்த மால்யத வடமொழி விமரிசனக் கலை நூல், ஔசித்யவிசாரசர்ச்சா (தகுதிப்பாட்டாய்வியல்) பாலி மொழித் திரிபீடக நூல், தீகநிகாயம் ஆகிய இந்நான்கையும் மிகச் சிறந்தப் படைப்புகளாகத் தமக்கு மிகவும் பிடித்தவையாகக் கருதினார்.

இவருடைய பன்மொழிப்புலமை சிறந்த ஆராய்ச்சி நூல் களையும், தமிழின் வளத்தைப் பிறமொழியில் எடுத்துக் கூறவும், பிறமொழிகளிலிருந்து சிறந்தனவற்றைத் தமிழுக்குக் கொண்டு

சேர்க்கவும் பயன்பட்டுள்ளது. தென்மொழிகளில் மொழிபெயர்ப்புச் செய்யும் சிறந்த நூலாசிரியர்களுக்கு ஆண்டுதோறும் கேரளமாநிலம் கொல்லத்தில் இயங்கிவரும் இலக்கிய அமைப்பான 'ஸ்மிருதி' விருது வழங்கி வருகிறது. 1996ஆம் ஆண்டு தென்மொழிகளில் மொழிபெயர்ப்புச் சேவைக்காக மு.கு. ஜகந்நாத ராஜாவிற்கு 'ஸ்மிருதி' விருதும் பாராட்டுப்பத்திரமும் ரூ. 5000 ரொக்கப்பரிசும் வழங்கப் பட்டுள்ளது. மொழிபெயர்ப்புப் பணியைத் தனது வாழ்நாள் பணியாக மேற்கொண்ட பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாதராஜா 02-12-2008 அன்று இயற்கையெய்தினார். பல மொழிகளுக்குரிய எழுத்தாளராக, மொழிபெயர்ப்பாளராக, இருந்து, இலக்கிய வளம் சேர்த்து வந்த இவருடைய மறைவு ஈடுசெய்ய முடியாத இழப்பாகும்.

## குறிப்புகள்

1. மு.கு. ஜகந்நாத ராஜா இந்நூலாசிரியருக்கு (மு. வளர்மதி எழுதிய கடிதம், நாள் 20-6-97.
2. மேற்படி.
3. கன்யாசுல்கம், குரஜாட அப்பாராவ் (தமி.) மு.கு. ஜகந்நாத ராஜா, பாரி நிலையம், சென்னை சன. 1964, ப. 5.
4. மேற்படி, ப. 6.
5. காதாசப்தசதி (மொ. பெ.) மு.கு. ஜகந்நாத ராஜா, விசுவசாந்தி பதிப்பகம், இராஜபாளையம் பதி. டிச. 1981, ப. 29.
6. மேற்படி, ப. 32.
7. மேற்படி, ப. 22, பா.எண். 23.
8. தமிழும் பிராகிருத இலக்கியமும், மு.கு. ஜகந்நாத ராஜா, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், பதி. ஜூலை 1982, ப. 47.
9. காதாசப்தசதி (மொ.பெ.), மு.கு. ஜகந்நாத ராஜா, விசுவசாந்தி பதிப்பகம், இராஜபாளையம், பதி. டிச. 1987, ப. 39.
10. மு.கு. ஜகந்நாத ராஜா இந்நூலாசிரியருக்கு எழுதிய கடிதம், 20.6.97.
11. தெலுங்கு இலக்கிய வரலாறு, டி.எஸ். கிரிபிரகாஷ், பா.ஆனந்த குமார், பார்த்திபன் பதிப்பகம், மதுரை டிச. 1986, ப. 81.
12. சேரி, உன்னவ லட்சுமி நாராயணா (தமி.) மு.கு. ஜகந்நாத ராஜா, சாகித்திய அகாதெமி, பதி. 1984, ப. VIII.
13. மேற்படி, ப. 19.

14. மேற்படி, ப. 50.

15. மு.கு. ஜகந்நாத ராஜாவின் கடிதம், 20-6-97.

16. நாகானந்தம் (தமி.), மு.கு. ஜகந்நாத ராஜா, பீக்காக் பதிப்பகம், சென்னை, பதி. மு.ப. 1992, ப. 7-8.

17. சாணக்கிய நீதி (தமி.), மு.கு. ஜகந்நாத ராஜா, விசுவசாந்தி பதிப்பகம், பதி 1986, முன்.

18. மேற்படி.

19. ஆசாரியர் சித்தசேனர் அருளிய சன்மதி சூத்திரம், (தமி.) மு.கு.ஜகந்நாத ராஜா, தமிழ்நாடு சமணப் பேரவை, சென்னை, பதி. 1995, ப. 35.

20. மு.கு. ஜகந்நாத ராஜா இந்நூலாசிரியருக்கு எழுதிய கடிதம், நாள் 20.6.97.

21. மேற்படி.

22. மேற்படி.

# நா. தர்மராஜன்

உலகெங்கிலும் பொதுவுடைமைக் கருத்துக்கள் பரவுவதற்கு மொழிபெயர்ப்பு ஒரு பாலமாக அமைந்துள்ளது. 'பொதுவுடைமை' என்பது ஒரு பெருந்தத்துவமாக, சமூக அறிவியலாக உருவெடுத்து உலகில் பெரும் மாற்றங்களை உருவாக்கியுள்ளது. இச்சிந்தனையைத் தாங்கி வெளிவந்த கவிதை, நாவல், சிறுகதை, சமூகவியல், அரசியல், பொருளாதாரம், வரலாறு, குழந்தை இலக்கியம் எனப் பல்துறை சார்ந்த உருஷ்ய மொழிப் படைப்புகள் நேரடியாகவோ அல்லது ஆங்கிலத்தின் வழியாகவோ பல மொழிகளுக்குச் சென்று சேர்கின்றன. இக்கருத்துக்களை வரவேற்கும் நாடுகள் ஆங்காங்கே அதற்கென ஒரு மொழிபெயர்ப்புக் குழுவை அமைத்துத் தேவையான நூல்களைத் தத்தம் மொழிகளில் மொழிபெயர்த்து வெளியிட்டு வருகின்றன. அவ்வாறு உருஷ்ய மொழிப் படைப்புகள் தமிழில் வெளிவரவேண்டும் என்ற முயற்சியில் ரா. கிருஷ்ணையா, நா. தர்மராஜன், பூ. சோம சுந்தரம், தொ.மு.சி. ரகுநாதன், ஆர்.கே கண்ணன், இரா. பாஸ்கரன், கே. இராமநாதன், நா. முகம்மது செரீபு ஆகியோர் ஈடுபட்டுப் பெரும் பங்காற்றியுள்ளனர். அவர்களின் பணி போற்றத்தக்கதும், குறிப்பிடத் தக்கதுமாகும். மொழிபெயர்ப்புத் துறையில் சாதனையாளராகத் திகழ்வது எளிதானது அல்ல. ஆனால் இதில் 90க்கும் மேற்பட்ட நூல்களை மொழிபெயர்த்துச் சாதனை மொழிபெயர்ப்பாளராகத் திகழ்பவர் பேராசிரியர் நா. தர்மராஜன்.

என்.டி. என்று அன்புடன் அழைக்கப்பட்ட நா. தர்மராஜன் 4.12.1935 இல் சிவகங்கையில் பிறந்தவர். தந்தை பெயர் இரா. நாராயணன், தாயார் கோமதி அம்மாள். தந்தை சிவகங்கை அரசு உயர்நிலைப்பள்ளியில் தலைமை ஆசிரியராகப் பணியாற்றியவர். அக்காலத்தில் கல்வியறிவில் மிகவும் பின்தங்கிய இராமநாதபுரம் பகுதியில் எம்.ஏ., எல்.டி. படித்து ஆசிரியர் பணியாற்றியதால் தென் மாவட்டக் கல்வி நிலையங்களில் இவருடைய பெயரை நன்கறிந் திருந்தனர். கல்விச்சூழல் நிறைந்த ஒரு குடும்பத்தில் நா. தர்மராஜன் பிறந்து வளர்ந்ததால் இவர் கல்வி அறிவில் சிறந்து விளங்கினார். அத்துடன் முற்போக்குச் சிந்தனை உடையவராகவும் விளங்கினார்.

காரைக்குடியில் இன்டர்மீடியட் கல்விக்குப்பின், சிவகங்கையில் இளங்கலை வகுப்பில் சேர்ந்து கல்லூரி மாணவர் தலைவராகத் தேர்வு பெற்றார். 1953ஆம் ஆண்டு முதல் 1955 ஆம் ஆண்டுவரை இந்தப் பொறுப்பை ஏற்றார். மாணவர் இயக்கத்தில் ஈடுபட்ட காலத்தில், அன்றைய புகழ்பெற்ற மாணவர் தலைவர்களான தோழர்கள் எஸ்.

இராமகிருஷ்ணன், பார்வதி கிருஷ்ணன் இருவரையும் அழைத்துக் கல்லூரி மாணவர்களிடையே பேச வைத்துள்ளார். நெருக்கடி மிகுந்த அக்காலத்தில், மாணவர்களிடம் கம்யூனிஸ்ட் அரசியலை விவாதப் பொருளாக்குவது எளிதான செயல் அல்ல என்பதை வரலாறு அறிந்தோர் அனைவரும் ஒப்புக் கொள்வர். பொதுவுடைமைக் கருத்தாளர்களின் தொடர்பு அவரைப் பன்முகச் சிந்தனையாளராக்கியது. இவர் பட்டமேற்படிப்பிற்காக (முதுகலை) சென்னை வந்தபொழுது அக்காலக் கம்யூனிச இயக்கத் தலைவரான ஜீவானந்தம் அவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு கிட்டியது. கம்யூனிச இயக்கத்தின் பிற முன்னணித் தலைவர்களுடனும் தொண்டர்களுடனும் பழகும் வாய்ப்பும் கிட்டியது. வலுவான தோழமை உறவும் ஏற்பட்டது.

சிவகங்கையில் உள்ள மன்னர் துரைசிங்கம் நினைவுக் கல்லூரியில் 1957ஆம் ஆண்டு ஆங்கிலப் பேராசிரியர் பணியில் சேர்ந்து 1993 ஆம் ஆண்டில் ஓய்வு பெற்றார். 1980 ஆம் ஆண்டில் ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்க மாஸ்கோவில் உள்ள முன்னேற்றப் பதிப்பகம் பேராசிரியர் நா. தர்மராஜனை அழைத்தது. 1980 ஆம் ஆண்டு முதல் 1988 ஆம் ஆண்டு வரை மாஸ்கோவில் இருந்து 40 க்கும் மேற்பட்ட இலக்கிய நூல்களை மொழிபெயர்த்தார். கவி. சுத்தானந்த பாரதி, அறிஞர் வெ.சாமிநாதசர்மா ஆகியோருடைய மொழிபெயர்ப்பு நூல்களைப் படித்ததால் இவருக்கு மொழி பெயர்ப்பில் நாட்டம் ஏற்பட்டது. அதற்கு வழிகாட்டியாகத் திகழ்ந்தவர் மதுரையைச் சேர்ந்த எஸ்.ஆர்.கே. என்ற எஸ். இராம கிருஷ்ணன் ஆவார். தி.ஜ. ரங்கநாதன் இவருடைய மொழிபெயர்ப்புகளை ‘மஞ்சரி’ இதழில் வெளியிட்டு ஊக்கப்படுத்தினார். ஜீவா நடத்திய ‘தாமரை’ மாத இதழிலும் இவருடைய மொழிபெயர்ப்புகள் இடம்பெற்று வெளிவந்தன. மார்க்சிம் கார்க்கி எழுதிய ‘இத்தாலியக் கதைகள்’ என்ற மொழிபெயர்ப்பை 1962இல் ஸ்டார் பிரசுரத்தின் உரிமையாளர் ராமநாதன் வெளியிட்டார். இது அச்சில் வெளிவந்த இவருடைய முதல் மொழிபெயர்ப்பு நூலாகக் குறிப்பிடப்படுகிறது.

> டால்ஸ்டாய், ஷெட்டரின் எழுதிய ரஷ்ய இலக்கிய நூல்கள், அமெரிக்க எழுத்தாளர் ஸ்பீன்பெக், ஷ்பார்ஸ்டர், சாமர்செட் மாம் ஆகியோரின் நூல்களை மொழிபெயர்த்ததில் பெரிய மனநிறைவு. அரசியல் தத்துவத் துறையில் நேருஜி, மார்க்ஸ் நூல்களை மொழி பெயர்த்ததில் மிகவும் பெருமை. முன்னேற்றப் பதிப்பகத்தின் சார்பில் நான் மொழி பெயர்த்த நேருவின் ‘வாழ்க்கை வரலாறு’ நூல் தமிழகத்தின் 50 ஆயிரம் பிரதிகள் விற்பனை ஆயின. 1970 முதல் 1978 வரை மொழிபெயர்ப்புப் பணியில் தடங்கல் ஏற்பட்டது.

> **கவிஞர் மீரா என்னை வற்புறுத்தித் தன் அன்னம் பதிப்பகத்தின் மூலம் மொழிபெயர்ப்பு களை வெளியிட்டார். அதற்கு நல்ல வரவேற்பு இருந்ததால் நான் இரண்டாவது 'ரவுண்ட்' வர முடிந்தது[1]**

என்று நினைவுகூர்கிறார்.

## கம்யூனிஸ்ட் போராளி

படைப்புத்திறனும், மனிதநேயமும் மிக்க இவர் இன்றும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் சிவகங்கை மாவட்டக் குழுவிலிருந்து செயல்பட்டு வருகிறார்.

மூட்டா (Muta) என அழைக்கப்படும் மதுரைப் பல்கலைக் கழக ஆசிரியர் அமைப்பு நிறுவனர்களின் முன்னோடிப் பேராசிரியர் நா. தர்மராஜன். 1970 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட இந்த அமைப்பின் முதல் பொதுச் செயலாளராக இவர் தேர்வு செய்யப்பட்டார். 1972 ஆம் ஆண்டு முதல் 1978 ஆம் ஆண்டு வரை இந்த அமைப்பின் தலைவராகப் பொறுப்பேற்றுச் செயல்பட்டுள்ளார்.

> **கவிஞர் மீரா கவிதா உலகில் தமிழின் தனித் தன்மையை உயர்த்திக் காட்டியவர். இவரது முழுப் பெயர் மீ. இராஜேந்திரன். இவரும் ந.த.வும் இணை பிரியாத் தோழர்கள். வயதில் சிறு முதியவரான தர்மராஜன், மீரா கம்யூனிஸ்ட் கட்சியில் இணை வதற்கு முக்கியக் காரணமாக இருந்தார். சிவகங்கை அரசர் கல்லூரிப் போராட்டம் மீராவின் மூலம் எழுந்தது. கல்லூரியிலிருந்து மீரா இடைநீக்கம் செய்யப்பட்டார். இது பெரும் போராட்டமாக வெடித்தது. அப்பொழுது பேராசிரியர் நா.த. மதுரைப் பல்கலைக் கழகத்தில் செனட் உறுப்பினராகத் தேர்வு பெற்றிருந்தார். இவரது அயராத முயற்சியில் இந்த இடைநீக்கம் ரத்து செய்யப்பட்டது. இதன் பின்னர் நடைபெற்ற நிர்வாகத்திற்கு எதிராகத் தொடர்ந்த போராட்டத்தின் மூலம் அரசர் கல்லூரி தமிழக அரசாங்கக் கல்லூரியாக மாறியது. தமிழக வரலாற்றில முதலில் இந்தச் சாதனைக்கு அடிப்படைக் காரணமாக இருந்தவர் பேராசிரியர் நா. தர்மராஜன் என்றால் அது மிகைப்படுத்தப்பட்டது அல்ல.[2]**

எனச் சி. மகேந்திரன் 'பேராசிரியர் நா. தர்மராஜன்' எனும் கட்டுரையில் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். கவிஞர் மீராவுடன் ஏற்பட்ட நட்பு மொழிபெயர்ப்புப் பணியில் அவருக்குத் தொய்வு ஏற்பட்டபொழுது மீண்டும் உற்சாகமாக இந்தப் பணியைத் தொடரவைத்தது.

**கலை இலக்கியப் பெருமன்றம்**

1961 ஆம் ஆண்டு கோவை நகரில் ஜீவானந்தம் அவர்களின் முயற்சியில் தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம் உருவாக்கப் பெற்றது. இந்த அமைப்பு மாநாட்டில் நா. தர்மராஜன் கலந்து கொண்டார். இவர் 1966 இல் இக்கலை இலக்கியப் பெருமன்றத்தின் மாநிலத் துணைச் செயலாளராகத் தேர்வு பெற்றார். அமைப்பு ரீதியாக அன்று தொடங்கிய இவருடைய செயல்பாடு இன்றுவரை நீடித்துக் கொண்டு இருக்கிறது.

**நா. தர்மராஜன் தமிழில் மொழிபெயர்த்துள்ள நூல்கள்.**

1. பழங்காலத்துச் சீனக் கதைகள், 2. இத்தாலியக் கதைகள், 3.தென் ஆப்பிரிக்கக் கதைகள், 4. புஷ்கின் சிறுகதைகள், 5. டால்ஸ்டாய் சிறுகதைகள், 6. தஸ்தயேவ்ஸ்கி சிறுகதைகள், 7. செவஸ்தபோல் கதைகள் 8. நீதிபதியின் மரணம் 9. காதலின் இசை, 10. கடவுளுக்கு உண்மை தெரியும், 11. ஒரு குடும்பத்தின் கதை, 12. நிலவு வந்து பாடுமோ, 13. காப்டன் மகள், 14. துப்ரோவ்ஸ்கி, 15. கஸாக்குகள், 16. குல்சாரி, 17. அன்னைவயல், 18. ஐன்ஸ்டின், 19. ஜவஹர்லால் நேரு, 20. கார்ல் மார்க்ஸ், 21. ஹோ-சி.மின், 22. எம்.என்.ராய், 23. பிளாரென்ஸ் நைட்டிங்கேல், 24. அமெரிக்காவின் அம்பேத்கர், 25. மைக்கேல். கே. சில குறிப்புகள், 26. கூலி (சுருக்கம்), 27. ருஷ்ய வரலாற்றுக் கதைகள், 28. பாரிஸ் கம்யூன், 29. சோவியத் நாட்டில் இந்தியப் புரட்சி வீரர்கள், 30. வரலாறு என்றால் என்ன? 31. இராணுவமும் அரசியலும், 32. ஃபார்ஸ்டர் கட்டுரைகள், 33. மக்தூம், கிஷன்சந்தர், ராகுல்ஜி, 34. சமூகமும் இயற்கையும், 35. அரசியல் பொருளாதார விமர்சனத்துக்கு ஒரு கருத்துரை, 36. அமெரிக்காவின் அம்பேத்கார், 37. அரசியல் பொருளாதாரத்தின் இளமைக் காலம், 38. மஞ்சள் பிசாசு, 39. இந்தியப் பொருளாதாரம், 40. மார்க்சும் 'மூலதனமும்', 41. லூயி போனபார்ட்டின் பதினெட்டாம் புரூமேர், 42. கம்யூனிஸ்ட் சமூகம், 43. பாட்டாளி வர்க்க சர்வ தேசியம், 44. அராஜகவாதமும் அராஜகவாத சின்டிகலிசமும், 45. இயக்கவியல் பொருள் முதல் வாதம், 46. சோஷலிஸ்ட் புரட்சி, 47. மார்க்ஸ் பிறந்தார், 48. உலக சோஷலிஸ்ட் அமைப்பு 49. புரட்சி பற்றி லெனின் தத்துவம், 50. வரலாற்றுப் பொருள் முதல்வாதம் என்றால் என்ன?, 51. கம்யூனிஸ்ட் அறிக்கை எப்படித் தோன்றியது? 52. மார்க்சிய லெனினியம் என்றால் என்ன?, 53. விஞ்ஞானக் கம்யூனிசம் என்றால் என்ன?, 54. வர்க்கங்கள், வர்க்கப் போராட்டம் என்றால் என்ன?, 55. அரசு என்றால் என்ன? 56. நேரு : போராட்டக் காலச் சிந்தனைகள் 57. காக்கி உடையும் காவிக் கொடியும், 58. தெலுங்கானாப் போராட்டம், 59. 150 ஆண்டுகளுக்குப் பிறகு கம்யூனிஸ்ட் அறிக்கை, 60. மகாத்மா - சில பார்வைகள், 61. சமூகமும் இயற்கையும், 62. குடும்பம், தனிச் சொத்து, அரசு

ஆகியவற்றின் தோற்றம், 63. தாஸ்தயேவ்ஸ்கியும் டால்ஸ்டாயும், 64. இன்ஸ்பெக்டர் வருகிறார், 65. கடிகாரங்களைப் பற்றிச் சில செய்திகள், 66. சந்திரன் மகளும், சூரியன் மகனும், 67. மழலையர் பள்ளிக்குச் செல்வோம், 68. பலகோடி வருடங்களுக்கு முன்னர், 69. கிரிஷ்காவும் விண்வெளி வீரனும், 70. வானத்தில் மனிதன், 71. கடலில் மிதக்கும் கலங்கள், 72. அடுப்பு முதல் அணுஉலை வரை, 73. நான் எத்தொழிலைத் தேர்ந்தெடுப்பேன், 74. பூமியின் மையத்து வீரப்பயணம், 75. ஜீராசிக் நாடு, 76. மார்க்சிய நோக்கில் ஷேக்ஸ்பியர், 77. அன்னா கரீனா, 78. இந்தியாவில் பெண்கள் இயக்கம், 79. லெனினும் ரஷ்யப்புரட்சியும் இன்னும் பல நூல்களும் பேராசிரியர் நா.தர்மராஜன் மொழி பெயர்ப்புகளாக வெளிவந்துள்ளன.

நா. தர்மராஜன் ஆங்கிலத்திலிருந்து நாவல், சிறுகதை, வரலாறு, வாழ்க்கை வரலாறு, இலக்கியக் கட்டுரைகள், சமூக அறிவியல், பொருளாதாரம், அரசியல் - தத்துவம், மானுடவியல், இலக்கிய விமர்சனம், நாடகம், சிறுவர் நூல்கள் எனப் பல்சார்ந்த நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். சுமார் 50 ஆண்டுகள் மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபட்டு வருகின்றார். சிறுகதைகள் வரிசையில் பழங்காலத்துச் சீனக் கதைகள், 2. இத்தாலியக் கதைகள், 3. தென் ஆப்பிரிக்கக் கதைகள், 4. புஷ்கின் சிறுகதைகள், 5. டால்ஸ்டாய் சிறுகதைகள், 6. தஸ்தயேவ்ஸ்கி சிறுகதைகள் ஆகிய சிறுகதைகளை இவர் மொழிபெயர்த்துள்ளார்.

> 1960 இல் சீனக் கதைகள்' என்னும் நூல் வெளியாயிற்று. வெளியிட்டவர் அ.லெ. நடராஜன். 1962 இல் கார்க்கியின் 'இத்தாலியக் கதைகள்' என்னும் நூலினை ஸ்டார் பிரசுரம் வெளியிட்டது. 'தரமான மொழிபெயர்ப்பு' என்று எழுத்தாளர் கு. அழகிரிசாமியால் பாராட்டப்பெற்ற நூல் அது. தொடர்ந்து 1964 இல் வெளிவந்த நூல் 'தென்னாப்பிரிக்கக் கதைகள்'. மனித உரிமைகள் மறுக்கப்பட்ட ஆப்பிரிக்கர்களின் துன்பங்களையும் போராட்டங்களையும் புதிய முறையில் சித்திரித்த சிறுகதைகள் அவை. தமிழுக்குப் புது வரவாக அந்நூல் கருதப்பட்டது. அன்றைய இளம் எழுத்தாளர்களை - குறிப்பாக சா. கந்தசாமி போன்றோரைக் கவர்ந்த மொழிபெயர்ப்பு. இவ்வாறு வரவேற்பு இருந்த போதிலும் எனது மொழிபெயர்ப்பு முயற்சிகளில் சிறிது காலம் இடைவெளி ஏற்பட்டது.[3]

என்று சிறுகதைகள் நூல் வடிவம் பெற்று அவை வரவேற்புப் பெற்றதைப் பற்றிக் கூறியுள்ளார்.

**நாவல்கள்**

உருஷ்ய மொழியின் புகழ்பெற்ற நாவல்களை மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். பொதுவுடைமைவாதிகளிடையே இவை மிகப் பெரும் வரவேற்பையும், புகழையும் பெற்றன. 1. ஒரு குடும்பத்தின் கதை, நிலவு வந்து பாடுமோ?, 3. காப்டன் மகள், 4. துப்ரோவ்ஸ்கி 5. கஸாக்குகள், 6. குல்சாரி, 7. அன்னைவயல், 8. மைக்கேல் கே - சில குறிப்புகள், 9. கூலி (சுருக்கம்) ஆகிய குறிப்பிடத்தக்க நாவல்களைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

மனித அன்புச் சூழலில் சிக்கித் தவித்துப் போராடும் பல்வேறு விதமான கதாபாத்திரங்களின் தன்மையை உருஷ்ய மண்ணின் மணத்துடன் அள்ளி வழங்கும் இப்படைப்புகள் யாவும் படிக்கும் வாசகர்களின் மனதை நெகிழச் செய்து மீண்டும் மீண்டும் படிக்கத் தூண்டுவனவாகும். உலகெங்கிலும் பெரும் வரவேற்பும் பாராட்டும் பெற்ற இப்படைப்புகள் தமிழில் கிடைக்கச் செய்த பெருமை பேராசிரியர் நா. தர்மராஜன் அவர்களைச் சாரும். எடுத்துக்காட்டாகச் சிலவற்றைச் சுட்டிக் காட்டலாம்.

> புதிய ருஷ்ய இலக்கியத்தை நிறுவிய மாபெரும் கவிஞரான அலெக்சாந்தர் செர்கேயெவிச் புஷ்கின் (1799-1837) எழுதிய 'காப்டன் மகள்' நாவலின் மொழிபெயர்ப்பிலிருந்து எடுத்துக் காட்டலாம். ஏனெனில் 'புஷ்கின் கடைசியாக எழுதிய 'காப்டன் மகள்' (1836) என்ற நாவல் அவருடைய கலைத்திறனை மிக நன்றாக எடுத்துக்காட்டுகிறது. யெமெல்யான் புகச்சோவ் (1744-1775) தலைமை தாங்கிய வலிமை யான விவசாயிகள் எழுச்சியைப் பின்னணியாகக் கொண்டிருக்கும் இந்த நாவலில் புகச்சொவ் இயக்கத்தின் வெகுஜனத்தன்மை, பண்ணையடிமை முறை எதிர்ப்பு முதலியன சுட்டிக்காட்டப்படுகின்றன. புஷ்கின், புகச்சோவின் அறிவு, மதிநுட்பம், வீரம், மனிதாபிமானம் ஆகியவற்றை வர்ணித்து அவரை வீரமும் திறமையும் கொண்ட தலைவராகச் சித்தரிக்கிறார். இந்த நாவலின் முக்கியக் கதாநாயகன் புகச்சோவ் என்றே கூறலாம்."[4]
>
> நிக்கலாய் கோகல் (1809 - 1852) ரஷ்ய உரைநடை இலக்கியங்களில் தலைசிறந்தது 'காப்டன் மகள்' என்று பாராட்டினார். அதில் தூய்மையும் இயல்பான தன்மையும் மிகவும் அதிகமாக இருப்பதால் அதோடு ஒப்பிடும்பொழுது எதார்த்தமே செயற்கையானதாக கேலிச்சித்திரமாகத் தோன்றுகிறது. முதல் தடவையாக ரஷ்யக் கதாபாத்திரங்கள் உயிர் பெற்று நடமாடின.

> ஒரு சாதாரணமான கோட்டையின் (அந்தக் கோட்டையில் ஒரே ஒரு பீரங்கிதான் இருக்கிறது) தளகர்த்தர், அவர் மனைவி, ஒரு காப்டன், ஒரு லெப்டினென்ட் மற்றும் காலத்தின் விசித்திரமும் சாதாரண மக்களின் வீறார்ந்த பெருமையும் அதில் வர்ணிக்கப்படுகின்றது. அது தத்ரூபமாக இருப்பது மட்டுமல்ல, அதைக் காட்டிலும் இன்னும் சிறப்பாகவே அமைந்திருக்கிறது. அப்படித்தான் இருக்கவேண்டும். நம்மை நம்மிடமிருந்து எடுத்து அதிகத் தூய்மையான இன்னும் சிறப்பான வடிவத்தில் நம்மிடம் திருப்பிக் கொடுக்க ஒரு கவிஞனால் மட்டுமே முடியும்.[5]

இத்தகைய சிறப்புக்குரிய நூலை நா. தர்மராஜன் உருஷ்ய இலக்கியத்தன்மையைத் தமிழ்மொழிபெயர்ப்பில் அப்படியே பதிவு செய்துள்ளார் எனலாம். அம்மக்களின் பண்பாடு, அங்கு நிலவிய ஆட்சி முறை, அதையொட்டிய சூழ்நிலைகள், சிந்தனைகள், நடவடிக்கைகள், யாவும் தமிழ் வாசகர்களுக்குப் புதியனவாகத் தோன்றலாம். உருஷ்ய இலக்கியங்கள் அங்கு உள்ள புதுவிதமான அல்லது வேறுபட்ட பல்வேறு சூழலைத் தமிழில் அறிந்துகொள்ள, உணரக் கூடிய வாய்ப்பு இம் மொழிபெயர்ப்பாளர்களால் ஏற்படுகிறது. நா. தர்மராஜன் இந்த நாவலைப் பொறுத்த மட்டில் மூலத்துக்கு நிகரான ஒரு மொழிபெயர்ப்பைச் செய்துள்ளார்.

### வாழ்க்கை வரலாறு

ஐன்ஸ்டின், ஜவஹர்லால் நேரு, கார்ல் மார்க்ஸ், ஹோ-சி-மின், எம்.என். ராய், பிளாரென்ஸ் நைட்டிங்கேல், அமெரிக்காவின் அம்பேத்கர் ஆகிய வாழ்க்கை வரலாற்று நூல்களை நா. தர்மராஜன் ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

வரலாற்றில் ஈடுபாடு உடையவர்கள், அரசியல் தத்துவங் களைப் படித்தறிய விரும்புவோர் இத்தகைய வாழ்க்கை வரலாற்று நூல்களை விரும்பிப் படிக்கலாம்.

இவருடைய மொழிபெயர்ப்பில் பொதுவாக மிகுதியான வரவேற்புப் பெற்ற நூல் 'ஜவகர்லால் நேரு வாழ்க்கை வரலாற்று' நூலாகும். அ. கோரவ், வி. ஸிம்யானின் ஆகிய இருவரால் எழுதப்பட்ட நூலை நா. தர்மராஜன் தமிழில் மொழிபெயர்த்து 1985 ஆம் ஆண்டு முன்னேற்றப் பதிப்பகத்தாரால் வெளியிட்டார். சுமார் 50,000 பிரதிகள் விற்பனையாகியுள்ளன. இந்நூல் சிறந்த மொழிபெயர்ப்பு நூலாக 1986 ஆம் ஆண்டுத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் தேர்ந்தெடுத்துப் பரிசு வழங்கியுள்ளது. 520 பக்கங்கள் கொண்ட இந் நூல் ஒரு மொழிபெயர்க்கப்பட்ட நூல் என்ற உணர்வின்றித் தமிழில் நேருவின்

வாழ்க்கை வரலாற்றைப் படிப்பது போன்ற உணர்வுடன் படிக்கக் கூடிய மிகச் சிறந்த நூலாக இது விளங்குகிறது.

> ஒரு பெரிய அரச மரத்தின் நீண்டு வளர்ந்த கிளைகளின் கீழ் ஒரு சிறுவன் நின்று கொண்டிருக்கிறான். அவன் முகத்தில் வயதுக்கு மீறிய சிந்தனை தேங்கியிருக்கிறது. அந்த மரத்தின் கிளைகளின் நிழல் அவன் முகத்தோடு விளையாடிக் கொண்டிருக்கிறது[6]

என்று தொடங்கும் இந்த நூலை ஒரே மூச்சில் வாசகரைப் படித்து விரும்பும்படித் தூண்டுவது மொழிபெயர்ப்பாளர் நா. தர்மராஜன் அவர்களுக்குக் கிடைத்த மிகப் பெரும் வெற்றியாகும். ஜவகர்லால் நேருவின் வாழ்க்கையை அறிந்து கொள்ள மிக முக்கியமான ஒரு நூலாக இது திகழுகிறது.

**வரலாறு**

உருஷ்ய வரலாற்றுக் கதைகள், பாரிஸ் கம்யூன், சோவியத் நாட்டில் இந்தியப் புரட்சி வீரர்கள், வரலாறு என்றால் என்ன? இராணுவமும் அரசியலும் ஆகிய வரலாற்று நூல்கள் பேராசிரியரின் ஆழ்ந்த மொழிபெயர்ப்புப் புலமையை எடுத்துக் காட்டுவதாகும். கார்ல் மார்க்ஸ், பி. எங்கெல்ஸ் எழுதிய 'பாரிஸ் கம்யூன்' என்ற மிக முக்கியமான வரலாற்று ஆவணமாகத் திகழும் நூலைப் பற்றி இங்கு எடுத்துக்காட்டலாம்.

> இத்தொகுப்பில் பாரிஸ் கம்யூனைப் பற்றி மார்க்சும் எங்கெல்சும் எழுதிய முக்கியமான அனைத்துமே சேர்க்கப்பட்டிருக்கிறது. அவர்கள் எழுதிய கட்டுரைகள், வேண்டுகோள்கள், தொழிலாளி வர்க்க இயக்கத்தின் அதிகாரப்பூர்வமான ஆவணங்கள், சொற்பொழிவுகள், பல்வேறு பத்திரிகைகளில் வெளிவந்த அறிக்கைகள், கடிதங்கள் ஆகியவை இடம்பெற்றிருக்கின்றன. இவை மூன்று தனிப் பகுதிகளாக அமைக்கப்பட்டுள்ளன.
>
> முதல் பகுதியில் அரசு, புரட்சி, மற்றும் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தைப் பற்றிய விஞ்ஞானக் கம்யூனிசப் போதனைகள், முக்கியமான நூல்களில் ஒன்றான பிரான்சில் உள்நாட்டுப் போர் என்ற பேருரையும், மார்க்சும் எங்கெல்சும் அதைப் பற்றி எழுதிய மற்ற கட்டுரைகளும் வெளியிடப்பட்டிருக்கின்றன.[7]

இந்நூலின் பிற்பகுதியில் வழங்கியுள்ள 90 பக்க அளவு பெயர்க்குறிப்பகராதி இந்நூலின் தொடர்பான செய்திகளை மிக விரிவாக அறிந்துகொள்ள உதவும் என்பதில் அய்யமில்லை. ஒரு மொழி பெயர்ப்பாளர் பல்வேறு தரப்பட்ட செய்திகளை, விளக்கங்களை

அறிந்திருந்தாலொழிய இத்தகைய நூலை மொழிபெயர்ப்பது இயலாதது ஆகும். இது போன்ற நூல்களின் மொழிபெயர்ப்பைப் பற்றி ஒரு மொழிபெயர்ப்பாளர் என்ற நிலையில் பேராசிரியர் நா. தர்மராஜன் ஓர் அனுபவத்தைக் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

> **வரலாறு என்றால் என்ன? என்ற தலைப்பில் இ.எச்.கார் எழுதிய புத்தகத்தை மொழிபெயர்த்தேன், வரலாற்றைப் பற்றிய வெவ்வேறு கருத்தோட்டங்களை அவர் விவாதிக்கிறார். அந்த விவாதப் போக்கைப் புரிந்துகொள்வதற்குக் காலிங்வுட், கார்ல் போப்பர் ஆகியோரின் கருத்தமைப்புகளையும் (Concepts) அவர் களுடைய நூல்களையும் படிக்க வேண்டியதாயிற்று. இளம் மொழிபெயர்ப்பாளர்கள் இதைப் புரிந்து கொள்ளவேண்டும். ஒவ்வொரு புத்தகத்துக்கும் தனியான காலச்சூழலும் அறிவுச் சூழலும் உண்டு. ஆதலின் அதனை முழுமையாகப் புரிந்து கொள் வதற்கு இத்தகைய வாசிப்பு பெரிதும் பயன்படும். மொழிபெயர்ப்புத் துறையில் நான் வெற்றி பெற்ற தற்கு இதுவும் ஒரு காரணம்[8]**

என்று குறிப்பிடுகிறார். மொழிபெயர்ப்பாளர் மூல நூலின் மீது எந்த அளவிற்கு ஈடுபாடு கொள்கிறார் என்பதை அந்த மொழிபெயர்ப்பு நூல் தெரியப்படுத்திவிடும் என்பதற்கு இது ஒரு சான்று. செய்தியின் தன்மை மொழிபெயர்ப்பின் தன்மையைத் தீர்மானிக்கிறது. செய்தியின் ஆழம் மொழி பெயர்ப்பைக் கடினமாக்குகிறது. மொழிபெயர்ப்பைச் சரளமான மொழிநடையில் எழுத வேண்டும் என்று நினைத்தாலும் அனைத்து வகையான செய்திகளையும் எளிமையாகச் சரளமான மொழி நடையில் எழுதிவிட முடியாது. மூல மொழிக்குரிய இலக்கணத் தன்மை, செய்தியின் தன்மை மொழி பெயர்ப்புப் பணியையும் புரிந்துகொள்ளுதலையும் கடினமாக்குகிறது.

### அரசியல் – தத்துவம்

*1. லூயி போனபார்ட்டின் பதினெட்டாம் புரூமேர், 2. கம்யூனிஸ்ட் சமூகம், 3. பாட்டாளி வர்க்க சர்வ தேசியம், 4. அராஜகவாதமும் அராஜகவாத சிண்டிகலிசமும், 5. இயக்கவியல் பொருள்முதல் வாதம், 6. சோஷலிஸ்ட் புரட்சி, 7. மார்க்ஸ் பிறந்தார், 8. உலக சோஷலிஸ்ட் அமைப்பு, 9. புரட்சி பற்றி லெனின் தத்துவம், 10. வரலாற்றுப் பொருள் முதல் வாதம் என்றால் என்ன? 11. கம்யூனிஸ்ட் அறிக்கை எப்படி தோன்றியது? 12. மார்க்சிய லெனினியம் என்றால் என்ன?, 13. விஞ்ஞானக் கம்யூனிசம் என்றால் என்ன? 14. வர்க்கங்கள், வர்க்கப் போராட்டம் என்றால் என்ன?*

15. அரசு என்றால் என்ன? 16. நேரு: போராட்டக் காலச் சிந்தனைகள், 17. காக்கி உடையும் காவிக் கொடியும், 18. தெலுங்கானா போராட்டம், 19. 150 ஆண்டுகளுக்குப் பிறகு கம்யூனிஸ்ட் அறிக்கை, 20. மகாத்மா - சில பார்வைகள் ஆகிய அரசியல் தத்துவ நூல்கள் நா. தர்மராஜன் அவர்களின் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன.

மார்க்சியம், லெனினியம் பற்றி அறிந்து கொள்ளவும், இத் தத்துவங்களையொட்டிப் பிரிக்கமுடியாத பகுதிகளாக அமைந்த வற்றைப் பற்றி விரிவாக ஆராய்ச்சித் தன்மையுடன் அறிந்து கொள்ளவும் இந் நூல்கள் மிகுந்த பயனுடையவையாகும்.

> **உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் வாழ்கின்ற இலட்சக்கணக்கான மக்கள் இன்று மார்க்சிய - லெனினியத்தில் மாபெரும் அக்கறை கொண்டிருக் கிறார்கள். மார்க்சிய - லெனினியத் தத்துவம் கார்ல் மார்க்ஸ், பிரடெரிக் எங்கெல்ஸ் காலத்தில் விஞ்ஞான ரீதியான முன்னறிவிப்பாக இருந்த நிலை மாறி விட்டது. அது பல இலட்சக்கணக்கான மக்களின் செய்முறை நடவடிக்கைகளின் அடிப்படையாக இன்று இருக்கிறது. மார்க்சிய - லெனினியப் பதாகையின் கீழ் நடைபெற்றிருக்கின்ற மாற்றங்கள் உலகத்தைப் பெரிதும் மாற்றியமைத்திருக்கின்றன. மாபெரும் அக்டோபர் சோஷலிசத்தை நிர்மாணித்தல், உலக சோஷலிஸ்ட் அமைப்பின் உருவாக்கமும் வளர்ச்சியும், சமூக மற்றும் தேசிய விடுதலைப் போராட்டங்கள், உலகத் தொழிலாளி வர்க்கமும் உழைக்கும் மக்களும் அடைந்துள்ள வெற்றிகள் ஆகியவற்றைப் போன்ற வரலாற்று நிகழ்ச்சிகள், மார்க்சிய - லெனினியத் தத்துவம் மனித குலத்தன் எதிர்காலத்தின் மீது மேன்மேலும் அதிகரிக்கின்ற தாக்கத்தைச் செலுத்துவதை மெய்ப்பிக்கின்றன.[9]**

உலகை ஒரு தத்துவப் பாதையில் முன்னுக்கு இழுத்துச் செல்வது எப்படி? எனும் அரசியல் அறிவைப் பெறுவதற்குரிய நூல்களை மொழிபெயர்த்து வழங்கிய பேராசிரியர் நா. தர்மராஜன் அவர்களின் வாழ்வு பயனுடையதாகும்; மதிப்பு மிக்கதாகும்.

அண்மையில் வெளிவந்த (2007) ரேணு சக்ரவர்த்தி எழுதிய 'இந்தியாவில் பெண்கள் இயக்கம்' எனும் ஒரு வரலாற்றுப் பின்னணியுடன் எழுதிய நூலைப் பேராசிரியர் நா. தர்மராஜன் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளது குறிப்பிடத்தக்கது. இந்தியாவில் பெண்கள் மாபெரும் வளர்ச்சி அடைந்த அளவுக்குப் பெண்களைச் சுரண்டுவதும், அடிமைத்தனமும் புது வடிவங்கள் எடுத்திருக்கின்றன.

அதற்கான தீர்வுகளாகச் சோஷலிசத்தைக் கூறுவதாக இந்நூல் அமைந்துள்ளது. இதுபோன்று காலத்தின் தேவையொட்டி மொழிபெயர்ப்பதற்கான நூல்களைத் தேர்வு செய்து கொள்கிறார்.

மார்க்சிய-லெனினியத் தத்துவத்தின் அடிப்படையாக விளங்கும் பொருளாதாரம் சார்ந்த நூல்களும் இவருடைய மொழிபெயர்ப்பில் முக்கியத்துவமுடையன.

1. அரசியல் பொருளாதார விமர்சனத்துக்கு ஒரு கருத்துரை, 2. அரசியல் பொருளாதாரத்தின் இளமைக் காலம், 3. மஞ்சள் பிசாசு 4. இந்தியப் பொருளாதாரம், 5. மார்க்சும் மூலதனமும் ஆகிய நூல்களும், 6. சமூகமும் இயற்கையும் எனும் சூழலியல் சார்ந்த நூலும், 7. குடும்பம், தனிச் சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம் எனும் சமூகவியல் நூலும், 8. பார்ஸ்டர் கட்டுரை, 9. மக்தூம், கிஷன்சந்தர், ராகுல்ஜி ஆகிய இலக்கியக் கட்டுரைகள், நூல்களையும் நா. தர்மராஜன் மொழிபெயர்த்துள்ளார்.

இவையல்லாமல் சிறுவர் உலகத்திற்கும் தனது பங்களிப்பைச் செலுத்தியுள்ளார். உருஷ்ய இலக்கியவாதிகள் குழந்தை இலக்கியங்கள் மீது மிகுந்த அக்கறை செலுத்தியுள்ளனர். அவர்கள் சிறுவயது முதல் எதையும் நுணுகிக் காணுதல், சுற்றுப்புறங்களை, பொருள்களை அறிதல், மனிதனின் முக்கியத்துவத்தை, விஞ்ஞானத்தின் பெருமையைக் கற்றுத் தருதல் மனிதநேயம் என்ற பார்வையை விரிவாக்குதல் எனும் நோக்குடன் படைத்த எத்துணையோ படைப்புகள் தமிழில் ராதுகா பதிப்பகத்தாரால் கொண்டு வரப்பட்டுள்ளன. வண்ண வண்ணப் படங்களுடன் குழந்தைகள் தங்கள் கண்களை வியப்புடன் விழித்துப் பார்த்து மகிழும் வண்ணம் மலிவான விலையில் தமிழகத்தில் வலம் வந்திருக்கின்றன.

இவை ஒருவகையில் தமிழில் புதிய முறையில் குழந்தை இலக்கியங்களை வழங்குவதற்கு உதவியிருக்கின்றன. இந்த வரிசையிலும் பேராசிரியர் நா. தர்மராஜன் 11 நூல்களை மொழி பெயர்த்து வழங்கியிருக்கிறார்.

1. கடிகாரங்களைப் பற்றிச் சில செய்திகள், 2. சந்திரன் மகளும் சூரியன் மகனும், 3. மழலையர் பள்ளிக்குச் செல்வோம், 4. பலகோடி வருடங்களுக்கு முன்னர், 5. கிரிஷ்காவும் விண்வெளி வீரனும், 6. வானத்தில் மனிதன், 7. கடலில் மிதக்கும் கலங்கள், 8. அடுப்பு முதல் அணுஉலை உரை, 9. நான் எத்தொழிலைத் தேர்ந்தெடுப்பேன்?, 10. பூமியின் மையத்துக்கு வீரப்பயணம், 11. ஜீராசிக் நாடு ஆகிய நூல்கள் இவருடைய மொழிபெயர்ப்பாகும்.

**லியோ டால்ஸ்டாய் நூல்கள்**

நா. தர்மராஜன் மொழிபெயர்ப்பில் லியோ டால்ஸ்டாய் நூல்களான 1. செவஸ்த போல் கதைகள், 2. நீதிபதியின் மரணம், 3. காதலின் இசை, 4. கடவுளுக்கு உண்மை தெரியும் என்ற நான்கு நூல்களும் 5. தாஸ்தயேவ்ஸ்கியும் டால்ஸ்டாயும் என்ற இலக்கிய விமர்சன நூலும் இவருடைய மொழிபெயர்ப்புகளாக அமைந்துள்ளன. தமிழில் லியோ டால்ஸ்டாய் என்றும் லேவ் தல்ஸ்தோய் (Leo Tolstoy) என்றும் எழுதும் வழக்கம் நிலவி வருகிறது. உருஷ்யாவில் பதிப்பிக்கப் பட்ட நூல்களில் லேவ் தல்ஸ்தோய் என்ற முறையில் இடம் பெற்றுள்ளது.

உருஷ்ய இலக்கியவாதிகளில் உலகம் முழுவதும் உள்ள இலக்கியவாதிகளின் கவனத்தை மிகவும் கவர்ந்த ஒரு படைப்பாளி லேவ் தல்ஸ்தோய். அதற்குக் காரணம்

> தல்ஸ்தோய் எப்பொழுதுமே அநீதியான முறைகளில் திரட்டப்பட்ட செல்வத்துக்கு எதிராக, சோம்பலுக்கும் ஒடுக்கு முறைக்கும் எதிராகப் போராடினார். கிழடாகிப் போன நாகரிகத்தின் ஒன்று திரட்டப்பட்ட கோரங்களுக்கு எதிராகப் போராடினார். தன் காலத்தில் ஆதிக்கம் செலுத்திய கருத்துக்களை எதிர்த்து நீந்தினார். அவருடைய வாழ்க்கை மிகவும் நீண்டதாக இருந்த காரணத்தால் சாதாரண மக்களு டைய முற்போக்கான உள்ளங்கள் ஒரு ஆறுதலான எண்ணத்துக்குப் பழக்கப்பட்டுவிட்டன. நமக்குப் பக்கத்தில் ஊழல் நெருங்க முடியாத இதயம் துடித்துக் கொண்டிருக்கிறது. தல்ஸ்தோயின் கண்கள் நம்முடைய கடும் உழைப்பையும் தாங்க முடியாத துன்பங்களையும் பார்த்துக் கொண்டிருக்கின்றன. நம்முடைய வேதனைகளையும் துயரப் பாடல் களையும் அவருடைய காதுகள் கேட்டுக்கொண்டிருக் கின்றன. காலப்போக்கில் இவை அனைத்தும் பரிசுத்தமான தங்கமாக மாறும். நாளை ஏற்படப் போகின்ற புத்துயிரடைந்த உலகத்தின் பொதுக் கருவூலத்தில் அவை சேர்க்கப்படும்[10]

என லியனீத் லியோனவ் எனும் உருஷ்ய எழுத்தாளர் உருஷ்ய இலக்கிய வாதிகளிடையே அவருடைய முக்கியத்துவத்தைக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். இத்தகைய முக்கியத்துவம் பெற்ற தல்ஸ்தோயின் நூல்களைப் பேரார்வத்துடன் நா. தர்மராஜன் மொழிபெயர்த் துள்ளார். இவ்வளவு நூல்களையும் மொழிபெயர்ப்பதற்குப் பெரும்

வாய்ப்பாக அமைந்தது மாஸ்கோ முன்னேற்றப் பதிப்பகம், மற்றும் ராதுகா, பதிப்பகம். இந்த அனுபவத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

> மாஸ்கோவில் முன்னேற்றப் பதிப்பகத்தின் முழுநேர மொழிபெயர்ப்பாளராக எட்டாண்டுகள் (1980–88) பணி புரிந்தேன். அந்த வாய்ப்புதான் அதிக எண்ணிக்கை யிலான மொழிபெயர்ப்புகளைக் கொண்டு வர உதவியது. இலக்கியம், வரலாறு, அரசியல், தத்துவம், பொருளாதாரம் போன்ற துறை சார்ந்த நூல்களை முன்னேற்றப் பதிப்பகம் சார்பிலும், இலக்கியம் மற்றும் சிறுவர் சம்பந்தப்பட்ட நூல்களை அங்கிருந்த 'ராதுகா' என்ற அமைப்பின் வழியாகவும் நான் மொழிபெயர்த்தேன். நாள்தோறும் ஐந்து அல்லது ஆறுபக்கங்கள், மொழிபெயர்ப்பது வழக்கம். முந்நூறு பக்கம் கொண்ட ஒரு பெரிய புத்தகத்தை இரண்டு மாதத்துக்குள் முடித்து விடுவேன். இவ்வகையில் ஆண்டுக்கு ஆறு நூல்கள். நான் ரஷ்யாவில் இருந்த எட்டாண்டுகளில் ஏறக்குறைய ஐம்பது நூல்கள். பல துறை நூல்களைத் திறம்படவும், விரைவாகவும் மொழிபெயர்க்கும் பயிற்சியை நான் அங்குதான் பெற்றேன். மாஸ்கோ பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பேராசிரியர் அலெக்சாண்டர் துபியோன்ஸ்கி, முன்னேற்றப் பதிப்பகத்தில் பணிபுரிந் தமிழறிந்த ரஷ்யரான சோபலேவ் போன்றோர் சிறந்த மொழி பெயர்ப்பாளர் என்று என்னைப் பலமுறை பாராட்டிக் கூறியுள்ளனர். மாஸ்கோவில் பெற்ற மொழிபெயர்ப்பு அனுபவமே இன்றளவும் அப்பணியினைத் தொடர்ந்து சோர்வின்றிச் செய்ய உதவுகிறது"

என்று குறிப்பிட்டுள்ளார்.

மாஸ்கோவில் மொழிபெயர்ப்புப் பணியின் போது இருந்த சுதந்திரம், கட்டுப்பாடு அல்லது நிபந்தனைகள் பற்றிக் குறிப்பிடும் பொழுது

> மேற்பார்வைக் குழு உண்டு. அவர்கள் ரஷ்யர்களே. அதிக தலையீடு இல்லை. தமிழ்நாட்டில் எழுத்துச் சீர்திருத்தம் எம்.ஜி.ஆர். ஆட்சிக் காலத்தல் வந்தபோது நாங்களும் உடனடியாக அங்கு நடைமுறைக்குக் கொண்டு வந்தோம். அதற்குத் தடை இல்லை. 'தஸ்தாவேசு' போன்ற பழைய வார்த்தைகளுக்குப் பதிலாக 'ஆவணம்' போன்ற சொற்களைப் பயன்படுத்திய போதும் அவர்கள் அதை ஏற்றுக்கொண்டார்கள். மொழிபெயர்ப்பின் நம்பகத் தன்மை குறித்துத் தவறான

*புரிதலுடன் அவர்கள் விவாதிக்க நேர்கையில் சரியான விளக்கம் கொடுத்தால் அவர்கள் அதற்கு மறுப்புத் தெரிவிப்பதில்லை. மார்க்ஸ் பற்றிய ஒரு புத்தகத்தின் ஆங்கிலத் தலைப்பு : 'Birth of Genius' 'மேதையின் பிறப்பு' என்று தமிழில் மொழிபெயர்க்க வேண்டும் என்பது அவர்களின் கருத்து 'மார்க்ஸ் பிறந்தார்' என்னும் மொழிபெயர்ப்பில் அவர்களுக்கு சந்தேகம். அத்தலைப்பு மார்க்சின் பிறப்பைப் பெருமைப்படுத்தும் கவித்துவம் உடையது என்பதை விளக்கியதும் ஒத்துக் கொண்டார்கள்.*

*கார்ல் மார்க்ஸ், டால்ஸ்டாய் போன்ற மாமேதைகளை மொழிபெயர்க்கும்போது சிறு தவறு கூட நேர்ந்துவிடக்கூடாது என்ற விழிப்புணர்ச்சியே அவர்களின் தலையீட்டுக்குக் காரணம். அது தவிர எந்தக் கட்டுப்பாடும் இல்லை.*

*ரஷ்யாவில் இருந்தபோது சில கலாச்சாரப் பணிகள் என் நினைவுக்கு வருகின்றன. மாஸ்கோ இந்தியர் சங்கத்தின் தரைவராக (1985–87) இருந்தேன்.*

*அங்கு இந்தியத் தூதராக இருந்த திரு. நூருல் ஹாசன் அவர்களுடன் நெருங்கிய பழக்கம் இருந்தது. மாஸ்கோவில் நடைபெற்ற பாரதி நூற்றாண்டு விழாவும் (1982) 1987 இல் நடந்த நூற்றைந்தாவது ஆண்டு விழாவும் மறக்க முடியாத நிகழ்வுகள். இன்னும் நினைவில் நிற்பவை*[12]

என்று உருஷ்யாவில் தாம் இருந்தபோது மேற்கொண்ட மொழிபெயர்ப்பு அனுபவங்களைக் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வளவு நூல்களை, அதிலும் பல துறை சார்ந்த நூல்களை எளிதாக, சரளமாக மொழிபெயர்த்துத் தள்ளும் புலமை அவருடைய நீண்ட கால அனுபவ முத்திரையைக் காட்டுகிறது. அவருடைய சிறுவயது முதலே மொழிகளை நன்கு கற்றுக் கொள்ளும் ஆர்வம் இதற்கு அடிப்படை எனலாம்.

பள்ளிப் பருவத்தில் தமிழைக் காட்டிலும் ஆங்கிலத்தில் இவருக்கு நாட்டம் அதிகம். ஆதலால் ஆங்கில நூல்களை விரும்பிப் படித்தார். அதே காலத்தில் தமிழ் நாட்டில் மொழிபெயர்ப்பு நூல்கள் நிறைய வெளிவந்து கொண்டிருந்தன. குறிப்பாக, பங்கிம் சந்திரர், சரத் சந்திரர், தாகூர், விக்டர் ஹ்யுகோ, மாக்சிம் கார்க்கி போன்றோரின் நூல்கள், இவற்றோடு கவியோகி சுத்தானந்த பாரதி, சாமிநாத சர்மா போன்றோரின் மொழிபெயர்ப்பு நூல்களும்

இவருக்கு மிகுந்த தாக்கத்தை ஏற்படுத்தின. கவியோகி சுத்தானந்த பாரதி சிவகங்கை அரசர் பள்ளியில் பயின்றவர். அவருடைய நூல்கள் அப்பள்ளி நூலகத்தில் தாராளமாகக் கிடைத்தன. நா. தர்மராஜனும் அவருடைய நண்பர்களும் போட்டி போட்டுக் கொண்டு அந்நூல்களைப் படித்தனர். அவ்வாறு படித்தவர்கள் எல்லோரும் பிற்காலத்தில் எழுத்து, பத்திரிகைத் துறைகளில் தொடர்புடையவர்கள் ஆனார்கள். திரு. க.மு. நடராஜன், திரு. மு. மாரிமுத்து, போன்றோர் இவ்வகையில் குறிப்பிடத் தக்கவர்கள். சிறுவயதில் கிடைத்த இதுபோன்ற வாய்ப்பும் வாசிப்புச் சூழலும் மொழிபெயர்ப்பு ஆர்வத்தைத் தூண்டின. இவையாவும் மனதில் படிந்த மறைமுகத் தூண்டுதல்களாக இவருக்கு அமைந்தவையாகும். அவையல்லாமல் திரு. எஸ். ராமகிருஷ்ணன், தொ.மு.சி. ரகுநாதன் போன்றோரின் மொழிபெயர்ப்புகள் இவருக்கு நேரடித் தூண்டுதல்களாக அமைந்தன.

எந்த மொழிபெயர்ப்பாளருக்கும் தன்னுடைய முதல் மொழிபெயர்ப்பு என்பது மறக்கமுடியாத அனுபவமாக அமையும். அதுபோன்று தனக்கு ஏற்பட்ட அனுபவத்தைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

> ***ஜீவா ஆரம்பித்த கலை இலக்கியப் பெருமன்றம் வளர்த்தெடுத்த குழந்தை நான். "ஜனசக்தி" "தாமரை" போன்ற இதழ்கள் வெளியீட்டுக்கு உதவியாக அமைந்தன. 1958 இல் ஜனசக்தியில் எனது முதல் மொழிபெயர்ப்பு வெளியாயிற்று. 'உழைப்பாளியின் சங்கநாதம்' என்பது அக்கட்டுரையின் தலைப்பு. சியான் ஓகேசி என்கிற அயர்லாந்து நாடகாசிரியர் மே தினம் பற்றி எழுதிய "The worker blows the bugle" என்பதன் தமிழ் வடிவம் அது. அதைத் தொடர்ந்து 'தாமரையில் மாக்ஸிம் கார்க்கி, ஸ்டீன்பெக், ஜார்ஜ் ஸ்டைனர் போன்றோரின் சிறுகதைகள் இலக்கியக் கட்டுரைகளின் மொழிபெயர்ப்புகள் வெளியாயின[13]***

என்று தமது முதல் மொழிபெயர்ப்புகள் குறித்துக் கூறியுள்ளார்.

அவருடைய இந்த மொழிபெயர்ப்புப் பயண அனுபவத்தில் கவிஞர் மீராவின் தோழமை குறிப்பிடத்தக்கதாக அமைந்தது. 1960 களின் முற்பாதியில் சில நூல்கள் வெளியான பிறகு அவருடைய இப்பணியில் சிறிது தோய்வு ஏற்பட்டது. அக்காலக் கட்டத்தில் இன்று பெரிதும் நினைவுகூர்ந்து பேசப்படுகின்ற மதுரை ஜி. நாகராஜனோடு நா. தர்மராஜன் அவர்களுக்கத் தொடர்பு ஏற்பட்டது. அதனால் ஹெமிங்வே, ஆர்தர்மில்லர், வில்லியம் சரோயான், சால்

பெல்லோ போன்ற அமெரிக்க எழுத்தாளர்களின் படைப்புகள் அறிமுகம் ஆயின. அவற்றைப் படித்துப் படித்து அவரோடு விவாதிப்பதிலும் இலக்கிய விசாரத்திலும் காலம் கழிந்தது. இதன் விளைவாக ஜான் ஸ்டீன் பெக்சின் நாவல் ஒன்றை 'நிலவு வந்து பாடுமோ?' என்னும் தலைப்பிலும், ஜேபி. பிரிஸ்டிலியின் நாடகம் ஒன்றை 'இன்ஸ்பெக்டர் வருகிறார்' என்னும் தலைப்பிலும் அப்பொழுது மொழிபெயர்த்து வைத்திருந்தார். பின்னர்க் கவிஞர் மீரா 'அகரம்' அச்சகம் ஆரம்பித்த நிலையில் (1975) புத்தக வெளியீட்டில் அவர் காட்டிய ஆர்வமும் புதுமை நாட்டமும் நா. தர்மராஜன் மொழி பெயர்த்த நூல்களையும் வெளியிடத் தூண்டின. தொடர்ந்து மொழிபெயர்ப்புப் பணியையும் துரிதப்படுத்தும் சூழல் உருவாகியது.

> மீரா கேட்டபோது முன்பே மொழிபெயர்த்து வைத்திருந்த 'ஒரு குடும்பத்தின் கதை' (ஷெட்ரின் எழுதிய ருஷ்ய நாவல்) 'நிலவு வந்து பாடுமோ' (அமெரிக்க நாவல்) என்னும் இரண்டு நாவல்களை அவரிடம் கொடுத்தேன். இரண்டும் அடுத்தடுத்து வெளிவந்து இலக்கிய உலகில் எனக்கோர் இடத்தைத் தேடிக் கொடுத்தன.
>
> இவ்வகையில் என்னுடன் இலக்கியத் தோழமையும் இயக்கத் தோழமையும் கொண்ட கவிஞர் மீராவை என்னால் மறக்க இயலாது. இதே காலகட்டத்தில் 'மார்க்சிய ஒளி' பத்திரிக்கையில் மார்க்சும் மூலதனமும்' என்கிற புத்தகத்தின் என்னுடைய மொழிபெயர்ப்பு மாதம் தோறும் வெளிவந்தது. மொழிபெயர்ப்புத் தகுதியை வளர்த்துக் கொள்ளவும் முழுமை பெறச் செய்யவுமான முன்னோடி முயற்சியாக அப்பணி அமைந்தது[14]

என்று குறிப்பிடுகிறார்.

கம்யூனிசத் தத்துவம் தொடர்பான நூல்களைத் தமிழில் மொழிபெயர்ப்பது அவ்வளவு எளிதானதல்ல. ஏனெனில் அதில் செறிந்து கிடக்கும் ஆராய்ச்சிக்கும் சிந்தனைக்கும் உரிய கருத்துகள் ஆழம் பொதிந்தவை. இதனால் மொழிபெயர்ப்பு எளிமையான மொழிநடையில் அமைவது இயலாததாகும். இத்தகைய நூல்களின் பல பக்கங்கள் அடிக்குறிப்புகள், விளக்கங்கள் எழுத வேண்டியிருக்கும். சில இடங்களில் உருஷ்ய மொழி உச்சரிப்பை ஆங்கில எழுத்துகளால் குறிப்பிடவேண்டியுள்ளதை இவருடைய மொழிபெயர்ப்பில் எடுத்துக் காட்டலாம்.

> **மார்ச்சு 18ந் தேதியன்று காலையில் "Vire la Communel" என்ற இடி முழக்கத்துடன் பாரிஸ் விழித்தெழுந்தது. முதலாளி வர்க்கத்தின் மனதை மிகவும் மருட்டுகின்ற ஸ்பிங்ஸான கம்யூன் என்றால் என்ன?[15]**
>
> *(பாரிஸ் கம்யூன், ப.95)*

அடிக்குறிப்பில் 'கம்யூன் வாழ்க! என்ற தொடரை வழங்கியுள்ளார். பாரிசிலிருந்த 'ஒழுங்கு முறைக் கட்சி' ஒரு **Coup de main** ஐ நடத்த முடிவு செய்தது என்ற தொடருக்குத் திடீர்த்தாக்குதல் என்ற குறிப்பை வழங்கியுள்ளார். நேரான ஒரு மொழி பெயர்ப்பு வழங்க வேண்டும் என்பதில் மிகவும் முனைப்புடன் செயல்பட்டிருப்பதை நா. தர்மராஜன் மொழிபெயர்ப்பில் காணலாம்.

இவருடைய மொழிபெயர்ப்பு தழுவலோ, மொழியாக்கமோ அல்ல. அசலான மொழிபெயர்ப்பு. இக்கருத்தை அவரே தன்னுடைய நேர்காணலில் குறிப்பிட்டுள்ளார். உங்கள் மொழிபெயர்ப்புப் பணி தழுவலா? மொழிபெர்ப்பா, மொழியாக்கமா? எந்த வகையானது? எது சரியானதாகவும் பயன் தருவதாகவும் இருக்கும் என்று கருதுகிறீர்கள்? என்று கேட்டபொழுது மொழிபெயர்ப்பே; தழுவலோ, மொழியாக்கமோ அல்ல' என்று கூறினார்.

மேலும் தனக்குப் பிடித்தமான மொழிபெயர்ப்பாளராக மார்க்சிம் கார்க்கி 'தாய்' படைப்பைத் தமிழில் மொழிபெயர்த்தளித்த தொ.மு.சி. ரகுநாதனும், மரியாதைக்குரியவராக ஏராளமான நூல்களைத் தமிழில் மொழிபெயர்ப்பதில் சாதனை புரிந்த மூத்த அறிஞர் சாமிநாதசர்மா எனக் குறிப்பிடுகிறார்.

வெளிஉலகத்தில் அதற்குப் போதிய அங்கீகாரம் இல்லாமல் இருப்பது ஏமாற்றத்தை அளிக்கிறது! என்று கடிதத்தில் கூறியிருந்தார் என்கிறார் பேராசிரியர் நா. தர்மராஜன்.

இவருடைய மொழிபெயர்ப்புப் பணிகளை அறிந்த எவரும் இத்தகைய கருத்தை ஏற்றுக் கொள்வர். ஆனால் இதைப் பற்றியெல்லாம் ஒருபோதும் கவலைப்படாமல் அரிய நூல்களைத் தமிழுக்கு அறிமுகம் செய்ததில் தமக்குப் பெரிய மனநிறைவு என்றும் கருதுகிறார்.

ஆகையால் இவர் எந்தவிதச் சோர்வோ, வருத்தமோ, இல்லாமல் தமது மொழிபெயர்ப்புப் பணிகளைத் தொடர்ந்து செய்து வருகிறார்.

> **சர்தார் பணிக்கர், ரபீக் சக்கரியா, ஏ.ஜி. நூரனி போன்ற இந்தியர்கள் எழுதிய இந்திய வரலாறு சம்பந்தமான சில முக்கியமான நூல்கள் தமிழில் வரவில்லை. இந்நூல்களின் வரவு, இன்றைய சமூகத்தில் நிலவும்**

> **சாதியுணர்வு, மதவெறி போன்ற தகாத அம்சங்களை அகற்றி மானுட மேம்பாட்டிற்கு உதவும் என்பது என் நம்பிக்கை; குறிப்பாகத் திசை மாறிச் செல்லும் இளைஞர்களிடம் சிந்தனை மாற்றத்தையும் தெளிவையும் ஏற்படுத்தும். ஆகவே இது போன்ற நூல்களை மொழிபெயர்ப்பது என் எதிர்காலத் திட்டமாகும். இவ்வகையில் என் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ள "காக்கி உடையும் காவிக் கொடியும்" என்ற புத்தகம் மிக முக்கியமானது**[16]

என்று தமது எதிர்காலத் திட்டம் பற்றிக் குறிப்பிடுகிறார்.

மார்க்சிய நூல்கள் மட்டுமின்றிக் காந்தீயம் தொடர்பாக அமைந்த 'மகாத்மா - சில பார்வைகள்' என்ற இவருடைய மொழிபெயர்ப்பு நூலும் காந்தியச் சிந்தனையாளர்களிடையே பாராட்டைப் பெற்றது. இந்நூலின் முன்னுரையில், மொழி பெயர்ப்பைப் பற்றிக் குறிப்பிடும் க.மு. நடராஜன்

> **திரு. நா. தர்மராஜன் ஆங்கில இலக்கியப் பேராசிரி யராகப் பணியாற்றியவர். ஆங்கில வார்த்தைகளின் மூலத்தையும் கிளைகளையும் நன்றாக அறிந்தவர். சோவியத் ரஷ்யாவில் எட்டு ஆண்டுகள் வசித்து மார்க்சிய இலக்கியங்களையும் டால்ஸ்டாய், புஷ்கின் ஆகியோருடைய சிறுகதைகளையும் நாவல்களையும் மொழிபெயர்த்து அதிகமான அனுபவம் பெற்றவர். பொதுவுடைமை இயக்கத்தில் தோய்ந்து பணியாற்றி யுள்ளார். அமரர் ஜீவாவுடன் நெருங்கிப் பழகி நவீன தமிழ் இலக்கியத்தைப் பற்றிப் புதிய பார்வையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டவர். காந்தியடிகள் பக்கம் பார்வையைச் செலுத்தியது காந்தீயத்துக்குக் கிடைத்த நல்வாய்ப்பாகும்**

என்று குறிப்பிட்டுள்ளார்.

### மார்க்சிய நோக்கில் ஷேக்ஸ்பியர்

பொதுவாக வளர்ச்சி பெற்ற பல நாடுகள் மொழி பெயர்ப்புக்குக் காட்டும் ஈடுபாடும் முக்கியத்துவமும் போன்று நம் நாட்டில் இல்லை என்பது பலரும் அறிந்த உண்மை. பேராசிரியரும் தம் அனுபவத்தின் மூலம் இக்கருத்தை உணர்த்துகிறார். 'இங்கி லாந்திலும் அமெரிக்காவிலும் தொன்மையான நூல்களைக் காலந் தோறும் மொழிபெயர்க்கின்றார்கள். வெவ்வேறு பதிப்பகங்களும் அவற்றை வெளியிடுகின்றன. வாசகர்களும் ஆர்வம் குன்றாமல் அவற்றை வாங்கிப் படிக்கிறார்கள். அத்தகைய 'பேரார்வம்' நம்

நாட்டில் இல்லை' என்று குறிப்பிடுகிறார். ஆனால் மொழி பெயர்ப்பாளர்கள் பலரும் இதைப்பற்றிக் கவலைப்படாமல் தங்களுக்கு மிகவும் பிடித்தமான நூல்களை அல்லது தமிழுக்குப் புதிய சிந்தனைகளை வழங்க வேண்டும் என்ற நோக்கத்துடன் நூல்களை மொழிபெயர்க்கின்றனர். சில நூல்கள் மீண்டும் மீண்டும் மொழி பெயர்ப்பாகவோ, மொழியாக்கமாகவோ, சுருக்கமாகவோ, தழுவலாகவோ வருவதைக் காண்கிறோம். சான்றாக ஷேக்ஸ்பியரின் படைப்புகள் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கக் காலம்தொட்டுத் தமிழில் பல்வேறு முறைகளில் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

ஆனால் இன்னும் சிறப்பான மொழிபெயர்ப்பு வரவேண்டும் என்னும் கருத்து பலரிடையே நிலவுகிறது. பேராசிரியர் நா. தர்மராஜன் அவர்கள் இதைப்பற்றிக் கூறியிருப்பதை இங்குச் சுட்டிக் காட்டலாம்.

> *ஷேக்ஸ்பியர் நாடகங்கள் பல தமிழில் வெளியாகி யுள்ளன. அவை வெறும் கதையாகவும் உரைநடை யாகவும், இருப்பதில் எனக்கு விருப்பமில்லை. ஷேக்ஸ்பியரின் கவித்துவப் பொலிவும் அழகும் குலையாமல் குறைந்த பட்சம் உரைப்பா நடையில் அவை மொழிபெயர்க்கப் படவேண்டும். அத்தகைய திறன் படைத்தவர்களே ஷேக்ஸ்பியரை மொழி பெயர்க்க வேண்டும். அதில் நான் ஈடுபடாத போதிலும் 'மார்க்சிய நோக்கில் ஷேக்ஸ்பியர்' என்னும் தலைப்பில் ஒரு நூலை மொழிபெயர்த்திருக்கிறேன். 2003 இல் வெளியான இந்நூலுக்குச் சாமிநாத சர்மாவிருது கிடைத்தது*[17]

என்று குறிப்பிடுகிறார்.

> *பேராசிரியர் நா. தர்மராஜன் சிவங்கை அரசர் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றிய பொழுது கல்லூரி ஆசிரியர்களுக்கான சங்கத்தை (MUTA) ஆரம்பித்துப் பல போராட்டங்களுக்குத் தலைமை தாங்கியவர். தன்னுடைய கருத்தை வன்மையாகக் கூறும் துணிச்சல் உள்ளவர். நல்ல மொழிபெயர்ப்பாளர். பாராட்டத்தக்க பல மொழி பெயர்ப்பு நூல்களைத் தந்தவர். இது மிகவும் அருமையான மொழிபெயர்ப்பு நூல். சரளமான தமிழ்நடை அவருக்குக் கைவந்த கலையாக உள்ளது*[18]

என்று பேராசிரியர் எஸ். தோதாத்ரி குறிப்பிட்டுள்ளார். 2003 இல் வெளிவந்த இந்நூலுக்கு அமரர் சாமிநாதசர்மா விருது (10.2.2004)

வழங்கப்பட்டது. இவருடைய மொழிபெயர்ப்புப் பணிகள் குறித்து எழுத்தாளர் சுந்தர ராமசாமி வியந்து பாராட்டியுள்ளார்,

> **திரு. நா. தர்மராஜனுக்கு எழுபது வயதாகிறது. இன்றும் அவர் கடுமையாக உழைத்துக் கொண்டிருக் கிறார். 2004இல் மட்டும் அவர் மொழிபெயர்த்த ஏழு நூல்கள் வெளிவந்துள்ளன. 1990க்குப் பிறகு சுமர் 25 நூல்களை அவர் மொழிபெயர்த்திருக்கிறார். கடந்த 45 ஆண்டுகளாக மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபட்டு வருகிறார். அசுரத்தனமான உழைப்பும் மொழிபெயர்ப்பில் மனம் தளராத நம்பிக்கையும் கொண்ட ஒருவரால் மட்டுமே இவ்வளவு நூல்களை மொழிபெயர்க்க முடியம். . .**
>
> **ஒரு முக்கியமான தமிழ்வாசகன் என்ற நிலையில் திரு. நா. தர்மராஜனின் பெயரை நான் சாகித்திய அகாதெமியினரின் மொழிபெயர்ப்பு விருதிற்குச் சிபாரிசு செய்கிறேன்[19]**

என்று எழுத்தாளர் சுந்தரசாமசாமி பாராட்டியுள்ளது குறிப்பிடத் தக்கது. அமரர் சுந்தரராமசாமியைப் பற்றி நினைவுகூரும் பேராசிரியர் நா. தர்மராஜன்,

> **சுரா. வை 50 ஆண்டுகளாகப் படித்தாலும் ஓரிரு முறை மட்டுமே சந்தித்தேன். தமிழில் நவீனத்துவத்தைத் துவக்கியவர் அவர். நவீனத் தமிழ் எழுத்தாளர்களில் அவர் ஒரு அழகியல்வாதி. அவரது மொழிநடை உயர்வானது. . . .**

என்றார்.

> **மார்ச் 2005இல் சுந்தரராமசாமியிடம் இருந்து எனக்கு திடீரென்று கடிதம் வந்தது. நீங்கள் தமிழுக்கு செய்திருக்கும் காரியம் பிரமிப்பைத் தருகிறது.[20]**

என்று பாராட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

மொழிபெயர்ப்புப் பணிக்குப் போதிய மரியாதையும், அங்கீகாரமும் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் அதைப் பொருட்படுத்தாது மொழிபெயர்த்தளிப்பது என்பது தமிழில் உள்ள நிலை. படைப்பிலக்கியம் போலவே மொழிபெயர்ப்பும் ஒரு படைப் பாக்க மனோ நிலையில் உருவாவதுதான். ஆனால் படைப்பிலக்கிய முயற்சிகளுக்குரிய வரவேற்பு இதில் கிடைப்பதில்லை என்று அறிந்திருந்தும் அப்பணியில் ஈடுபடும் அவர்களின் அர்ப்பணிப்பு உணர்வு மிகுந்த மதிப்புக்குரியது. ஏனெனில் பிறமொழிப்

படைப்புகளை நம் தமிழ் வாசகர்கள் தமிழில் படித்தின்புறவேண்டும் என்ற சிறந்த நோக்கம் இதற்குக் காரணம் எனலாம். இந்த நோக்கில் பேராசிரியர் நா. தர்மராஜன் மொழிபெயர்ப்பில் மாபெரும் சாதனையாளராகத் திகழ்கிறார். 1. 'எண்ணெய் அரசியல்' (கேர்ரி லீச்), அடையாளம் பதிப்பகம், 2. 'சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா' (பிபின் சந்திரா), நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், 3. 'இறைச்சிக் காடு', நாவல், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், 4. 'ஒரு குடும்பத்தின் கதை' - மறுபதிப்பு, பாரதி புக் ஹவுஸ், மதுரை ஆகிய மொழிபெயர்ப்பு நூல்கள் அண்மை வெளியீடுகளாக உள்ளன. தற்பொழுது காஸ்ட்ரோவின் 'என் வாழ்க்கை' என்ற நூலை மொழிபெயர்த்துக் கொண்டிருக்கிறார்.

இவருடைய வாழ்நாள் சாதனையைப் போற்றிப் பாராட்டும் வகையில் 'திசை எட்டும் நல்லி' வாழ்நாள் சாதனையாளர் விருது மதுரையில் 23.11.2008ஆம் நாள் இவருக்கு வழங்கப்பட்டது. தமிழ் மொழிபெயர்ப்பு உலகில் இவருடைய பணி என்றும் போற்றுதற் குரியதாகும்.

## குறிப்புகள்

1. தினமலர் வாரமலர், டிச.11, 2005 (கட்.) மொழிபெயர்ப்பியல் முத்திரை பதித்தவர், பா. கார்த்திகேயன், ப. 26.
2. தாமரை (கட்.) பேராசிரியர் நா. தர்மராஜன், சி. மகேந்திரன், அக்.2002, ப. 5, 6.
3. எழுத்துச் சுவடுகள், சாதனை மொழிபெயர்ப்பாளர், நா. தர்மராஜன், நேர்காணல் ம.பெ. சீனிவாசன், பதி. 2005, ப. 2.
4. காப்டன் மகள், அலெக்சாந்தர் பூஷ்கின், (தமி.) நா. தர்மராஜன், ராதுகா பதிப்பகம், மாஸ்கோ, பதி. 1985, ப. 1.
5. மேற்படி, ப. 12.
6. ஜவகர்லால் நேரு, அ. கோரவ், வி. ஸிம்யானின் (தமி.) நா. தர்மராஜன், இ. பதி. 1986, முன்னேற்றப் பதிப்பகம், ப. 7.
7. பாரிஸ் கம்யூன், கா. மார்க்ஸ், பி. எங்கெல்ஸ், (தமி.) நா. தர்மராஜன், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, பதி. 1985, ப. 12-13.
8. எழுத்துச் சுவடுகள், கையேடு, சாதனைமொழிபெயர்ப்பாளர், நா. தர்மராஜன், 2005, ப. 4-5.
9. வரலாற்றுப் பொருள் முதல்வாதம் என்றால் என்ன? ஸி. பெர்பேஷ்கினா, டி. ஸேர்கின் எல். யாக்கவ்லெவா.

10. லேவ்தல்ஸ்தோய் சிறுகதைகளும் குறுநாவல்களும், (தமி.) நா. தர்மராஜன், ராதுகா பதிப்பகம், பதி. 1984, ப. 6-7.

11. எழுத்துச் சுவடுகள், கையேடு சாதனை மொழிபெயர்ப்பாளர் நா. தர்மராஜன், ப. 3.

12. மேற்படி, ப. 3-4.

13. மேற்படி, ப. 2-3.

14. மேற்படி.

15. பாரிஸ் கம்யூன், கா. மார்க்ஸ், பி. எங்கெல்ஸ், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, பதி. 1985, ப. 95.

16. எழுத்துச் சுவடுகள், ப. 7.

17. மேற்படி.

18. மேற்படி, ப. 13.

19. மேற்படி, ப. 6.

20. புதிய பார்வை, ஜூன் 16-30, 2005.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
# சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - I | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - II | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - III | 80.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| மொழி, சமய, சமுதாயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு | 50.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கவிதையியல் | 50.00 |
| பண்பாட்டு நோக்கில் திருமுறைகள் | 30.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீ.யும் மேலை அறிஞரும் | 60.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாசுதிராதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| திருக்குறள் உரைச் சிந்தனைகள் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 95.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | 65.00 |
| இசை மருத்துவம் | 45.00 |
| கம்பன் களஞ்சியம் | 550.00 |
| குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | 70.00 |
| நவீன நாடகங்களும் ஊடகங்களும் | 50.00 |

**662 தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள் 185.00**